குடிக்குக் தடந்திரைப் புனல்யாவு மொருமுகங்
கொண்டுபொரு நைபடியவே
கூடுபொரு நைத்துறைக் குலநாத னுயர்மாட
கூடங்க டோறும் நெடுவான்
இடிக்கும் கருங் கொண்டல் கண்படுக் கும்பேரை
எம்பிரான் வானப்பிரான்
இருசரண மலர்சூடும் எனதுகன கவிதையுல்
கெங்கணுந் தழையவென்றே. (13)

(14) திருவந்தாதி—"முயற்றி சுமந்தெழுந்து" என்று தொடங்கும் பெரிய திருவந்தாதி; ஆசிரியம்—திருவாசிரியம். "செக்கர் மாமுகிலுடுத்து" என்று தொடங்குவது. குடிக்கும்—கடற்கண்முகில் குடிக்கும்; கண்படுக்கும்—சமாதியணி; உயர்மாட.........................கொண்டல்—உயர்வு நவிற்சியணி.

## இராமானுசர்

19 முதியகவி நாவலவர் தம்பிரான் திருஞான்
முத்திரைக் கடவுள் திருவாய்
மொழிதனக் குரைவிரித் தெழுதும் [1]பிர வுடவாக்கி
முழுதுமன் பர்க்கு வாழ்வு
புதுநறவு கக்கித் துளிக்குஞ் சரோருகப்
பொற்கழற் கருணாகரன்
புகலரிய பரசமய திமிராரி வண்புகழ்
பூதூ ரனைப் பரவுதுஞ்
சதுமறையு மறிவரிய குலநாதன் முத்தொடலை
தத்தும் தடம் பொருநையான்
தருமநெறி தவறாத திருவழுதி வளநாடு
தனழையவரு கருணைமேகம்
விதிமுறையி னுடுதொழுது வருணன்ஆ ராதனைசெய்
விமலன்மக ரக்குழையமால்
விரவுஞ் செழுந்தமிழ்ப் பிள்ளைக் கவிக்குள்ள
மிக்கசொற் றழையவென்றே. (14)

(15) பிரவுடவாக்கி—கம்பீரமான வாக்கையுடையவன்—இகர விகுதி வினைமுதற் பொருளை யுணர்த்தியது. கழல்—தானியாகுபெயர். திமிர+அரி - இருளைக் கெடுக்கும் சூரியன்; (இவர் பற்றி முன் பிள்ளைத்தமிழ்க் கொத்து 111-ஆம் பாட்டினுரையில் காண்க. பூதூரன் - பெருபூதூரில் தோன்றிய இராமானுசர் குழைய - அ. ஆறும்வேற்றுமையுருபு; விமலன் - பரிசுத்தமானவன்.

## செங்கீரைப் பருவம்.

20 வானுடரும்பொற் பொகுட்டா சனப்பத்ம
[2]மண்டபத் தினிதிருக்கும்
மறைக் கிழவ னுஞ்சடை முடிக்கடவு ளுங்குலிச
வச்சிரா யுதத்தலைவனும்

---

பிரதி பாடம்—[1] பிரவுடவாக்கி, [2] மண்டபத் தரசிருக்கும்

பூநாறும் வெட்சியந் தெரியல்புனை குமரனும்
புகர்முகத் தவனுமதியும்
பொங்குசுட ரிரவியுந் துங்கமுனி வரும்நெடும்
பொற்கோவில் வலம் வந்துநம்

கோனுகும் வருணனு ராதனைசெய் மஞ்சனக
கொலுவில்வந் தடிவணங்கிக்
கும்பிட்டு நின்றுசே விப்பநற் சேவைபுரி
கோசலைக் கிருகண்மணியே

தேனூறு பச்சைப் பசுந்துழாய் மேகமே
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (1)

(1) வான்நாடர் - தேவர்கள் ; மறைக்கிழவன் - பிரமன் ; சடைமுடிக்கடவுள் - சிவன் ; குலிச வச்சிராயுதத் தலைவன் - இந்திரன் ; குமரன் - முருகன் ; அம் வெட்சி தெரியல் - அழகிய வெட்சிமாலை ; புகர் முகத்தவன் - விநாயகன்.

21 முருகொழுகு பங்கயத் தடமுநீள் குளனுமலை
மோதும புனற்சுழியினும்
முதிராத விளமணலும் நடைவரம் புஞ்செய்ய
முதுகுரம் புங்கரும்பும்

அருகுநெட் டிலைமுடத் தாழைநீ ழலும்வேலி
அடரும் செழுஞ்சோலையும்
அம்பொற் பசும்பாளை தளையவிழ்க் குங்கமுகின்
அணிவளமும் மதகினூடுஞ்

சொருகுகுழல் மகளிர்குட முலையசைய நுணுகிடை
சுமக்கின்ற பொற்குடத்தும்
சுடர்மணிப் பொற்றடந் தேரோடும் வீதியும்
சுரிமுகச் சங்கமூருந்

திருவழுதி நாடாள பரமபத வீடாள
செங்கீரை யாடி யருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (2)

(2) முருகு - தேன் ; நடை வரம்பு - நடக்கின்ற வயல் வரப்புக்கள் ; முது குரம்பு - ஆற்றினின்று பாசனக்கால்களுக்கு நீரைத் திருப்பும் அணை ; முடத்தாழை - வளைவுபொருந்திய தாழை ; சுரிமுகம் - சுழிந்துள்ள முகம் - வலப்பக்கம் சுழிந்தது வலம்புரி எனவும் இடப்பக்கம் சுழிந்தது இடம்புரி எனவும் பெயர் பெறும். இப்பாட்டினால் சங்கமூரும் நீர்வளத்தைக் குறிக்கிறார். இங்ஙனமே, பாகம் 567-ஆம் பாட்டில் தூத்துக்குடிபற்றி வந்துள்ளது காண்க. சொருகு குழல் - "முருகிற் சிவந்த கழுநீரும் முதிரா விளைநர் ஆருயிரும் திருகிச் சொருகும் குழன்மடவீர்." (கலிங்கத்துப்பரணி) நோக்குக.

22 அறுகால் வரிச்சுரும் படைகிடக் குங்குழல்
அரக்கிமண் டோதரிகழுத்
தழகுதா லிச்சரடு தரையில்வீ ழ்ப்பருந்
தாயவெங் கழகுமொய்ப்ப்
மறுகால் நெடுஞ்சிகர மாடமா ளிகையிடிய
வலதுகண் கடைதுடிப்ப
வாசல்தொறு நெய்தலம் பறைகொட்ட லெங்கையழல்
மண்டிவான் முகடுதாவக்
குறுகாத வல்லசுரர் செவியடைப் பக்கொழுங்
குருதிவாய கொப்புளிப்பக்
கொடியரா வணன்மகுட முடிசிதற வரிசிலை
குழைத்துவெஞ் சமர்முகத்துச்
சிறுதா ணொலிக்கொண்டு விளையாடு மேகமே
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (3)

(3) கால - அ-ஆறும் வேற்றுமையுருபு. அடைகிடத்தல் - தங்கியிருத்தல். மறுகால - குற்றத்தை வெளியிட ; லெங்கை - இலஙகை ; குழைதது - வளைத்து ; மேகம் - உவமவாகு பெயர் ; பகைவரொடு போா செய்யுந தொழில்களில நாண் ஒலிததலாகிய தொழிலொன்றனையே கூறிக் குறைவுபாடு விளக்கித், தாலிசசரடு தரையில் வீழதல், பருந்து, கழுகு மொய்த்தல், மாளிகை இடிதல, வலதுகண் மகளிாகுத் துடித்தல, பறை கொட்டுதல், அழல் தாவுதல், செவியடைத்தல, குருதி கொபபுளித்தல ஆகிய காரியங்களில உயாவு தோன்றக் கூறினமையான தொழிற் குறை விசேடமாயிற்று.

23 இருகுழையு மணிகுதம் பையுமாட வெயில்விரிந்
திலகுகுறு முறுவலாட
இணைதிருக் கையினணி வளையாட மென்சுரும்
பிசைபசுந் துளபமாடப்
பொருவுமிரு சிலை நுதலின் வேர்வா டவேபொங்கு
புழுதிதிரு மேனியாடப்
புழுகொழுகு கரியகுழல் சரியவளை வடமும்நூ
புரமுந் தயங்கியாட
முருகுவிரி தருநறுங் கமலமதி முகவட்ட
முழுநிலா வீசியாட
முதியவா னவர்முனிவர் அமரர்கோன் *வரல்வளா
முறை யொடுங் காணவந்தார்
திருவரையின் மணியசைந் தாடக் குழைந்தினிது
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (4)

(4) சிலைநுதல் - உவமை ; அரை - இடுப்பு ; ஆட என்ற சொல் பலமுறை வந்து பொருளும் மாறுததனல் சொற்பொருட் பின்வருநிலையணி.

பிரதிபாடம்.—* வரல்வள

24 சந்தன கதம்பப் படீரகுங் குமமுலைத்
தையல்மர கதவல்லிசெஞ்
சடிலேசர் வாமத் திருப்பநான் மறைபரவு
சதுமுகப் பிரமன்நாவில்

இந்துநுதல் வாணிசந் ததமிருப் பப்பணிந்
திருசரண மலர்சூடுவோர்
இதயதா மரைமலரும் நூற்றெண்மர் சிந்தையினும்
இசைபாடி வண்டுகிண்டக்

கொந்தவிழ் நறுங்கமல மலரா சனக் கோயில்
குடியிருக் கும்பரிமளக்
கோமளக் கொடிவல்லி *மாமதுரை யாச்சியர்
குழைக்காதன் நாயகியெனுஞ்

சிந்துரம் பொடியொடும் விளையாடு மழகளிறு
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (5)

(5) படீரம் - உயரம் ; மரகதவல்லி - பச்சை நிறமுடைய கொடி போன்றவள். திருமாலின் தஙகையாதலால் பச்சை நிறங கூறினர் "பச்சைமாமலை போல்மேனி" எனறு ஆழ்வார் கூறுதல் காண்க. நீலம், கருமை, பச்சை முதலிய நிறங்களை அபேதமாகக கூறுவது கவி மரபு. சடிலம் - சடை ; சடில+ஈசர் - சடிலேசா - வடமொழிப் புணாச்சி, தீாக்கசந்தி ; வாமம் - இடப்பக்கம் ; இநது - சந்திரன் ; கொந்து - இதழ்களின் தொகுதி ; சிநதுரப்பிடி என இருப்பின் மழகளிறு என்பதறகு ஏறகும். நாயகி எனும் பிடி என்றலே ஏற்புடைத்தாகும். மாமதுரை - சிறந்த வடமதுரை. ஈண்டு உமாதேவி சிவபெருமான் இடப்பக்கத்திலிருக்க, சரசுவதி பிரமன் நாவிலிருக்க, குழைக்காதன் நாயகியோ தனனைப் பணிநது இரண்டு பாத தாமரைகளைச் சூடுகின்றவரது மனத் தாமரையினும், திருப்பேரையில வாழ்கினற நூற்றெண்மர் மனங்களினும், கமலமலரிலும் குடியிருப்பவள் என ஏற்றம் கூறினர்.

25 ஒள்ளொளி விரித்தசிறு கிண்கிணியின் நூபுரம்
உபையசர ணத்திடை
ஒளிர்மணிப் பட்டாடை யாடவரை வடமாட
உச்சியின் மிலைச்சு பருதி

நள்ளிடை வயங்குபொற் சூழியத் தொகையாட
நகுநிலா முறுவலாட
நவமணிச் சுட்டியொடு கட்டுப்பொற் பட்டமுந்
நன்னுதற் பொட்டுமாடத்

துள்ளியெறி திரைமகர சலராசி படுசெழுஞ்
துய்யசெம் பவளமேனி
தொய்யக் குழைந்தாடு பண்டியுந் தொந்தியுந்
துணைநெடுங் குழையுமாடத்

பிரதிபாடம்—* மாமதுரவாயாள்

தெள்ளமுத மணிவாயின் உள்ளொழுகி வழியவே
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (6)

(6) உபையம் - இரண்டு ; அரை - இடுப்பு ; பருதி - சூரியபிறை, ஆகு பெயர் ; நள்ளிடை வயங்கு - இரவுக் காலத்தினும் விளங்கும் ; சூழியம் - உச்சிக் கொண்டையுள் செருகும் ஓரணி ; சுட்டி - நுதலணியுளொன்று ; மகரம - சுறுமீன ; தொயய - வருநத ; துணை - இரண்டு ; பண்டி - வயிறு.

26 நிரையும் பசும்பொனணி *மாடகூ டமுநெற்றி
நிழனமணிச் சாளரத்து
நெடுநிலா முற்றத்து வாவிதொறு நீராடி
நிறைநறுந் தாதுபூசி
வருமந்த மாருதத் திளையமென் காலசைய
மாவிளங் குயில்கள்கூவ
மயிலாட வளிபாட வேனில்வேள் அரசுபுரி
வழுதிவள நாடுதழைய
விரையுந் தடம்புனற் பெருக்கா றெடுத்தோட
வெழின்மயிற் றழைபீலியும்
இணையிலா மணியுமா ரமும்யானை வெண்கோடும்
ஏற்றிஎற்றிச் சுருட்டித்
திரைவந்து கரைமோது பொருநையந் தண்டுறைவ
செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே. (7)

(7) நிழல் மணி மாடகூடம் நெற்றிச் சாளரத்து - ஒளிவிடும் இரத்தினங்கள் பதித்த மெத்தைக் கட்டடங்களின் மேனிலை முகப்பிலுள்ள சன்னல் வழியே நுழைந்து ; நெடுநிலா முற்றத்து - சந்திரக் காந்தக்கல் பதித்த நிலவின்பம் துய்க்கும் திறந்த மேன் மாடத்தில் ; வாவிதொறும் நீராடி - அம்முறறத்தில் சந்திர காந்தக்கல் நிலவினுல் உருகுவதனுல் வாவி அங்கு உண்டென்றும் அவ்வாவியினிடை, தென்றல் காற்று சன்னல வழியாகச் சென்று படிவதனை நீராடுகிறதென்றும் கூறினுர், தற்குறிப்பேற்ற வணி வகையால். கால் - காற்று ; மா இளங்குயில்கள் - மாமரத்திலுள்ள இளமையான குயில்கள் ; அளி - வண்டு ; வேனில் வேள் - மன்மதன் ; முருகனுக்கும் வேள் என்ற பெயருண்டாதலால் வேறுபாடு காட்ட "வேனில் வேள்" என்றுர். ஆரம் - சந்தனம் ; எற்றி - தாங்கி ; எற்றி - அடித்து ;

27 எத்திக்கும் வண்புகழ் தழைத்ததிரு வாய்ப்பாடி
இடையர்தம் குடில்கள்தோறும்
இடுகயிற் றுறியடுக் கியமணிக் கலசத்
திருக்குந் தயிர்க்கட்டிகண்
டொத்திக்கை யிட்டுரல் மிதித்தேறி யடிகுந்தி
ஒருதிவலை சிந்தாமலே
ஒண்பவள வாய்மடுத் துண்டிடுங் கள்வனென்
றுரலொடு கட்டியவர்கை

பிரதிபாடம்.—*மாடகூ டமுமேடை.

மத்திட் டடிப்பவிரு கண்பிசைந் தழுதரையின்
    மணிபொத் தி யாடிமறுகால்
வாயூறி யச்சுவை கனிந்தாய்ச்சி யாடைபட
    வற்றக் கறந்து காய்ச்சுந்

திததித்த பாலுக்கு மிச்சித்து நின்றவா
    செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
    செங்கீரை யாடியருளே. (8)

(8) மணிக்கலசம் - அழகிய குடம்; ஒததிகைமிட்டு - செய்யப பழகுதல இககாலத்தில் நாடகம் நடித்தறகுமுன ஒததிகை யிடுதல காண்க; அடிகுநதி - கீழே உட்காாநது; மடுதது விழுங்கி; ஆடை - பாலின்மேல படியும் எடு; பாலுக்கும் எனற இறந்தது தழுவிய எச்சவும் மையால் தயிரை உணர்ததினர். இடையா - குறிஞசி, மருதம் என்ற இருநிலததிற் இடைப் பட்ட முல்லை நிலத்தில் வசிப்பதால் இப்பெயர் காரணப் பெயராயிற்று. "தந்தம உறியிலவர் வைத்த தயிர்பால வெண்ணெயெட்டாமல குந்தி உரலினமிசை யேறி கொடுங்கோவியர் முன் கூத்தாடி.......... " என்றா பிறரும். "பொதத வுரலைக் கவிழ்த்து அதன்மேலேறி திததித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்...." என்ற ஆழ்வார் வாககும் நோககுக.

28 தாதவிழ் பசுந்துளவ மாலையா டச்சிறிய
    தமணியச் சுட்டியாடத்
தருணமர கதவயிர வலையமா டப்பொன்
    தடந்திருத் தோள்களாடக்

காதுமணி தருமகர குண்டலமு மாடக்
    கவின்பொலியு மேனியாடக்
கதிர்முத்த வடமாட மதுரித்த செந்தமிழ்
    கற்றவர்கள் கொண்டாடவே

வாதுபுரி கொடிய சேனுபதி யிராவணன
    மனவலிகள் திண்டாடநீள்
*வானத் ததிர்ந்துதுந் துமியாட மலர்மாரி
    வானவர் பொழிந்தாடவோர்

சீதர முகுந்த பேராயிர முகந்தவா
    செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
    செங்கீரை யாடியருளே. (9)

(9) தமனியம் - பொன்; சீதரன் - இலக்குமியை மாாபில் தரித்தவன்; உகந்தவன்- மகிழ்ச்சியுடன் ஏற்றவன்; துந்துமி - பேரிகை;

29 அலைவளைக் குங்கருங் கடலும்வான் முகடுதொடும்
    அம்பொற் கொடிக்குழா மொய்த்
தாதவன் பொற்றடந் தேர்தடுக் குஞ்செம்பொ
    ணணிமாட கூடங்களும்

பிரதிபாடம்—*வானத் திருந்துதுந் துமியாட

நிலைவளைக் கும்புக ழிலங்கா புரத்திறைவ
 நெடியரா வணன் மகுடமும்
நீலிதா டகைமார்பு *மாரீச னெடுகரனும்
 நெட்டுர வதிகாயனுங்

கொலைவளைக் குங்கும்ப கன்னனும் நிகும்பனும்
 குறுகாத வல்லசுரரும்
கொடியவா லியுமரா மரமேழு முருவக்
 குழைத்துவடி வாளிதொடவெஞ்

சிலைவளைக் குந்திருக் கைத்தா மரைக்கொண்டல்
 செங்கீரை யாடியருளே
செல்வத் திருப்பேரை வல்லிக்கு மணவாள
 செங்கீரை யாடியருளே. (10)

(10) மாளிகைகளில் கட்டிய கொடிகள் சூரியன் தேரைத்தடுக்கின்ற அத்தகையுயரமான மாடக்கூடங்கள் என்க. நீலிதாடகை - பழையனூர் வணிகன கதையில் வந்துள்ள நீலியை யொத்துப் பாசாங்கு செயயும் தாடகை; கருநிறமுள்ள தாடகை என்னனுமாம். நீலி - இகரவிகுதி வினைமுதற்பொருளை யுணர்த்தியது. நீலம் - நீல எனக கடைகுறைந்தது. கைத் தாமரை - உருவகம்; நெட்டுரம் - நீண்டஉரம் (பலம்); உரம் - ஊரம் என நீட்டல் விகாரம் பெற்றது. நிகும்பன்—கும்பகனனன் குமாரன், இராவணனுக்கு அம்மான் எனனுமாம்.

## தாலப் பருவம்

30 கயங்கொண் டலம்பித் திரையெறியுங்
 கடல்சூழு முலக முழுவதும் வெண்
கவிகை நிழற்கீ ழினிதடக்கிக்
 †கருணை புரிய நாடொறுநின்

றியங்குஞ் சரங்க ளனைத்தையுமற்
 றெல்லா வுயிருந் தன்னுயிர்போல்
இரங்கிக் காக்கு மரசர்பிரான்
 என்ற சரத பெருமானு

முயங்கும் ‡பிராட்டி மூவர்க்குள்
 முதன்மைத் தலைவி யாம் சிமிழ்ப்போ
முற்று முலைக்கோ சலைவயிற்றின
 முளைத்து மடிமேற் கிடந்துதனி

வயங்கும் கிரண மரகதமா
 மணியே தாலோ தாலேலோ
மகரக் குழையே யென்னிருகண்
 மணியே தாலோ தாலேலோ. (1)

(1) கயம் - ஆழம்; அரசர்பிரான் என் தசரத பெருமானும் எனப் பிரிக்க; சிமிழ் - செப்பு; முளைத்து - தோன்றி; தனி - ஒப்பற்று; வயங்கும் - விளங்கும்; சரங்கள்— இயங்கும் பொருள்கள்.

பிரதிபாடம்—*மாரீச னும்பார். பிரதிபாடம்—†கருணை யிரிந்து,
‡ பிராட்டி மார்மூவ ரவர்க்குள் முதன்மைத் தலைவியெனு முற்று.

31 பண்ணூர் மதுரம் பழுத்தொழுகிப்
பாகூற் றிருந்து கனிந்தமொழிப்
பவளத் திருவாய் மணிமுறுவல்
பங்கே ருகக்குங் குமச்சுவட்டுப்

பெண்ணா ரமுதத் திருமடந்தை
பிரியா மருமத் தினிதிருக்கும்
பெயரா யிரம்பெற் றுடையதிருப்
பேரைப் பிரானே முறுக்கவிழுந்

தண்ணூர் துளவப் புயசயில
தாமோ தரசீ தரமுகுந்த
தமரக் கடலில் புனல்முகந்து
தழைக்குங் கமஞ்சூற் கார்மேக

வண்ணா வுலகன் றளந்தநெடு
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ. (2)

(2) பாகு+ஊறறிருநது - பாகூறறிருநது, பாகு - வெலலப்பாகு ; ஊறறிருந்து - சுரநது ; மருமம் - மார்பு ; தாம+உதரன - தாமோதரன - குணசந்தி பெறற வடமொழித தொடர் தாமம் - கயிறு ; உதரன - வயிற்றையுடையவன ; யசோதை கயிறறினுல் உரலொடிறுகிய வயிற்றை யுடையவன என்று பொருள. தமரம - ஒலி ; கமம சூல - நிறைநத கருப்பம் ; பெயராயிரம பெற்றுடைய....” பேராயிரததான குழலவாராய் அககாக்காய -எனற ஆழ்வார் வாக்கு நோக்குக.

32 முளைக்குந் தவளக் கற்றைநிலா
முழுவெண் டிங்கட் டிருவதன
முற்று முலைக்கோட் டரமகளிர்
முதுபெய ராயத் தவர் *மருங்கிற்

றிளைக்குங் கொடிபோற் கொடிநுடங்க
வெழின்மா மணிச்சூ ளிகை முகட்டின்
இணக்கும் பசிய மரகதங்கான்
றெறிக்கும் கிரணக் கொழுந்தோடிக

கிளைக்குந் துணர்க்கற் பகச்சோலை
கிடையே தழைய வாகாச
கங்கைக் கரையிற் பசும்புல்லெனக்
கிட்டிச் சுரபி மணிநாவால்

வளைக்கும் பசும்புற் றலங்கள்மலி
வளஞ்சேர் நாடா தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ. (3)

* பிரதிபாடம்—மருங் குற்

(3) தவளம் - வெண்மை ; திங்கள் திருவதனம் - சந்திரன் போன்ற முகம் ; மருங்கில் திளைக்கும் கொடிபோல் கொடி - இடையைப்போன்று அசையும் கொடி, அக்கொடிபோன்றுள்ள புற்கொடி ; சந்தான உவமை ; முகடு, சூளிகையின் உச்சியிலுள்ள தலையணி வகை போன்று ; இணக்கும் - பொருந்தும ; கானறு - உமிழ்ந்து (வெளியிட்டு) ; துணர்பூங் கொத்து ; சுரபி - காமதேனு ; இப்பாட்டில் புலவளம் பற்றிக் கூறப்பட்டுளது காண்க.

33 இடிக்குங் கடுஞ்சொற கொடும்பாவி
இழைக்குந் தறுகட் கஞ்சன்விடுத்
திடுகோக் களிற்றின் புகர்முகத்தின்
ஏந்தும் பிறைக்கிம் புரிமருப்பை

ஒடிக்கும் தடக்கைச் செழும்புயலே
யுணர்வுக் குணர்வே யென்னுயிரே
ஒழியாப் பிறவிக் கடல்சுவற்றி
யுயர்வீ டளிக்கும் பெருமானே

முடிக்கும் பசுந்தண் துழாய்மாலை
முடிக்கும் குழக வானவர்க்கும்
முதுநான் மறைக்கு மெட்டாத
மூலப் பொருளே பாகுபெற

வடிக்குந் தமிழ்த்தென் திருப்பேரை
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ (4)

(4) தறுகண் - கொடுமை ; கோக்களிறு - பட்டத்துயானை (குவலயாபீடம்) ; புகர்முகம் - ஒளிவாய்ந்த படாமணிந்த முகம ; பிறைக்கிம்புரி - மருப்பு பிறைச சந்திரனை ஒத்த ; பூண் கட்டிய தந்தம் ; சுவற்றி - வற்றச் செய்து ; முடிக்கும் இரண்டில் முன்னது தலை யுச்சியையும் பின்னது அணியையும் காட்டியது. குழகன் அழகையுடையன ; பாகுபெற - வெல்லப்பாகு போன்று இனிப்புப் பெற ஒழியாப்......................பெருமானே - 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" என்ற குறளை நோக்குக.

34 கருது சமய மோராறுங்
கணிக்கும் பொருளே யுவட்டெறியுங்
கருணைக் கடலே செழுங்கமலக்
கண்ணா கண்ணின் உள்மணியே

*திருகு சினவா ளவுணர்படச்
சிலைக்கால் வளைத்துப் போர்முகத்துச்
செல்லும் புயலே யுறியில் வெண்ணெய்
திருடும் குழகா பேய்முலைப்பால்

பருகும் பவளக் கனி வாயா
பசுந்தார்த் துளவ மணிமுகுந்தா
பங்கே ருகச்செஞ் சரணநெடும்
படப்பாந் தளின்மேல் நடித்துநெட்டை

* பிரதிபாடம்.—திருக்குஞ்

மருதந் தவழ்ந்து சகடுதைந்த
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ. (5)

(5) சமயம் ஓர் ஆறு - சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம், என்பன உவட்டெறிதல் - பெருகயெடுத்து அலை வீசுதல்; திருகு சினம் - மாறுபாடு செய்யும் கோபம். பட - அழிய; பாந்தள் - பாம்பு (காளிங்கன்) மருதம் - தோட்டத்தில் குபேரன் சாபத்தினால் தோன்றிய நளகூபரன், மணிக்கிரீவன் ஆகிய இரு மருத மரங்கள்; சகடு - சகடாசூரன் மாயமாய் எடுத்துவந்த சக்கர வடிவம்.

35 சொல்லற் கரிய கிரணநெடுஞ்
சுடரா ழியினாற் கதிர்மறைத்த
சுருதிப் பொருளே குருகூரன்
சொற்பா வமிர்தங் கனிந்தசெவிச்

செல்வக் குழகா பாட்டயர்ந்து
சிறைவண் டலம்பிக் கண்படுக்குஞ்
செழுந்தார்த் துளவ மணங்கமழுந்
சிகரப் புயபூ தாமுகுந்த

வல்லிக் கமலப் பொகுட்டுமட
வனஞ்சேர் வழுதித் திருநாடா
வடிவைத் தொருமூ வுலகமுமன்
றளக்கும் புயலே சேறுடைக்கும்

மள்ளல் பழனத் திருப்பேரை
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலே தாலேலோ. (6)

(6) சொல்லற்கரிய..........பொருளே- முன்னைய பிள்ளைத் தமிழ்க் கொத்து 129-ம் பாட்டு உரை பார்க்க. குருகூரன - நம்மாழ்வார்; புயபூதரம் - உருவகம். அடிவைத் தொரு................புயலே - முன் பிள்ளைத் தமிழ்க்கொத்து. 189-ம் பாட்டு உரை பார்க்க. மள்ளல்பழனம் - வளமிக்க கழனிகள்.

36 இடையிற் றொடியக் கனத்தடிகொண
டிளகித ததும்பிப் பணைத்திறுமாந்
தேந்துங் களபப் புள்கமுலை
யிலவத் துவர்வா யம்புயம்பொன்

பெடையைத் தழுவி யனுதினமும்
பிரியா திருக்குந் திருமார்பா
பெருவா ருதிசூழ்நிலவலையப்
பெண்ணுக் கிணங்கும் புயசயிலா

படைபிற் சுமந்த கொழுநுழைந்த
பழனக் கொழுஞ்சேற் றினில்வரம்பிற்
பாகு படுநெட் டிலைக்கரும்பிற்
பசும்பூங் காவில மணலினில்வாய்

மடையிற் பணிலந் தவழ்பேரை
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூறறெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ. (7)

(7) அடிகொணடு - பரநது ; களபபுளகம் முலை - கலவைச் சாந்து பூசிய மகிழ்சசி கொண்டுள்ள முலை ; இலவததுவாவாய—இலவமபஞசு போனற மிருதுத் தனமை யுடைய உதடுகளையுடைய பவளம போனற வாய ;அம்புயம பொனபெடை - தாமரை மலரில் வீறறிருககும் இலககுமியாகிய பெண ; வாருதி - கடல ; நிலவலையப் பெண - பூமிதேவி ; கொழு - கலப்பையில கட்டியிருககும இரும்பு, இதனைக் [ கார ] எனபர். பணிலம் - சங்கு ; சஙகுகளின சிறப்பை 21-ம் பாட்டினுறையிலகாண்க.

37 அடியாற் பிறவிக் கடல்சுவற்றி
அழியாப் பரம பதங்கொடுக்கும்
ஆழிப் புயலே பணமகுடத்
தடல்வா ளரவின் கண்பிதுங்க

நடியா நிற்கும் ஒருகுழக
நாரா யணசீ தரமுகுந்த
நண்ணும் புலவன் கணிகண்ணன்
பின்பாய்ச் சுருட்டிச் சொற்றமிழ்க்குப்

படிமேல் நடக்கும் இருசரண
பங்கே ருகவன் றனல் கொழுந்தப்
பரவைக் கொருகாய் கணைதொடுத்துப்
பாரப் புயபூ தரத்திலங்கும்

* வடியார் திகிரிப் படைசுமந்த
மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே தாலோ தாலேலோ. (8)

(8) ஆழி - சக்கரம ; பணமகுட........குழக -காளிஙகன் மேல் கண்ணன் நடித்த வரலாறறை நோக்குக. நண்ணுமபுலவன........இரு சரண ..—முன்னைய பிள்ளைத் தமிழக் கொத்து 593-ம் பாடடின் குறிபபு நோககுக. பங்கேருக இரு சரண என மாற்றுக. அன்று அனல....மாலே - முன்னைய பிள்ளைத தமிழ கொத்து 198-வது பாட்டின் உரையில் காண்க. கொழுந்த - சுவாலிக்க ; காய்கணை - அக்கினிக் கணை ; வடி ஆர் - கூர்மை பொருந்திய.

38 கருணை பெருகி யுவட்டெறியும்
†கற்று நிரையின் பின்னடந்து
கானந் தழைப்பத் துணைக்கமலக்
கழற்கால் பின்னிக் கன்றேடுகுன்

பிரதிபாடம்.—* வறிவார் பிரதிபாடம்.—† கண்ணு

றுருகும் படிவேய்ங் குழல்வாய்வைத்
    தூதும்புயலே சுவடியவர்தம்
ஒழியாப் பிறவித் துயரகற்றி
    உள்ளத் திருக்குந் திருக்கறுத்து

நிருதர் குலமும் வேரறுத்த
    நிமலா சமரா ரிடுந்திகிரி
நீலக் குழகா மணநாற
    நிறைக்கும் பசுநதண் டுழாய்முகுந்த

வருணன் பரவும் இருசரண
    மாலே தாலோ தாலேலோ
மகரக் குழையே நூற்றெண்மர்
    வாழ்வே தாலோ தாலேலோ (9)

(9) கன்று + ஆ- கன்ருேடு கூடிய பசு ; திருக்கு - மாறுபாடு.

39 விடவா ளரவக் கயிறுசுற்றி
    வெற்பிற் பிணித்து விசித்திறுக்கி
விரிதெண் டிரைநீர்க் கடன்முகட்டின்
    விண்ணோ ரமுதங் கடைந்தவந்நாள்

அடருங் கிரணக் கவுத்துவமும்
    அருளுந் திருவுந் தடமார்புக்
கமைத்துத் திருப்பா லாழியினும்
    அரங்கத் தினுங்கண் டுயில்பெரும

குடவால் வளைசூ லுளைந் நுசெந்தேன்
    கொழிக்கும் பொலன்று மரைப்பொகுட்டிற்
குளிரமுத் துயிர்ப்பக் கருவெண்ணக்
    கொணர்ந்தஞ் சிறைய விளம்பேட்டு

மடநா ரைகள்கண் டடைசெறிக்கும்
    வளஞ்சேர் நாடா தாலேலோ
மகரக் குழையே தூற்றெண்மர்
    வாழ்வே தாலோ தாலேலோ (10)

(10) அரவம் - வாசுகி எனும் பாம்பு ; வெற்பு - மந்தர மலை ; கவுததுவம் - கௌஸ்துப ரத்தினம் ; திரு - இலக்குமி ; குடவால் வளைசூல உளைநது - குடம போனற வெண்மையான சங்குகள் கருபப வேதனைபபடடு ; அடை செறிககும - அடைகாததலைச செய்யும் - குடவால்.........வளஞ்சேர் நாடா ..—முனனைய பிளளைத தமிழககொதது 166-ம் பாட்டின குறிப்பிலும் இஙஙனமே உளது காணக.

## சப்பானிப் பருவம்

40 அரமகளிர் தங்கழுத் தணியும்நாண் கழலாமல்
    ஐந்தரு வடிக்கெடாமல்
அயிரா பதபபெரும் பகடொளித் தோடிநீள்
    அலைகடற் புக்கிடாமல்

திரளவடி கொண்டதெள் ளமுதமது கொள்ளைபோய்த்
தேவர்கள் நடுக்குறுமல்
தெய்வேந்திர னுக்கரசு மகுடபங்கம் வந்து
சிறைச்சாலை * யுட்படாமற்

கரதூடணன திரி சிராநிகும் பன்கும்ப
கன்னன்இந் திரசெயித்துக்
கலங்காத ராவணன் மடியலங்காபுரங்
கனல் கொழுந் தபபெருவிரல்

சரடுபூட் டிச்சிலைக் கடைக்குழைக் குங்கொண்டல்
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே (1)

(1) ஐந்தரு – கற்பகம், பாரிசாதம், சந்தானம், அரிசந்தானம், மந்தாரம்; அடி – ஆதி ; பகடு – யானை ; திரிசிரா – விசிரவசுவிறகுக் காலையிடத் துதித்த குமரன். இவன் சூர்ப்பணகையால தூணடப்பட்டு இராமபிரானிடம் யுததததிறகு வந்து இரண்டு தலையிழந்து பிறகு ஒரு சிரததுடன மாயததால யுத்தஞ் செய்திறநதவன். மறறும் திரிசிரா என்ற இராவணன் குமாரனையும கூறலாம். இவன் அனுமனால கொலலப்பட்டவன்.
சரடு – நாண் ; கடைக்குழைககும்—நுனி வளையுமாறு செய்யும.

41 அமரர்கின் னரர்முனிவர் கிம்புருட ரும்பரவும்
அயிராபதப் பாகனும்
அம்பரத் திடையுலவு கங்கைப் பெரும்பரவை
அலையெறிய விட்டசடிலத்

துமையையொரு பங்குடைக் கடவுளுந் தொழுதுளம்
உவப்பவம ராடுசுடர்வேல்
ஊறுபடு நயனப் படீரகுங் குமமுலைக்
கொல்குமொரு நுண்மருங்குற்

குமுதவாய் மடமங்கை தேவகிக் குள்ளங்
குழைந்துகண் களிகூரவே
கோசலைக் கினியகைக் கோமளக் குழவியே
கோதிலா மழைவள்ளலே

தமரவரி வண்டடை கிடந்தமுள ரிக்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே (2)

(2) கின்னரர் – மனிதவுடலும் குதிரை முகமுமுடையவரும் யாழிசை வல்லவருமான ஒரு சார் தேவ சாதியார் கிம்புருடர் – பதினெண் கணத்துள் ஒருவராய் மானுட முகமும் படைத்த தேவ சாதியார். அயிராபதப்பாகன் – இந்திரன் ; அம்பரம் – ஆகாசம் ; பரவை – கடல் ; சடிலம் – சடை அமர் ஆடு சுடர்வேல் ஊறுபடுநயனம் –

* பிரதிபேதம் :—யுட்புகபமா்

சண்டையிடுதற்கமைந்த சுடரும் வேலையே துனபப்படுத்துகின்ற கண்கள ; படீர குங்கும முலை – செஞ் சாநது பூசிய முலை ; படீரம் – சநதனம் எனவும் கொளளலாம் நயனமும், முலையும் மருங்குலும் வாயுமுடைய மடமங்கையெனப் பொருளகொண்டு உம்மைத் தொகையாககுக ; தமர வரி வணடு – இசைககின்ற வரிகளையுடைய வண்டுகள்.

42 வேதங்க ளோடைந்து பூதங்க ளுமயன்
விதிக்கின்ற பல்லுயிர்களும்
மிக்கவைம் பொறிகளு மெட்டெழுத் துநின்று
விளையாடு மொரு குழவியே

ஏதங் களைந்தடியர் இருவினை தணந்துபேர்
இன்பத் திருத்துமொளியே
இலகுசுடர் வேல்விழி துரோபதை தனைச்சிறிதும்
எண்ணாது துகிலுரிதரும்

போதந்த வேளைவந் துதவுசீ ரதுழாய்ப்
பூதரப் புயமுகுந்த
பொருவரிய வண்டகோ ளகைமுகடு கீறியப்
பொன்னுலகின் மேவிபாரி

சாதங் கொணர்ந்தருள பின்னைக் களித்தவன்
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே (3)

(3) அயன – பிரமன ; எட்டெழுதது – ஓம நாராயணாய நம .. என்ற அஷடாக்ஷர மந்திரம் ; தணநது – நீஙகி ; பூதரம் – மலை ; கோளகை – உருணடை வடிவம்.. பின்னை, நப்பினனை – கணணன தேவியருள் ஒருத்தியானதால கணவனுடைய பொருள் பறறிக் கூறினரெனலாம். சத்தியபாமைககாக கொணர்நததை ஓறறுமை பறறி பின்னைக் கெனறு ரெனலுமாம்.

43 அடங்காத வெழுபது வெள்ளஞ்சே னையுங்கை
அமைக்கும் படைத்தலைவரும்
அனுமன்முத லாயசுக் கிரீபனுஞ் சென்றுகடல்
அணைகட் டிலங்காபுரந்

தொடர்ந்தேறி யொருசிலைக் கடைகுழைத் தடுகணை
துரந்திரா வணனை மகுடந்
துகள்படுத் திச்சனகி சிறைமீட்ட தண்ணந்
துழாய்ககாள மேகஙகொடு

விடந்தாவு பஃறலைக் கட்செவி கிடந்தாட
விரிதிரைக் கங்கையாட
வேணியா டக்காளி தன்னுடன் வாதாடும
வெள்ளிப் பொருப்பனன்பாற

தடந்தாரு வேரோடு புறந்தாள் கொணர்ந்தமால்
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே. (4)

(4) விடம் தாவு பல் தலைக் கட்செவி-விஷம்பரந்திருக்கின்ற பல தலைகளையுடைய பாம்பு. கண்ணையே செவியாக உடையதென்று காரணப் பொருள்படும். வேணி - சடை ; வெள்ளிப் பொருப்பன், சிவபிரான் ; தடதாரு - பெரிய பாரிசாதமரம் ; கண்ணன் சத்ய பாமை பொருட்டு பாரிசாதத்தை வேரோடு கொணர்ந்த போது இந்திரனும் மற்ற திக்குப் பாலகர்களும் எதிர்க்க அவர்களை வென்றார். அஷ்ட திக்குப் பாலகரில் சிவபிரானும் ஒருவரானதால் அவரை மட்டும் சிறப்பித்தார் ஆசிரியர். இதனை “வயினதேயன் மேல் பாரிசாதத்தினை வைத்துப் ............................ எயில் எரித்தவன் பெருவிட எங்கனம் வளைந்தார்“ என்று வரதராஜ அய்யங்கார் அருளிய பாகவதத்தில் காண்க.

44 மண்டுதிரை யெறிமகா சலராசி யேழுநெடு
வரையேழு மகிலமேழும்
வானகமு முயர்திசையும் வயிறடங் கப்புவள
வாய்மடுத் துங்கரந்துமுன்

உண்டுமிழு நீல்நிறக் குழவிநெடு வாலிமார்
புருவவொரு சரம் விடுக்கும்
ஒண்டிறற் செங்கைத் தடங்குரிசில் வேதாந்த
உபநிடத ஞானதீபம்

புண்டரிக மலர்முகை முறுக்குடையு மோடையிற்
புக்கிடங்க ர்க்குவெருவிப்
போரானை மூலமென் றேதாமுன் ஓடியொரு
புள்ளரசு மீதுவருபைந்

தண்டுழாய் புனைகொண்டல் அண்டர்நா யகளினிது
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென் திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே. (5)

(5) மகாசலராசி எழு—எழு சமுத்திரங்கள் ; கரந்து மறைத்து ; இடங்கர்—முதலை ; குழவி வாலி மார்பு உருவ சரம் விடுக்கும் என்பதில் சாதிக் குறை விசேட வணி அமைந்திருத்தல் காண்க. யுகப் பிரளய காலத்தில திருமால் உலகங்களை யெல்லாமுண்டு ஆலிலையில் பாற்கடலகத்தே யோக நித்திரை செய்வார். பிரளயம் குறைந்த பின்பு பிரமனை ஏற்படுத்திச் சிருட்டிப்பார். இவ்வரலாற்றையே முதலிற் கூறிய வடிகள் காட்டின.

45 வண்ணந் தழைந்தகட லுலகமுழு தும்பரதன்
மணிமுடி கவிப்பநீவெவ்
வனமே செனுஞ்சிறிய தாய்சொற் றலைக்கொண்டு
மணிநெடுஞ் சீரை சுற்றிப்

பெண்ணென்ற சீதையொடு மிளையவன் றன்னெடும்
பெருங்கா னகம் புகுந்த
பெம்மான் நறுந்துளவ மாலிகா பரணன் முது
பேரின்ப வீடளிக்கும்

கண்ணன் சிலைக்கடை குழைத்திலங் காபுரங்
கட்டழிக் குநதேவர்கோன
கருணைப் பெருக்காறு உவட்டெடுத் தலைமண்டு
காளமே கந்துளிபடுந்

தண்ணந் தடந்திரைப் பொருநையந் துறைவனொரு
சப்பாணி கொட்டியருளே.
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே (6)

(6) சீரை—மரவுரி ; சிறியதாய-கைகேயி. மாலிகா ஆப்ரணன்–தீர்க்க சந்தி பெற்ற வட மொழித்தொடர் ; மாலிகா-மாலை.

46 உடுக்குந் திரைக்கருங் கடலாடை நிலவலையம்
உதரத்தி னுள்ளடக்கும்
ஒரு சிறிய குறளுரு வமைநதநெடு நேமிமால்
உபையசர ணாரவிந்தத்

தெடுக்கும் பனிக்குறுந் திவலைபடு மலரிட்
டிலைறஞ்சிவரு ணன் பரவுவோன
இசைபாடி யொருகோடி யறுகால் துதைந்தாடும்
ஈர்ந்துழாய்ப் படலைமாயன்

மடுக்குங் கொழுஞ்சுடர்ப் பருதிவா னவனுதைய
வரைபசும் புரவிமுட்டி
வருமணிப் பொற்றடந் தேரினுக் கிடுஞ்சித்திர
வட்டாழி யெட்டிமுட்டித்

தடுக்கும் பொலன் புரிசை சூழ் வழுதி நாடனொரு
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே. (7)

(7) 'நீவெவ்வனம் எகு ' எனும சிறியதாய—ஆதிரூழ ................ பூழி வெங கானம் நண்ணி ......................... " எனற கமப ராமாயணப் பாட்டை நோகக.

47 மாணவே லரசர் தொழு மிதிலா புரிச்சனகன்
மாதேவி மணிமுன்கைமேல்
வைத்துமுத் தாடும் பசுங்கிளி யெனத்தூய
மஞ்சனஞ் செய்து செம்பொன்

மேனிமுழு வது நலுங் கிடுசெய்து கொங்கைக்கு
மெனகளப மளவியப்பி
விரைநறுந் தார்குழலின் மீதணிந் தஞ்சனம
விளங்குகட் கடையிநெழுதிக

கூனிளம் பிறைநுதற் கத்தூரி தீட்டிநற்
குளிர்மணிச் சுடிகை நாற்றிக்
கோமளவினை திருத்திமணி மேகலை மருங்கினிற்
கொய்யுங் கொய் தினி துடுக்குஞ்

சானகி பெருங்காம வெள்ளத் திளைத்தவன்
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலை செறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே. (8)

(8) நிலத்திற்குக் கடலை ஆடையெனல் கவி மரபு. "நீராருங் கடலுடுத்த நில மடந்தைக்கு" எனும் மனோன்மணி வாழ்த்தினை நோக்குக. உதரம்—வயிறு; குறளுரு—வாமன வடிவம்; படலை—மாலை; மடுக்கும்—(உலக முழுவதும்) நிறைக்கும்; பருதி வானவன, இருபெய ரொட்டுப் பண்புத் தொகை. உயர்ந்த பொன்மயமான புரிசை (மதில்) சூரியன் தேரின் சக்கரத்தை எட்டிப் பிடித்துத் தாக்கித் தடுத்தன எனப்படுதலால் உயர்வு நவிற்சியணி தோன்றக் கூறி யுள்ளமை காண்க. மான—பெருமை வாய்ந்த; சனகன் மாதேவி—சனகன் மனைவி — முத்தாடும் — முத்தமிடும். மஞ்சனம் செய்து—நீராட்டி; குழலின் மீது விரைநறுந்தார் அணிந்து என்க; தார்—மாலை; அஞ்சனம்—மை கூன—வளைந்த; கத்தூரி—கத்தூரிப்பொட்டு; சுடிகை நாற்றி—நெற்றிச் சுட்டியெனு மாபரணத்தைத் தொங்கச்செய்து.

கக்கக் கொழுங்குருதி நரிபிடுங் கத்தசை
கவர்ந்துயிர் குடிப்ப மறலி
கருநிறத் தாடகையை வதைபடுத் தச்சிலைக்
கடைகுழைத் *தடுகணை தொடுந்

தொக்கிற் பெருந்தவக் கவுசிகன் வேள்வியுஞ்
சுருதி நூல் முறைமுடித்துச்
சொல்லரிய மிதுலா புரிச்சனகன் விற்கண்ட
துண்டப் படுத்து மெங்கோன்

செக்கச் சிவக்குங் கொழும்பவள வார்கதிர்ச்
செஞ்சடா டவிமணிமுடிச்
சிவசங்க ரக்கடவுள் கண்கள்களி கூரச்
சிறந்தருள் புரிந்து சங்கு

சக்கரத் துணைச்செங்கை யொக்கச் சிவப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப் பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே. (9)

(9) மறலி உயிர் கவர்ந்து குடிப்ப எனக. தொக்கு இல்—பற்றில்லாத; சடர்+அடவி—உருவகம்.

* பிரதி பாடம்—தடுகணைதொடுத்.

49 படநடுங் கக்கண் பிதுங்கப் பணமுடிப்
பஃறலைக் கட்செவியின்மேற்
பவுரிமுறு கித்திருகி நடனஞ் செயுஞ்சரண
பங்கேருகக் குழகன்வெவ்

விடரகற் றிச்சென்ன வலையறுத் துத்தொண்டர்
ஈடேறி * வீடு குடிபுக்
கெக்கால முமர சிருப்பக் கடைக்கணேக்
கின்னருள் புரிந்த நெடுமால்

மடமயிற் சாயற் பசுங்கிள்ளை யங்குதலை
மணிவல்லி தூயவல்லி
வளருந் திருப்பேரை வல்லிகுங் குமமிறுக
மதச்சந்த னப்பாளிதத்

தடமுலைச் சுவடுபொரு துழுதமணி மார்பனொரு
சப்பாணி கொட்டியருளே
சந்தனச் சோலைசெறி தென்திருப பேரைமுகில்
சப்பாணி கொட்டியருளே. (10)

(10) கட்செவி—ஈண்டு காளிங்கன் என்ற பாம்பு; பவுரி—மணடலமாயாடும் கூதது வகை; முறுகித் திருகி—விரைந்து முறுககி நெடுமால கடைக்கண நோககின அருளினால தொணடர் துனபம் நீஙகுவதோடு பிறவியும் நீஙகி வீடுபேறறையடைநது எககாலமும் தலைமை பெறுகிறாகள என இரணடாமடிக்குப பொருள் காண்க. பசுஙகிளளை அம்குதலை—மணிவலலி கிளிபோனற மழலைசசொல் கூறும் அழகிய வல்லிககொடி யொததவள். வலலி உவம வாகுபெயர். குங்குமம இருக என்க. மதம்—மானமதம் (கஸதூரி); பாளிதம்—குழம்பு.

## முத்தப் பருவம்

50 சொற்ற நான் மறைபுக் கிருக்குமிட மாதலால்
சுரிசங் கிடம் புரிவதால்
துய்ய மலர் மாளிகைச் செல்விபே ரமுதந்
துளிக்கு மென் றின்புறுதலான்

மற்றுலகின் வாழ்பல் லுயிர்க்கிரங் குஞ் சத்திய
வாய்மைகுடி கொணடுறைதலால்
மங்கலப் புனிதமாஞ் சகலமுந் திருவுள
மகிழ்ந்திரங் கிச்சிறிது நீ

முற்றுரு மதியொடே அறுகெருக் கும்நரு
மொய்க்குஞ் செழுங்கொன்றையும்
மூரித் திரைப்பாய் சுருட்டித் தருங்கங்கை
முதுநீரும் விரவு சோதிக்

* பிரதி பாடம்—வீடது புகும எக்காலமும,

கற்றைவார் சடைமுடிச் சிவனுமய னுந்தொழுக
கனிவாயின முத்தமருளே
காவு சூழ் தென்பேரை யாழிநீர் வண்ணநின்
கனிவாயின் முத்தமருளே. (1)

(1) நான மறை—இருக, யசுா, சாமம, அதாவணம எனற வேதங்கள் ; துய்ய மலர் மாளிகைச செல்வி—திருமகள ; சத்தியவாய்மை—ஒரு பொருட பனமொழி ; முற்றுரு மதி—பிறைச சந்திரன ; நரு—வாசனை ; மூரி—பெரிய ; "முற்றுரு சடை முடி" வரை சிவனுக்கடைமொழி ; வேதங்கள் தங்குவதால, சங்கினை இடப்பக்கம் கொளவதால, திருமகளின அதராமிர்தம் துளிக்கும் என்று நினைப்பதால வாயமை குடிகொண்டிருப்ப தால் சிறிது நீ கனியின முத்தம் அருள் என்று பொருள் கொளக. ஆழி நீர்வண்ணன் கடல் நீா ஒத்த நிறமுடையவன் (நீலவண்ணன்).

51 தழைமடற் பச்சைப் பசும்பூக மணிமிடறு
தளையவிழ்க் கும்பாளைவாய்த்
தருமுத்த மும்பச் செனக்கிரண *முட்குமுது
தாற்றிளங் கதலிவாழை

யுழைமுத்து முடலிழுக் குண்டுரியு மென்கரும்
பொளிர்முத்து மாலைவாயிட்
டடனெருக் கும்பொழுது கணுவினில் வெடித்துதிரும்
உம்பர்வான் முகடுதூங்க

மழைமுத்த முந்துளி படும்போது செவ்வுக்கு
வாராது வடிவுதகரும்
வளர்புண்ட ரீகப் பொகுட்டுமுத் தஞ்சிறைய
வண்டுகால் கொடுதுவைக்கும்

கழைமுத்த முங்கதிர் வெதுப்புண்டு நீறுமொரு
கதிர்முத்து நிகரல்லவே
காவுசூழ் தென்பேரை யாழிநீர் வண்ணநின்
கனிவாயின் முத்தமருளே. (2)

(2) பூகம்—பாக்குமரம் ; தாற்று—குலை ; பசசெனக் கிரணம் உட்கும்—பச்சை நிறம் பொருந்திய கதிர்களானவை அசசந் தருகினற 7-ம வேற்றுமை உருபு. கதலி வாழை—ஒரு பொருட் பனமொழி ; உழை உம்பர் வான் முகடு—மேலுள்ள வானத் துச்சி ; மழை—மேகம் ; செவ்வு—முத்துக்களின நிறை அளவு ; இப்பாட்டில பல விடங்களில் முத்துக்கள உணடாதலைககூறி இவரது முத்தத்திறகு அவை நிகரல்ல என்கிறார். பாககு மரஙகளினற முத்தும, வாழை மரஙகளினற முத்தும் உடலுக்கு ஓர் இழுக் குண்டாகச செய்து பிரியும. மெல்லிய கரும்பினின்று தோனறிய முத்து ஆலையிடம ஆட்டும் போது கணுவிடையில வெடித்துக் கீழே உதிரும். மேகத்தினின்று தோன்றிய முத்து மழைத்துளிகளாகப் பெய்யும்போது சரியான எடை அளவுககு வராமல் உருவம் சிதறி விடும் தாமரையினினறு தோன்றிய முத்தும் வணடு கால் கொண்டு துவைப்பதனுல விகாரப் படும். மூஙகிலினின்று தோனறிய முத்தும் அக்கினியால தகிககப்பட்டு சாம்பராகி விடும். ஒப்பற்ற சந்திரனிடம் தோன்றிய முத்தும் உன் கனிவாய் முத்துக்கு ஒப்பலல. எனவே முத்தம் கொடுப்பாய் எனப் பொருள் கொள்க. காவு—சோலை.

*பிரதி பாடம—மட்டுமுது,

52 முனியுமிள வலுமுடன் வரத்தன் திருத்தாளின
முளரித் துகட்கருங்கல்
முனியிட்ட சாபந் தவிர்த்துமுன னுருவெய்த
முதுகருணை யோடளித்துச்

சனகன்மிதி லாபுரிச் சிலைவளைத் துச்சீதை
தனைமணம் புணர்தண்டுழாய்
சக்கரா யுதக்கடவுள் குலநாதன முத்தேரடலை
தத்தும் தடம் பொருநையான்

இனியசது மாமறைக் கொருமுதல்வன வருணனவந்
தெக்காலமும் *பரவுகார்
இலகுகொடி மணிமாட வழுதிவள நாடனூற்
றெண்மரொடும் விளையாடுமால்

கனியுமமு தும்பாகு மூறிக் கலந்தசொற்
கனிவாயின் முத்தமருளே
காவுசூழ் தென்பேரை யாழிநீர் வண்ணநின்
கனிவாயின் முத்தமருளே. (3)

(3) முனி—விசுவாமித்திரர் ; இளவல்—இலககுமணண். முளரித் திருத்தாளின துகளி ஞல் கருஙகல் சாபம் தவிாத்து என்க. முனி இட்ட என்பதில முனி கௌதமரை காட்டுகிறது. கார்..மாடம்..உயர்வு நவிர்சசியணி ; கார்—மேகம்.

53 பொருதிரை சுருட்டுமணி மகரசல ராசிதரு
புதுமுத்த முங்கைதொடேம்
புலவுநா றிச்சுற வெறிந்துடல முவரிப்
புனற்பங்க மூடெழுதலால்

பருகமது ரித்தபா கூற்றிருந் தொழுகும்
பசுங்கரும் பீன்ற முத்தும்
பலமொழிக் கபடுபடு மாதலா லதனையும்
படுபழி யறிந்து வேண்டேம்

இருநிலத் துச்சிவத துக்கண்ட முங்கறுப்
பென்றுவேய் முததுதொடேம்
இனிமேலும் நினதுகனி வாய்முத்தி னுக்குவமை
எதெடுத் துக்கூறுவேன்

கருதுமுது நான்மறைக் கொருமுதலவ னேசெழுங்
கனிவாயின் முத்தமருளே
காவுசூழ் தென்பேரை யாழிநீர் வண்ணநின்
கனிவாயின் முத்தமருளே. (4)

*பிரதி பாடம்—பரப்புவோன்.

(4) மகரசலராசி—சுறுமீன் வசிக்கின்ற கடல்; பங்கம்—சேறு; பாகு—உற்றிருநது; இருநிலத்துச......................வேய்—இத் தொடரினுல் மூங்கிலில முத்தாயிருந்த சிவபிரானைக குறிககிறுா. இவவரலாற்றினை முன பிள்ளைததமிழக கொத்தின 369ஆம் பாட்டின குறிபில காணக.

54 உலைவளைச் குங்கொழுங் கனலவாய் துருத்திவைத்
தூதவெம் பொறிசிந்தவெந்
துருகுங கருங்க லுருக்கோ டிரும்புவைத்
தொன்று யடித்து நீட்டித்

தலைமடுத் ததைமுனை படுத்திக் குணக்கறத்
தட்டியர மிட்டராவிச்
சமைந்தொப்ப மிட்டுக்கடைந்தவடி வேல்பொரு
தடங்கட் செழுங்குமுதவாய்

மலைவளைக் குஞ்செழுங் களபகுங் குமமுலை
மடந்தைதெய் வீகமோக
மடமயிற் சீதைப் பிராட்டியை மணம்புணர்
வளமருவு மிதிலாபுரிச்

சிலைவளைக் கும்பசுந் தண்டுழாய் மேகமே
திருவாயின் முததமருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதநின்
திருவாயின் முத்தமருளே. (5)

(5) உலை—கொல்லனது உலக்களம்; உருகும் கருங்கல் உருக் கோடு..........நீட்டி—கல்லினுலும் மணணினுலுமான சிற்றுலைகளில இரும்புக் கனியங்களின் பொடியைக் கட்டைக் கரியுடன் சேர்த்து உருககி 70–80 ராத்தல் நிறையுள்ள இரும்புக் கட்டிகளை அக்காலத்தில் உற்பத்தி செய்தார்கள். இதில் கட்டைக் கரி எனபதே உருக்குக் கல்லாயிருக்கலாம். குணக்கு அற—கோணல நீங்க; அரம்—இருமபை அராவுகின்ற ஓர் கருவி. உலைவளை..........வேல் வரை வேலுககு அடைமொழி கூறிச் சிறப்பித்து அங்கனமுளள வேலினையே போர் செய்கின்ற கண்ணின கூாமைகசு உவமை காட்டின திறம் வியக்கத்தக்கது.

55 பம்புதிரை வாருதி வடிம்பலம் பததுளி
படுங்ககன முகடுகோத்துப்
பரக்கும் படிக்குமுன் பெய்தகல் மாரியிற்
பதறியா நிரைகெடாமல்

தம்பமற் றிடையர்மடி யாதேழு நாளுமுது
தடவரை யெடுத்தேந்துமென்
தாமரைச் செங்கைத் தடங்குரிசி லேசங்கு
சக்கரா யுதக்கடவுளே

கம்பமத மால்யானை மூலமென் றோதவொ
கருடன் பிடர்த்தலைவரும்
காராழி மணிவண்ண பேராயி ரம்பெற்ற
கருணு கரக்குரிசிலே

செம்பவள முங்குமு.ந மூங்கவிரு மொத்தநின்
திருவாயின் முத்தமருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதநின்
திருவாயின் முத்தமருளே. (6)

(6) பம்பு—நெருங்குகினற ; வடிம்பு—ஓரம். ககனம் முகடு கோத்து—ஆகாயத்துச்சியில் நெருஙகி ; ஆநிரை—பசுக்கூட்டம் ; தம்பம் பற்று கோடு—, சாாபு ; தடவரை—கோவாத் தனமலே. பிடாத்தலே—கழுததினிடம ; கருணாகரன்—இராமருககு வழஙகும பெயர் களில் ஒன்று. செம்பவளமும்..................கவிரு..........வாய— பல பொருளுவமை.

56 பொங்குவெண் திங்களங் கவிகைவரு மிரணீயன்
புகலவவன் மதலேயபபேர்
புகலரமல் எந்தைநா ராயணனெனப்பெயர்
புகன்றதிலே முந்துகோபித்

தங்கைமலர் மீதுசங் காழியேந் தியப்பிரமன்
அவிர்சடைப் *பெருமானுளம்
அஞ்சிப் பதுங்கித் திரிந்தனர் மறந்தனேக்கொல்
அரியெங் கெனப் †புடைத்துப்

பங்கமுறு மக்கனகன் மார்பம் பிளந்திழி
பசுங்குடர் பிடுங்கிரத்த
பானம்பண் ணித்தடந் தோள்மாலே சூடவே
பண்டுகளி கொண்டோர் தூணிற்

சிங்கவடி வாயவந்த வெங்கள்குல ‡நாதனே
திருவாயின் முத்தமருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதநின்
திருவாயின் முத்தமருளே. (7)

(7) திஙகள்—அம்கவிகை—சநதிரனேயொதத வெண கொறறக் குடை ; எநதை—எம்+ தநதை. மருவுமொழி ; அமபிகை மலா மீது சஙகு ஆழி எநதி—திருமால், எநதி— எந்துதலேயுடையனென இகர விகுதி வினேமுதற பொருளேக காட்டியது. அவிர் சடைப் பெருமான்—சிவன கனகன—பொனனிறமான இரணியன ; சிஙகம்—நரசிஙகம்.

## வேறு.

57 மூவா முதலா வுலகமொரு
மூன்றும் பரவ வங்குரித்து
முத்திக் கொருவித் தாகவந்த
முதுநான் மறையின் குலக் கொழுந்தே

§கோவா தொளிரும் மரகதமே
கொடும்போ ரரக்கர் குலக்கூற்றே
கோவேத் தியரு ளக்கமலம்
குடிபுக் கிருக்கும் பெருமாளே

பிரதி பாடம் :—* பெருமாறு முன் † புடைப்பப் ‡ நாதநின
பிரதி பாடம் :—§ கோவா வொளிரும

தாவா வளமைக் கோசலைக்கோர்
தவமே தவத்தின பயனேயச்
சனகன் றருசா னகிவேட்ட
தடங்கைக் களிறே போரேறே

தேவா வமிர்தங் கனிபவளத்
திருவாய் முத்தந் தருகவே
தெள்ளிப் பயிலுந் தமிழ்ப் பேரைச்
செல்வா முத்தந் தருகவே. (8)

(8) மூவா—அழியாத ; அஙகுரித்து—முளைதது ; கோவாது—கோர்க்காது ; கோவேத்தியர்—ஈணடு வேதியா வேததியர் என விரிநதது. தாவா—கெடாத ; ஈறுகெட்ட எதிர்மறைப பெயரெச்சம்.

58 துளிக்குந் திருப்பாற் கடன் முகட்டுத்
தூய தரங்கத் தனந்தபுரத்
தொருவா விருகண் துயில்கூருஞ்
சோதிச் சுடரே பேரின்ப

மளிக்குங் கருணைக் கருங்கடலே
அழியா வீட்டுக் கொருவிளக்கே
அமுதங் கடைந்து திரட்டி யெடுத்
தமரர்க் குதவும் பெருமானே

களிக்குஞ் சுரும்பர் துதைந்துழத்தேன்
கக்குங் கமல முறுக்குடையுங்
கழனித் தடஞ்சூழ் திருநாடா
கண்ணு வரிகே சவமுகுந்தா

தெளிக்கும் பொருநைத தடந்துறைவா
திருவாய் முத்தந் தருகவே
தெள்ளிப் பயிலுந் திருப்பேரைச்
செல்வா முத்தந் தருகவே. (9)

(9) தூய தரங்கத்து அனந்தபுரத்து—இது கடலலை வீசும் திருவனந்தபுரம்போலும் மேலும் ஒருவா—நீங்காமல் திருப்பாற்கடலிலும் திருவனந்தபுரததிலும் யோகநித்திரை கொள்ளும் சோதிச்சுடர் என்க.

59 சந்தா டவியும் பாதிரியுந்
தடந்தா மரையும் விளைவயலுஞ்
சதுமா மறையும் விழாவொலியுந்
தழைக்கும் பிள்ளைக் குழா வொலியும

நந்தா வளமைத் திருவழுதி
நாடா பரம பதவீடா
நறுந்தா தளையும் பசுந்துளவ
நாரா யணசீ தரமுகுந்த

கொந்தார் மலர்ப்பூங் கரியகுழற்
கொவ்வைக் கனிவாய் மணிமுறுவற
கொடிபோ னுடங்குந் துடியிடைக்கோ
மளக்கோ குலக்கோ சலையளித்த

சிந்தா மணியே மரகதமே
திருவாய் முத்தந் தருகவே
தெள்ளிப் பயிலும் தமிழ்ப் பேரைச
செல்வா முத்தம் தருகவே. (10)

(10) சந்த(ம்)+அடவி—சந்தாடவி—சநதன மரங்கள் சூழ்ந்த காடுகள ; சநதம—சநத னம் ; நந்தா—கெடாத ; தாது—மகரந்தம் ; கொநது—கொதது ; கொவவைககனி—கோவைப்பழம் ; கோகுலம்—அரசகுலம்.

## வாரானைப் பருவம்

60 விதுரன் மனையில் அடிசில் நுகரும்
விரகன் வருக வருகவே
விதர ணிகமும் அறிவு முடைய
விமலன் வருக வருகவே

அதிரு மணியும் அரையின் வடமும்
அசைய வருக வருகவே
அழகு கரிய குழல்கள் சரிய
அபிமன் வருக வருகவே

புதிய மதியின் வதன வெயர்பு
பொலிய வருக வருகவே
பொழியு நறவு விரவு துளவு
புனையு மனகன் வருகவே

மதுர முறுசெவ் வதர வமுதம்
உதரம் வழிய வருகவே
வருணன் வருடு முபைய சரண
வரதன் வருக வருகவே. (1)

(1) விதுரன் மனையில் அடிசில துகர்ந்தது கணணுவதாரததில. விதரணிகம—சாமாதநியம் ; அனகன—திருமாலுக்கொரு பெயா ; உதரம—வயிறு ; உபையசரணம—இரு கால்கள். அபிமன் என்று தன் காலத்திலுள்ள ஓர் மனிதனை உவமை கூறியது வீரததில் சிறத்தலான் போலும்.

## வேறு.

61 எரியு மனல் கதுவும்விழி நிருதரொடு சமர்புரியும்
இகல் தொலைய விடுகணையினன்
இருவினையு மொருசிறிது தொடரவரி தெனவரும்
எவர்தமையு மடிமைகொளுமால்

முரிபுருவ நுதல்வனிதை சனகிமுலை முகடுழுத
முகலளித விதரணமுளோன்
முருகுவிரி தருதுளவு மணமலிய நெடியமணி
முடியினணி பெறவனைகுவோன்

உரியசது மறையுமுனி வரருமய னொடுபரவும்
உபையபரி புரசரணநீ
டுலகமுழு வதுமுதர மமையவொரு துணி நுகரும்
ஒளிரும்ரவி குலமரபினோன்

நெறியமரு தமுமுதிய சகடுமுதை விதரணிகன்
நிமலனஅர வணைதுயிலுமால்
நெறியுமகி மையுமளவில குணனும்வடி வழகுமுடை
நிகரிலமுகில் வணன் வருகவே. (2)

(2) அனல கதுவும் விழி—நெருப்பு மூளும் கண்கள்; நிருதர்—நிருததிக்கிலுள்ளவர், இராட்சதர்; அடிமை கொளுமமால் எனக; முரி புருவம—வளைகினற புருவம், வினைததொகை லளிதம—இனிமை; அயன—பிரமன; நீடு உலக முழுதும் நுகர்நதது—யுகப்பிரளயத்தின போது; ரவிகுலம்—சூரியகுலம, இககுலததில் இராமனாக அவதரிததது நோககி; நெறிய மருதம்—வழியிலுள்ள இரணடு மருத மரஙகள்; சகடு—சக்கரவடிவாய் வந்த சகடாசூரன்; நிமலன—மலமறறவன, கடவுள்.

## வேறு.

62 புகல ருஞ்சது மறைய ருந்தவர்
புலவர் பண்டிதர் மலர் கொடே
புதிய பங்கய சரண்வ ணங்கிய
புனித வெண்டிரை யுததி சூழ்

செகம டங்கலு நொடியி னுண்டுமிழ்
திரும ணந்தொளிர் மருமவோர்
திரிபு ரந்தழல் படமு னிந்தருள்
சிவன யனறொழ வருகவே

தகர முங்கிய பரிம ளங்கமழ்
தருத டம்புய சயதரா
சமர்மு கந்தனில் நிருதர் வெம்படை
சரியி டுஞ்சிலை யபிமநீள

மகர குண்டல மசைய வம்பொனின
மணிவ டஞ்சுடர் விரியவே
மணம லிந்தலர் துளவ ணிந்தருள்
மகர வணகுழை வருகவே. (3)

3. உததி—கடல்; திருமணநது ஒளிர் மரும—இலக்குமி சேரப் பெற்று பிரகாசிக்கின்ற மார்பையுடையவனே; ஓா—ஒப்பற்ற; தகரம முங்கிய— மயிாச்சாநது நிரம்பிய; அபிமன்— என்பது அபிம எனத் தொக்கது.

63 கலைமணந்தொளிர் தவளவெண்பிறை
கதுவி டுஞ்சிலை நுதலினாள்
கவின்ந லந்தரு *சனகி சம்பிரம
கனத னம்பொரு துழுதமால்

உலைமு கந்தனி லடிபடும் பொழு
தொளிரு மொண்சுடர் வயிரவா
ளொடுமு னிந்தட ரவுணர் பொன்றிட
உயிர்அ டுஞ்சமன வருகவே

திலக மஞ்சரி துளவசைந்தொளி
திகழ வண்டின முரலவே
செழுந றுந்துகள் முகைவிரிந்தலர்
சிறிய பங்கய மெனுநரு

மலர்ம டந்தையு நிலமடந்தையு
மருவு திண்டிறல் வரதநீள்
மகர குண்டல மசைய விலகெதிர்
மகர வண்குழை வருகவே. (4)

(4) தவளம்-வெண்மை ; கதுவிடும—ஒககும ; சம்பிரமம்—களிப்பு வாயந்த ; வாள்—ஐவகைப் படையிலொனருன வாளாயுதம் ; பொனறிட—இறகக ; சமன்—யமன ; திலக—கடவுளரில் திலக மொததவனே ; மஞசரி துளவு—தளிரையுடைய துளப மாலை ; நரு—செய்யா என்ற வாய்பாட்டு வினையெசசம் செய்து எனத்திரிநது நினறது.

64 உளநெ கிழ்ந்திரு பொழுதும் வந்தனை
யொடுமு வந்தெதிர் பரவவே
உபய செஞ்சரண் முடிபுனைந்தொளிர்
உயர்ப தந்தரு கருணைமால்

அளக வர்ந்திடை மகளிர்தங்குடில்
அணைத ருங்கயி றதுகொடே
அடிபடும்பொழு துடல்கு ழைந்தழு
தழுது நின்றவன் வருகவே

குளநி ரம்பிய புனலினுங்கரை
குனுகும் வண்டனு மதகுநீள்
குவளை யப்படு கருநெருங்கிய
குளிர்ந றும்பொழில் இடையும்வால்

வளைமு ழங்கிய குருகையம்பதி
மருவு நங்கைகண் மணி நன்று
வலவ னிங்கித கவிதை கொண்டருள்
மகர வண்குழை வருகவே. (5)

பிரதிபாடம—* சனகி சமபிரம்

(5) வந்தனையொடு—வணங்குதலோடு ; அளை—வெண்ணெய் ; குடில் அணைதரும் கயிறு கொடு—தம் வீட்டிலுள்ள பசு முதலியவற்றைப் பால் கறத்தற்கு அணைத்தற்காகும் கயிறு கொண்டு ; குவளை அம்படுகர்—குவளை மலர்ந்துள்ள அழகிய நீர் நிலை ; வால்வளை—வெள்ளிய சங்கு ; குருகை அம்பதி—திருக்குருகூர் ; நங்கை—உடைய நங்கையார். நம்மாழ்வார் தாயார். நல்நாவலவன் இங்கிதம் கவிதை கொண்டு—திருமாலையே துதிக்கும் நன்மை பொருந்திய நாவினின்று தோன்றும் பாட்டுக்களில் வல்லவரான நம்மாழ்வாரின் இனிய கவிதைகளை ஏற்றுக்கொண்டு.

## வேறு.

65 முடிமீ தொளிர்சூ ழியத் தொகையின

முழுவெண் டிங்கட் கற்றைநிலா

மூரிக் கடல்சூழ் தருபுவன

முற்றுந் தழைய வடிந்தவளைக்

கொடிபோ லொசியுங் குழையுமணிக்

குழையுங் குழைய வுடல்குழையக்

குழைத்து நுதலி னிடுதில்தக்

குறிவேர் வழிய விடைகழியின்

அடிமே லடிவைத் திருகைசுவர்

அதனைப் பிடித்து வருதலிற்றள்

ளாடி *வருகத் தளிர்ப் பின்மலர்

அங்கை பதித்துத் தவழ்ந்தெனது

மடிமீ திருந்து களபமுலை

வள்ளத் தமுதுண் டிடவருக

மகரக் குழையே யென்னிருகண்

மணியே வருக வருகவே. (6)

(6) சூழியத் தொகையின்—உச்சிக் கொண்டையுள் செருகும் அணித் தொகுதி போன்ற ; மூரிக்கடல்—பெரிய கடல், பழமையுள்ள கடலுமாம் ; கற்றை நிலாவும் கடலும் சூழ்ந்த புவனம் என்க. வடிந்த—பிறைவசமாக்குகின்ற ; திலதம் குறிவேர்வு அழிய—பொட்டானது குறிய வேர்வையினால் அழியவும் ; இடை கழி—வாயிற்றிண்ணை ; தளிர்ப்பின் மலர்—தளிர்த்தலுடன் கூடிய மலரொத்த ; முலைவள்ளம்—உருவகம் ; வள்ளம் — கிண்ணம் ; இப்பாட்டுடன் கீழ் வரும் பெரியாழ்வார் திருமொழியை நோக்குக :—

"ஓடவோடக் கிங்கிணிகள் ஒலிக்குமோசைப் பாணியாலே பாடிப்பாடி வருகின்றாயைப் பற்ப நாபனென்றிருந்தேன் ஆடியாடி அசைந்தசைந்திட்டு அதனுக்கேற்ற கூத்தையாடி ஓடியோடிப் போய்விடாதே உத்தமா ! நீ முலையுணாயே".

66 பண்டா லிலையின் அரங்கத்துப்

பாலா ழியிற்கண் டுயில்கூரும்

பச்சைப் புயலே பணமகுடப்

படப்பாந் தளின்கண் பிதுங்கநறுந்

தண்டா மரைச்செஞ் சரண பெயர்த்துத்

தள்ளிக் கடைவால் பிடித்துநெறி

தழைக்கும் படிக்கு நடம்புரிந்த

தலைவா கடல்சூ ழுலகமுழு

பிரதிபாடம்—*விழுதத்

துண்டா தரவோ டுமிழ்ந்தளந்த
ஒளியே யொளிரு மரகதமே
ஒருவா ணுதல் பண் டுளங்களிப்ப
உயர்வான் முகடு கிழித்தெழுந்து

வண்டார் தருவின் மலர் கொணர்ந்த
மாலே வருக வருகவே
மகரக் குழையே என்னிருகண்
மணியே வருக வருகவே. (7)

(7) ஆலிலையினும், திருவரங்கத்தினும், பாற்கடலில் அனந்தன் மீதும் யோக நித்திரை செய்யும் திருமால் என்க. பணமகுடம்—பருத்த தலையுச்சி, பின்னா படம என வரவே முன்னைய பணம் பருமையை உணர்த்தியது. பணமகுடப் . . . . தலைவா—இது கண்ணன் காளிங்கன என்ற பாம்பினது கர்வத்தையடக்கிய செயலைக் காட்டுகிறது. ஆதரவு—விருப்பம். உலகம் அளநதது—திருவிககிரமாவதாரத்தில் ; ஒரு வாள்றுதல—சத்தியபாமை ; தரு—பாரிசாத மரம் ; இதன் வரலாறு 43-ஆம் பாட்டில் காண்க.

67 சிந்தா மணியே மரகதமே
தேவே தேவர் பெருமானே
தேடும் பொருளே நாடோறுஞ்
செய்யுந் தவமே தவப்பயனே

எந்தாய் நந்தா விளக் கொளியே
எங்கட் குயிரே பரகதியே
எழுதா மறையின் வடிவே சொல்
எழுத்தெட் டினுக்கு மொருமயமே

கொந்தார் துளவப் பசுந்தாமக்
கோவே நிருதர் குலக கூற்றே
கூடும் புனல்நீ ராடிவலங்
கொண்டு திருமஞ் சனக்கொலுவில்

வந்தா தரித்து வருணனடி
வணங்கும் புயலே வருகவே
மகரக் குழையே என்னிருகண்
மணியே வருக வருகவே. (8)

(8) சிந்தாமணி—தேவ மணியின ஒனறு, நினைத்ததைக் கொடுககும ; ஆதரித்து—விரும்பி ;

68 ஆரா வமுதத் திலவிதழின்
அமுதத் திவலை மார்பொழுக
அரைநாண் வடமு மருங்கசைய
அரிய குழையுங் குண்டலமுரு

சீரார் திருவிற் பொலியுநுதல்
தீட்டும் குறிவேர் வரும்பவருள்
செய்யுங் கமல முகமிலஙகத்
திருத்தாட் டுணைப்பொற் றண்டையொலி

பார்மீ தெங்கள் செவிகுளிரப்
　　பழகு நெறிநா டொறும்வளரப்
பசுந்தார்த் துளவு மணங்கமழும்
　　படிநீ நடந்துன னடிபெயர்த்தென்

வாரார் களபக் குரும்பைமுலை
　　வள்ளத் தமுதுண டிடவருக
மகரக் குழையே என்னிருகண்
　　மணியே வருக வருகவே. (9)

(9) ஆரா அமுதம்—உண்ணத் தெவிட்டாத அமுதத்தையுடைய; இலவு இதழ்—இலவம பஞ்சொத்தமென்மையான இதழ்; திட்டும் குறி—எழுதும் பொட்டாகிய அடையாளத்தில்; நாள்+தோறும்—நாடொறும்; வார் ஆர் களபம் குரும்பை முலை—கச்சு பொருந்திய வாசனைச்சாந்து பூசிய தெனனங்குரும்பை போனறமுலை;

69 அருமைப் பெருமான் பிறவியொழித்
　　தருளும் பெருமான கரதலச்சங்
காழிப் பெருமான் வானவர்க்கும்
　　அருநான் மறைக்கு மெட்டாத

தருமப் பெருமான் பசுந்துளவத்
　　தாமப் பெருமா னேழுலகும்
தழைக்கும் படிக்கன் றளந்தநெடுஞ்
　　சரணப் பெருமான் மன்னுயிர்க்குங்

கருமப் பெருமான் முத்திவழி
　　காட்டும் பெருமா னம்பொகுட்டுக்
கமலா சனத்து வீற்றிருக்குங்
　　கன்னிப் பெருமான் தமிழ்க்குருகும்

பெருமைப் பெருமா னென்னருமைப்
　　பிள்ளைப் பெருமான் வருகவே .
பேரா யிரம்பெற் றுயர்ந்ததிருப்
　　பேரைப் பெருமான் வருகவே. (10)

10) கரதலம்—கையிடம்; தாமம்—மாலை; சரணம்—பாதம்; கன்னி—இளமை; தமிழ் குருகும் . . பெருமாள் முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 593-ஆம் பாட்டின் குறிபில் காண்க.

## அம்புலிப் பருவம்

(சாமம்)

70 மதியுடைத் தாயமண் டலம்பெற்று வான்முழு
　　மதிக்கடவு ளெனவருதலால்
வடியிட்ட தெள்ளமுத மயமாகி யானந்த
　　மகரா லயத் தெழுதலால்

நதியொடர வறுகெருக் கணியுஞ் சடைக்காட்டு
நம்பனுக் *கொருகண்ணதாய்
நாடொறு முயிர்ப்பயிர் தழைப்ப வருள்பொழிவதால்
நற்றுணை யுனக்கிவன காணு
முதிரிவிளை யுங்கொழும் பவளக் குலைச்சாலி
மூடுதொறும் வாய்மடை தொறும்
மூரிப பகட்டுவரி வாளை வெடிதாவியலை
மோதும் புனற்கேணியும்
அதிருமணி மதகும்வளை யுகள்வழுதி நாடனுடன
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (1)

(1) சந்திரன்மீது செல்லும்போது :—மதி உடைத்தாய . . . வருதலால்—வளமற்ற கர்க்கடக இராசியை யுடைத்தாகிய இடத்தைப் பெற்று வானில் பூரணச் சந்திர தேவனுக வருவதால், மதி—கர்க்கடக ராசி ; வடியிட்ட . . . எழுதலால்—வடிகட்டின தெளிவிய அமுதம் போன்று தூய வெண்மை நிறமாகிச் சுறு மீனகள் வசிக்கும் மகிழ்ச்சிமிகும பாற் கடலில் பிறந்ததனுல் ; மகராலயம்—நீரக்க சநதி பெற்ற வடமொழித் தொடர சுறு மீன் தங்கியிருக்குமிடமெனவே கடலாயிற்று. சந்திரன் அமுதம் கடைகையில பாற கடலில் பிறந்தது நோக்குக. நதியொடு . . . கண்ணதாய்—கங்கையோடு பாமபு அறுகம்புல், எருக்கமபூ முதலியவைகளை யணியும் சடைத் தொகுதியுடைய சிவனுக்கு ஒப்பற்ற இடக கண்ணுகி ; நமபன்—சிவன் ; நாள்தொறும . . . பொழிவதால்—தினமும் ஓரறிவுயிர் களாகிய பயிரகள் தழைக்குமாறு அருட் கிரணங்களைப் பொழிவதால் கண்ணுய் பொழிவதால் எனக்கூட்டுக. சந்திரனுக்கு "லதாதிபன" எனறும் "ஓஷதி ராஜா" எனறும வடமொழி யில் பெயருண்டாதலால் "உயிர்ப் பயிர் தழைப்ப" என்றுர்.

மகரக்குழை நாதர் மீது செலலும்போது மதி உடைத்தான . . . . வருதலால—சந்திர குலத்தாரால் ஆளுதலையுடைத்தாய பாண்டிய நாட்டிலே தலததைப் பெறறு உயாநத பூரணமான அறிவுடைய கடவுள் என்று கூறுவதால் ; மதி—இலககணையால சநதிர குலத் தைக் காட்டிற்று. மண்—பாணடிய நாடு ; வான முழுமதிக் கடவுள.

"வாலறிவன நற்றுள் தொழாசுர் எனின்". என்ற குறளைக காணக. வடி இடட . . . . . எழுதலால்—வடிகட்டின தெளிவான பாலின் மயமாகிய கடலில மகிழ்ச்சி கொண்டு யோக நித்திரை புரிவதால ; ஆனநதம்—மகிழ்ச்சி ; எழுதல—பளளி கொணடு எழுந்தருளியிருத்தல் ; நதியொடு . . . . கண்ணதாய்—கஙகையோடு, அரவு முத லியவைகளை அணிகளாக அணியும் சடைத் தொகுதியுடைய சிவனுககு ஒபபற்ற தன வலப பாகத்தைக் கொடுத்தவராய் . . . . பொழிவதல" தினமும் பக்தருயிரகளாகிய பயிர கள் தழைப்பதற்கு அருள் செய்வதால ; பவளக குலைச்சாலி—பவளம் போனறு குலைக கதிர களையுடைய செந்நிறமமைநத நெல். மூடு—வேர ; வாயமடை—வாயககாலின மடை ; மூரிபப கட்டு வரி வாளை—வலிய பெரிய வரிநத வாளைமீன ; வெடிதாவி—மேலெழும்பி ; கேணி—வயல ; வளை உகள்—சஙகுகள புரளும் ; இஙஙனமே 16, 32-ஆம பாடடுககளில வநதுள்ளமை காணக

## தானம்

71 இருவினைச் செனனவலை கட்டறுத் தழியாத
இன்பவீ டெய்தும் பொருட்
டிணைமலர்ச் சேவடி யடைந்தவர்க் குதவிடுவன்
இவன்வருண ஞுதரிக்கும்

பிரதி பாடம்—* ஒரு கணணதாய்.

*திருநதிச் சமுகதீர்த் தத்துறைத் தீம்புனல்
திவலையொரு சிறிதுபடிலோ
செகமண்ட லத்துன்முக மண்டல முயற்கறை
சிதைத்துவண் டடைகிடப்ப

முருகுவிரி தருநறுங் குமுதவாய் மடமங்கை
முகிண்முலை மணம்புணர்ந்து
முன்னும் களங்கமற் றப்பாலும் வைகுண்ட
முத்திமண் டலமெய்தலாம்

அருமறைக் குரியவொரு பொருளா யிருப்பனிவன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (2)

ஊழிக்காலத்து, திருமால் சிவனை வலப்பாகம் தாங்கினார்.

(2) துறை—நீர்த்துறை ; தீம்புனல்—இனிய நீர் ; கறை—களங்கம் ; ஈண்டு "திருநதிச் சமுக தீர்த்தம்" ஒன்று உண்டு போலும். வண்டடை . . . . மணம் புணர்ந்து—வண்டுகள் செறிந்திருக்கும் வாசனை மிக்க குமுத மலர் போன்ற வாயையுடைய பெண்களின் மொட்டொத்த முலைகளைச் சேர்ந்து (சந்திரன காம விகாரனுதலால் வருதற்கு இங்ஙனம் கூறினர் போலும்) முன்னும்—முதற் கண் ; அப்பால்—அதன் பிறகு சந்திரனுக்கு முதலில் கலிங்கத்தையகற்றி மகளிர் விரும்பும்படி செய்து சிற்றின்பம் அனுபவித்த பிறகு பேரின்பமாகிய வைகுண்டத்தையும் கொடுப்பான் என்றார்.

72 வெவ்வரா விடமொழுகு கறையணற் பகுவாய்
விழுங்கிமீ ளவுமுமிழ்தரும்
மிச்சிலென் றுலகினுரை செய்வர்அத னுனுடல்
வெளுத்தற மெலிந்துகுப்புற்

றெவ்வுலக முந்திரிந் தாவதென் பெரியோரை
எளியோர் துணைக்கோடல்நன்
றிருகனற் கட்செவிப் பகைமுடித் தற்குவண
னிவனிட்ட வேவல்கடவான்

செவ்வுபட வெட்டிரட் டித்தகலை யுடையநீ
சிந்திப்ப தற்கரியவாந்
திகழருங் கலைகளறு பத்துநா லுடையவொரு
செம்மலிவன் வைகுண்டமாம்

அவ்வுலக முந்தரக் கர்த்தனிவன் அஃதறிந்
தம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(3) வெம்மை+அரா=வெவ்வரா—கொடிய ராகு எனும் பாம்பு ; கறை அணல்—விடமுடைய கீழ்வாய் ; பகு—பிளவுபட்ட ; வாய் விழுங்கி—மூன்றும் வேற்றுமைத் தொகை ; மிச்சில்—எச்சில் ; அற—முழுதும் ; குப்புற்று—தலைகவிழ்ந்து ; "பெரியோரை . . .

பிரதிபாடம்—* திருசந்திச,

நன்று "—இது பழமொழி ; கட்செவி—பாம்பு ; உவணன்—கருடன் ; செவ்வு—அழகு ; எட்டு இரட்டித்த கலை—பதினாறு கலை ; வைகுண்டமாம் அவ்வுலகு—வைகுண்டமாகிய அந்த உலகம் ; இராகு கிரகண காலத்தில் சந்திரனை விழுங்கி உமிழ்வதால் எச்சிலென்றவனை யாவரும் ஏச அப்பழியால் தன் உடல் வெளுத்து மிகவும் மெலிந்து தலை கவிழ்ந்து எல்லா வுலகங்களையும் சுற்றி யார் அப்பழியைப் போக்குவார் என்று திரிவதனால் என்ன பயன ? "செயற்கரிய செய்யும் பெரியோரான திருமாலை அங்ஙனம்" செய்யா எளியோர் துணைக் கொள்ளல் நன்று எனவே விரைந்து வா. மற்றும் இராகுவாகிய பகையை முடிக்கக கருடன் இததிருமாலிட்ட ஏவலைத் தவறாது செய்வான என்பதனால தானம கூறினார். மற்றும் மூன்றாவது வரியில் சந்திரனுக்கு 16 கலைகள் கூறித் திருமாலுக்கு 64 கலைகள் கூறியதனால் பேதமும் கூறினர். "பெரியோரைத் துணைக்கொள" என்பது மூதுரை.

### பேதம்

73 பைத்தலை நெடுஞ்சுடிகை விடமொழுகு கட்செவிப்
படவரவு தொடரினும்நீ
படரொளி மழுங்கிவான் முகடொளிக் குவைபெரும்
பாம்புதீண் டிக்கிடந்த

நித்திரை மயக்கத்து மொளிமழுங் கானிவன்
நெடியவா னிடை நுழைந்து
நிலையிலா தோடித் திரிந்துழல்வை நீயிவன
நீடூழி யடிபெயர்ந்து

மூத்தவா ணகைவிமலை யடிவருட வானவர்கள்
முனிவரஞ் சலிசெய்யநீள்
முத்திதரும் வைகுண்டம் வீற்றிருப் பானந்த
முறைமுறை தெரிந்துபார்க்கில்

அத்தகைமை தோறுமுன் னினுமுயர்ந் தவனிவன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (4)

(4) குறிப்பு.—சுடிகை—தலை ; அரவு—இராகு ; பெரும் பாம்பு—ஆதிசேடன் ; தீண்டி—பொருந்தி ; நித்திரை—யோக நித்திரை ; சிறிய இராகு எனும் பாம்பின் சாயை தொடர்ந்தாலே ஒளி மழுங்கி வான் முகடொளிப்பவன சந்திரன என்னும் பெரிய பாமபாகிய ஆதிசேடன தீண்டிக் கிடந்த மயக்கத்திலும் ஒளி மழுங்கவில்லை என நயம் தோன்றியது. விமலை—இலக்குமி; உன்னினும்—உன்னைக் காட்டினும் ; ஐந்து இல—ஐந்தாம வேற்றுமை உறழ பொருவு; இங்கு இரு வகை பேதங்கள் கூறப்பட்டன காணக.

### தண்டம்

74 செங்குருதி யலைமண்டி யாறெடுத் தோடச்
சிலைக்கால் வளைத்துவிசயன்
தேத்தரச னைக்கொன்று கூற்றருந் தும்படி
சினத்தடும் போர்முகத்துப்

பொங்குகதி ராயிரந் தங்குசெஞ் சுடரவன
　　பொழுதுகா ணுமலொளிர்செம்
பொன்னிறத் திகிரியா லிவனமறைத் தனனன்று
　　போதாக் குறைக்கொளிரும்வெண

சங்குகொண் டுன்னையு மறைத்திடா மற்கலை
　　தளர்ந்து மெலி வெய்துருமல்
தாதள வெருபபொடி யெடுத்தெறியா மல்முன்றில்
　　தவழ்நதுவிளை யாடவாவென்

றங்கைமலர் விரல்குனித் துனையழைத் தனனிலன்
　　அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
　　அம்புலீ யாடவாவே. (5)

(5) குறிப்பு —தேத்தரசன்—சிந்து தேசத்தரசனுன சயத்திரதன்; சயத்திரதன்—முன பிள்ளைத் தமிழ்க் கொதது 129-ஆம பாட்டின குறிபபில காண்க. கூற்று—யமன; திகிரி—சக்கரம; சஙகு கூறினுர் தணணிய கதிாகள வீசலால்; எருப் பொடி எடுத்தெறிதல—பிளளைத் தமிழக் கொதது 129-ஆம பாட்டின குறிபபில காண்க. வாரா விட்டால் சஙகு கொணடுனனை மறைத்து விடுவான் எனறதால தண்டமாயிற்று.

### பேதம்

75　கூறருந் துதியைநீ யுடையவ னிவனமரர்
　　கூறருந் துதியையுடையான்
குறைபடு தடங்கலைக ளுடையநீ யிவனுமோ
　　குறையாத கலைகளுடையான்

வீறுதரு முருவிலி மதிக்குடையன் நீயிவன்
　　விதரண மதிக்குடையவன்
விண்ணிடைக் கரந்தொளி யொளித்திடுவை நீயிவன்
　　வேதநுட் பொருளி ளொளியான்

ஊறுபட வோடித் திரிந்திளைத் திடுவைநீ
　　ஒருநாளு மிளையானிவன்
உவரிப் புனறபங்க * மூடுதித் திடுவையிவன்
　　உம்பரா ழியினுதிப்பான்

ஆறலை புரட்டுபொரு நாநதி நெடுந்துறைவன்
　　அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
　　அம்புலீ யாடவாவே. (6)

(6) குறிப்பு.—சந்திரன். மகரக்குழையன்.

1. கூறுதற்கரிய துதியை என்னும் தேவர்கள் கூறிப் புகழ்கின்ற தோத்திரத்தைப் பெற்றவன்.
திதியை உடையவன்.

பிரதிபாடம்—* ஊடுதிப்பாய் இவன்,

| சந்திரன். | மகரக்குழையன். |
|---|---|
| 2 குறைகின்ற 16 கலைகளைப் பெற்றவன. | குறையாமல் வளர்கின்ற 64 கலைகளைப் பெற்றவன். |
| 3 பெருமை மிக்க உருவமற்ற மன்மதனுககு வெண்கொற்றக் குடையாகவுள்ளவன. | திறமைமிக்க அறிவு உடையவன். |
| 4 வானிடை மறைநது ஒளிப்பான். .. | இவன் வேத நுட் பொருளில் ஒளியாக விளங்குவான. |
| 5 துன்பம் பட மேரு மலையைச் சுற்றியோடியோடித் திரிந்து இளைப்பவன. | ஒரு நாளும களைப் புறுதவன. |
| 6 உப்புத் தனமையுடைய நீரும் சேறும் உடைய இவ்வுலகக் கடலில் உதிப்பவன். (கடற் கண் சநதிரன தோன்றுவதுபோல் தெரிவதால் இங்ஙன் கூறினர்.) | மேலுள்ள பாற்கடலில் ஆலிலை மேல் குழைந்தையாகத் தோனறுவான. |

அலை ஆறு புரட்டும்—அலைகள் வழியிலுள்ளவைகளைப் புரட்டிச் செல்லும்.

### தண்டம்

76 சந்தப் படாமுலைத் தார்க்குழற் கோமளத்
தையல்சா னகிபொருட்டுத்
தடமதி ளிலங்கா புரம்பொடி படுத்தித்
தகர்த்துமுடி பத்துமண்மேற்

சிந்தச் சரந்தொட்ட சிலைவீர ராகவன்
சிறுகுழந் தைப்பிள்ளையாய்த்
திருவிரல் தலைசுட்டி யுனையழைத் தால்வரச்
செய்யா திருக்கமுறையோ

முந்தப் பெருந்தக்கன் வேள்வியிற் றேவர்கள்
முறிந்து திசை கெட்டோடுநாள்
முழுமதிக் கடவுள்நீ பரிபவப் பட்டகதை
மொழியக் கணக்குமுண்டோ

அந்தக் கணக்கின்றும் வந்திருக் கின்றநினி
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமாதவனுடன்
அம்புலீ யாடவாவே. (7)

(7) குறிப்பு.—சந்தப் படாம் முலை—சநதனக குழமபு பூசி உடையால் மறைநத முலை ; திருவிரல் தலை சுட்டி—விரலைத் தலைக்கு மேல தூககிச் சுட்டி ; பரிபவம்—அவமானம். முநத . . . . கணக்கும் உணடோ—முன பிளளைத தமிழக கொததின 505-ஆம பாட்டின குறிப்பினை நோக்குக.

### தானம்

77 தவநெறிக் கவுதமன் பன்னியக லிகைபுரந்
தரனொடு மணந்தவதனுல்
தவமுனி அறைந்தசா பத்தில்வன் கல்லுருத்
தாங்கிய தொழித்த தெங்கோன்

புவனமொரு மூன்றுமீ ரடியா லளக்கின்ற
பொற்கழற் றுகளுனக்கும்
புனிதபூ ரணசெவ்வி முகமண்ட லக்கறைப்
புரைதீர வரமளிக்கும்

சிவனுமய னும்வெள்ளை யயிரா பதததனும
செஞ்சுடர்க் கடவுளோனும்
தேவர்முப் பதுமுக கோடியு மறுமுகச்
செம்மலுங் கைம்மலைக்கோட்

டவனுமுறை முறைபரவு நிகரில்முகில் வண்ணனுடன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ண னெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (8)

(8) குறிபபு.—தவநெறி . . . எங்கோன்—பிள்ளைத் தமிழ்க் கொத்து 504-ஆம் பாட்டின் குறிப்புரை நோக்குக. இராமாவதாரத்தில் அகலிகை சாபம் நீக்கினர். புவனம் . . . பொற்கழல்—பிள்ளைத் தமிழ்க் கொத்து 118, 189-ஆம் பாட்டுக்களின் குறிப்பில் காண்க. புரை—குறறம ; வெள்ளை அயிராபதத்தன—இந்திரன் ; செஞ்சுடர்க கடவுளோன்—சூரியன் : அறுமுகச் செம்மல்—முருகன ; கைம்மலைக் கோட்டவன—தும்பிக்கையையுடைய மலை யொத்த யானைத் தலையையும் தந்தங்களையு முடைய விநாயகன்.

78 விண்டடவி முகமாயி ரங்களு மொளித்துநெடு
வெளியின்வந் தொருமுகமதாய்
வெண்டிரைக் கங்கைப் பெரும்புனல் பரந்தென
விரிந்தவவ் வெள்ளத்தின்மேல்

தண்டரள மணியுமிழ்ந் தாகாய நள்ளிடை
தயங்கிய சலஞ்சல மெனத்
தாரகைக் குலமொடு * தவழ்ந்துமேன் மேல்நீ
தலைப்பட்ட வாதலானும்

புண்டரிக மலர்முகை முறுக்குடைந் தலருமொரு
பூவெனப் பொலிவுபெறருய்
புலரிய மதிவள முரைக்கில்முழு மதியெனப்
புகல்கின்ற தன்மைகண்டாய்

அண்டபகி ரண்டமும் நீரம்பிய இவன்றனுடன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (9)

(9) குறிப்பு.—அடவி—தொகுதி ; நெடுவெளியின்—பரநத ஆகாயத்தினின்றும் ; நள்—இரவு ; விண்டு அடவி . . . பெரும்புனல்—பகீரதன் தவத்தினல் வநத கஙகை தன் தொகுதி பொருந்திய ஆயிரம் முகங்களும் சிவபிரான் சடையில் தாஙகி மறைத்து அதில் ஒரு முகத்தை

பிரதிபாடம் ;—* தளாநதுமேன் மேல்நீ,

ஈடுத்துவிட அது சென்று பரந்த நீர் போன்றுள்ள மேக மற்ற நிர்மலமான ஆகாயத்தில் இரவில் முத்து மணிகளை உமிழ்ந்தது போன்ற நக்ஷத்திரக் கூட்டங்களோடு சலஞ்சலம் போன்று சந்திரன் விளங்குகிறான் எனக. வலம்புரி பல சேர்ந்தது சலஞ்சலமாகும். முன் பிள்ளைத் தமிழ்க் கொத்து 451-ஆம் பாட்டின் குறிப்பில் சலஞ்சலம் பற்றிக் காண்க. புண்டரிகம்—தாமரை ; பகிரண்டம்—அண்டத்தின் வெளி.

## பேதம்.

79 எனனென்று நிகராவை யிருளனறி நீயன்பா
இதையவிருள் நீக்கவறியாய்
இருவிசும் பிற்பொலிகு வாயிவன புவனஙகள
எங்கணும் பொலிவதோராய்

பொன்னந் தகட்டிதழ்க் குமுதமல லானுளப்
புதுமலர் திறக்க வறியாய்
போலியல் லாவுனைப் போலியென் முல்வந்து
புதுநிலா மணிமுன்றில்வாய்

மன்னுஞ் சரோருகப் படுகரும் புளினவெண்
மணற்குன்ற முஞ்சோலையும்
மடவனப் பெடையோடு கூடிப் புணர்ந்தக
மகிழ்ந்துபிரி யாதுசெஞ்சூட்

டன்னங்கள் விளையாடு தென்பேரை மாயனுடன்
அம்புலீ யாடவாவே
ஆழிநீர் வண்ணனெனும் வாழிமா தவனுடன்
அம்புலீ யாடவாவே. (10)

(10) குறிப்பு.—என் என்று நிகராவை—மகரக்குழையனின் எவ்வொப்புமைக கெனறு தான் ஒப்பாகுவாய்.

| சந்திரன. | | மகரககுழைநாதா. |
|---|---|---|
| 1 உலகப புறவிருளை நீககுவான | .. .. | பகதாகள மனததின அஞ்ஞான விருளைப் போககுவான. |
| 2 ஆகாயத்தில விளஙகுவான | .. .. | உலகம் எலலாவறறிலும விளங் குவான. |
| 3 பொன் தகடடினையொத்த இதழகளையுடைய அல்லி மலரை மலர்ததுவான் | .. .. | மனமாகிய புது மலரினைத் திறப் பான். |

போலியல்லா உனை—ஒப்பில்லாத உன்னை ; புது நிலா மணி முன்றில வாய்—புதிய நிலவொளிகாலும் முத்துக்கள் உளள முன்றிலினிடம் ; படுகர்—நீர்நிலை புளினம்—மணல்திட்டு ; அனப்பெடை—பெண் அன்னம் ; அகமகிழ்ந்து—மனமகிழ்ந்து. செஞ் சூட்டு அன்னம்—சிவந்த உச்சிகொண்டையுடைய ஆண் அன்னம் ; 'வந்து மணி முன்றில் வாய் பேரை மாயனுடன் ஆடவா' என இயைக்க. மூன்றுவது வரி பேரைக்கு அடைமொழியாக வந்தது.

## சிற்றில் பருவம்.

௮0 களிக்குஞ் சுருமபர் துதைந்துழுது
கணைககா லசைத்துச் சில்லோசை
கனிந்தூற றிருப்ப மிழற்றுதொறுங
கக்கும் கலுழி நறவுபரி
மளிக்கும் பசுந்தார்ச் செழுந்துளவு
மணக்கும் குழகா கார்மேக
வண்ண கருணை மடைதிறந்து
வழியும் புயலே பேரின்பம்
அளிக்கும் பெரும் தெருவீதி
யருகே வழிக்குப புறம்பாக
வறியாப் பருவப் பெண்களெடுத்
தமைக்கும் வண்ட லிதுகண்டாய்
தெளிக்குந் தமிழ்த்தென் திருப்பேரைச்
செல்வா சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேஞ சிற்றில் சிதையேலே (1)

(1) துதைந்து—நெருங்கி ; ஊறறிருபப—பெருக்குமிக ; மிழற்றுதொறும்—ஒலிக்குந் தோறும் ; நறவு கலுழி—தேன் வெள்ளம் ; முதலடி துளவுக்கு அடைமொழியாக வந்தது. வண்டல்—மகளிர் விளையாட்டு.

81 வேண்டக் கிடையா வாரமுதம்
விரிதெண டிரைநீர்க் கடன்முகட்டின்
வெற்பைப் பிடுங்கி மத்தாக
விடவா ளரவக் கயிறுசுற்றிப்
பூண்டக் கணமே சுவைமதுரம்
பொங்கிப் பெருகக் கடைந்தெடுத்துப்
புலவர்க் களிக்கும் பெருமானே
பொருந்தா நிருதர் போரேறே
காண்டற்கரிய கொழுங்கிரணம்
கக்கும் பசிய மரகதமே
கதிரா ழியிற்செங் கதிர்மறைத்த
கருணைப் புயலே பூமகள்கை
தீண்டச் சிவக்கும் பொலன் தாளால்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (2)

(2) கடல்—பாற்கடல் ; வெறபு—மந்தரமலை ; விடவாள் அரவம்—வாசுகி ; புலவர்—தேவர் ; பசிய மரகதமே—ஈண்டு நீல நிறமுடையவனுயிருந்தும் பச்சை, செம்மை, எனக் கூறுதல் கவி சமயம். பூமகள்—இலக்குமி. முதலடி பாற்கடல் கடைந்தது பற்றிக் கூறுகிறது. வெற்பு—மந்தரமலை. கடல்—பாற்கடல்.

82 வள்ளைக் குழைவேற் கருநெடுங்கண்
மதிவா ணுதற்கோ மளப்புளக
வனமா முலைக்குங் குமச்சுவட்டு
மடவா ரொடும்போய் விளையாட

அள்ளிக் குடிக்கும் தடம்பொருநை
யாற்றிற் கூடு புனற்றுறையின்
அருகிற் சிறுபேதை யர்களொடுத
தடங்கா விருப்ப மீதூர்ந்து

தள்ளிப் பரல்மாற் றரும்பசும்பொன
தகட்டின் வயிடூ ரியங்குயிற்றிச்
சமைக்குந் திருமா மணிமுறத்துத்
தருந்தா மரைக்கைச் சேப்பமணல்

தெள்ளிக கொணர்ந்து தரவிழைத்த
சிறியேம் சிற்றில் சிதையேலே
*தெளிக்கும் தமிழ்த்தென் திருப்பேரைச்
செல்வா சிற்றில் சிதையேலே
பொருநைத் தடந்துறைவ
சிறியேம் சிற்றில் சிதையேலே (3)

(3) வள்ளைக் குழை—வள்ளைப்பூ வொதத காது ; கோமளம்—இளமை ; வனம்—அழகு ; குடிக்கும்—நீர் குடிக்கும் ; ஆறறில் கூடு புனல்துறை—ஆற்றில சேரும் நீரத்துறை ; குயிற்றி—பதித்து ; மாறறரும பசும் பொன தகட்டினல் செய்த வைடூரியம் பதிதத உளள அழகிய முறத்திலே—பரல் (பருககைக் கறகளை) தளளி மணல் தெள்ளி எடுததுச செய்த சிற்றில் என்க.

83 தருக்கா மலர்ப்பூம் பொழிலும வயல்
தடமும் தருதென் திருப்பேரை
தழைக்கும் படிநூற் றெணமர் தொழுந்
தாமோ தரசீ தரமுகுந்த

வொருக்கா லெனுமவ் விருக்காலும்
உணராப் பொருளே பரஞ்சுடரே
ஒருவா ணுதல்பண் டொளங்களிபப
உயர்வான் முகடு கிழிததெழுந்து

மருக்கால் நறுமென்மலர் கொணர்ந்த
மதமோ பதிணு ருயிரங்கோ
வலாமங் கையர்கள் புளகமுலை
மணந்து கனிவா யமுதமுணட

பிரதிபாடம :—* திரையார்.

செருக்கோ வுனக்கீ தியல்பன்று
சிறியேம சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத தடந்துறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே (4)

(4) தருகா—மரஙகள சூழநத சோலை ; ஒருக்கால் ஒப்பறற பிரிவு வேதத்தாலும் அறிய முடியாதவன என்றபடி ; இருககாலும—இருககு வேதத்தாலும ; ஒருவாள நுதல்—சத்தியபாமை ; மருகால—வாசனை வெளிவிடும ; நறு—தேன் ; மலா—பாரிசாதமலர் ; புளகம்—புடைபபு (பக்கஙகளில பருததல) ; கனிவாய்—கொவ்வைக்கனிபோனற சிவந்த உதடுகளையுடைய வாய ; அமுது—இஙகு அதராமிர்தம் ; பதினாறாயிரம். . . .உண்ட ; பிளளைத தமிழக் கொத்து 213-ஆம பாட்டின குறிப்பில காணக.

84 கோவே கோவா மரகதமே
கொடும்போ ரரக்கா குலக்கூற்றே
குளிர்பூந் துளவத் திருத்தொங்கல்
குவவுத் தடந்தோட் காயாவாம்

பூவே பூவின் பொலன்பொகுட்டுப்
புதுமென் மணமே வருள்சுரந்து
பொங்கிப் பெருகி யுவட்டெறிந்து
பொழியும் புயலே கற்பகப்பூம்

காவே முதுகோ சலைதவமே
கண்ணே கண்ணின் உள்மணியே
கதிர்நித் திலவெண் மணல்நினது
காலி னுறுத்தக் கடனன்றே

தேவே தேவப் பெருமானே
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே (5)

(5) குவவு—திரட்சியமைந்த ; உவட்டெறிதல—பெருக்குமிகுதல ; நிததில வெண் மணல்—முத்தினைப்போன்ற வெள்ளிய மணல் ;

85 வன்னக களபப் புளகமுலை
மடவா ரெனுங்கோ வியர்கள்திரு
வாய்ப்பா டியிற்புக் கௌகவர்ந்த
மணிவாய்க் கள்வ னென்றுகட்டி

யுன்னிப பொருமி யழவடித்த
துண்டே லவர்கள் விளையாடும்
ஒளிர்நித் திலவெண் மணல்சிற்றில்
உனக்கின் றளிக்க முறைகண்டாய்

கன்னிக் கமுக மிடறுெடியக்
காய்க்கும் பசுங்காய்க் குலைசிதறக்
கதலிக் குலங்க ளடிசாயக்
கயல்பாய்ந் துகண்டு வாலறையுஞ்

செந்நெல் பழனத் திருப்பேரைச்
செல்வா சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (6)

(6) வன்னம்—அழகு ; அளை—வெண்ணெய் ; உனனிப் பொருமி அழ—பின்னும் அச் செய்தியை நினைத்துத் தேம்பித் தேமபி அழுமாறு ; உனககு இனறு அளிகக முறை—அன்று கோவியர்கள் அழ அடித்ததனால அவர்கள் மககள இபபோது விளையாடும் சிற்றிலை நீ கலைப்பதனால் "உனககு இபபோது கேட்டது கொடுக்க" முறையாகும். கயல் மீன்கள் தாவும்போது வாலினால் நீரை யறையும். அக் கயல்கள் தாவும வேகததினாலும் நீர் தெறித்த வேகத்தினாலும் இளைய பாக்கு மரஙகளின் முனைப் பாகஙகள ஒடியவும், அதன் காய்களையுடைய குலைகள் சிதறவும், வாழை மரஙகள் அடியோடு சாயவும் செய் தன. இதனைச் சூழ மேதி இறஙகும துறையில . . . வாழை சாயநதொரு தாழை யில் தாக்க . . . " என்ற குற்றாலக் குறவஞ்சியோடு ஒப்பிடுக. செந்நெல பழனம் தேன் கெண்டை மீனகள் நிறையப் பெற்ற வயல் ; செந்நெல்—செநநெல் என்று கொண்டு சாலி நெல் விளையும் கழனி என்றுமாம்.

86 பண்ணே றியமென் குதலைமொழி
பவளக் கனிவாய்க் குறுநகையும்
பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயமுங் கண்டழகு

கண்ணே றெளியேம் பட்டனமென
றெண்ணிக் கருத்து வேறுபடக்
கணக்கன் றுலகின மன்னுயிர்க்குங்
காவற் கடவுள் நீயன்றோ

மண்ணே ழையுமுண் டுமிழ்ந்தளந்த
மாலே வேலைப் புனல்சுவறி
மறுகக் கணைதொட் டிடுமுகுந்தா
வருணன் *திருவா ராதனைசெய்

தெண்ணீர்ப் பொருநைத் தடந்துறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே

தெளிக்கும் தமிழ்த்தென் திருப்பேரை
செல்வா சிற்றில் சிதையேலே. (7)

(7) பாரித்து—பருதது ; கண்ணேறு—திருஷ்டி தோஷம் ; மொழி, வாய், நகை, புயம் ஆகியவைகளின அழகு கணடு "எளிமையயுடைய நாஙகள திருஷடி செயதோம் என்று நினைத்து மனம மாறுபடக் கலைபபதில தவறில்லை எனறாலும்" உலகிலுள்ள எல்லா வுயிர்க்கும நீ காக்கும தெய்வமலலவா எனவே எஙகளையும் காக்க வேணடாவா" ஆகையின் சிற்றில் சிதையாதே எனகிறாகள். வேலைப்புனலை . . . முகுநதா—கடல் நீர் வற்றிச் சிதைய அககினிக் கணைவிடும இராமா.

---

*பிரதிபாடம்.—திணமா ராதனைசெய்.

87 தடிக்குஞ் சிகரப் படாம்பொதிந்த
தடமா முலைக்குங் குமச்சுவடுத்
தழைக்குங் குறுங்கண *சுரந்தொழுகித்
தருபா லசோதை மகிழ்ந்தூட்ட

குடிக்கும் புயலே யிலங்கையில் வெங்
கொடும்போ ரரக்கர் குலக்கூற்றாய்க்
குனிக்குஞ் சிலைக்கைத் தடங்களிறே
கோவே பசுந்தண் டுழாய்மாலை

முடிக்கும் †பெரும முத்தொழிற்கு
மூவா முதலே யழியாத
முத்திக் கொருவித தாகவந்து
முளைக்கும் பொருளே பாகுபெற

வடிக்கும் தமிழ்த்தென் திருப்பேரை
மாலே சிற்றில் சிதையேலே
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே சிற்றில் சிதையேலே. (8)

(8) தடிக்கும் சிகரப் படாம் பொதிந்த தடமாமுலை—கனத்த மலைச் சிகரம் போன்ற உடையணிந்துள்ள பெரிய சிறந்த முலை என்க. கனத்த முலை—மலைச சிகரம் போன்ற முலை, உடையணிந்துளள முலை எனக் கூட்டுக. குனிகரும்—வளைக்கும்; முத்தொழில்—ஆக்கல், அழித்தல், படைத்தல்; மூவா முதல்—கடவுள்;

88 கொத்தோ டசையப் பசுந்துளவங்
குடக்கூ டரும்பி முளைத்தெழுந்து
கொழிக்குந் தவளப் பிறைநுதலில்
குறுவேர் வொழுக வணிந்தசுட்டி

முத்தா னதுவெண் ணிலவெறிப்ப
முகத்தா மரையின் நகையிலங்க
முதுகுண் டலமும் வார்காதும்
முழுமா மணிப்பொற் சோதிவிட

அத்தா வருணன் தினம்பரவும்
அரிகே சவநா ரணமுகுந்த
அடல்வா ளரவிற் கண்டுயிலும்
ஆழிப் புயலே ஆய்ச்சியர்கை

மத்தா லடிப்ப வெண்ணெ யுண்ட
வாயா சிற்றில் சிதையேலே
மகரக் குழையே நூற்றெண்மர்
வாழ்வே சிற்றில் சிதையேலே. (9)

(9) குடக்கு ஊடு—மேற்குத் திக்கினிடையில்; பிறை நுதலில்—பிறையையொத்த நெற்றி; அத்தா—அத்தன் என்பதன் விளி; வாள் அரவு—ஆதிசேடன்.

பிரதிபாடம்.—* சார்ந்தொழுகித். † பொருளே.

89 அன்போ டணைத்து முலைகொடுத்தின்
அமுதூற் றிருககும் புனலாட்டி
அருங்கண் *கடைக்கஞ் சனம்தீட்டி
ஆரம் திருத்திப் பட்டுடுத்தி

உன்பே ரிடுவே னெனக் †குழவிக்
குள்ளத் தயவாற் றணிசமைத்த
உயர்மாளிகையும் ஆடரங்கும்
ஒளிர் வேதிகையும் நீயழிக்க

வன்பா லோடி வரவுனக்கு
வழக்கன் றுலகிற் சிறுபேதை
மகளிரிருந்தும் விளையாடும்
வண்டல் துகட்சே வடிபடுமே

தென்பே ரையின்நங் குலநாத
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரையார் பொருநைத் தடந்துறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (10)

(10) அமுது ஊற்றிருககும் புனல—பால பெருகியிருக்கும் நீர்ப் பொருட்கண ; வேதிகை—திண்ணை ; வன்பு—கொடுமை ; வண்டல்—பருக்கைக்கல் ; துகள்—புழுதி ; வண்டல் துகள் உம்மைத் தொகை இஙஙனம் முன பிள்ளைத தமிழ்க் கொத்தில் 178-ஆம பாட்டில் வருவது காண்க.

## சிறுபறைப் பருவம்

90 ‡வானரு முப்பத்து முக்கோடி யுஞ்சது
மறைக கடவுள் நான்முகவனும்
மழுவலா ளனுமறு முகச்செம்ம லுங்கைம்
மலைக்கோட்டு வேழமுகனும்

ஏனோரும் வச்சிரக் குலிசபதி யும்மகிழ்ந்
தெண்டிசா முகபாலரும்
இருவிழியு மிருசெவியு மிதையதா மரைமலரும்
எக்கால முநதழையவே

கானாறு பச்சைப் பசும்பூக மடலவிண்டு
கக்கும் கொழும்பிரசமும்
கதலிக் கொழுங்கனி யுடைந்து வழிமதுவும்
கலந்தோடி யலைமண்டியத்

தேனாறு பாயும்வயல் சூழ்வழுதி நாடனொரு
சிறுபறை முழக்கியருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்
சிறுபறை முழக்கியருளே. (1)

---

பிரதிபாடம்.—* கடைக்கஞ் சனமெழுதி. † குழுவுக்கு. ‡ வானோர்.

(1) வான ஆா—ஆகாய உலகில பொருந்தியுள்ள முப்பத்து முக்கோடி—என்பது தொகைக் குறிபபாயத தேவாகளைக காட்டியது. கடவுளாகிய நானமுகன—இரு பெயரொட்டுப் பணபுத தொகை முன சிவனையும இநதிரனையும கூறி மிகுநத அறு திசை பாலா எனக் கூறுது எண திசைப் பாலா எனறுர். அவாகள இருவரையும் சிறபபு நோககிக் கூறியது பறறி. பூகம—பாககு மரம் ; கான ஊறு—பூககள மிகக ; பிரசம்—தேன, முககோடி தேவா முதலியவர் தழைககுமாறு சிறுபறைமுழககுக எனக.

91 பூவருங் கொன்றைச் செழுஞ்சடா டவிமுடிப்
புனிதபூ ரணனிரட்டும்
பொற்றுடி யெனச்சொல திறம்பாத கனகவிப்
புலவாதிண் டிறம்மென்னவும்

மேவுகதிர் மணிமகுட கோடிநிபு டஞ்செய்யும்
விருதரசர் மணிவாசலின்
விதரணக் கொடை வெற்றி மணவொலி கறங்குதெரு
வீதிமும் முரச மெனவுந்

தாவுசீ ரிட்டுடன் விசித்திறுக் கித்தொனி
தழைந்ததொண் டகமென்னவும்
தவறுது சதிமுறையின் அண்டகோ லிகைமுகடு
தடவியது செவிடு படுவோர்

தேவதுந் துமியெனத் திருவழுதி வளநாட
சிறுபறை முழக்கி யருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் *காதவொரு
சிறுபறை முழக்கியருளே. (2)

(2) புனிதபூரணன்—சிவன் ; துடி—உடுக்கை ; கனக இப்புலவர்—பொன்னுலகிலுள்ள தேவர் ; திண்டிறம்—மிகக வலி, அதிவீரம் ; நிபுடம்—நெருக்கம் ; விருது அரசர்—பல வகை வெற்றிப் பட்டங்களைப் பெற்ற அரசா ; கறங்கு—ஒலிக்கினற ; கொடை வெற்றி மணம்—உம்மைத் தொகை ; விசித்து—கட்டி ; தொண்டகம்—குறிஞ்சி நிலப்பறை ; சதி முறை—தாளவொத்து முறை.

92 †கறைகெழுமு சமரில்வடி வாளொரீஇ இராவணன்
கைகளிரு பதும் விழுதுபோல்
காறுடர் மண்ணில்வீழ் குப்புற்று நிற்குநிலை
கண்டுதிரு வுளமிரங்கி

உறுதிபட வின்றுபோய் நாளைக்கு வாவென்
றுரைத்தராகவ வெருவியன்
றேரானை மூலமென் றேதாமு றேடிவந்
துதவுமா தவசீதர

நறையொழுக மடன்முக முறுக்கவிழ்ந் தலருமொரு
நளினப் பொகுட்டாசன
நள்ளிடை வதிந்துபைந் தாதளைந் திசைபாடி
நாகிளம் பேடையோடுஞ்

---

பிரதிபாடம்— காதமுகில். பாதியாடம்—† கொளும்.

சிறைவண்டு கண்படுக் கும்வழுதி நன்னாட
சிறுபறை முழக்கியருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் *காதவொரு
சிறுபறை முழக்கியருளே. (3)

(3) கறை கெழுமு—இரத்தக் கறை பொருந்திய; வாள் ஒரீஇ—வாளாயுதம் நீங்கி—வாள் என்பது இங்கு உபலட்சணமாக மற்ற ஆயுதங்களையும் உணர்த்தியது. கைகளிருபதும் கால்களும் தொடர்ந்து விழுவதுபோல மண்ணில் வீழ்ந்து குப்புறறு நிற்கும் நிலை என்க. கால்+துடர்—காறுடர்—உரைத்த ராகவ என்க. நறை—தேன்; நளினம்—தாமரை; நள்—இரவு; நாகு இளம்—மீமிசைக் கிளவி; சிறைவண்டு நளினப்பொகுட்டாசனத்தில் தங்கி மகரந்தங்களைப்பூசி இசை பாடி இளைய பெண் வண்டுகளோடும் இரவில் தூங்கும் அத்தகை நீர்வளம்மிக்க வழுதிநல் நாடு என்க.

93 அண்டபகி ரண்டமு மதிர்ந்துகுல வரையேழும்
அசையாமல் எண்டிசைதொறும்
ஆழிகவுட் கம்பக் கடாக்களிறு நிலைபெயர்ந்
தடிச்சுவ டெடுத்திடாமற்

கொண்ட வடவைக்கனல் கண்பிதுங் கக்கொடுங்
கோளரா வுடல் முடங்கக்
†குலுங்காம லாமைநெடு முதுகுளுக் காவண்ட
கோளகையின் முகடுவெடியா

விண்டடவு தாரகைக் குலமுடங் கலுமண்ணில்
வீழாமல் உயர்செழும்பொன்
மேருகிரி சாயாமல் ஒடியிரு கரைதொறும்
வெண்ணிலா வுமிழுமுத்தம்

தெண்டிரை சுருட்டுபொரு நாநதி நெடுந்துறைவ
சிறுபறை முழக்கியருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் *காதவொரு
சிறுபறை முழக்கியருளே. (4)

(4) வரை எழு—கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம் ஏம கூடம், நீலகிரி; ஆழி கவுள் கடாககம்பம் களிறு—கடல்போன்ற கதுப்பினின்றும் ஒழுகும் மத நீரையுடைய நடுக்கத்தைச் செய்யும் எட்டுத்திக்கு யானைகள்; வடவைக் கனல்—பெண் குதிரை முகத்தின் வடிவோடு கடற்குள் தங்கியிருந்து யுகாந்தத்தின் மேலே கிளம்பி உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படும் தீ; கொடுங்கோள் அரா—கொடிய கொலை புரியும் விஷத்தையுடைய பாம்பு எண்டு எட்டுத்திக்குப் பாம்புகளை காட்டிற்று. அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகா பதுமன், சங்க பாலன், குளிகன் என்பன. ஆமை—திருமாலின் ஓர் அவதாரமான ஆமை மந்தர மலையைத் தாங்கியது நினைத்து அதன் முதுகு உளுக்கா என்றார். உளுக்கா—நெளிக்காமல்; உளுக்கா—வெடியா—ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம்; தாரகை—நட்சத்திரம்; வெண்ணிலா உமிழும்—வெண்மையான நிலவொளி வெளிவிடும்; முத்தம்—அம் சாரியை.

பிரதிபாடம்.—* காதமுகில். † குறுங்காமல்.

94 கங்கா நதிச்செழும் புனல்யமுனை சரசோதி
  கற்பூர சுவை மணக்கும்
காவிரி யெனத்தேவர் வடியிட்ட வமுதெனக்
  கமழுந் திருப் பொருநையும்

மங்காத சதுமறைக் குரியவேள் வியும் விழா
  வணியும்மக வொலியு நாளும்
வளமைபெறு குலநாத பரமபத வீடாள
  வயல்கடொறும் வாய்மடைதொறும்

சங்கார வாரஞ்செய் தகடுளைந் தலறித்
  தவழ்ந்தேறி முத்துயிர்க்குந்
தண்ணந் தடத்தா மரைப்பொகுட் டாசனத்
  தமனியப் பொற்கோவிலிற்

செங்கா லனந்துயிலும் வழுதிவள நன்னுட
  சிறு பறை முழக்கியருளே.
தென்திருப் பேரைவரு நங்குழைக் *காதவொரு
  சிறுபறை முழக்கியருளே. (5)

(5) கங்கை, யமுனை, சரசுவதி, காவிரி போன்ற தேவர் வடிகட்டின அமுதம்போல வாசனை வீசும் நிறையுடைய பொருநையெனறுர். அவைகளைப்போன்ற புண்ணிய நதியாதலால் காவிரிக்கு மட்டும் கற்பூர சுவை மணக்கும் என்றுர். வாசனைத் திரவியத்திறகாகும் கறபூர மரஙகளை அடித்து வருவதால், கற்பூர சுவை மணககும் என்றுர் பரமபத வீடு ஆள—பரமபதமாகிய வீட்டினை ஆட்சி புரிபவனே சங்குகள் ஆரவாரஞ் செய்து அகடு (வயிறு) உளைந்துஅலறி வயலகள் தோறும், வாய்மடைதோறும் தவழ்ந்து ஏறி முத்துக்களை ஈனும். அத்தகைய நீர்வளமிகுந்த வழுதி நாடு என்க

## வேறு

95 பொருதிரை யெறிசல ராசி யுடுக்கும்
  புவனத் திருமாதும்
பொங்கு சினந்தலை மண்ட வடுஞ்சமர்
  புக்கெதிர் வருவோர் செங்

குருதி படும்படி பொருது மணம்புணர்
  கொற்றக் குலமாதும்
கோதறு வண்புகழ்ச் சேரனு கூலக்
  கோமள மாமாதும்

மருமலி சததள மண்டப மீது
  மகிழ்ந்துறை பூமாதும்
வடகலை தென்கலை முழுது முணர்ந்த சொன
  மங்கையும் நாடோறும்

பாடபேதம்—* காதமுலை.

திருவுளம் [1]இளர்தர வழுதி நன் [2]னாடன்
சிறுபறை கொட்டுகவே
தென்பே ரையில்வரு நங்குல [3]நாதன்
சிறுபறை கொட்டுகவே. (6)

(6) திரை எறி சலராசி—அலைவீசும கடல்; புவனத் திருமாது—பூமிதேவி; தலை மண்ட—நெருங்கிக் கலக்க; கொற்றக் குலமாது—வெற்றித் திருமகள்; கோமளமாமாது—புகழ்த்திரு; வண்புகழ்சேர் அனுகூல—எனப் பிரிக்க; சததளம—தாமரை; பூமாது—இலக்குமி; சொல்மங்கை—கலைமகள்; திருஉளம் இளர்தர—மகிழ்ச்சி மிக; அஷ்ட இலக்குமிகளில் வெற்றித்திரு, புகழ்த்திரு உண்டாதலால் இங்ஙனம கூறினர்.

96 உழுதுழு திசைபயில் அளியொரு கோடி
உதைந்து துதைந்தாட
ஒளிர்மடன் முகையவிழ் துளவணி மால் குரு
கூர னுவந்தோதும்

பழுதறு முதுதிரு வாய்மொழி நூல்செவி
பற்பல புகுநேயன்
பண்டுல கங்களை யுண்டுமி ழளவு
படுத்துந் [4]திருமாலால்

முழுமறை முறையிடு மிருசரணலையன்
மூரிக் கயமூடு
முதுபுன லோடையு மகழியும் வாள்வளை
மொய்க்கும் கழனியினும்

செழுமலர் மணமலி வழுதிநல் நாடன்
சிறுபறை கொட்டுகவே
தென்பே ரையில் வரு நங்குல நாதன்
சிறுபறை கொட்டுகவே. (7)

(7) உழுது—கிண்டி; அளி—வண்டு; குரு கூரன்—நம்மாழ்வார்; நூல் பற்பல செவி புகு நேயன் எனக் கூட்டுக; மூரிக்கயம் ஊடும்—ஆழ்ந்த நீர்நிலையிடையும; மலர்—தாமரை மலர், "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்பதால்.

97 புவனமு மண்ட கடாகமும் வேலைப்
புணரித் திசையெட்டும்
பொங்கழல் கதுவிய கணகளி யானைப்
புகர்முக மலையெட்டும்

குவடு படும்பொலன் வடவரை முதலாம்
குலகிரி யோரெட்டும்
கொடுவிட முடவுடல் பஃறலை மகுடக்
கோளர வோரெட்டும்

பிரதிபாடம்—[1] மகிழ்தர. [2] நாடா. [3] நாதா.
[4] பிரதிபாடம்—திருமாமால்.

தவமுனி வர்சுரர் மகபதி முக்கட்
சடைமுடி யுடையோனுஞ்
சதுமுகன் அறுமுகன் ஒருகொம் பேந்திய
தந்தி முகத்தோனும்

செவிகுளி ரத்திரு வழுதிநல் நாடன்
சிறுபறை கொட்டுகவே
தென்பே ரையில்வரு நங்குலநாதன்
சிறுபறை கொட்டுகவே. (8)

(8) அண்டகடாகம்—அண்டகோளத்தின் சுவர்; வேலைப்புணரி—ஒரு பொருட் பன்மொழி; வேலைப்புணரித்திசை—கடல் சூழ்ந்த திசைகள்; அழல்கதுவிய—நெருப்பு மூளுகின்ற; களி—மதம்; குவடு—சிகரம்; வடவரை—மேருமலை; முடவுஉடல்—வளைகின்ற உடல்; மக பதி—இந்திரன்; முக்கண் சடைமுடியோன்—சிவன; ஒரு கொம்பு....முகத்தோன்—விநாயகன.

## வேறு

98 அளிசுற்றிய தண்டலைப் பொதியத்
தருஞ்சாரலிற் பைங்கிழங் கெடுக்கும்
அம்பொற்குழி யிற்சுடர் விரிக்கும்
*அருங்கால்வயி ரங்கிடந் திமைப்பத்

துளிபட்டொழு கும் வரை யருவி
சுழிக்குந்தொறும் பொன்னெழுக் கெறியச்
சுவையூற் றிருக்கும் புனற் பொருநை
சுருட்டுந்திரை செம்மணி கொழிப்பத்

தலைவிட்டல ரும்பசும் பாளைத்
தலைப்பூங்கமு கமணி மிடற்றுத்
தாங்கும்பவ ளக்குலை கவிப்பத்
தடஞ்சால்வழி யூர்ந்தக டுளைந்து

வளைமுத்துயிர்க் கும்வயற் பேரை
மாலே சிறு பறைகொட்டுகவே
†மகரக்குழை யேநூற் றெண்மர்
வாழ்வே சிறு பறைகொட்டுகவே. (9)

(9) அளி சுற்றிய தண்டலை—வண்டுகள் மலருக்காகச் சூழ்ந்த சோலை; பைங்கிழங்கு எடுக்கும் அம்பொன் குழி—பசிய வளளிக்கிழங்கைத் தோண்டி எடுக்கும் அழகிய குழி; அம் பொன—மீமிசைக் கிளவி: குழியில் வயிரம் கிடந்து இமைப்ப என்றார் இரத்தினங்கள் மலைக்கல்லில் தோன்றுவதனால். செம்மணி—பவளம்; பாளை தலை பூகமுகம்—பாளையை உச்சியிலேயுடைய அழகிய பாக்கு மரம்; பவளம் குலை—பவளம் போன்ற செந்நிறக் குலைகள்; தடம்சால் வழி ஊர்ந்து—நீர்நிலையினின்று ஏர் ஓட்டிய சால்வழியே ஊர்ந்து; அகடு—வயிறு; வளை முத்து உயிர்க்கும்—சங்குகள் முத்துக்களை ஈனும். இப் பாட்டினால், மலைவளம், அருவிவளம், நதிவளம், சோலைவளம், வயல் வளம் குறித்தார்.

---

பிரதிபாடம்—* அங்கால்வழி, † வருணனை பரவு மிருசாலை மூதூலே சிறுபறை கொட்டுகவே.

### வேறு

99 நீறுபடு தவளவெண் பொடியாட வார்சடை
நெடுந்திரைக் கங்கையாட
நிலவாட முகைமுறுக் கவிழ்தும்பை யாடஅரன்
நின்றாட அமரராடப்
பாறுபடு நெட்டிலைச் சுடர்வேல் விடுங்கொடும்
படையிரா வணன் மகுடமோர்
பத்துந் தகர்ந்தாட வெம்பேய் குறும்பேய்
பறந்தலைக் கவந்தமாடத்
தாறுபடு கதலிக் கொழுங்கனி யுடைந்து வழி
சாறுமாங் கனியின் நறவும்
தருமுடப் பலவின்நற கனியுடைத் துப்பெருகு
தண் நறவும் அலை மண்டியே
சேறுபடு பழனவயல் சூழ்வழுதி நாடனொரு
சிறுபறை முழக்கியருளே
தென்திருப் பேரைவரு நங்குழைக் காதமுகில்
சிறுபறை முழக்கியருளே. (10)

(10) வார்—நீண்ட ; பாறுபடுவேல—மாமிசத்திற்காகப் பருந்து சுற்றும வேல் ; பறநதலை—போர்ககளம் ; கவந்தம்—தலையறற குறையுடல ; தருமுடப்பலவு—மரமாகிய வளைநத பலா ; மூன்றாவது அடியில் முககனிகளின தேன கூறி அது மிக்கு நதியாகி வயலில் பாய்கிறது என வளம் கூறியது காண்க. முதலடியில் கூறிய அரன, அமரர் ஆடுவது மகிழ்சசியால எனக.

### சிறு தேர்ப் பருவம்

100 உரைக்குஞ் சதுமா மறை தனக்கும்
உயர்வா னவர்க்கு மெட்டாத
உண்மைப் பொருளே கன்றொடுகுன்
றுருளும் படி வேய்ங் குழலூதி
நிரைக்கும் பின்னே நடந்தருளும்
நீலப் புயலே போரேறே
நிமலா சமரா டிடுங்கொடிய
நிருதர் குலத்துக் கொரு கூற்றே
வரைச்சந் தகிலும் செம்மணியும்
மதவா ரணக்கிம புரிமருப்பும
மயிற்பீ லியும்வெண் நிததிலமும்
வாரிச் சுருட்டிக் கரைபொருது
திரைக்குந் திரைத்தண் பொருநைநதிச்
செல்வா தடநதே ருருட்டுகவே
தென்பே ரையின் நம் குலநாதா
செம்பொன் தடந்தே ருருட்டுகவே. (1)

(1) நிரை—பசுக்கூட்டம் ; வாரணம்—யானை ; இம்புரிமருபபு—இமபுரிப் பூண் கட்டிய தந்தம் வரைச்சந்து—மலையிலுள்ள சநதனமரம்.

101 மேல்பால் முளைக்கும் பிறையெயிற்று
வெங்கண் கொடிய நிருதர்குழாம்
வெல்லுந் தடக்கைச் சிலை ராமன்
விரிதெண் டிரை நீர்க் கடன்முகட்டின்

பாலா டரவிற் கண்டுயிலும்
பசுந்தரர்க் குழகன கஞ்சனவிடு
பாரச் சகடு மருதுமொடி
படத்தாள் நெரிக்கும் ஒருமுகுந்தன்

கால்பாய் புனலிற் கேணியினிற்
கழுநீர்க் குழியில் வாய்மடையில்
கருஞ்சேற் றினில்நல் அருங்கயத்திற்
கமழ்பூந் துறையில் வெகுண்டெழுந்து

சேல்பாய் வழுதித் திருநாடா
செம்பொன் தடந்தேர் உருட்டுகவே
தென்பே ரையின்நம் மூலநாதா
செம்பொன் தடந்தேர் உருட்டுகவே. (2)

(2) பிறை எயிற்று—பிறைச் சநதிரனையொத்த பல் ; பால் ஆடு அரவின்—பால்போன்று வெள்ளிய படஙகளுடன் ஆடுகின்ற ஆதிசேடன் மீது ; சகடும் மருதும்—எண்ணும்மை ; மருதும் ஓடிபட—மருத மரங்களும் உரலிற் கட்டிய கயிற்றுடன் தவழ்ந்து சென்று ஓடி படுமாறு ; தாள் நெறிகரும்—பாதத்தால் நொருங்கச் செய்யும் ; கால் பாய் புனல்—கழனிகளுககுப் பாயும் வாய்க்கால நீர் ; கேணி—கிணறு ; கழுநீர்க் குழி—செஙகழுநீர் மலர்கின்ற குளம் ; கயம—நீர்நிலை.

102 உருவா யுயிரா யுணர்வாகி
உள்ளும் புறனு முளனாகி
உரைக்கும் சமயம் ஆறினுக்கும்
ஒன்றும் பலவு மாயடங்கி

அருவாய் நிறையும் நின்பெருமை
ஆர்க்குந் தெரிய வசமன்றே
ஆழிப் புயலே யருட்கடலே
அரிகே சவசீ தரமுகுந்தா

மருவார் பொழிலில் கேணியின்வாய்
மடையில் சுழியில் படுவரம்பில்
* வளைமுத் தீனுந் திருவழுதி
வளநாட் டுறையெம் பெருமானே

பிரதிபாடம்—* வளைமுத் துமிர்க்கும்,

தெருவீ தியின் நூற் றெண்மர்தொழச்
செம்பொன் தடந்தேர் உருட்டுகவே
தென்பே ரையின்நம் குலநாதா
செம்பொன் தடந்தேர் உருட்டுகவே. (3)

(3) சமயம் ஆறு—அகச்சமயம், அகப்புறச்சமயம், புறச்சமயம், புறப்புறச்சமயம், என்பன. அவ்வாறு சமயங்களையுடையன; கேணியின்வாய்—வாய் ஏழாம் வேற்றுமை உருபு.

103 அன்பாற் பணியத் தினம் வருணன்
ஆரா தனைகொண் டருள்முகுந்த
அடியா ராசைப் புரிமுறுக்கி
அரும்பொற் கயிற்று வடம்பூட்டி

வன்பால் விடுத்து நெகிழ்ந்த நெஞ்சம்
மணிவீ தியினள் ளிடைநினைந்து
வந்து ததிய ரிருமருங்கும்
மகிழ்ந்து முறையே பிடித்திழுப்பப்

பொன்பாற் பொருந்துஞ் செழுந்திலதம்
புவனித் திருவாள் நுதல்திலதம்
பொங்கிப் பரந்த சலராசி
புடைசுற் றியபூ லோகத்துத்

தென்பால் திலத மெனும் பேரைச்
செல்வா தடந்தேர் உருட்டுகவே
செழுந்தார்த் துளவு மணங் கமழும்
தேவே தடந்தேர் உருட்டுகவே. (4)

(4) பக்தர்களது ஆசையாகிய புரி முறுக்கிய கயிற்றினால் தேரில் வடம் பூட்டி, கொடுமையால் நினையாமல் விட்டு இப்போது உருகுகிற மனமாகிய அழகிய வீதியில் இரு பக்கமும் வந்து இரவிலும் நினையும் வைணவ அடியார்கள் இருபுறமும் பிடித்து மகிழ்ந்து இழுப்பச் செல்வ தடந்தேர் உருட்டுக என முடிக்க. நள் இடை—இரவில்; ததியர்—வைணவ அடியார்களைக் குறிக்கும் வழக்கு; பொன்பால—இலக்குமியிடம்; புவனித்திருவாள்நுதல் திலதம்—பூமாதேவியிடும் ஒள்ளிய நெற்றிப் பொட்டு; சலராசி—கடல்; புடைசுற்றிய—பக்கங்களில் சூழ்ந்த; இலக்குமியின் பொட்டுபோலும், பூமாதேவியின் பொட்டு போலும் பூலோகத்துத் தெற்கிலுள்ள பொட்டுப் போலும் உள்ள பேரை எனக.

வேறு

104 தருநீழ லிடையினிது வீற்றிருக் கும்புரந்
தரனுமுனி வரருமுளரிச்
* சதுமறைக் கடவுளும் முக்கட் கொழுங்கனிச்
சடைமுடிச் சிவனும் வெஞ்சூர்

பொருகிரண வேலுடைப் பரமன்முரு கேசனும்
புகர் முகத் தவனு மதியும்
பொங்குளைப் பச்சைப் பசும்புரவி யேழ்கட்டு
பொற்றடந் தேரிரவியும்

பாடபேதம்—* சதுமுகக

பெருவாச தூபுக நெருக்குண்டு சன்னதிப்
பேறுண்டு கிட்டு மென்றே
பிறங்குபொற கருடக் கொடிக்கம்பம் வலம்வந்து
பெருகவஞ் சலிசெய்திடத்

திருமேனி மண்டபத் தரசிருக் குங்கடவுள்
சிறுதே ருருட்டியருளே
தென்திருப் பேரைவரு நம்குழைக் காதமுகில்
சிறுதே ருருட்டியருளே. (5)

(5) தருநிழல்—கற்பக மர நிழல்; சூர்—சூரபத்மன்; பரமன் முருகேசன்—இரு பெயரொட்டுப் பண்புத் தொகை; புகர் முகத்தவன்—விநாயகன்; எழ பசும் புரவி கட்டு பொன் தடந்தேர் இரவி என்க. கட்டு தேர்—வினைத் தொகை; உளை—கழுத்தின் மயிர். இரவி—சூரியன்; சன்னதிப் பேறு உண்டு (அது பின்னராவது) கிட்டும் என்று நினைத்து என்க. பிறங்கு—விளங்கு.

## வேறு

105 தந்தா னெனக்கு வரமிரண்டும்
தலைநா ளுரைத்த சொற்படிக்குன்
தகப்பன் புரந்த முறைதருமம்
தழைப்ப வொருகோ லோச்சியெங்கும்

நந்தா வளமைப் பரதனிந்த
நாடா ளுவன் நீ காடாள
நடவென் றுரைத்த சிற்றவை சொல்
நலமேற் றலைகொண் டொருப்பட்டுக்

கொந்தார் குழலி சனகியொடுங்
கூடப் பிறந்த இளவ லொடும்
கொதிக்கும் பரல்வெங் * கானகம் போய்க்
குறுகும் பொழுதுங் குளிர்ந்தலர்ந்த

செந்தா மரைபோல் திருமுகத்துச்
செல்வா தடந்தேர் உருட்டுகவே
தென்பே ரையின் நம் குலநாதா
செம்பொன் தடந்தேர் உருட்டுகவே. (6)

(6) தலை நாள—கைகேயி சம்பாசூரன் யுததததில் கணவனை தசரதனுக்கு உதவி செய்த காலத்தில்; சிற்றவை—கைகேயி; நலம் தலைமேல கொண்டு எனப் பிரித்துச் சோகக; ஒரு பிட்டு—சம்மதித்து; இப் பாட்டுடன—கம்பராமாயணம், ஆழிசூழ் உலகமெல்லாம் . . . அரசனென்றான் "இப்பொழுதெம் மனோரால். . . செநதாமரையினை வென்ற தம்மா" "மெய்ததிருப்பதம். . . சித்திரததினலர்ந்த செந்தாமரை ஒத்திருக்கு முகத தினை . . ." என்ற கம்ப ராமாயணப் பாடல்களை ஓர்ந்துணர்க.

---

பிரதிபாடம்—* கொடுங்கானல.

106 மத்தா லடிப்ப உரல் மிதித்து
மலர்த்தாள் குந்திட் டுறியில் வெண்ணெய்
வாரிக் களவி லுண்டமணி
வாயா பரம பதந்தனக்கோர்

வித்தா கவும்வந் தங்குரிக்கும்
வேதப் பொருளே யருடகடலே
விரைநா றியபூம் பசுந்துளவ
மெய்யா பொருவெங் கரிமருப்பு

முத்தோ டகிலுஞ் செம்மணியும்
மூரித் திரைபாய் சுருட்டிமிக
முழங்குங் கூடு புனல்துறைவ
முதுவாள் அரக்கன் தலைகள் பத்துங்

கொத்தோ [1] டீவஞ் சுருவாளி
[2] கொடுக்குந் தடந்தேர் உருட்டுகவே
கொழிக்கும் தமிழ்த்தென் திருப்பேரைக்
கோவே தடந்தேர் உருட்டுகவே. (7)

(7) குந்தி—உட்கார்ந்து ; குநதி இடட எனக. ஈணடு இகரம் தொகுத்தல் ; அங்குரித்தல்—முளைத்தல். கூடு—ஒன்றோடொன்று பொருநதும் ; கொத்தோடு ஈா அம் சுருவாளி—கொத்தோடு அறுததுப் பூமிகுத் தரும் அழகிய சுரீரென்னும் அம்பையுடையவனே ; கொடுககும்—வளைந்த.

107 புழைத்திண் திறல்கை மதசலதி
பொழியும் பிறைக்கிம் புரிக்கோட்டுப்
புகர்மா விடங்கர்க் குடைந்துவெரீ இப்
புதுப்பூங் கேணித் தடம்புனல் நின்

றழைக்கும் புயலே நெட்டரவின்
ஆடும் குழகா வொரு நாளும்
அழியாப் பரம பதந்ததியர்க்
கருள்சீ தரமா தவமுகுந்தா

மழைக்கொந் தளகக் குரும்பைமுலை
மதிவா ணுதற்சா னகிபொருட்டு
மதில் சூழ் இலங்கை அரக்கன்மணி
மகுடஞ் சிதறக் கோதண்டங

குழைக்குந் தடக்கை ரெகுராமா
கொடிஞ்சித் தடந்தேர் உருட்டுகவே
கொழிக்குந் தமிழ்த்தென் திருப்பேரை
கோவே தடந்தேர் உருட்டுகவே. (8)

பிரதிபாடம்—[1] டறுகரும் சுருவாணி. [2] கொழிக்கும்.

(8) புழைதிண் திறல் கை—துளைகளையுடைய வலிய திறமை மிக்க துதிக்கை ; புகர்மா—கசேந்திரனுகிய யானை ; இடங்கா—முதலை ; முன பிள்ளைத தமிழ்க்கொதது 164-ம் பாட்டினுரை காணக. புயல—உவமையாகு பெயா ; நெடடரவு—காளிங்கன ; மழை கொந்து அளகம்—மேகம போனற தொகுதியான கூநதல ; குரும்பை—தெனனங்குரும்பை ; கொடிஞ்சி—தாமரைப பூபபோனற ஒா உறுபபு. இது தேரின் முன்பாகததிடுவது.

108 வாலப் பிறைவாள் நுதல் மடவார்
மலர்க்கை வளைகீழ விழத் தொழுவோா
மாறுப் பிறவி வேரோடி
வானத் தமரர் களிகூரச்

சாலப் பொரும் வாழ் அசுரர்படத்
தருமா தவர்கள் கொண்டாடத்
தருமந் * தழைப்பப் புகழ்க் கவிதைத
தமிழ்நா வலவர் ஈடேற

ஏலக் குழல்சா ணகிகழுத்தின்
இடுமங் கலநாண் வாழ்வேற
எக்கா லமும்நூற் றெண்மர்குழாம்
இதயத் திருந்து மகிழ்கூர்ந்து

கோலத் தெருவில் விளையாடிக்
கொடிஞ்சித் தடந்தேர் உருட்டுகவே
கொழிக்கும் தமிழ்த்தென் திருப்பேரைக்
கோவே தடந்தேர் உருட்டுகவே. (9)

(9) வாலப்பிறை வாள்நுதல்—வெள்ளிய பிறைச் சந்திரனையொத்த வளைந்த ஒளி வாய்நத நெறறி ; வளை—வளையல் ; பிறவி வேரோடல்—பிறவியாகிய காரணம் அழிய ; அமரர் .... கொண்டாட—அசுரா படுவதால் அமரர் களிகூர்ந்தனா. மாதவர் கொண்டாடினர் ; ஏலம் குழல்—மயிர்ச்சாந்து பூசிய கூநதல் ; கோலம்—அழகு.

109 மருவார் நறுமென் மலர் கொணர்ந்து
வணங்கி இருசே வடி சொரிந்து
மயங்கும் புலன்கள் ஐந்து மொன்றுய்
வருணன் செயும்பூ சனையுவந்த

திருமா முகிலே தமிழ்க் குருகுஞ்
செல்வக் குழகா பாட்டயர்ந்து
சிறைவண் டலம்பிக் கண்படுக்குந்
செழுந்தார்த் துளவப் புயமுகுந்தா

அருநான் மறைநூற் றெண்மரும்வந்
தங்கீ கரித்து வடம் பிடிப்ப
அம்போ ருகப்பூந் திருவும்முந்நீர்
அவனித் திருவும் மருங்கிருப்பக்

---

பிரதிபாடம்—* தழையக கன கவிதைத்

தருமா மணிப்பொன் மறுகின் நெடுங்
    கொடிஞ்சித் தடந்தேர் உருட்டுகவே
கொழிக்குந் தமிழ்த்தென் திருப்பேரைக்
    கோவே தடந்தேர் உருட்டு கவே. (10)

(10) பாட்டு அயர்ந்து—பாட்டுக்களால் மெய்மறந்து; வடம்—தோ வடம்; அமபோருகப்பூ—தாமரைப் பூ; இதிலுள்ள திரு—இலககுமி; முநநீர் அவனி—கடல் சூழநத பூமி அவனித்திரு—பூமிதேவி.

(மகர நெடுங்குழைக்காதர் பிள்ளைத் தமிழ் குறிப்புரையுடன் முற்றும்.)

(திருமேனி கவிராசரவர்)

## திருவெண்ணெய்நல்லூர் வைகுந்தநாதர் பிள்ளைத் தமிழ்.

110 இருமைக்கு நன்மை யியம்புகேன் செய்ய
ஒருமைக் கிசைநீ யுளமே—பெருமை முகில்
வண்ணக் கருமணியே வைகுந்த நாதனையே
எண்ணக் கருதி யிரு. (1)

(1) இயம்புகேன்—சொல்லுவேன், க எதிர்கால இடை நிலை ; உளமே கருதியிரு என இயைக்க. முகில வணணக் கருமணி—மேகம போன்ற நிறததவனுன நீலமணி யொததவன்.

---

### காப்புப் பருவம்.

### திருமால்.

111 பொன்பூத்த பங்கயப் பஞ்சரப் பூங்கிளி
புனத்துழாய் மலர் வனத்துப்
போந்து விளையாடச் செழும்பற்ப ராகம்
புனைந்தவிள வெய்யில் காட்ட

மின்பூத்த முத்தாரம் வெண்ணில வெறிப்பமலி
மெய்யிந்திர நீலமேய்ப்ப
வெண்ணெய்ப் பதிக்குள் வாழ் வைகுந்த நாதனை
விருப்பமொடு வந்து காக்க

கொன்பூத்த சங்காழி சிலைதண்டு வாள் செங்கை
கொண்டமை குறிப்புணர்த்தக்
கோகநக நாள்மலர்ச் சேயரிக் கட்கடைக்
கூர்க் கருணை கொண்டு கொப்பூழ்

முன்பூத்த அகிலாண்ட முற்றுந் தழைப்பவாண்
முதிர் பரந் தாமமேவி
முத்திக்கு வித்தாகி யத்திக்கு முன் தோன்று
முழுமுதற் பச்சை முகிலே. (1)

(1) பங்கயப் பஞ்சரம்—தாமரை மலராகிய கூடு ; பூங்கிளி என்று திருமகளைக் குறித்தார். பதுமராகம் என்னும் மாணிக்க வகை. பற்பராகம்—“புனத்துழாய் மலர் வனத்துப் போந்து விளையாட என்றுர் திருமகள் துளபமாலை தரிக்கும் மார்பில் இருத்தலால். மெய் இந்திர நீலமணி ஏய்ப்ப என்க. கொண்பூத்த—பெருமை பெற்ற ; சங்கு. . . . வாள்—பஞ்சாயுதங்களையும் குறித்தார். நாள் கோகநக மலர் சே அரிகண்—அன்றலர்ந்த தாமரை மலர் போன்ற சிவந்த அரிபரந்த கண் ; கொப்பூழ் முன்பூத்த—கொப்பூழிலிருந்து தோன்றிய பிரமனுல் ; அத்தி—கசேந்திரனுகிய யானை ; முகில்—உவமையாகு பெயர்.

### திருமகள்.

112 தத்துறுத ரங்கமெறி முத்தநில வின்கதிர்
  தரச்சுடர் பெருஞ்சலதி ராசனருள் மாமகள்
தத்தையிள மென்குதலை மைத்தகுழல் கெண்டைவிழி
  சற்றென நுடங்குமிடை யாள்கனக மேனியாள்
பத்துறுதொ ழும்பர்தன் விழிக்கடையின் இன்பம்வர
  பற்றவருள இந்திரைகு ணாகரி மனோகரி
பற்பமெனு மம்பொனமல ரிட்டதவி சின்கண்வளர்
  பச்சைமயில் செங்கமலப பாதமுடி சூடுவாம்
கத்துருவின் மைந்தரிடை புத்தமுது தந்தவர்
  களைப்பணியெ னும்படிசெய் நீள்பறவை வாகனர்
கற்பமொரு செங்கைநொடி யொப்பவுண ருந்துயில்
  கருத்துமகி ழுங்கருணை மால்பரம பூருடர்
வித்துரும மென்றவித ழிற்கழை யிசைதிசை
  விரித்தருள் முகுந்தநவ நீதபுர நாயகர்
விற்பணிலம் நந்தக மெழுத்திகிரி கொண்டபுய
  வெற்பனிசை சந்ததமும் ஓதுதமிழ் வாழ்கவே. (2)

(2) தத்துறு . . . . சலதிராசன்—தத்துகின்ற அலை வீசுகின்ற முத்துக்களானவை நிலவுக்கிரணங்களைத்தர ஒளி மிக்க பாற்கடல பெற்ற சலதிராசன எனறுர்—எல்லாக கடலகளுக்கு வருணன அரசனுனதால ; தத்தை—கிளி ; மைத்த—கறுத்த ; நுடங்கும—அசையும ; கனக மேனி—பொன்னிற உடல் ; "பத்துஉறு தொழு உம்பர் தன விழி" என்க. பத்து—பத்தி ; உம்பர்—தேவர் ; பத்து, தொழு என்பவற்றிலுள்ள உகரம் "உயிர்வரின் உக்குறள் . . . ஒரோ விழி" எனற விதியால் கெட்டது. இந்திரை—இலக்குமி ; பற்பம்—பதுமம், தாமரை ; தவிசு—ஆசனம் ; கமலபாதம் உவமைததொகை, கத்துருவின் . . . . . . . வாக னர்—கத்துருவின் மைந்தரான பாம்புகட்குத் தேவாமிர்தம் எடுத்து வந்து தந்து அவர்களைப் பின்பு அடஙகு எனறு கூறும்படி செய்த கருடனை வாகனமாகக் கொண்டவர். கத்துரு—காசிபர் மனைவி, 104 பிள்ளைகளையும் ஒரு பெண்ணையும் பெற்றவள். பாம்புகட்குத் தாய. உச்சைச்ரவம் என்ற வெள்ளைக் குதிரையின் வாலில் தன் பிளளைகளில் ஒருவன் உதவியால் மறுவுண்டாகச் செய்து தன சககளததியான விநதையைச் சபதப்படி அடிமை கொணடவள். விந்தையிடம் பிறந்த கருடனும் அடிமை வேலை செய்து பின் நீகக தேவாமிர்தம் எடுததுவர தேவர்களுடன் போர்புரிந்து வென்று இந்திரனால் பாம்புகளைத் தின்ன வரம வாங்கி அமுத கலசத்தை எடுத்து வநது தநது அடிமையை விடுவித்தான. ஒப்பநதப்படி இநதிரன தேவாமிர்த கலசத்தைக் கவர்நதுகொண்டான. கற்பம ஒரு செஙகை நொடி ஒப்ப உணரும் துயில்—கற்ப காலத்தை ஒரு கைநநொடிப் பொழுது காலம போனறு அறியும யோக நித்திரை ; பூருடர்—புருடரின் நீட்டல விகாரம் ; வித்துருமம்—பவளம் ; நவநீதபுரம்—வெணணெய் நல்லூர். வில் பணிலம் நநதகம் எழுதிகிரி—வில, சஙகு, வாள, தணடு, சக்கரம்.

### பிரமன்.

113 செங்கமல மிசைதோன்றி வெண்கமல மங்கையைச்
  சேர்ந்துமறை நான்குமுறையும்
திருவதன நான்கு பெற்றெண்கரம் வருந்த வெண்
  திசைகள்புவி பதினுலுயிர்த்

தங்கமல நாகபதி நால்வாய் மதக்களி
றமைத்துச் சுமக்க வைத்தோர்
அண்டமா மிவ்வா றநேகாண்ட கோடிசெயும்
அந்தணனை வந்தனை செய்வாம்

சங்கமல வெள்ளையம் புயமலர் திங்களோ
தனியிவை அனந்தமென்ன
தவளநிற மென்பவள வாய்ப்பொலன் சிறையனந்
தத்திவிளை யாடுபொய்கை

யுங்கமல வயலுநிறை நாடுசூழ் வெண்ணெய் நகர்
உத்தமனை மத்தமாவுக்
குதவிபுரி கொண்டலைத் தொண்டருக் கெளியனை
உரைத்தமுத் தமிழ்தழைகவே. (3)

(3) வெண்கமல மஙகை—வெள்ளை தாமரையில் வீற்றிருக்கும் சாசுவதி ; உறையும்—தங்கும் ; உயிாதது—படைத்தலைபெறறு ; அம் கமல நாகபதி நால்வாய் மதக்களிறு அமைநதுப் பதிறுனுலகஙகளைச் சுமக்க வைதது—என்க ; அம்கமல நர்கபதி—அழகிய தாமரைப்பூப் போனற படங்களையுடைய நாகஙகட்டுத் தலைவனுகிய ஆதிசேடன் ; நால்வாய்—தொங்கும் வாய், வினைத் தொகை ; களிறு—ஈணடு எட்டு யானைகள் திசைகளைத் தாங்கும் ; அந்தணன—பிரமன் ; திருவதனம் நான்கு பெற்றது—திலோத்தமையைப் படைத்து அவள் அழகைக கண்டு விரும்பியபோது அவள நானகு திசைகளிலுமோட அங்கங்கு ஓரோர் முகஙகொண்டு பார்கக நான்கு முகம் ஆயிறறு. இது ஓர் வரலாறு. சங்கு அமல வெள்ளை அம்புயமலர் திஙகளோதனி—சாரங்கமெனனும சஙகோ குறறமற்ற சரசுவதி தங்கும் வெள்ளைத்தாமரை மலரோ பூரண சந்திரனே ஒவ்வொன்றுதான் ; இவை—பின் வரும் அனனஙகளைக் குறித்த சுட்டு ; அனநதம்—பல ; "தவள . . . . அனம்" வெண்ணிறமும் பவளம்போன்ற மெல்லிய சிவந்த வாயும், பொனனிறமொத்த சிறகும் உடைய அன்னங்கள் ; விளையாடு கமலப் பொய்கை எனக கூட்டுக. மத்தமா—மதமுடைய கசேந்திரன் என்ற யானை.

## சரஸ்வதி.

114 ஓதுமறைப் பொத்தகமும் நாதமிகுத் திட்டமுதம்
ஊறுமிசைக் குத்தகும் யாழுமலர்க் கைககுளுளாள்
ஓடரிமைக் கட்குவளை போலுமிணைக் கட்கடையின்
ஊமனும்வித் தைக்குரியன் ஆகவரத் தைத்தருவாள்

மூதுணர்விற் குக்கமல நான்முகனுக் குத்தலைவி
மூரல் முகத் துத்தமிபி ராமிமதிக் கொத்த மெய்யாள்
மூடர்மனத் துக்கணுகாள் பாரதிசுப் பிரகமல
மூலமணிப் பொற்றவிசின் வாணிபதத் தைப்பணிவாம்

மாதுலன்விட்டிடமத வேழமருப் பற்றுவிழ
வாண்மலர்பட் டுப்புரள ஓரறைவைத் திட்டவனை
மாதவனைத் துட்டமிகும் பாவியுரத் தைப்பகிரும்
வாளியனைச் சத்தமிகும் வாருதியிற் கற்கள்கொடு

சேதுவினைக் கட்டியெவர் காணினுமுற் பெற்றவினை
தீரவரத் தைத்தருமி ராகவனைக் கற்றவர்கள்
தேடுசிறப் பிற்பெருகும் வேணுவனத் திற்குடிகொள்
சீதரனைச் செப்புமிசை சேர்தமிழ்முற் றுபபெறவே. (4)

(4) பொத்தகம—புத்தகம் ; நாத மிகுததிட்டு . . . . உளாள—ஒலி மிகுத்திட்டு அமுதம் போன்று சுரககினற இசைகருத்தகக வீணையை மலாபபோன்ற கைககுள் உடையவள் ; கள மைக்குவளை போலும் அரி ஓடு இணைககண கடையின—தேனுளள கரிய குவளை மலர் போலும செவவரி ஓடிய இரண்டு கணகளின கடைபபாாவையால ; ஊமனும—ஊமையாக உள்ளவனும் ; வரததைத தருவாள எனக. தலைவி எனபதை உணர்வு, நான முகன எனற ஈரிடஙகளில சோகக. முதலுககு அறிவுககுத தலைவி என்றும பினனதறகுப் பிரமன மனைவி யெனறும பொருள கொளக. மூரல—புனசிரிப்பு ; முகத்து உததமி எனக. பிராமி—சரசுவதி ; மதிக கொதத மெய்யாள—சநதிரனை யொதத ஆடை யுடுதத உடலை யுடையவள ; பாரதி—சரசுவதியின ஓர் பெயர் ; சுப்பிர கமலம—வெணதாமரை ; மாதுலன—மாமனன கம்சன ; மத வேழ்—குவலயா பீடம்; வாளமலா பட்டுபுரள—ஒளளிய தாமரை மலர் போனற மெலலிய துதிககை அறுநது புரளுமாறு ; பாவி—கம்சன் ; வாளியன—குறிப்பு வினை யாலணையும் பெயர் ; கறகள கொடு சேது வினைக கட்டி—மலைகள கொண்டு அணையைக்கட்டி; வினை—தீவினை ; வரத்தைத் தரும் இராகவன எனக ; வேணு வனம்—வெண்ணெய் நல்லூர்க்கு ஓர் பெயர் போலும்.

### சிவபிரான்

115 பவளம் பழுத்த திருவுருவம்
பாதிப் பசைப்பச் சடாடவியிற்
பசும்பொன் இதழிக் கரும்பாநதள
பனிவெண் பிறைதன் நிறம் விரிப்பத்

தவளம் படர்நீ றணிமிடற்றில்
தடஞ்சேர் குவளை நிறங்காட்டச்
சரணந் துதிப்பார்க் கெவ்வணமுந்
தன்பால் தெரிப்பான் பதந்துதிப்பாம்

கவளங் குதட்டுப் பெருங்கவுட்டுக்
கரடக் களிற்றுக் கருள்பெருமான்
கயல்பாய்த் தடமுஞ் செழுஞ் செந்நெல்
கதிரார் வயலு முபவனமும்

திவளம் புலியைத் தொடவுயர்ந்த
செம்பொன் மதிலுந் தடந் தெருவும்
செழிக்கும் வெண்ணெய்க் கதிபனிசை
சேருந் தமிழ்ப்பா தழைத்திடவே. (5)

(5) பவளம் . . . பசைப்ப :—சிவபெருமான் செந்நிறமும் பார்வதி பசுமை நிறமு முடைமையால் இங்ஙனம் கூறினா. முன பிளளைத் தமிழ்க கொதது 310 ஆம பாட்டினும் காண்க. இதழ்—கொன்றை ; பாந்தள்—பாம்பு ; தவளம் படர் நீறு—வெணணீறு ; மிடறறில். . . . . . காட்ட—கழுத்தில் கறுபபு நிறமானது ஆல கால விஷம உணணலாலாகும். தெரிப்பான—அறிவிபபான ; கவளம—உருணடையான உணவு ; களிறு—ஈணடு கசேநதிரன ; உபவனம்—சோலை ; திவள அம்புலி—விளங்கும சந்திரன.

**உமையவள்**

116 இமையநெடு முடிதுகின வுருவரை
இறைவன்மக ளென வெய்துங் குமாரியை
இலகுமிர சிதவரையின் முடிவளர்
எழில் கொடு ஈர்முலைமெய் கொண்டதேவியை

எதிருமட லுடைமயிட னெடுமுடி
இடறி நட மிடுமொய் கொண்ட நீலியை
இணையில் குற மகள்களப முலையுழு
தெழுபனிரு புயவைதந்த வேலனும்

அமையும்மத மழை யொழுகு புகர்முக
அவனும்மக னெனவைகும் பவானியை
அவிருமட மயிலியலும் வடிவமும்
அடியாதொழ வருள்செய்சிங்க வூர்தியை

அரவினணை மிசைவளரு மவனிளை
யவளையிமை யவர்கொய் கின்ற தேமலர்
அடியின்நனி சொரிதரநல் வரமருள்
பவளைமன மொழிமெய் கொண்டு தாழுதும்

117 கமையின்நிரு தர்பொன் னகரில் அழலிடு
கவியினிட மருள் செய்கஞ்ச லோசனர்
கடியவம ரினில்லசு தசமுக
கடிகொள்நகர் புகுதுய்கென்ற வாசகர்

கடலினழல் எழவுலகு குலையவோர்
கணையை விட வளைவெய்துஞ் சராசனர்
கமலமட மகள்களப முலையுழு
கதிர்கொள்மணி வெயில் செய்துங்க மார்பினர்

சமையகலை கியரலைய வெகுவித
சரிதையினின் மருளெய்தும் புராதனர்
சகடுபொடி படவுதையும் வனருக
சரணமறை முடிவைகும் பராபரர்

தருணமணி யொளிர் திகிரி வனநகர்
தமதமன மகிழ்வைகுந்த நாயகர்
தருதெள்ளமு தினுமினிய புகழ்சிறு
தகைவென்தமிழ் செய்புன்சொல் வாழ்கவே (6)

(6) துகினம்—பனி ; இமைய இறைவன—பருவத் ராசன் ; இலகும் . . . .மெய் கொண்ட—விளங்கும் பொன்மயமான மேரு மலையின் சிகரம் போன்று வளரும் அழகு மிகுந்த இரண்டு முலைகளை உடலில் கொண்ட ; அடல் உடைமயிடன்—முன் பிள்ளை தமிழ்க் கொத்து 440 ஆம் பாட்டின குறிப்பில காண்க ; மொய்ம்மை—வலிமை ; நீலி—நீல நிறத் தவள் ; குறமகள்—வளளி ; பனனிரு எனபதுபனிரு எனத தொக்கது. வைதந்த வேலன்—கூர்மை பொருந்திய வேலினை யுடையவன் ; புகர்முக அவன—விநாயகன் ; புகர் முகம்—

யானை ; ஈண்டு யானைத் தலைக்காயிற்று ; முதலாகு பெயர் ; வேலனும், புகர்முக அவனும் மகன் என என்க. இயல்—சாயல் ; அரவின . . . . .அவன் பாம்பாகிய படுக்கையின் மேல் யோகநித்திரை செய்யும் திருமால் ; அடி—பாதம் ; கமை இல் நிருதர் பொன் நகர்—அழகற்ற விகாரமான உருவமுடைய அரக்கரது இலங்கையில் ; கவி—ஈண்டு அனுமான் ; கஞ்சலோசனர்—தாமரை யொத்த கண்களை யுடையவர் ; லோசனம்—கண் ; அமரினில் அலகை—சண்டையில் அலைசுண்ட ; தசமுக—விளி, பத்துத் தலைகளையுடைய இராவணனைக் காட்டிற்று ; "கடிய . . . . . . . .உய்க்கு" என்ற வாசகர்—"ஆளையா வுனக்கமைந்தன. , . . . இன்று போய்ப் போர்க்கு நாளை வாவென நல்கினன் வள்ளல்" என்ற கம்ப ராமாயண பாடலை ஓர்க. கடலின . . . .சராசனர்—முன் பிள்ளைத் தமிழ்க் கொத்து 198 ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. சர + ஆசனர்—சராசனர், தீர்க்க சந்தி பெற்ற வட மொழித் தொடர் ; கமல மடமகள்—தாமரையில் தோன்றிய சீதை ; உழு மார்பு என வினைத் தொகையாகக் கொள்க ; துங்கம் மார்பு—மலையொத்த மார்பு ; இராவணன் சிவலிங்கத்திற்குத் தாமரைப்பூ கொண்டு வரச் சென்ற போது திருமகள் ஓர் குழந்தையாகி மலரின் மேல் இருக்க அக்குழவியின் அழகு கண்டு எடுத்து வரப் பின் அதனுடன் இருந்த ஓர் ஓலையில் "சீதை பிறந்ததால் இலங்கை அழியும்" என்று எழுதி இருந்ததால் அவன் பயந்து ஓர் பெட்டியில் இட்டு விட்டு விட்டான்; புராதனர்—பழமையானவர் ; வனருக சரணம்—தாமரை மலரொத்த பாதம் ; திகிரி வனநகர்—இது வெண்ணெய் நல்லூர்க்கு ஓர் பெயர் போலும்.

### முருகன்

118 மாவலந் தவிரவுயர் வெற்பகம் பிளவுபட
வற்றுத அவுணவெள்ளம்
மாக்கடல் படைசுவற வடிவேல் கரத்தேந்தி
மயில்வயப் பரிநடாத்துஞ்

சேவலங் கொடியனைச் சேவலோன் புதல்வனைத்
தேவர்சேனைக்கதிபனைச்
சேல்விழிக் குறமகள்ம ணாளனைத் தாளினைத்
தினம்துதித் தன்புபுரிவாம்

நாவலந் தீவினிடை செங்கோல் செலுத்துமுடி
நரபாலர் குழுவைவெல்வாய்
நவியப் படைக்கலத் திருபத்தோர் காலட்டு
நதிபடுங் குருதிதேக்கிக்

கேவலம் புகுதந்தை கடனுற்றி மகிழ்வெய்து
கிளர்தவத் தவனை வெண்ணெய்க்
கேசவனை வைகுந்த நாதனைப் பரவுமென்
கேண்மைமுத் தமிழ்தழைகவே (7)

(7) மாவலம்தவிர—மாமரமான சூரபதமன் வெற்றி நீங்கி (அதாவது தோல்வியடைய) வெற்பு—கிரவுஞ்சகிரி ; மாக்கடலபடை—பெரிய கடல்போன்ற சேனை ; சுவற—வற்ற ; மயில் வயப்பரி—மயிலாகிய வீரமிக்க வாகனம் ; சேவலோன்—எருதினமீதேறி அதை நடத்தும் வல்லமையுள்ளவன் ; சே—எருது ; தேவர் சேனைக்கதிபன—தேவசேனாதிபதி என்ற பெயர் தரித்தது காண்க. மணாளனைத்தாளினை—உருபுமயக்கம். நாவலந்தீவு—பரத கண்டம் ; நரபாலர்—அரசர் ; வெல வாய் நவியப்படைக்கலம்—வெல்லுகின்ற கூர்மையுள்ள வாயையுடைய மழுவாகிய ஆயுதம் ; இருபத்தோர்கால் அட்டு—இருபத்தோரு தலைமுறை கொன்று ; கேவலம்புகு - மோட்சம் அடைந்த, ஈண்டு [ இறந்த ] என்பதைக் காட்டியது ; தந்தை—சமதக்கினி முனிவர் ; தவத்தவன—பரசுராமன.

### இந்திரன்

119 ஒருநாலு நுதிமுனை மருப்புறு களிற்றனை
உயர்வானி லுலவிரு சிறைக்கரு மலைக்குலம்
உலகூடு படிதர வறுத்தவ யிரத்தனை
ஒருநூறு பெருமகம் முடித்தருள் சிறப்பனைப்

அருள்மீறு கமலவிழி பற்பல வுளத்தனை
அயிராணி இணைமுலை திளைத்தபுய வெற்பனை
அமராடும் அவுணவிரு ளைத்தெறு விகாத்தனனை
அலர்தூவி இருபதம் விருப்புடன் வழுத்துவர்ம்

கருநாரை வயலுறு கயற்களை யெடுக்கவும்
கடைமாதர் குவளை கம லக்களை எடுக்கவும்
கனிவான பழமுடை மதுப்புனல் பெருக்கவும்
கதிர்மீறி வளர்செந்நெலின் முத்துதிர் வளத்தவாய்

நரர் நாலு வருணரும் மகிழ்சசியின் மிகுத்த சீர்
நவநீத புரமுன மியற்றிய தவத்தினன்
நலமாக வுறைதிரு மகட்குரிய கர்த்தனூர்
நயமேவு மிசைமொழி இயற்றமிழ் தழைக்கவே. (8)

(8) நுதிமுனை—ஒரு பொருட்பன்மொழி; நாலு முனைகளையுடைய மருப்புடையகளிறு—ஐராவதம்; உயா வானில்......வயிரத்தனை—மலைகள் சிறகு முளைத்துப் பறந்து சென்று துனபம் செய்ய இந்திரன் அவைகளின் சிறகுகளை யரிந்தான். மைநாக பர்வதம்மட்டும் கடலில மறைந்தது. மகம்—யாகம்—நூறு அசுவமேதயாகம் செய்தவரே இந்திரனாவார், நகுஷன் இவ்வாறு ஆனது காண்க. அருள்....உள—அத்தனை—கௌதமர் சாபத்தால் நேர்ந்த ஆயிரங்கண்களையுடைய தலைவனை, அவுண இருளை தெறு விகாத்தனன—அரகக ராகிய இருட்டை அழிக்கின்ற சூரியனையொத்தவன்; நாரை வயலிலுள்ள கயல் மீன் களாகிய களைகளைத் தின்ன எடுக்க, மருதநிலப் பெண்கள் குவளையும தாமரையுமாகிய களைகளை எடுத்தனர். கடைசியர் என்பதற்கு ஆசிரியர் [கடைமாதா] எனக் கூறினர்; குவளைகமலம்—உம்மைத் தொகை. உடைமதுப்புனல் பெருக்க—உடைந்து தேன்பெருக்க. உடைந்து என்பது உடை என நின்றது. ஈண்டு செந்நெல்—முத்துக் கொடுத்தலால் வள மிக்கதென்க. செந்நெல் முததீனும் இடங்களுள் ஒன்று; நரர்—மனிதர்; இசை—புகழ்.

### சப்தகன்னியர்

120 சங்காழி கொண்டவுரு வொன்றுமான் மழுவைத்த
சடிலமொன் றமுத கரகந்
தாங்கும்வடி வொன்றுவயி ரப்படை கரத்தேந்து
தனுவொன்று வடியெயிற்றில்

பொங்காழி யுலகந் தரித்ததா பரமொன்று
பொருமயில் சுமந்த தொன்று
புணர்கபா லங்கொளும் உடம்பொன்று பெறுமாதர்
பொன்னடிகள் சென்னிவைப்பாம்

அங்காழ் இலங்கும் அகல் அல்குல்மென் கொடியிடை
அலத்தகச் செஞ்சீறடி
ஆர்முலை மைக்குழல் பிறைநுதல் துவரிதழ்
அமைத்தடந் தோளிடைமினார்

கொங்காழ் இணைக்கமல மனைகைப் பிணைந்தாடு
குழகனைப் புவியினைத்தும்
கொண்டாடு வைகுந்த நாதனைத் தொண்டனென்
கூறுமுத் தமிழ் தழைக்கவே. (9)

(9) சங்கு ஆழி கொண்ட வடிவு ஒன்று பெறுமாது—நாராயணி ; மான்மழு வைத்த சடிலம் ஒன்று பெறுமாது—மகேஸ்வரி, சடிலம்—சடை ; அமுத கரகம் தாங்கும் வடிவு ஒன்று பெறும்மாது—அபிராமி ; அமுதகரகம்—வெள்ளைக் கமண்டலம் ; வயிரபபிடை கரத்து எந்தும் தனு ஒன்று பெறுமாது—இந்திராணி ; வயிரப்படை—வச்சிராயுதம் ; தனு—உடல் ; வடி எயிற்றில் பொங்கு ஆழி உலகம் தரித்த தாபரம் ஒனறு பெறுமாது—கூரியபல்லில் கடல்சூழ்நத உலகத்தைத் தாங்கின உடலைப் பெற்ற மாது, வராகி, தாபரம்—உடல் ; பொரும் அயில் சுமந்தது—கௌமாரி ; அயில—வேல் ; புணர் கபாலம் கொளும் உடம்பு ஒன்று பெறும் மாது—காளி ; கபாலம்—தலையோடு ; இவள மண்டையோடுகளை மாலையாக அணிந்தவள். பெறும் மாதர் என்பதை மிகுதி அறுவருககும் கூடடுக. இதன வரலாற்றினை முன் பிள்ளைத்தமிழ்க் கொத்து 446-ஆம பாட்டினுரையில காணக. அமகாழ இலங்கும்—அழகிய எணகோவை மேகலாபரணம் விளங்கும் ; அலததகச செஞசீறடி—செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பட்ட சிறிய பாதங்கள் சிறுமை + அடி—சீறடி ; மை—மேகம் ; துவர் இதழ்—பவளம்போன்ற உதடு ; அமை—மூங்கில் ; கொங்கு ஆழ் இணைக்கமலம் அன கை பிணைந்தாடு—மகரந்தம் தங்கியுளள இரண்டு தாமரை போனற அமமின்னலை யொததவர் கைகளோடு கைகோர்த்து விளையாடுகினற ; அன, மினார்—அன்ன, மின்னார் எனபவைகளின் தொகுத்தல.

### முப்பத்து முக்கோடி தேவர்

121 கருநிற நெட்டுடல் எருமை மதுச்சொரி
கமல முழக்கியு மென்மலரார்
கடிகமழ் மைச்சிறு குவளை கறித்தடர்
கதிர் பகை பற்றிய செந்நெல் உகூஉ

இருபுற முற்றமு தொழுக மதக்களி
றெனவுல வப்பெறும் வெண்ணெயின் வாழ்
இமையவ ருக்கதி பதியை யுரைத்தவென்
இயல்வள ரச்செயும் எண்ணமதால்

பெருவரை சுற்றிய வுலகின் இருட்குவை
பிரிவு படுத்திய தன்மையினார்
பிரச முகக்கடிக் கமல மலர்த்திய
பெருமை படைத்துள பன்னிருபேர்

பருதிகள் எட்டெனும் ஒருகணி தத்துறு
பரம வசுக்கள் நல் வண்மையினார்
பதினொரு ருத்திரர் இருவர் மருத்துவர்
பதம் இதை யத்துற வுன்னுதுமே (10)

(10) கருநிற....வெணணெய—கரியநிறததையும் நீண்ட உடலேயுமுடைய எருமையானது தேன சொரியும் மெலலிய மலாகளேயுடைய தாமரைகளேக காலினுல சிதைததும், வாசனே வீசும கரிய குவளே மலரைக கடிதது மிகக கதிாகளை உடைய சாலி நெறபயிரை உண்ணுமல வணடாகிய பகைகளோடுகூடிய வாயின இருபுறஙகளினின்றும் தேன் ஒழுக மதம்பொருநதிய யானேபோன்று உலவப் பெறுகினற வெணணெயநலலூா் எனக. மெனமலா ஆர் கமலம எனவும, பகைபறறிய இருபுறம எனவும் பிரிததுக் கூட்டுக. உணு—ஈறுகெட்ட எதிர் மறை வினை யெச்சம். இயல—இயறறமிழ் ; பெருவரை....தன்மையிஞர்—பெரிய எட்டுமலேகளும் சூழப்பெறறுளள உலகில் இருட் கூட்டத்தைப பிரிதது ஓடசெய்த குணததினா (சூரியா) பிரசம உகக கடி கமலம மலாததிய எனக. பிரசம உக—தேன் சிந்த ; தனமையினுராகிய பனனிருபோ் பருதிகள் என்க. எடடு எனும் ஒருகணிததது உறுவசுக்கள். எட்டு எனற ஒபபறற கணககுள்ள மேலான வசுககள (அஷடவசுககள) ; வணமை—புகழ ; இதையும்—இடைப்போலி ; உனனுதும்—நினேப்போம். இததேவர்கள் வகைக்கொரு கோடியாக முப் பதது மூனறுகோடி யாவர். மருத்துவரிருவரை அச்வினி தேவர் என்பர்.

## செங்கீரைப் பருவம்.

122 நந்தா மணிப்பணி வரைப்புயத் தினிலாட
நறுமலர்த் தொடையலாட
நன்னுதற் சுட்டியும் பட்டமு மிசைந்தாட
நகுமணிக் குழைகளாட

அந்தாம அரைவடங் கிண்கிணி கல்லென்றுட
அவிர்தரள மாலேயாட
ஆர்வத்தோ டன்னேய ரணைத்தேந்தி முத்தாட
அடுபுலியி னகமுமாடக்

கொந்தார் குழற்கற்றை முகமதிக் கெதிருலவு
கொண்டலின் அசைந்தாடவுன்
கோலவிளே யாட்டினேக் கண்ணுதல முதற்றேவர்
கொண்டாட வண்டாடுபூஞ்

செந்தா மரைத்திருவை மார்பில்விளே யாடநீ
செங்கீரை யாடியருளே
தெண்ணன்மணி யொளிர்வீதி வெண்ணெய்நகர் வளர்சோதீ
செங்கீரை யாடியருளே. (1)

(1) நந்தா மணிப்பணி—கெடாத ஒளியுள்ள இரத்தினஙகளாகிய ஆபரணம். நகுமணிக் குழை—ஒளிவிடும் மாணிக்கக் குண்டலம், [ அம்தாழ....என்ருட ] மாலேயும் அரையில் கட்டிய அரைநாணுகிய கயிறும் காலிலிட்ட கிண் கிணிச் சதங்கையும் கல்லென்று ஒலிகக, தாமம் வடம், கிண்கிணி—உம்மைத் தொகை ; தரளமாலே—முத்துமாலே ; அடுபுலியின் நகமும—கொல்லுகினற புலியின நகத்தைககோத்து ஓராபரணமாகச் சிறு குழநதைகட்குக் காப்பாகக கட்டிவைப்பா். இதைக் கொணடே பழங்காலத்தில் தாலி செய்ததாக சஙக நூல் களில் கூறப்பட்டுளது. "புலிபபற்ருலி புன்தலேச்சிருர்" (புற—நானூறு, 374.) குழலகறறை, கொணடலின் அசைநதாட என்க. கொண்டலின்—மேகம்போல ; இன் ஐந்தாம் வேற்றுமை உவமபொருள ; மதிக்கெதிர் உலவு கொண்டலொத்து முகத்தின் எதிா உலவுகற்றைக் குழல் எனக. குழந்தைகட்கு முகத்தின்மீது மயிர் வந்து விழுவதனே இஙஙனம் கூறினர், முகமதி—உருவகம். கணணுதல்—நெறறிக்கண்ணுடைய சிவன் ; திருவை மார்பில் விளேயாட நீ—இலக்குமியை மார்பினில் விளேயாடுமாறு வைத்த நீ. தெள் நல்மணி ஒளிர் வீதி—தெளிவான நல்ல மாணிக்கமொத்து ஒளிரும் தெரு.

123 தாராடு முடிநிருப ரெதிராடி யதிராத
சமராட வுயிர்விடுகுறைத்
தலையாட நிலையாத குருதிப் பெரும்புணரி
தனில்நீந்தி யலகைக் குழாம்

நீராட விசயமகள் நடமாட நிணமுண்டு
நிமிர் கழுகு கொடிபருந்து
நிழலாடு பந்தரி னொதுங்கிமுகம் வெயர்வாட
நின்றவரை யஞ்சல்போமின்

போராட லொழிமினென வுரையாடி நகையாடு
பொருதலர்தம் மருவமுருவப்
புகையாட மேவினிரு கூருட விவ்வாறு
போர்மூட்டி விசையனிசையும்

தேராடன் மாவினொடு சீராடி நின்றவன்
செங்கீரை யாடியருளே
தெண்ணன்மணி யொளிர்வீதி வெண்ணெய் நகர் வளர்சோதி
செங்கீரை யாடியருளே. (2)

(2) நிருபர்—அரசர்; நரு—மனிதர் ; குறைத்தலை—கவந்தங்கள் ; அலகைக்குழாம்—பேய்க் கூட்டம் ; விசய மகள்—வெற்றித்திரு, துர்க்கை ; நிணம்—கொழுப்பு ; கொடி - காக்கை ; கழுகு—பருந்து - உம்மைத்தொகை ; பந்தர்—பந்தல், கடைப்போலி ; கழுகு, பருந்து முதலிய பறவைகள் நிழலைச் செய்த பந்தரின்கீழ் போருக்குப்பயந்து முகம் வெயர்த்து ஒதுங்கின பகைவீரரை அப்பகைவரது புகையொத்த அருவமாகிய வுருவம் [ போராடுவதை ஒழியுங்கள் அஞ்சாது புறங்காட்டியோடுங்கள் ] என்று பேசி நகைத்து ஆடியது. ஆடல் மா—அடல் என்பதன் நீட்டல். ஆடல் என்று கொண்டு வலிமையுள்ள குதிரையென்றும் கூத்தாடிக்கொண்டு செல்லும் குதிரை யென்றும், உத்தம இலக்கணமுடைய சிறந்த குதிரை யென்றும் பொருள் கொள்ளலாம். ஈண்டு குருக்ஷேத்திரப் போர்க்களத்தை வருணித்தவாறு காண்க. அப்போது கண்ணன் அருச்சுனனுக்குத் தேர்ச் சாரதியானதால் இவ்வாறு கூறினார்.

124 முத்திக்கு வெஞ்சிலையை நிகர்புருவம் வளையவீழ்
முறுவலின் நிலவுபொழிய
முளரிமல ரைச்சினவி யரிபரந் திருகுழையின்
மோதும்விழி கருணை பெருகத்

தத்திக் குறங்கிடை யிருக்கெனச் செவிலியர்
தடுக்கவும் அசோதை மடிமேல்
தாவும்இரு கரம்நிலம் பதியவைத் திணையடித்
தளிர்விரல் குனித்தூன்றி மேல்

வத்திக்கு முழுமதி மறுத்துடைத் தனையமுக
மண்டலம் சிறிதெடுத்து
மலர்மாது நிலமாது முண்டுண் டுவட்டாது
வாயூறி நிற்பவமுதில்

தித்திக்கும் இதழூறல் இடையிடை துளிப்பநீ
செங்கீரை யாடியருளே
தென்னன்மணி யொளிர்வீதி வெண்ணெய்நகர் வளர்சோதி
செங்கீரை யாடியருளே. (3)

(3) முத்து இக்கு வெஞ்சிலை, முததினையுடைய கருமபாகிய கொடியவில்—இவவில் காமமுழந்தவரை வருததுவதால [ வெம்மை ] கூறப்பட்டது ; வளை அவிழ்முறுவல - முததினை யொதது விளஙகும பல் ; ஈண்டு வளை அதுவீன்ற முததுக்காயிற்று, அரி - செவவரி ; இருகுழை—இரணடுகாதுகள, குறஙகு—துடை ஈணடுமடி ; வததிககும—வளரும ; மறு துடைதது அணைய—களஙகம், நீஙகியதுபோனற ; மலர்மாதும நிலமாதும—எண்ணும்மை ; உண்டு உணடு—அடுக்குததொடர் ; உவட்டாது வாயூறி நிற்ப அமுதில் தித்திக்கும் இதழ்— திகட்டாது இனனும் உணண இரு தேவியரும் வாயில் நீா பெருகிநிறக அமுதைக் காட்டிலும் தித்திககும் உதடு ; ஊறல்—இதழினின்று சிந்தும் எச்சில் ; இதில் செஙகீரை ஆடுதலின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

125 கந்தம்வளர் சந்தப் பொருப்பில் பிறந்துலகு
காதல்பெறு சங்கமேவிக்
கருதுமைந் திணையகப் பொருளையுந் துறைமுகம்
காணவிட் டொழுகு தொடர்பில்

சந்ததமும் அலஙகார முஞ்சிறந் தமுதினும்
தண்மையாய் மதுரமாகித்
தாழாது சீர்பெற் றடிக்கடி பெருக்கந்
தலைக்கொடு மிகத்தெளிந்தே

அந்தமிகு பூமுதல் மங்கலப் பொருள்படைத்
தந்தரங் கத்தோடே வரும்
ஆடுதற் குரிமையா யோசையுட னழகும்
அணைந்துபெரி யோர்கள புகழச்

செந்தமி ழெனப்பெருகு பெண்ணைச் செழுந்துறைவ
செங்கீரை யாடியருளே
தென்னன்மணி யொளிர்வீதி வெண்ணெய்நகர் வளர்சோதி
செங்கீரை யாடியருளே. (4)

| | பெண்ணை நதி. | செநதமிழ். |
|---|---|---|
| 1 | வாசனைமிக்க சந்தன மரங்களையுடைய மேற்குத் தொடர்ச்சி மலையில தோன்றும். | வாசனையுடைய சந்தன மரங்கள் சூழ்ந்த பொதிய மலையில் தோன்றும். |
| 2 | உலகினர் விரும்பும அழகுள்ள சங்குகளை அடையும் (சங்கம் - சங்கு). | உலகினர் விரும்புகின்ற மதுரைத் தமிழ்ச் சஙகத்தை அடையும். |
| 3 | கருதுகினற குறிஞ்சி, முலலை என்ற ஐநது வகை நிலங்களினிடமுளள சந்தனம், அகில முதலிய பொருளகளைக கடற் கரைத் துறைமுகத்திறகுக் கொண்டு சேர்க்கும். | அகப்பொருளில் கூறியவாறு கருதுகின்ற ஐநதிணைப பொருளும், துறையும் பொருந்தப் பாட்டில நிறுத்தும். |
| 4 | செல்லும் வேகததில் எப்போதும் அழகு சிறக்கும், | பாட்டுப்பாடுஙகால் எப்போதும் உவமை, உருவகம் முதலிய அணிகள் சிறந்திருக்கும், |

| | |
|---|---|
| 5 இதன் நீர் அமிர்தத்தைக் காட்டிலும் குளிர்ச்சியாய் இனிமை கொடுக்கும். | பாட்டுப் படித்தால் அமுதத்தைக் காட்டிலும் மகிழ்ச்சியும் இனிமையுமிகும். |
| 6 அடங்காது ஒலிமிகும் சீர் - ஒலி .. .. | பாட்டுப்பாடுங்கால் குறையாமல் சீர் பெற்றுவரும். சீர் - செய்யுளின்ஒருறுப்பு. |
| 7 அடிக்கடி வெள்ளம் வருதலைத் தாங்கும். | அடிக்கடி வளாவதைத் தாங்கும். |
| 8 மிகவும் மலர் வனஙகளில் ஊடுருவி அழகு மிகுந்த பூ முதலிய நல்ல பொருள்களை உடைத்தாயிருககும். | மிகவும் ஆராய்ந்து அழகுபெற்ற பூ முதலிய மங்கலச் சொற்களை முதலில கூடிய பாட்டுக்களை உடைத்தாயிருககும். |
| 9 அழகிய அலைகளுடன் வரும் (தரங்கம் - அலை). | அழகிய கலிபபாவில தரவு, தாழிசை, அம்போதரங்கம் முதலிய உறுப்புககளைப் பெறறுவரும் (தரஙகம் - அம்போதரஙகம் என்ற உறுப்பு). |
| 10 நீராடற்கேறறதாய் புண்ணியதீர்த்தத்திற் குரியதாயுளது. | கூத்து எனனும் நாடகத்தமிழிறகு உரிமை யாயுளது. |
| 11 அலையொலியும் ஆழமும் அடைநதிருக் கும். | செப்பலோசை, அகவலோசை, துள்ளலோசை, தூங்கலோசை முதலிய ஓசைகளும் சொற்செறிவும் பொருட் செறிவும் அடைந்து இருககும். ஆழம - சொலலாழம், பொருளாழம். ஈணடு பெணணை நதியைச் செநதமிழிறகு ஒப்புமை கூறிய திறம் பாராட்டற் பாலது. |

126 வெண்டிரைக் கடலகழி லங்கையாள் நிருதர்கோன்
வேதனால் பெற்றவரமும்
வெள்ளியங் கிரிபெயர்த் திட்டதிண் டோள்வலியும்
வெஞ்சின இயக்கர் கோமான்

கொண்டமலர் மானமும் மானமுங் கைக்கொண்ட
கொடுமையும் கருநிறத்துக்
கூற்றையும் சமரிடைக் கூத்தாடல் கண்டுவிடு
குறைவிலாண் மையு மமரகோன்

மண்டியவ ரத்தலைப் பிணிபடச் சிறையிலிடு
மகவலியும் மூவுலகமும்
வந்தடி பணிந்துதன் ஏவல்முறை கேட்பவுயர்
வண்மையுஞ் செல்வமுமெலாந்

திண்டிறலோ ரம்பின்வலி யால்வாங்கு கொண்டலே
செங்கீரை ஆடியருளே
தெண்ணனமணி ஒளிர்வீதி வெண்ணெய்நகர் வளர்சோதி
செங்கீரை ஆடியருளே. (5)

(5) கடல் அகழ் இலங்கை—கடலே அகழியாகவுள்ள இலங்கை ; நிருதர்கோன்—இராவணன் ; வேதன்—பிரமன் ; வெள்ளியங்கிரி—கைலைமலை ; இயக்கர் கோமான் கொண்ட மலர் மானமும் மானமும் கைக்கொண்ட—இயக்கர்கட்குத் தலைவனாகிய குபேரனிடமிருந்த

புட்பக விமானத்தையும் அவனது பெருமையையும் அபகரித்த ; குபேரன் இராவணனிடம் தோற்றதனுல பெருமை கெட்டது. கூறறு—யமன ; இராவணனிடம் யமனும் தோறறனன். இதுபோது கால தணடததை ஏவாது தடுததவர் பிரமன். இடும அகவலி் எனக. அகம்—மனம ; கொணடல்—உவமையாகுபெயர்.

## வேறு

127 குருமணி மேகலை வைத்த சுருங்கிடை
கொம்பர் குந்தேமல்
குடிகொளும் வார்முலை முத்து வடம்புனை
குன்றே யும்பூவின்

வருமது வூறல் பெருக்கு மரும்ப
வளம்ப லென்ருலுன்
வரிவிழி யாருயி ரைக்கொளும் நஞ்சிது
வம்பா மெண்ரே சொல்

ஒருமதி யோடு முதித்த விளங்கொடி
உணகோ பம்போதும்
ஒளிமணி மார்பி னிருத்தி மகிழ்ந்தெனில்
உய்ந்தே னென்றாடு

திருமகள் வாணகை பெற்று மகிழ்ந்தவ
செங்கோ செங்கீரை
செழுநவ நீத புரத்தில் அமர்ந்தவ
செங்கோ செங்கீரை. (6 )

(6) குரு—நிறமமைந்த ; சுருங்குஇடை—மெலலிய இடுப்பு ; வார்முலை—கச்சுப் பொருந்திய முலை ; வம்பு—புதுமை ; ஒருமதியோடுமுதித்த இளங்கொடி—ஒரு சநதிரனேடும் பாற் கடலில் தோனறிய இலககுமி ; இடை கொமபாகும ; முலை குனறு எயும் (ஒத்திருக்கும்) ; பல அரும்பினை ஒத்திருக்கும் என்று கூறினல் இலககுமியின விழிகள் உயிரைக் கொள்ளு கின்ற புதுமையான நஞ்சாம் என்று கூறும்படி இருக்கும்.

128 கரைபொரு காத லளித்த மடந்தையர்
கண்போ லுங்காவி
கருகிய நீல நிறத்தறல் கொந்தள
கம்போ லுந்தோயம்

நிரை தொறு மூடு சுழித்திட லுந்தி
நிறம்போ லுங்காணின்
நிறைகவர் மாதரை யொக்குமி தென்று
நினைந்தே திண்டோளின்

வரையுடை காமுகர் புக்குளை யுந்தொறும்
வண்டரர் பண்பாடி
மலர்முகம் ஆர்வம் மிகுப்ப மலர்ந்து
மகிழ்ந்தா கந்தோயும்

திரைகொள் பிணாகி நதித்துறை கொண்டவ
    செங்கோ செங்கீரை
செழுநவ நீத புரத்தி லமர்ந்தவ
    செங்கோ செங்கீரை. (7)

(7) பெண்கள் கண்போல் நீல மலரும் அவர்களது கூநதல் போனறு கருகிய நீல நிற முடைய மணலும் அவர்கள் கொப்பூழின் நிறம் போலும் நீா இடையில் சுழி கொளளலுமு டைய பெணணையாறுனது மலை யொத்த வலிய தோளுடைய காமுகர்கள் சென்று தழுவும் காலம் வரை வண்டுகள் ரீங்காரஞ் செய்தலை யொத்த இனிய இசைபாடி தாமரை மலர் போன்ற முகம் விருப்ப மிக மலர்நது மகிழ்நது அவாகளது மாாபினைப் புணரும் பொது மகளிரை யொக்கும. பிணாகி நதி—பெண்ணை நதி ; நிறை கவர் மாதா—பொதுமகளிா. பொது மகளிர் என்றால் பணம் வருமபோது அவாகள முகமலாநது இசை முதலியன பாடுவ தொப்ப. இதிலும் வடகிழக்குப் பருவகாறறு வருமபோது வெளளம் வருதலால ஓசை முதலியன உணடாதலான.

129 மரகத மேனி நினைகுநர் நெஞ்சலர்
    வண்டே சங்காழி
வரிசிலை வாள்கதை வைத்த தடம்புய
    மஞ்சே யஞ்சாத

குரகதம் வாய்தக ரக்கை நிமிர்ந்திடு
    குன்றே யன்பான
குவிமுலை யாயர் கொடி கள் பெறுங்கொழுங்
    கொம்பே யெம்போல்வார்

பரகதி சேர வடிக்கம லந்தரு
    பண்பா மண்பாவை
பாமர வாளவு ணக்களைச் சிந்து
    பணைத்தா ரெங்கோவே

திரகம லாசன னைத்தரு புங்கவ
    செங்கோ செங்கீரை
செழுநவ நீத புரத்தி லமர்ந்தவ
    செங்கோ செங்கீரை. (8)

(8) நினைகுநர்—வினையாலணையும் பெயர், நினைப்பவர்கள் என்று பொருள். நெஞ்சு அலா வண்டு—அத்தகை உன்னை நினைபபவர் நெஞ்சமாகிய மலரை மலர்த்துகின்ற வணடினை யொத்தவனே. மஞ்சு—மேகம் ; குரகதம்—குதிரை ; ஆயர் கொடிகள—கோபியரான கொடி யொத்தவர் ; மண்பாவை. . . சிந்து—பூமி தேவி விரும்பியவாறு அசுரர்களை அழிக்கும் என்க. மண்பாவை—பூமிதேவி. பாமரவாள் அவுணக்களை—அறிவற்ற வாளாயுதத்தை யுடைய அசுரராகிய களைகள், வாள் உபலட்சணமாக மற்றுப்படைகளையும் காட்டியது ; பணை—பெரு மை ; திரகமலாசனன்—முத்திகொடுககும தாமரை மலரிலுள்ள பிரமன. புஙகவன—கடவுள.

130 தேனிமிர் கற்பக நாள்மல ரைப்பொழி
    தேவர்கள் நின்றார்பார்
தீமை திருத்திய நான்மறை நற்றவர்
    தேடினர் வந்தார்காண்

பானல் விழிச்சசி கேள்வன் விழித்தெழு
பார நெடுஞ்சோனை
பாழ்பட வெற்பொரு தாழ்விரல் வைத்தது
பாடினர் கண்டாமே

கூனல் மருப்பிள மேதிசெந் நெற்கதிர்
கோதி நறுங்காவி
கோக நகத்திரள் வாவி யுழக்கியோர்
கோல விளந்தாழை

ஆனிழ லிற்றுயில் வேணு வனத்தவன்
ஆடுக செங்கீரை
ஆரண உட்பொருள் ஆன தனிச்சுடர்
ஆடுக செங்கீரை. (9)

(9) தேன் இமிா—வண்டுகள் ஒலிககும் ; நல்தவர்—பிராமணர் ; தேடினர் வந்தார்—முற்றெசசம். பானல—நீலோற்பலம் ; சசி—இநதிராணி ; எழுபார நெடுஞ்சோனை—எழுவகையான கருகமெ காண்டு பாரமுறறுள்ள விடாமழையைப் பெய்யும் மேகங்கள் ; சோனை—தானியாகு பெயர். வெற்பு—கோவர்த்தனமலை ; கூன நல் மருப்பு—வளைந்த நல்ல கொம்பு ; மேதி—எருமை ; கோகநகம்—தாமரை ; உழக்கி—கலக்கியடித்து ; "தாழை நிழலில ஆன (ஒடு) துயில " என்க. ஆன்—பசு ; ஆன என்னும் போது மூன்றும் வேற்றுமையுருபு விரிக்க,

131 நாறு மகிற்புகை வானவர் மெய்க்கணி
நாவி னிறங்காண
நாக மணித்தல மேவு மதிக்குடல்
ஞாயிறி தென்றுக

ஏறு துகிற்கொடி பாக னிளைப்பற
ஏழ்துர கஞ்சாட
ஏடவிழ் மைக்குழல் மாத ரடிப்பதில்
ஏறிய பந்தோடி

வீறு மிமைப்பிலர் மார்பி னுதைத்தெதிர்
மீளுதல் தன்கேள்வன்
மேனி திளைத்தொளி யாள்முலை யொப்புறு
மேடையின் விண்பாயும்

ஆறு புனற் சொரி வேணு வனத்தவன்
ஆடுக செங்கீரை
ஆரண வுட்பொருள் ஆன தனிச்சுடர்
ஆடுக செங்கீரை. (10)

(10) நாறு . . . . துகிற்கொடி :— வாசனை வீசும் அகிற் புகை தேவர்கள் உடலுக்கணியும் கஸ்தூரி வாசனைப் பொருள நிறங்காண தேவவுலகததைப் பொருந்துகின்ற சந்திரன், சூரியர்களுக்குப பூககுடல் என்னும படி ஏறும்படியான சீலைக்கொடிகள். பாகன்—பாகனுகிய அருணன் ; ஏழ்துரகம்—ஏழு பச்சைக குதிரைகள் ; சாட—மோதித்தடுக்க ; ஏடு—இதழ் ; ஏடு அவிழ் . . . .

விண்பாயும்—இதழ் மலர்நத பூக்களை யணிநத கூநதலையுடைய பெண்கள மெதததை மீது பந்தை ஓஙகி அடிப்பதனுல விணபாயுமாறு எழும்பிய அபபநது ஓடி தேவாகளது பெருமை யுடைய மார்பில உதைதது எதிர் மீணடு வருவது தன் கணவன் உடலில் கலந்த ஒளிமிக்க கூரிய முலையை ஒப்புறும் மாதர் மேடையின் கண அடிப்பதில் விண்பாயு மஎறிய எனப் பிரித்துக் கூட்டுக. ஆரணம்—வேதம.

## தாலப்பருவம்.

132 தகரங் கமழுங் குழன்மடவார்
 சலவைக் கலையி னேந்தியன்னை
தளிர்க்கை களிப்ப நெய்யாட்டித்
 தளர்வில் களபப் பொடி திமிர்ந்து

நிகரங் கதலிக் கெனுங்குறங்கின
 நிறுத்திப் பசும்பொன் தசும்பின்வெந்நீர்
நிரைவெள் வளைக்கை முகந்தாட்டி
 நெடுநீர் சுழற்றிக் கழைபுரைதோள்

மகரம் பொதித்த கலைமுனையால்
 மணிமெய்த் துடைத்துச் சியினூதி
மடியி னிருத்தி அயினிசுற்றி
 வளரும் கொழும்பாற றனமருத்திச்

சிகரம் புரைதொட் டிலில் வளர்த்த
 சேர்ந்தாய் தாலோ தாலேலோ
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்
 செல்வா தாலோ தாலேலோ. (1)

(1) தகரம்—மயிர்ச சாந்து ; சலவைக் கலை—சலவை செய்த ஆடை ; நெய்யாட்டி—எணணெய் பூசி ; இஙகு ஆட்டி பூசி என்பது மட்டுமே நினறது. திமிர்ந்து—பூசி ; அம் கதலிக்கு நிகர் எனும் குறஙகு எனக. பொன்தசும்பு—பொற்குடம் ; நீர் சுழற்றி—நீராட்டு தலின பின்னர் குழநதைககு நீர் சுழறறி ஊறறுதல் வழக்கு. கழை புரை தோள—மூஙகிலை யொத்த தோள் ; இஙகுத் தோள எனபது கைகளைக காட்டியது. மகரம்—சுருமீன் ; மகரக் குழையர் ஆனது பறறிப் போலும ; கலை—ஆடை ; உசசியின ஊதி—நீராட்டித் துடைத்த பின்னர் தாயார் தலையுசசியில் ஊதுதல் வழககு. அயினி சுறறல—சோறு கலநத ஆலத்தி நீர் சுழற்றி ; கொழுமபால தனம் அருத்தி—எனக.

133 மறிக்கும் தரங்கப் பெரும்புனலில்
 வனசப் பொகுட்டு முனிமுதலா
மன்னும் புவனத் தனைத்துயிரும்
 மடங்கும் இறுதிக் கொடும்பொழுதில்

குறிக்கும் சமையப் பல்பிணககர்
 குறும்பு மவர்தம் கடவுளரும்
குறிய சிறிய வயிற்றடங்கக்
 குலவும் சுருதித் தாலாட்ட

எறிக்கும் பசுங்கேழ் வடத் திலையின
இருக்கை மலரின் எடுத்தொருதாள்
இனமெல் விரல்செவ் விதழ்சுவைப்ப
இன்பத் தலைமை சிறப்ப முத்தந்

தெறிக்கும் கடலில் அறிதுயில்கூர்
சிறுவா தாலோ தாலேலோ
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்
செல்வா தாலோ தாலேலோ (2)

(2) தரங்கம மறிக்கும்—அலைமடங்கும ; வனசப் பொருட்டு முனி—தாமரை மலரில வீற்றிருக்கும பிரமன் ; இறுதிக் கொடும பொழுது—யுகப்பிரளயம (ஊழிக் காலம) ; பிணக்கா—மாறுபடுபவா ; சுருதி—வேதம; பசுங்கேழ எறிக்கும வடத்திலை—பச்சை நிற வொளி வீசும் ஆலிலை ; இருக்கை—ஆசனம ; மலரின் ஒரு தாள எடுத்து எனக. இதழ்—ஈண்டு அதனையுடைய வாய்க்கு ஆயிறறு. இன்பத்தலைமை சிறப்ப—இங்ஙனம் யாவரையும் உண்டு ஆலிலையில் துயிலவதால் யாவர்க்கும் தலைவர் இவரே என்பது தேறறமாயிற்று ; கடல்—பாற்கடல் ; அறிதுயில்—யோக நித்திரை ;

134 வள்ளக் கமலம் முறுக்குடைந்து
வழிந்த செழுந்தேன இதழ்குவிந்த
மலர்ச்செங் குமுதத் திடை பொழிதல்
மணிப் பொற் கலசத் துறுநறவைக்

கள்ளக் கயற்கண் தளிரியலார்
கனிவாய் குனித்துப் பருகலொக்கும்
கடிப்பந் தடத்தில் சினைச்சுறவு
ககனத் தெழும்ப வதுதடுப்பான்

பள்ளப் பழனத் துழவ ரெறி
பகடு துரக்குங் குறியதின் கோல்
பழுக்காய்க் கமுகின் குலைசிதறிப்
பலவு தகர்த்துக் கனிக்கதலித்

தள்ளச் சிறக்கும் வெண்ணெய் நல்லூர்
தலைவா தாலோ தாலேலோ
தண்ணங் கமலப் பெண்ணமுதின்
தவமே தாலோ தாலேலோ. (3)

இப்பாட்டு பிரளய காலத்தில் திருமால் யாவரையும் உண்டு சிறுகுழந்தையாகி ஆலிலை மீது கால் விரலை வாயில் வைத்துச் சுவைக்க வேதங்கள் தாலாட்டும நிலையைக் காட்டுகிறது முன் பிள்ளைத் தமிழ்க்கொத்து 128-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

(3) வள்ளம கமலம்-சிணணம் போன்ற தாமரை மலர் ; கள்ளக கயல்கண். "கயல் கண்ணம் கொள்ளா" (தஞ்சை கோவை 31) நோக்குக. கடி—வாசனைமிக்க ; பம்—விண்மீன். ஈண்டு நீரிலுள்ள மீன்களையே காட்டிற்று. கிண்ணம போன்ற தாமரைப்போது மொட்டவிழ்ந்து, தேன்இதழ் குவிழந்துள்ள செங்குமுத மொட்டின்மீது பொழிவது பொன் குடத்திலிருக்கும் கள்ளைக கயற்கணகளையுடைய பெண்கள் வாய்குவித்துப் பருகுவதை ஒத்திருக்கும் தகைமையையுடைய வாசனை மிக்கதும், மீனகளையுடையதுமான தடம் என்க. சினைச்சுறவு-வலிய கோரப்பல்லைப் பெற்ற சுறு மீன். சினை—ஓர் உறுப்பு ; தடுப்பான்-பானீற்று எதிர்கால வினை

யெச்சம் ; பள்ளிப்பழனம்—தாழ்ந்த நிலத்து வயல்கள்; சுறுமீன்மேலெழும்ப அதனை உழவர் மாடுகளை ஓட்டும தாற்றுகோலும், பாககு மரக் குலைகளும், பலாக்கனிகளும், வாழைக்கனிகளும் தப்பான் புக முதலிரணடையும் வாலால் சிதறுமாறுவடித்து, பாவக்கனியைப் பிளந்து, வாழைப்பழத்தைக் கீழே தள்ளுமாறு சிறந்து மேவே சொல்லுகின்ற வளமுடைய வெண் ணெய் நல்லூர் என்க. கமுகின் பழுக்காய்க்குலை என்க. பழுககாய்—பாக்கு ; இதில் கடிப்பம் எனபது கருப்பம என இருந்தால் பொருள் கொள்ளலாம்.

135 பாணித் தமைத்த மரகதத்தின்
பலகைச் சட்ட மிவை சமைத்துப்
பவழக் கடைகால் நான்கு மொன்றப்
பசும்பொன் நாணி இசைந்திறுக்கி

வாணித் தலத்தின் விளிம்பு தெற்றி
வயிரம் இழைத்துக் கொழுங்கனக
வடங்கள் நாற்றிப் பலவிதமார்
வன்னக் கலையின் விதானம்வைத்து

நாணிக் கமல முகிழ்க்கும்முக
நற்றாய் யசோதைக் கைவளர்த்த
நளிர்மெல் லணைசேர் தொட்டின்மிசை
நலஞ்சேர் குழவித் திருவுருவாய்ச்

சேணிற் கலந்த வுருவடக்குந்
தேவா தாலோ தாலேலோ
செந்நெற் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்ச்
செல்வா தாலோ தாலேலோ. (4)

(4) பாணித்து அமைத்து—உயர் மதிப்பிட்டுப் பொருந்திய; நாணி—கயிறு; பொன் கயிற்றி லுல் மரகதச்சட்டஙகளையும் பவளத்திலான நானகு கடை காலகளோடு சேர்த்து இறுககக்கட்டி என்க. கடைகால்—தொட்டிலின் நானகு புறதது முள்ள காலகள் ; வாணித்தலத்தின்—நாதந்தோன்றும் இடம் போன்ற ; தெறறி விளிம்பு—மேட்டிடத்தின் ஓரம் ; வடங்கள்—தொட்டில் கட்டும் கயிறு ; நாற்றி—தொஙக விட்டு ; வன்னக்கலை—சித்திரக் கலை ; விதானம்—மேறகட்டி ; கமலம நாணி முகிழ்ககும் முகம் என்க. நளிர்—விளங்குகினற ; சேணில் கலந்த உரு—திருவிககிரமாவதாரம் ; இதன வரலாறு 118, 189-ஆம் பாட்டுக்களின் குறிப்பு (முன் பிள்ளைத்தமிழ்க் கொத்து) காணக.

136 விரிக்கும் பணப்பஃ றலைமணிகள்
விளக்கிட் டெனத்துன் னிருள்கிழிப்ப
வெண்டோட் டம்போ ருகத்தலரில்
விரைப்பாற் படுத்த மெல்லணைமேல்

அரிக்கும் பணிலப் பயோததியின்
அலையிற் சிதறுங் குறுந்திவலை
அவிழ்பைந் துளவத் திருவுரத்தின்
அணிந்த தரள வடம்புரையத்

தரிக்கும் களப முலைத்திருமான்
தளிர்மெல் வளைக்கைத் தொடச்சிவந்த
தாட்டா மரைகள் மறைத் தலையில
தயங்கப் புவனம் தழைக்கவருள்

தெரிக்கும யோகத் துயி லுவந்த
தேவா தாலோ தாலேலோ
செந்நெற் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்
செல்வா தாலோ தாலேலோ. (5)

(5.) பணம பல தலை மணிகள—ஆதிசேடனிடம உள்ள ஆயிரம பட முடைய பல தலைகளி லுமுள்ள மாணிக்கங்கள ; துன இருள—நெருங்கிய இருள. வினைத்தொகை ; பயோததி—பாற்கடல் ; வெள்ளிய இதழையுடைய தாமரை மலராகிய படுக்கை மீது பொழுது கழிக்கும் சங்குகளையுடைய பாறகடல எனக. "பயோததி . . . . . . புரைய—கடலின் அலைகளால் சிதறுண்ட சிறிய திவலைகள ; திருமாலின துளபமாலை தரித்த மாாபில, அணிந்த முத்து மாலையை ஒததிருகக ; தரிககும . . . . . . தயங்க—மாாபில் தரிக்கும வாசனைச் சாந்து பூசிய முலைகளையுடைய திருமகளின தளிா போனற மெல்லிய வளையுடைய கைகள்தொடச் சிவந்த பாதமாகிய தாமரைகள விளங்க பிரமன மேலிடத்தில விளங்க; தயங்க என்பதைத் தாட்டா மரைகளுக்கும், மறையுடைய வேதனுக்கும் கூட்டுக ; மறை—தானியாகுபெயர் ; இப்பாட்டு திருமால் பாற்கடலில் ஆதி சேஷ சயனத்தில் திருமகள் கால் பிடிக்க, உந்தியினின்று தோன்றிய தாமரையில பிரமனைச சிருட்டித்துப் உலகைப் படைக்கும் நிலையைக் காட்டுகிறது.

(வேறு)

137 அருமாமறை தேடு முதற்பொருள்
ஆவாய் நீயேநா
அமுதூரநின் னுயிர மெய்ப்பெயர்
ஆர்தா னோதாதார்

கருமா முகில் மேனி விழிக்கெதிர்
காணு தார் வீணே
கருவூ டுழல் வாரலதத் துயர்
காய்வா ரோபூமேல்

திருமா மகள் காமுறு பொற்புய
சீராளா வானோர்
சிரமேல்ஒளிர் பாத மலர்ப்பர
தேருர் போர்சாயத்

தருமாதியர் நாடு கொடுத்தவ
தாலோ தாலேலோ
தமிழ் சேர்நவ நீத புரத்தவ
தாலோ தாலேலோ. (6)

(6.) கருவூடு உழல்வாா அலது அத்துயர் காய்வாரோ எனப்பிரிக்க. கரு ஊடு உழலல்—பிறந்து வருந்துதல். தேருர்—எண்டு பகைவர் ; தரும ஆதியர்—தருமனை முதலாகக் கொண்ட பாண்டவா ; தருமாதியர் நாடு—நான்காம் வேற்றுமைத் தொகை.

138 பவமேயலை வாருதி புக்கவர்
பார்சேர் நாவாயே
பனகாசன மால்வரை யிற்றிகழ்
பாதா வானேறே

யவமேயுழல் வேனை யளித்திடு
மாதா ராகாமே
லமராடிய போகி யிமைபபிலர்
ஆனோர் போர்சாய

நவமேயரு கோடி முழுச்சசி
நாணு வாள்மேனி
நகைசேர்வளை வாயின் முழக்கிய
நாதாந் தாநீள

தவமேபுரி கோசலை புத்திர
தாலோ தாலேலோ
தமிழ் சேர்நவ நீத புரத்திறை
தாலோ தாலேலோ. (7

(7.) பவமே . . . . . . நாவாயே—பிறப்பாகிய அலைகளையுடைய கடலில் சென்றவர்களைப் பூமிக்கண் கொணடு வநது சோககும மரககலமொத்தவனே ; பனக ஆசனம்—ஆதி சேடனாகிய படுக்கை ; வான+ஏறு—வானிலுளளார்க்கு ஏறினை யொததவனே, வான்—இடவாகு பெயர்; அவமே . . . . . ஆதாரா—வீணாகத் துனபப்படும் எனனைக் காப்பாற்றும் பற்றுக் கோடான வனே; காமேல்—கறபகச சோலைக கண; அமராடிய—சத்தியபாமைக்காக கண்ணண் பாரிசாத மரத்தைக் கவாந்த போது சண்டை செய்த ; போகி—இநதிரன; இமைபபிலர்—இமையாக் கண் களையுடைய தேவர் ; நவமே வரு . . . . நாணு—புதுமையும் அருமையுமாய் அலஙகரித்த இந்திராணி நாணி ; நாணு—செய்யா என்ற வாயபாட்டு வினையெச்சம் செயது எனத்திரிநதது. வாள் மேனி நகை சோ வாயின வளை முழககிய எனக. வளை—சஙகு.

(வேறு.)

139 அருண மணிக்கதிர் தவழ்நெடு மாடத்
தணுகிக் கதிரவன்மா
அழலென வெருவிப் படிகத லத்தொளிர்
அருவிப் புனலெனமோந்

திருணலி வுற்றில திவணென நீலத்
திலகு தலத்தின் மருண்
டெறிகதிர் செறிமர கதமணி நிலவொளி
யிளவறு கெனவார்த்து

மருண்டை யிடர்விட இந்து மணித்தலம்
வழிபழ நீர்பருகி
வடவரை யெனவுயர் கனக தலத்தை
வளைத்திடு மேடைதொறுந்

தருணமின் னூர்பயில் வெண்ணெய் நகர்க்கிறை
தாலோ தாலேலோ
தங்கச் சலருக மங்கைக் கதிபதி
தாலோ தாலேலோ. (8)

(8) அருண மணிககதிா தவழ்—செநநிற ஒளி வீசும் மாணிக்கக் கலலின் கிரணங்கள்வீசும் ; கதிரவன்மா—சூரியனது தேரில கட்டபபட்ட எழு பசசைக் குதிரைகள் ; அழலனெ வெருவி—மாணிக்கம் ஒளிமிகக தாதலால நெருபபோ எனபபயந்து ; படிகதலதது—பளிங்கிலுலாகிய இடம் ; கணணாடி பதிதத இடமாதலால மலை அருவி நீரோ என ஐயுற்று முகாந்து பார்த்தது இருள் நலிவுறறது . . . . மருணடு—நீலககல்லினால கட்டப்பட்ட இடத்தில் நாம் சூரியனை இழுத்து வநதும் இவ்விடத்தில இருள தொலைநது போகவிலலையே என்று மருட்சி யடைந்து. நீலககல் கருமை ஒளி வெளிவிடும. எறிகதிா . . . . வாாதது—கிரணங்கள் நெருங்கி ஒளி வீசும் பசசைக்கல்லின் ஒளி இளம் அறுகமபுல்லோ என உணணச் சென்று ; கதிர் செறி எறி மரகதம் எனக ; ஆர்த்து—உண்பித்து ; இந்து மணித்தலம் வழி பழ நீர் மருள் நடை இடர் விடப்பருகி—சந்திரகாந்தக கல்லினினறு வழிநத பழைய நீரை மருண்டு நடந்த இளைப்பு நீங்கக் குடித்துப் பழநீர் எனறார். இரவில் சந்திரகாந்தக் கல சந்திரனைக் கண்டு நீர்காலுதல் பற்றி அந்நீா இன்னும இருநததெனக. வடவரை—மேருமலை ; கனகம்—பொன் ; தருணம்—இளமை ; சலருகம்—தாமரை.

140 கத்துங் குருகடை கமல வயற்குட்
கடைசியர் களைகடிவார்
களிநறை வெள்ளிக் கலனிற் பருகுதல்
கண்டொரு சினைமந்தி.

முத்து நதிப்பணி லத்தை யெடுத்து
முதிர்ந்த சுளைப்பலவின்
மூரிக் கனியிடை கீறிப் பொழிதரு
முதுவிரை நறைபருகிக்

கொத்துந் தியமலர் நிமிர்தரு தருநிழல்
குறுகி மயங்கிவிழுக்
கொடிபடர் தன்பதி சேய்மி னார்வயல்
குறுநகை புரிபொழில் சூழ்

தத்தும் புனல்செறி வெண்ணெய் நகர்க்கிறை
தாலோ தாலேலோ
தங்கச் சலருக மங்கைக் கதிபதி
தாலோ தாலேலோ. (9)

(9) குருகு—நாரைகள் : அடைவயல் என் வினைத் தொகையாகககுக. நதி முத்துப்பணிலம்—நதியிலிருந்த முத்து தரும்'சங்கு ; மூரிக் கனி—பெரியபழம் ; உந்திய—பொருந்திய ; நிமிர் தரு தரு—உயாந்தோங்கிய மரம் ; வயல சேய்மினர் படர்கொடிதன்பதி குருநகைபுரி—வயலிலுள்ள சிவந்த மின்னலையொத்த பெண்கள் படர்கின்ற கொடி கொம்பினைச் சேர்தல் போன்று தத்தம் கணவர்களையடைந்து புன்சிரிப்புச் செய்யும் ; கத்துகின்ற நாரைகள் அடைகின்ற தாமரைகளையுடைய வயலில் மருத நிலப் பெண்கள் களைகளை நீக்குபவராய்க் கள்ளினை வெள்ளிககிண்ணத்தில் ஊற்றச் சொல்லி குடிப்பதைக் கண்ட பெண் குரங்குகள் சங்கு எடுத்து வாயில் வைத்து சுளைகளையுடைய பலாப்பழத்தைக் கீறி அதினின்று பொழியும் தேனைக் குடித்து மலர்கொத்துககள் பொருந்திய உயர்ந்த மரத்தின் நிழலை அடைந்து களி மயக்கத்தால்

விழ, அங்குளள வேலை செய்யும் பெண்கள் தத்தம கணவரைச் சார்நது குரங்குகளின் செய்கை களைக கணடு சிரிக்கும் சோலை சூழ்ந்த வெணணெய் நகர் என்க. மதுவைக கணவன் மராாகள் மனைவியர்ககு வெள்ளிககிண்ணத்தில ஊற்றுவதுபோல மநதிககு ஆண் குரஙகு மேற் கூறிய வாறு கீறி ஊறறியது என்னலுமாம்.

141 செந்தழல் புகுமென விசையனு முடன்வரு
தேர்கட விக்கடலுந்
தீவும் பசியபொன் னிலமும் பலவுந்
திணியிருள் ஒரு புடைசூழ்

அந்தநெ டுந்திகி ரிப்பெயர் வரையும்
அகன்று கருங்கிரிமேல்
அஞ்செம் முகிலென வளர்தரு பரனை
அடைந்து புகழ்ந்துதரு

மைந்தர்க ளொருபதின் மரையு முடன்கொடு
வருநெறி பலகடவா
மதிள்தொறு மழைதவழ் துவரை புகுந்துநல்
வைதிகன மகவையெலாம்

தந்தவ ஞசி பெறுங்கரு ணைக்கடல்
தாலோ தாலேலோ.
தங்கச் சலருக மங்கைக் கதிபதி
தாலோ தாலேலோ. (10)

(10) செந்தழல் புகும் என—நாளை சூரியன மறைவதற்கு முன்பு என் மகனைக கொனற சயத்திரதனைக் கொல்லாவிட்டால் அகினி மூட்டி அதில் புகுநது இறபபேன் என ; தேர்கடவி . . . . . அகன்று—தோ நடத்தி கடலும், தீவும், மண்ணுலகம் பலவும ஒரு புறம் நெருங்கிய இருள் சூழ்நத சக்கரவாள மலையையும அகனறு, கருங்கிரி மேல . . . . பரனை—கரிய கைலை மலை மீது அழகிய சிவந்தமுகில் போன்று தங்கும் மேலான சிவனை, வைதிகன் மகவை அருச்சுனனுக்காகத் தநதது—பிள்ளைத்தமிழ்க் கொத்து 125-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க, “ பிறப்பகத்தே மாண்டொழிந்த பிளளைகளை நாலவரையும இறைப் பொழுதில் கொணர்ந்து கொடுத்து. . . . . எனற ஆழ்வார் வாக்கில நாலவரே காணப்படுதல் ஓர்க. தந்து அவன் ஆசி பெறும் என்க. ஆசி—ஆசீர்வாதம்.

## சப்பாணிப் பருவம்

142 இடிக்கும் வெங் குரலொலிக் கண்டகூ டஞ்சிதற
இருசெவி முறக்காற்றினுக்
கெட்டுக குலாசலமும் உட்கித் துகட்பட
இணைச்சிறு விழித்தழலினுல்

பொடிக்கும் சுருமறிந் தெழுகடலும் வற்றிமேல்
புகையெழக் கடுநடைக்கும்
பொழிகதிர் மணிச்சுடிகை மிகுதலைப் பாந்தளும்
புவனமும் தலைநெளிப்ப

வெடிக்கும் பகட்டுவால் விசையிலே மாசலமும்
வேர்பரிய உயரநீடும்
வெற்றிப் புழைக்கையை யராவெனக் கதிர்மறைய
வெஞ்சினக் கஞ்சனேவும்
தடிக்கும் சினக்கரி விழப்புடைக் குங்கையால்
சப்பாணி கொட்டியருளே
தவநீதி தவறுத நவநீத புரநாத
சப்பாணி கொட்டியருளே. **(1)**

(1) எட்டுக்குலாசலம்—எட்டு மலைகள். உட்கி—அஞ்சி, பாந்தள்—ஈண்டு எட்டு பாம்புகளை உணர்த்திற்று; விசையில் ஏம அசலமும் வேர் பரிய என்க. ஏமாசலம எட்டு மலைகளிலொன்று மேல் நீட்டும் துதிகையை இராகுவோ என்று சூரியன மறைந்தோடுகின்றனும். கரி—கரத்தையுடையது. ஈண்டு குவலயாபீடம். அரா—ஈணடு இராகு. ஈண்டு யானையினது வருணனை பெரிதும் நோக்கத்தக்கது.

143 பாரேந்து பாற்றலைப் பணிவேந்தின் மணிமுடி
பதைத்துவாய் நஞ்சுகொட்டப்
பார்க்கவன் விழியொன்றில் நீர்கொட்ட வொன்றில்
பசும்புலால் குருதிகொட்டக்
கூரேந்து படைநிருபர் நெஞ்சுபறை கொட்டவொளி
குன்றிமுகம் வெயர்வு கொட்டக்
குறுநடைக் கரடிக்கு மன்னனு யிரவலங்
கொண்டுசெய முரசுகொட்டச்
சீரேந்து வானவர் புயங்கொட்டி நறைகொட்டு
செய்யமலர் மாரி கொட்டச்
செங்கமல மேலவன் விளக்குதாண மலரினில்
தெய்வநதி நறவுக்கொட்டத்
தாரேந்து மா வலிகை நீரேந்து கைகளால்
சப்பாணி கொட்டியருளே
தவநீதி தவறுத நவநீத புரநாத
சப்பாணி கொட்டியருளே. **(2)**

(2) பணி வேந்தின் வாய் நஞ்சு கொட்டியது—பின்னர் திருவிக்கிரமாவதாரமாகி பூமியை அளக்கப்போவதால் பாரம் தாளாதது குறித்து. பார்க்கவன்—சுக்கிரன், இவன் மாவலி தாரை நீர் வார்க்கும் போது வண்டாகிக் கெண்டிகை வாயைததடுக்க வாமனனுகிய விஷ்ணு குச்சியால் குத்த சுக்கிரன் ஒரு கண் குருடாயிற்று. எனவே ஒரு கண்ணில் பசும்புலால் குருதியும் ஒரு கண்ணில் இவ்வாறு கொடுத்து விட்டானே என்று கண்ணீரும் கொட்டியது. கூரேந்து . . . . . . . கொட்ட—திருவிக்கிரமவதாரத்தைப் பார்த்ததும் இவ்வாறு ஆனுர்கள், கரடிக்கு மன்னவன்—ஜாம்பவான் நறை—தேன் ; செங்கமல . . . . . . . கொட்ட—முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 118-ஆம் பாட்டு உரை காண்க. தெய்வநதி—கங்கை ;

144 மனஞ்சல மிகுந்தமற மன்னருடன் மென்றசை
மணங்கமழ வுண்டுமாங்கே
வழிபுலால் வெறிநீர் சுடச்சுடப் பருகியும்
மதமிக்க சிறுகூளிகள்

கனஞ்செறி பிணக்கிரி யிவர்நதுவீழ்ந் துதிரவெங்
கலுழியாற் றிடைநீந்துவ
காலினெழு படமெனக் குடைகளைக் குடர்பிணை
கயிற்றினின் இசைத்து விடுவ

சினஞ்செறி மதக்கரி மருப்பினை யெடுத்துருள்
சிரங்கள்பந் தெனவடிப்பத்
தேருருளை யச்சிலிட் டாட்டுபம் பரம்நிகர்
திரிப்பவிவ் வாறுவெம்போர்

தனஞ்செயன் வயப்புரவி கோல்கொளுங் கைகளால்
சப்பாணி கொட்டியருளே.
தவநீதி தவறுத நவநீத புரநாத
சப்பாணி கொட்டியருளே. (3)

(3) சலம்—தணியாக்கோபம், உடல் மென்தசை எனக. வெறி நீர—மதநீர ; கூளிகள்—பேய்கள் ; பேயகள இரத்த வெளளமாகிய ஆற்றில நீநதுவதறகாகிக காலுடன கூடிய பாம்பின் படமோ எனக் கூறும வெண் கொற்றக் குடைகளைக குடல் பிணைககும தசை நாரினுல் கட்டிவிடு தலும், யானைத் தந்தங்களைப பந்தடிககும கட்டையாகவும மனிதா சிரஙகளைப் பநதாகவும் கொண்டு அடிததலும் தோச் சக்கரததை அசசில இடடுச சுழலகின்ற பம்பரம் போனறு சுழலவை த்தலும் செய்தன பேயகள். இததகைய போாககளததில அருச்சுனனுககுத தோக் குதிரை நடத்தக கோல் கொணடகையினுல சப்பாணி கொடடுக என முடிகக.

145 மழைக்கும் கருங்கூந்தல் கைசெய்து மலர்வேய்ந்து
வாணுதல் திலதமெழுதி
மன்றலங் கமலமலர்க் குவளையுஞ் செய்த்தென
மைதீட்டி முழுவயிரமிட்

டிழைக்கும் பொலன்தோடு வள்ளையிற் சேர்த்தியோர்
இழைக்குமிட மறநெருங்கி
இளகிவிம் மிப்புள கரும்பிப் பணைத்திறுகி
இணைமணிக் கலசமேயென்

றழைக்கும் பெயர்க்குரிய கொங்கையில் களபமிட
டணிவரித் தொய்யிலெழுதி
யவிர்பிறைப் பிள்ளைபல வென்னநக ரேகைவைத
தம்போருகப பெணின்பந்

தழைக்கும் படிக்குவிளை யாடுமிரு கைகளால
சபபாணி கொட்டியருளே
தவநீதி தவறுத நவநீத புரநாத
சப்பாணி கொட்டியருளே. (4)

(4) மழைக்கும் கருங் கூந்தல்—மழை நிறைந்திருக்கும் மேகம் போனற கூந்தல். கை செய்து—அலங்கரித்து ; கமல மலா குவளை. உம்மைத் தொகை ; வள்ளை—வளளைப்பூ வொத்த காது ; உவமவாகு பெயர் ; இழை—ஆபரணம். புளகு—மகிழ்சசி ; இணை மணிக் கலசம்—இரண்டு மாணிக்கக்குடங்கள் ; தொயயில் மகளிா தனங்களில சநதனக குழம்பால எழுதும கோலம். நகரேகை—கலவிக்காலத்தில மகளிா அவயவததில ஆடவர் நகததினுல பதிககும்

அர்த்த சந்திரன மண்டலன், புலி நகம மயூரபதம. முயலடி. உற்பலம் என்று அறுவகை அடையாளங்கள். ஈண்டு ஆதத சநதிரன அடையாளததை வைததார். அம்போருகப் பெண இன்பம் தழைககும்படிக்கு என்க. அமபோருகம் பெண்—திருமகள் ;

146 விளிக்குங் கடுங்குரலின் உரும்ஏறு தீய்ந்துக
வெறித்துவிழி யழல்கொளுந்த
மென்மயிர் சிலிர்ப்பமுன் கால்நிலங் குழிபட
மிதித்துத் துகட்குவை யெழத்

துளிக்குங் கமஞ்சூற் கருங்கொண்டல் தன்னிறந்
தோற்கக் கறுத்தபகடு
துரக்கூங் கொடுங்கூற்று வருபொழுது நெஞ்சந்
துணுக்கிட்டு மதிமயங்கி

யொளிக்கும் புலன்கடம் நிலைதளர்ந் தாருயிரும்
ஊசலா டுறு மளவின்முன்
ஊழ்வினை நலத்தினின் தொல் பெயரின் ஒன்றுவந்
துதவவத் துயரம் நீங்கித்

தளிர்க்குந் தொழும்பருக் கஞ்சல்புரி கைகளால்
சப்பாணி கொட்டியருளே
தவநீதி தவறுத நவநீத புரநாத
சப்பாணி கொட்டியருளே. (5)

(5) உரும் ஏறு—ஆணிடி ; கொளுந்த—பற்ற கால்நிலம் குழிபட—கால்கள் நடப்பதனுல் அவைகள் நிலத்தில குழிகளை ஏற்படுத்த ; கமஞ்சூல்—நிறைந்த கருப்பம் ; கறுத்தபகடு—கருநிறமுற்ற எருமைக்கடா ; புலன்கள் தம் நிலை தளர்ந்து ஒளிக்கும் என்க ; நலத்தில் நின் என்க. தொழும்பர்—அடியார் ; ஈண்டு பாகவதத்திலுள்ள அஜாமீளன் கதையை ஞாபகப் படுத்தல் நன்று.

## வேறு

147 நாறு நடப்புகு வாளோர் உழத்தி
தனத்தா சைக்காற
நாறு முடிச்சென வாரிச மொக்குளை
நட்பாகிப் போட

ஏற விழித்தவள் ஒர்களை கட்ட
தெனக்கா விப்பூவை
ஈடில் வரைப்புய மீதெறி தற்கவன்
எய்தா னைப்போல

மாறி வரப்பினில் வீழ எடுக்கும்
வரத்தா னைப்போல
மார்பி லிணைத்தித ழூறல் சுவைக்கும்
வளத்தான் மிக்கோர்கள்

கூறு தமிழ்க்கிசை வேணு வனத்தவ
கொட்டாய் சப்பாணி
கோக நகத்தவள் மோக மிகுத்தவ
கொட்டாய் சப்பாணி. (6)

(6) வாளோர் வாளைக் கையிலேந்தும் வீரர்கள். நாற்று நடுதற்குவந்த வானோர்கள் உழத்தியர்களின் தனத்தைக கண்டு அவ்வாசை நிறைவேற நாறுமுடிச்சுபோடுவதுபோல தாமரை மொட்டுக்களைததனத்தின் மீது போட புருவம் நெற்றியில ஏறக் கோபித்து அவள் களை நீக்கியது என்னும்படி கூறும் ஓர் நீலோற்பலமலரை வரப்பில் போடாது அவனது ஈடில்லாத மலை போன்ற புயத்தின் மீதெறிய அவனம்பு எய்யப்பட்டவனைப் போன்று தடுமாறி வரப்பினின் வீழ்ந்துவிட அவ்வுழத்தியர் " ஐயோ ! விழுந்து மூர்ச்சித்துக்கிடக்கிறரே " என்று எடுக்கும் போது வரத்தினல் எழுந்திருப்பவனை யொத்து அவளை மார்பில் தனமழுந்த அணைதது அவளது அதரத்தையும் சுவைத்து அமிர்தம் பருகும் அத்தகை வளமிக்கோர்கள் வாழும் வெண்ணெய் நல்லூர் என்க. களை எடுக்குங்கால், பயிர் நெருங்கியில்லாத இடங்களில் நாறறுக் களை நடுவதுண்டு, எனவே வயல்களில் தாமரையும் குவளைகளும் இருந்தன என்பது பெறப் படும்.

148 வேத வரைக்குவ டேறி யிருக்கும்
விளக்கே பொற்பூவின்
வேதன் மதிச்சடை யோன்முதல் வர்க்கொரு
வித்தே தக்கோர்கள்

மூதறி விற்கொடு நாடி யிருக்கும்
முதற்சோ தித்தேவே
மூரல் முகத்திடை மாதர் முலைக்கணி
முத்தே முற்றுத

வாத மயக்கினர் போத மதித்திடு
மத்தே யெப்போதும்
மாயை தவிர்த்தநல் லோரிதை யத்தில்
வரக்கா மிப்போனே

கோதில் குணத்தவ வேணு வனத்திறை
கொட்டாய் சப்பாணி
கோக நகத்தவள் மோக மிகுத்தவ
கொட்டாய் சப்பாணி. (7)

(7) வரைக்குவடு—மலைச்சிகரம் ; முதல்வர்க்கு—முதலாகத் தொடங்கின தேவர்கட்கு ; கொடு—கொண்டு ; மூரல்—புன்சிரிப்பு ; போதமதித்திடு—நிரம்பக் கடைந்திடுகின்ற ; காமிப் போன்—ஆசைப்படுபவன்,

**வேறு**

149 தேசலை வுற்றனை போதியெனச்
சீறும் மைக்காவி
தேனிதழ் துய்த்திரி வூடு
செருக்கு மிசைக்கீதம்

வாசலின் நிறபது நாடி
மலர்க்க தவத்தானே
மாசறு கற்பினர் போல
நெகிழ்த்து மதுப்பூவின்

வீசலை யிற்குளிர் வாடை
விரைத்தட மிக்காக
வேணு வனத்தருள் சேரும்
விருப்ப மிகுத்தோனே

கோசலை பெற்ற குணகர
கொட்டுக சப்பாணி
கோக நகப்பெண் மனோகர
கொட்டுக சப்பாணி. (8)

(8) கரிய காவிமலர் வண்டுகளைக்கண்டு பொருந்திநுய் எனவே அங்குச் செல் எனக் கோபிக்கும், இசைக் கீதம் பாடி இதம் துயக்கததிரிநது மயங்கும், வாசலில் தன்னை நாடி மலருமாறு (வண்டுகள்) நிறபதைக் கண்டு தவத்தினையுடைய குற்றமறற கற்பினையுடைய தலைவியர்போல இதழ்களை நெகிழ்த்து உள்ளிருக்கும் இன்பமாகிய தேனைத் தரும் பூவை யுடையதும் குளிர்ந்த வாடைக்காறறு வீசுவதால் வாசனை மிககதுமான தடங்கள் அதிகமான வெண்ணெய்நலலூர் என்க. காவிமலர் தலைவியாகவும், வண்டு தலைவனுகவும், கூறப் பட்டிருப்பதும் காவி மலர் ஊடல் கொண்டு கதவுகளை மூடலும், ஊடலை வண்டு தீர்க்கத் தவம் கிடத்தலும் பின்னர் குவளை மலாந்து (மகிழ்ந்து) இன்பம் தரலும் நோக்கி யுணரற் பாலன்.

150 தேனுக னற்றுயர் வானடை
யச்செய் திடத்தோனே
தேவகி பெற்ற அசோதை
வளர்த்த திருப்பாலா

வானதி புத்திரன் வாய்மை
மேற்றகு வயப்போரின்
வானர சர்க்கெதி ராழி
யெடுத்த மறத்தோனே

மீனு வரிக்குளி ராவணன்
நட்பு விடுத்தேகும்
வீடண னுக்கருள் வேணு
வனத்து விருப்போனே

கூனுடை விற்கை யிராகவ
கொட்டுக சப்பாணி
கோக நகப்பெண் மனோகர
கொட்டுக சப்பாணி. (9)

(9) தேனுகன் அற்று —தேனுகா சூரன் உயிர் அற்று ; உயர் வானடையச் செய்திடத் தோனே என்க ; இவன் கம்சனேவலால கழுதையுருக்கொண்டு பலராமருடன் போர் செய்ய வந்தனன். இவனைப் பலராமர் காலைப் பிடித்து எறிய மாண்டான். வான்நதி - வானிலுள்ள

உயர்ந்த கங்காநதி அவள் புத்திரன் ஈண்டு சந்தனுவிடம் பிறந்த வீடுமன் (பீஷ்மன்) வாய்மை மேல் தகு வயப்போரின்—உண்மை நெறி கடவாத வீரமிக்க சண்டை; வான் அரசர்—சிறந்த பல அரசர்கள். ஆழி எடுத்த மறத்தோன்—கண்ணன் தான் துரியனுக்கு ஆயுதம் தொடுவதில்லையென வாக்களித்ததைப் பொய்ப்பிக்க பீஷ்மர் அருச்சுனனோடு கடுமையாகச் சண்டை செய்ய அவன் எவ்வாயுதத்தையும் தொட முடியவில்லை. அந்நிலையில் கண்ணன் அருச்சுனனிடம் யாது கூறியும் பயனில்லாததால் தானே தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளச் சக்கரத்தைத் தாங்கினார். எனவே " ஆழியெடுத்த மறத்தோன் " என்றார். மீன் உவரிக்குள்—மீன் உள்ள கடல் சூழ்ந்த இலங்கைக்குள் இருந்த; கூன் உடைவில்—வளைவு பொருந்திய வில்.

151 சீதள மிக்க துழாயசை
யசசெறி பொற்றுமம்
தேசுள கவுத்துவ மார்
வடத்திரள் கொத்தாடக்

காதள விட்டழ கான
கடைக்க ணருட்பார்வை
காணு மவர்க்கமு தாசன
மோதக் களிப்பேறி

மாதளம் வித்தென வாண்முறு
வற்கு மயக்காகும்
மாதர் விருப்பொடு சூழ
மறுத்திடு மப்பாரி

கோதம னுக்கருள் மாயவ
கொட்டுக சப்பாணி
கோக நகப்பெண் மனோகர
கொட்டுக சப்பாணி. (10)

(10) கவுத்துவம—கௌஸ்துப ரத்தினம்; அமுதாசனம்—பால் நிறைந்திருக்கும் முலை; மாதளம்விதை போன்ற பற்கள் என்க. மாதர—அழகு; பாரி—மனைவி; கோதமன் பாரிக்கு அருள் என்க. கோதமன் பாரி - கௌதமன் மனைவியான அகலிகை; துழாய்த் தாமமும் கௌஸ்துபம், ஆரவடமும் ஆட பார்வையினையும், மோதக் களிப்பேறும் அமுதாசனத்தையும், வாண்முறுவலையும் உடையவளாதலால் அழகால் மயக்கமடையும் விருப்போடு பலரும் சூழ அவர்கள் விருப்பத்தை மறுத்திடுகின்ற கௌதமன் மனைவியாகிய அகலிகை (இந்திரன் மாய ரூபத்தில் வந்து கெடுக்க அதனால் கௌதமர் சாபம் கொடுத்துக் கல்லாகக) அவளுக்கு அருள்கின்ற மாயவ என்க. அல்லது மேற்கூறிய போன்றவாறுள்ள மாதர்கள் அணையும் ஆசையால் உன்னைச் சூழவும் மறுத்திடும் மாயவனே எனவும் கோதமன் பாரிக்கு அருள்கின்ற அம்மாயவனே என்றும் பொருள் கொள்ளலுமாம். மாதர—அழகினையுடைய பெண்களுக்காயிற்று.

## முத்தப் பருவம்

152 முருகு விரி பங்கய முறுக்குடைந் துதிர்முத்த
மொய்த்திடுமுன் வாவிதோறும்
மூரிவெண் சங்குளைந் தீன்றமுத் துன்னுமுழவர்
முன்றில் புறத்து மல்கும்

குருகு செறி பண்ணையில் செந்நெல்முத் தங்களைஞர்
 கூட்டுறு களத்தினிறையும்
குறைவில்பைங் கழைமுத்து ஞாலைவாய்க் காணலாம்
 கொல்கரி மருப்பின் முத்தம்

பெருகுமுன் னந்தியங் கிரியெலாங் குவிதரும்
 பெட்புநிறை வெதிரினமுத்தம்
பெருமைசெறி வேணுவன மாதலால் எங்கணும்
 பிறழ்தலால் இருமை யென்றே

பருகுமின் அமுதனைய மழலைதரு நின்திருப்
 பவளவாய் முத்தமருளே
பண்ணவர் தினந்துதிசெய் வெண்ணெய்வளர் செங்கண்முகில்
 பவளவாய் முத்தமருளே. (1)

(1) முருகு—வாசனை ; குருகு—நாரை ; களைஞர்—வேலைக்காரர் ; உனது வாவி தோறும் தாமரை மலர்நது உதிர்ந்த முத்துக்கள் நிறைந்திருக்கின்றன. உன் நாட்டிலுள்ள உழவர் கள் முன்றிலின் புறத்தில் சங்கு ஈனற முத்துககள் நிரம்ப இருக்கின்றன. வேலைக்காரர் சேர்க்கும் நெல் களத்திலே செந்நெலலினின்று விளையும் முத்துககள் நிறைந்திருக்கும். உனது ஆலையினிடம் கரும்பின் முததுக்களைக் காணலாம். உன் அழகிய நந்தி மலையில் (இடபமலை—திருமாலிருஞ் சோலைமலை) யானைத் தந்தத்தினின்றுண்டாகும் முத்துக்கள் குவிந்து கிடக்கும். இத்தலம் வேணுவனம் (வேணு - மூங்கில்) என்று கூறப்படுவதால் மூங்கி லினின்று தோன்றிய முத்தம எஙகணும் செறிந்து கிடக்கின்றன. எனவே இருமை (இம்மை, மறுமை)க்கும் பயனுகும் என்று பருகும் இனிய அமுதத்தையொத்த மழலைச் சொல் கூறும் வாயினின்று முத்தம் தருவாயாக என்கிருர். முத்தம் முத்து என்பன ஒற்றுமை கருதிக் கூறப்படுவதாதலால் இங்ஙன் கூறுவது கவி மரபு. முத்துத் தோன்றும் இடங்களை முன் பிள்ளைத் தமிழ்க்கொத்து 580 ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. பணணவர்—தேவர்.

153 அளிதை மலர்த்தவள முகையனைய சிறுநகை
 அரும்பியிள முறுவல் நிலவால்
அன்புச் சகோரக் குழாங்குள் விருந்தூட்டி
 அமுதெனத் திவலைசிந்திக்

களிதரு மிளங்குதலை மதுவொழுகு செய்யபங்
 கயமல ரெனச்சிவந்து
கன்னியர்கள் கரதலங் கொடியவிடம் நீங்கவுயிர்
 காட்டுகட வுண்மணியுமாய்த்

தெளிதர மதிக்கிலகி லாண்டகோ டிகளுமுட்
 சேரினும் சிறிது நிறையாத்
தெளிவுதரு முத்தங் கொளத்திரி பவர்க்குனிதழ்
 சேர்முத்த மன்றியுண்டோ

பளிதவிரை கமழவெங் கழையிசை வடித்தநின்
 பவளவாய் முத்தமருளே
பண்ணவர் தினந்துதிசெய் வெண்ணெய்வளர் செங்கண்முகில்
 பவளவாய் முத்தமருளே. (2)

(2) அளிதை தவள மலர்—குளிர்ச்சி பொருந்திய முல்லை மலர்; வெண்மை பண்பாகு பெயராய் முல்லை மலர் மேல் நின்றது. சகோரம்—நிலவினை யுண்ணும் ஓர் வகைப் பறவை; குழாத்திற்கு உளவிருந்தூட்டி என்றபாலது குழாஙகுஉளவிருந்தூட்டிஎன நின்றது. களிதரும்; இளங்குதலை அமுதெனத்திவலை சிநதி எனக்கூட்டுக. கடவுண்மணியைக் காட்டின் விடம்நீங்கி உயிர் வரும்போலும். கடவுண்மணி - சிந்தாமணிபோன்றது. பளிதம்விரைகமழ—கருப்பூர வாசனை வீச; கழை—மூங்கில். ஈண்டு ஆகு பெயராய்அதனுல்செய்த புள்ளாங்குழலைக்காட்டியது; முல்லைஅரும்பு போனற பற்களைககாட்டி அதினின்று தோன்றிய நிலவால்ஆசையோடு வரும் சகோரப்பறவைக்கூட்டஙகட்கு மனததிற்கேற்ற விருந்து செய்து (உண்பித்து) களிப்பு மிகும் மழலைச் சொற்களாகிய அமுதம் போனறவைகளைச சிநதி தேனெழுகும் சிவந்த தாமரை மலரைப்போன்ற கைகள் சிவந்துள்ள இளம் பருவமுடைய பெண்களது கைகளை ஆணகளின காதலாகிய கொடியவிடம் நீஙகி உயிரை வரச் செய்தற்கு காட்டப்படுகின்ற தெய்வமணியாக உறுதியாக மதித்தால (சொன்னுல) அகிலாணட கோடிகளும் ஒன்ருய்ச் சேர்ந்தாலும் கொஞ் சமும் சமமாகாதென்று தேற்றம் தருகின்ற முத்தத்தை (முத்து) தேடித்திரிபவர் களாகிய அப்பெண்கட்கு உன்னிதழ் சேர்நத முததமலலாமல் உயிர் நிற்குமோ எனவே புள்ளாங்குழலூதி இசை வடித்த உன வாயினின்று முத்தம் கொடுப்பாய் என்கிருர். மதிக்கில் அகிலாண்ட கோடி, என்க.

154 புனிற்றிளங் கன்றினைப் பிணிநெகிழ்த் தனனெனப்
புழுதியின் அணைந்தனனெனப்
பொழிமுடை நறைச்செழும் பாலடுங் குழிசியைப்
பொடிபட உதைத்தனனெனத்
தனித்திளங் குதலைமின் னூர்களைக் கொடுசென்று
தகவில வியற்றின னெனத்
தளர்வுடன் அடிக்கடி முறைப்படும் பொதுவியர்
தமக்குவப் பாதல் வேண்டி
அனித்திய வுடற்பொறை தவிர்ப்பவர் நினைக்குமுன்
அஞ்சனத் திருமேனிமீ
தன்னைகைத் தாம்பினில் அடிப்பதற் பொருமிமெல்
அலரிதழ் துடிப்பவுண்கண்
பனித்திட விரைந்தவள் அணைப்பதின் நகைக்குநின்
பவளவாய் முத்தமருளே
பண்ணவர் தினந்துதிசெய் வெண்ணெய்வளர் செங்கண்முகில்
பவளவாய் முத்தமருளே. (3)

(3) புனிற்று இளம்—மீமிசைச் சொல்; முடைநறை—முடை நாற்றம் வீசும்; குழிசி—பானை; தகவில இயற்றுதல்—சேலைகளைக் கொண்டு சென்று மரத்தின் மீது வைத்துக கோபியர்கள் நிர்வாணத்துடன் வணங்கக் கொடுத்தது முதலியன. பொதுவியர்—இடைச்சியர் முல்லை, மருதம், குறிஞ்சிக்கு இடைப்பட்ட நிலமாதலால் பொது என்று பெயர் பெற்று அங்கு வாழ்பவர்க்கு பொதுவர், இடையா, பொதுவியா, இடைச்சியர் எனப் பெயா நினறது. நினைக்கும் முன் அஞ்சனத்திருமேனி—நினைக்கு முன எதிரில வருகின்ற கரிய உடல்; தாம்பு—கயிறு. அடிப்ப அதன் பொருமி என்க. அகரம் தொகுத்தல்; உண்கண - மையுண்ட கண; விரைந்து அவள் அணைப்பதின்—விரைந்து அசோதை அணைப்பதனுல்.

155 கடல்முத்தம் உவர்நாறும் மழைமுத்தம் மின்னேடு
கலந்தாலும் இடிபட்டதாம்
கன்னல்முத் தம்மதனன் விலலங்க மேல்வரும்
கமலமலர் ஈனும்முத்தம்

மடலுற்ற மதுநிறம் ஞெண்டின்முத் தம்குழியும்
வளைதரும் பங்கமடையும்
மாதர்கள் முத்தமோ போகித் திருக்கும் வெள
வளைமுத்தம் ஈனப்படும்

அடலுற்ற வெங்கட் களிற்றின்வெண் கோட்டுமுத்
தார்க்குமுயி ரோடுகிடையா
அம்புலியின் முத்தமோ சடிலநெடி யாலவருவ
தாதலால் இவை விரும்பேம்

படலைப் பசுந்துளவு கமழ்மாப நின்திருப்
பவளவாய் முத்தமருளே
பண்ணவர் தினந்துதிசெய் வெண்ணெய்வளர் செங்கண்முகில்
பவளவாய் முத்தமருளே. (4)

(4) கடலினின்று தோனறிய முத்தம உவர் நாற்றம் வீசும். மேகம் ஈன்ற முத்தமோ மின்னலோடு கலநது பிரகாசித்தாலும் இடி பட்டதாகும். (நசுங்கியது. இடியோடு கூடியது) (கரும்பினின்று தோன்றிய முத்தம் மன்மதன் வில்லாகிய உறுப்பாகும்.) (வில்லங்கம்—குற்றம் நீர்மேல் வரும் தாமரை மலர் ஈனற முதததம் இதழ் பொருந்தியிருக்கும்) (மடல் ஏறுதற்கு உற்றதாகும்; மடல் ஏறுதல அகப்பொருளில காண). தேன நிறம் போன்ற நண்டினிடம் தோன்றிய முத்து குழிநதிருககும்; வளையும், சேற்றைப் பொருந்தியிருக்கும் பெண்களின கழுத்தினின்று தோன்றிய முத்தமோ போகித்திருக்கும் (வினைப்பயனை நுகரச்செய்யும்). சங்கீன்ற முத்தமோ தாழ்வுடையும் யானைத்தநததினினறு பெறும்முததம், அவ்வியானையைக் கொன்றலன்றிக் கிடைக்காது. சந்திரனின்று தோனறும் முத்தமே சடையின் துர் நாற்றததினினறு வருவது (சந்திரன் சிவபெருமான் சடையில தஙகியிருத்தலால் இவ்வாறு கூறினூர்). எனவே உனது திரு முத்தம் தருக என்க. படலைத்துளவு—துளவுப்பச்சிலையோடு மலர்கள் விரவித் தொடுத்தமாலை; களம்—கழுதது; சடிலம்—சடை; நெடி—துாநாற்றம்.

### வேறு

156 இளைக்கும் மருங்குல் குரும்பைமுலை
இடைமெல் லியலார் புடைநெருங்கு
யமுனைப் புளினத் தடங்குவட்டில்
இளவெண் நிலவு கதிர்கொழிப்பத்

துளைக்குங் குழையின் எழும் அமுதம்
சுரக்கும் இசைக்கு மனமுருகித்
துயிலும் கலையும் கலைந்தறிவு
துளங்கி யனங்கப் பெரும்பதகன்

வளைக்கும் கரும்புச் சிலைதுரந்த
மலர்வெம் பகழிக் கொழுங்கனலை
மறிக்கும் படிக்குன் இதழ்துளிக்கும்
மலர்க்கை முகிழ்ப்பக் குறுமுறுவல்

முளைக்கும் பவளச் செழுங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முகில்தோய் மதிள்சூழ் வெண்ணெய் நகர்
முதல்வன் தருக முத்தமே. (5)

(5) மருங்குலினையும், புடைநெருஙகு குரும்பை முலையினையுமுடைய மெல்லியலார் எனக புளினத் தடங்குவடு—மணறறிட்டாகிய சிகரம்; துளைககுஙகழை—துளைபொருந்திய புள்ளாங் குழல்; கலை—மேகலை; கலைநது—துயிலுககு நீஙகி என்றும் மேகலைக்குக் குலைந்து என்றும் பொருள் கொளக. அனஙகப பெருமபதகன—மனமதனுகிய பாதகன். மறிக்கும படி—தடுககுமபடி; இது கணணன இரவில பூரணசந்திரன காயும்போது யமுனை நதி தீரத்தில் குழல் வாசிக்கக் கேட்ட கோபியரெல்லாம தூக்கம் கலைநது மேகலையும் குலைநது ஓடி ராசககிரீடை செய்ததைக் காட்டுகிறது.

157 பழுக்குங் குலைவெஞ் சினத்தவுணர்
பகட்டுச் சிரங்கள் விதிரெறியப்
பணைக்கைக் களிறு பிளிறிவிழப்
பரவிப் புரவித் திரள்புரள

இழக்குஞ் சினக்குன் றனவிரதம்
இசைப்புக் கலைந்தச் சொடிந்துருள
எதிர்க்குந் திறத்துப் படைவயவர்
இடிக்கும் உருமுக் கெதிரறததுரகம்

உழக்கும் படிக்குக் குடற்பிதுங்கி
உதிரஞ் சொரிந்துளுயிருலைப்ப
ஒலிக்கும் பரவைப் புனல்சுவற
உரகஞ் சலிப்பத் தவள சங்கம்

முழக்கும் பவளச் செழுங் கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முகில்தோய் மதிள்சூழ் வெணணெய் நகர்
முதல்வன் தருக முதததமே. (6)

(6) விதிரெறிய—நடுங்க; குன்றன இரதம்—மலையை யொத்த தேர்கள்; இசைப்புக் கலைந்து அச்சு ஒடிந்து உருள எனக. உருமு.............உலைப்ப இடிககுப் பாம்புகள் அஞ்சுதலியல்பு. ஈண்டுத் திருமால் வாயில் சஙகம் வைதது முழககியதனுலுணடான விசேடத தைக்கூறினர்.

## வேறு

158 வண்டு குடைந்த பசுந்துள வத்தொடை
மன்றல்செய் நந்தனமே
மழலைப் பனிமொழி நளினச் சிறுகிளி
வளர்வுறு பஞ்சரமே

தொண்டு புரிந்திரு செந்தளிர் மெல்லடி
தொழுமவர் செல்கதியே
சூர்முக மலர்வித் தவுணக் களையிருள்
தொலைவுசெய் செங்கதிரே

ஞெண்டு கிளைத்திடு குழியில் வழியில்
நிரைகுவ ளைக்கழியில்
நீலக் கவரி முலைபொழி தீம்பால்
நிலைபெறு கடையர்சிறுர்

மொண்டு பயிர்க்கிடு வெண்ணெய் நகர்க்கிறை
முத்த மளித்தருளே
மும்மத யானைக் கருள்புரி குளிர்முகில்
முத்த மளித்தருளே. (7)

(7) குடைந்த - இணடிய ; நநதனம்—நநதவனம் ; நளினச் சிறுகிளி—தாமரை மலரில் உள்ள இலக்குமி, பஞ்சரம—கூடு, சூமுகம அலர்வித்த அவுணர்—அச்சம் பொருந்திய முகம் கூடிய அசுரர்—அலர்வித்த அவுணா—அகரம் தொகுத்தல. குவளைக் கழி (நீர்நிலை) என்க : நீலக்கவரி—கருநிற எருமை, மூன்றுவது அடியால் அந் நகர் வளம் காண்க.

159 பூவையின் மதுமலர் பொருவுநின் உருவும்
புண்ட ரிகக்கண்ணும்
புதியவெண் மூரலும் ஒருநெறி காணில்
பொறிவெம் பகையெறியுந்

தீவையின் முனிவரும் அனலுறு மெழுகின்
திரிகுவர் மனமென்றூர்
சிறுநுதல் வரிவிழி வெதிர்புரை மென்றோள்
தெரிவையர் உய்வாரோ

பாவைதெள் ளமுதின் பாற்கடல் நடுவில்
பதும மலர்த்த விசில்
பைம்பொன் சுடர்விடு பெண்ணமு தந்திண்
பருவரை மார்புறலான்

மூவரின் முதன்மை படைத்துள புங்கவ
முத்த மளித்தருளே
மும்மத யானைக் கருள்புரி குளிர்முகில்
முத்த மளித்தருளே. (8)

(8) பூவை—காயாம்பூவை ; தீவயின் எனற்பாலது தீவையின் என எதுகை நோக்கி நின்றது. இடைப்போலியுமாம் ; மெழுகின் - இன் உவமப்பொருவு ; மும்மதயானை—கசேந்திரன்.

வேறு

160 அதிரப் பொருசின வாளவு ணப்படை
அவிர்திசை யெட்டும் பரவுநாள்
அறுதிக் கடையுள் வரனென மொய்த்திட
அழல்வட வைசெந் தழலென

எதிரச் சிலருடல் நீறு படச்சிலர்
இருதுணி உற்றங் குருள்வோரோ
டிரதத் தொகைவிழ வாசி நடத்தழல்
எழுவிழி மைக்குன் றனையமா

உதிரப் புணரியின் ஊடுழ லக்குறை
உடல் நிரை நிர்த்தம் புரியவார்
உயிரைக் கொடுதிரி காலன் இளைப்பற
உலகி னிடுக்கண் தவிரவான்

முதிரப் பொருகதிர் ஆழி எடுத்தருள்
முதல்வன் முத்தம் தருகவே
முதுமைத் திருநவ நீத புரத்துறை
முதல்வன் முத்தந் தருகவே. (9)

(9) அறுதிக் கடையுள அரன — யுகாநத காலருததிரன். இவன் அப்போது மிகவும் கோபிதது உயிாகளை அழிப்பான; " அறுதி எஞ " இதுவரை திரு மாலுககடைமொழி; இருதுணி உற்று அவை உருள (அதஞல) ஒடுகினற இரதத் தொகை வீழ்ந்தன என்க. வாசி — குதிரை; மைககுனறு அனையமா — கரிய மலையை யொத்த யானை; நிர்த்தம்புரிய—நடனம் செயய; உலகின இடுககண—உலகு என்பது இஙகுப்பூமி தேவிக்காயிற்று. ஆழி — சக்கரம்.

161 பனியைத் தெறுகதிர் போலுமுன் மெய்ப்பெயர்
பரவி வழுத்தும் பெருமையோர்
பவம்விட் டுனதடி யாரோ டிருப்பது
பழமறை செபபும் சரதமே

கனியைக் கவர்கிலர் காய்நுக ரத்திரி
கசடர் மயக்குண் டுழலுவார்
கமலப் பதம்நினை யாரவ ருக்குமோர்
கதியும் வரக்கண் டிடுவமோ

குனியைச் சிலைகொடு வாளி விடுத்தெதிர்
குறுகு குலைக்கண் டகரெலாங்
குறைவுற் றிடநிறை வேள்வியி னிற்பலி
கொளுமம ரர்க்குங் களிசெயா

முனியைப் பெருமை கொள் கோசிக னைப்பணி
முதல்வன் முத்தந் தருகவே
முதுமைத் திருநவ நீத புரத்துறை
முகில்வணன் முத்தந் தருகவே. (10)

(10) தெறு - அழிக்கும்; கனியைக் திரி - " இனியவுளவாக இன்ஞத— கூறல் கனியிருப்பக்காய் கவர்ந்தற்று. எனற குறளை ஓாக. குனிய எனபது எதுகை நோககி குனியை என நின்றது; பலிகொளும் அமரா — அவிாப்பாகம பெறும தேவா; கோசிகன விசுவாமித்திரன்.

## வாரானைப் பருவம்

162 விளரிச் சுரும்பர் தளையவிழ்க்கு
மென்றோட் டம்போ ருகத்தடத்தில்
விழிக்குஞ் சுழல்கட் சினவிடங்கர்
விடவாய்த் தளைப்புக் குள்மயங்கித்

தளரித் துயரந் தவிர்க்கவென்று
　　தடக்கை நீட்டி மதக்களிறு
தனியே பொதுவே மூலமெனச்
　　சடைப் புங் கவனும் பங்கயனும்
களரிக் கடவுள் குழாங்களுமே
　　கைவிட் டிருப்பத் திகிரியைமுன்
கடுகத் துரந்து புள்ளூர்ந்து
　　கருங்கார் மின்னே டியைவதொப்ப
முளரித் திருவோ டெதிர்ந்தளித்த
　　முதலே வருக வருகவே
மும்மைத் தமிழ்சேர் வெண்ணெய் நல்லூர்
　　முகுந்தன் வருக வருகவே. (1)

(1) விளரி — ஏழிசையுளஒன்றான 'ரீ' என்பது; இடங்கர் — முதலை; மதக்களிறு கசேந்திரன. இது முதலையிடம் அகப்படடு ஆதிமூலமே எனச் சிவன், பிரமன் முதலியவர்கல் சும்மாயிருக்க நீ (சககரததை விரைநது) ஓடிவந்து (விட்டு) காத்தாயாதலான் நீயே முதல்வன் எனகிறார் கவி. களரி—கூட்டம்; கடவுள குழாம் — தேவக் கூட்டம்.

163 சுருதித் தருவிற் கிளந்தளிராந்
　　துணைத்தாள் மலரில் சிலம்பலம்பத்
துணைக்கிண் கிணியும் அரைஞாணும்
　　சுடர்பொற் கலையு மருங்கின் மின்னப்
பருதிக் கடவுள் கண்முகிழ்க்கும்
　　பதும ராகங் கதிர்கொழிப்பப்
பச்சைப் பசிய துழாய் வனத்தில்
　　பதுமைப் பூவை விளையாட
நிருதிக் கமையா மயல்பூட்டி
　　நிமிரத் தடந்தோள் வலையமொளி
நிலவ் மணிச்செஞ் சுடர்மவுலி
　　நீலக் கிரிமேல் கதிர்கடுப்ப
வருதிக் கனைத்தும புகழவட
　　மலைமேல் நின்றான் வருகவே
வண்மைப் புகழ்சேர் வெண்ணெய் நல்லூர்
　　வாழ்வே வருக வருகவே. (2)

(2) சுருதித தருவிற்கு இளந்தளிராம் — வேதமாகிய மரத்திற்கு இளைய தளிர் போன்ற; சுடர் பொற்கலையின பிரகாசததைக கணடு சூரியன கண் மூடினான். பதுமராகம் — செந்தாமரை மலர்ப்போலச் செந்நிறமுடைய ஒருவகை இரத்தினம். பதுமைப் பூவை — இலக்குமி நிரு(ந்ரு) — மனிதர்; திககு அமைய, மயல்பூட்டி என்க. வடமலை — திருப்பதி.

164 பண்ணைத் தரங்கஞ் சுருட்டுகரும்
　　பரவைப் புனன்மொண் டெதிர்ந்துயர்ந்த
பகட்டுக் குவட்டுப் பொழியுமுகில்
　　பகூழும் மதத்துக் களிற்றினமென்

றெண்ணித் தினைபபைம் புனஙகாக்கும்
இருண்மெய்க் குறவர் சிறுர்கவண்விட்
டெறியத் துளைமுள் ளெயிற்ற ரவம்
எழுவெண் பசியால் அங்காப்ப

அண்ணல் சினமா மடங்கலதிர்ந்
தழன்று முழைவிட்டெழச் சொரியும்
அருவி மணிபோன் முத்தலைக்கும்
அணியார் நந்தி மலைக்கரசே

வண்ணக் களப முலையலர் மென்
மங்கைக் கதிபன் வருகவே
வண்மைப் புகழ்சேர் வெண்ணெய் நகர்
வாழ்வே வருக வருகவே. (3)

(3) பண்ணைத் தரங்கம் — தொகுதியான அலை ; பகட்டுக்குவடு—உயாந்த சிகரஙகளையுடைய மலை ; நந்திமலை — திருமாலிருஞ்சோலை மலை. தினைப்புனம் காககும் கரிய உடலையுடைய குறவர் சிறுவர் மேகத்தை யானைக் கூட்டமென்றெணணிக் கவணுல்கலலை விட்டெறியவே பாம்புகள் ஏதோ இரை வருகிறதென வாயைத் திறக்கவும் சிஙகங்கள் குகையை விட்டு ஓடவும் நிகழ்ந்து மழையும் பொழிநதது.

165 கள்ளக் கருங்கண் கடைசியர்தம்
கணவர்க் கருத்தி மிகுகறவைக்
கலசத் திடைவைத் தயல் வயலிற்
கமலங் குவளைக் களைகளையப்

பிள்ளைக் குருகுக் கிரைதேடிப்
பெயருஞ் சிறைமென் மடக்குருகு
பெருகப் பருகி மதிகலங்கிப்
பேதை யவர்தம் விழிநிழலை

மெள்ளக் கயலென் றணைந்துகொத்தி
வெறித்தே திரியக் கண்டுமென்மேல்
வீளைக்குந் தவளக் குறுமுறுவல்
விரிவெண்ணிலவுக் கதிர் கொழிக்கும்

வள்ளத் திரளார் முனைப்பாடி
வளநா டுடையான் வருகவே
வண்மைப் புகழ்சேர் வெண்ணெய் நகர்
வாழ்வே வருக வருகவே. (4)

(4) வள்ளத்திரளாா — வள்ளம்போன்ற தனங்களையுடைய பெண்கள் — மருத நிலபபெண் கள் தம் கணவர்க்கு மதுவை உணபித்து மிகுந்ததைக் குடததிலே வைத்து களையெடுகக அன்னமானது தன் பார்ப்புக்கு இரை தேடி வரும்போது கலசத்திலிருப்பதைப் பாாதது அதைக் குடித்து மதிமயங்கி அப்பெண்களின் கண்களின் நிழலை கயல் மீனென்று கொததி வெறுமையாகத்திரியக்கண்டு அப்பெண்களை சிரிககின்ற அத்தகை வளமுடைய முனைப்பாடி நாடு என்க. வெறித்தே — வீணே ; தவள—கொழிக்கும் வெண்மையான சிறு பறகளின் விரிந்த வெள்ளிய நிலவுககிரணங்களை மிகுக்கும் (சிரித்தலால் இங்ஙன் ஆயிற்று).

வேறு

166 கொண்டலின் அலர்ந்தசெந் தாமரைக்காடெனக்
குமுத விதழ் கருணைநயனம்
குவலய மளந்ததா ளிணை செங்கை யொளிதரக்
குண்டலந் திருவில் வீச

விண்டலஞ் சுடருமதி மண்டலந தோற்பவிள
வெயில்செய்முக மண்டலத்தில்
வெண்பளித நாமமும் சிந்துரத திலதமும்
வெண்ணிலவு பொழிமுறுவலும்

கண்டகம் களி கூர நெஞ்சகம் குளிரயாங்
காணவொரு நாள்வருகெனக்
கருதுமன் பர்க்கெளிய னுதலின் தளருநடை
காட்டிநூ புரமொலிப்ப

வண்டலம் பியபசுந் துளபமென் றொடையசைய
வசுதேவன் மகன் வருகவே
வண்ணனன்மணி வெயிலொழுகு வெண்ணெய் நகர் வாழ்கமல
மங்கைநா யகன் வருகவே. (5)

(5) கொண்டலின.............நயனம் மேகத்தில் அலர்நத செநதாமரைப் பூககளி ருந்தால் எப்படியோ அப்படி குமுத இதழொத்த அதரமுடைய கண்கள் இருந்தன. இது இல்பொருளுவமை ; குவலயம் — பூமி ; நூபுரம் — பாதக்கிணகிணி.

167 தாதார் நறுந்துளவு தளவங் குராவிளந்
தளிமயில் பீலிமுதலாத்
தகைநெடுங் குழலிற் புனைந்துவெங் கழையினுமிழ்
தண்ணமுத விசைவடித்துச்

சேதா விளங்கன்று முல்லைச் சிறுர்களின்
திரளுமொரு கோடிசுற்றச்
செழுமலர்ப் பூவை நிகர் மேனியிற் புகர்நிறச்
சிறுதுகட் படலைபம்ப

வேதாதி யந்தமுங் காதலங் கரைபெரு
மின்னிடைப் பொதுவர் மின்னார்
வேல்விழியும் நெஞ்சமும் பின்வர இணைப்புருவ
விற்கோட விளநகைவர

மாதர்முலைக் கண்வழி பாலொழுகு மாலைவாய்
வருகோ பாலன்வருகவே
வண்ணனன்மணி வெயிலொழுகு வெண்ணெய்நகர் வாழ்கமல
மங்கை நாயகன் வருகவே. (6)

(6) மகரந்தம் செறிந்த துளசி, முல்லை, குரா மரப்பூ, மயில் தோகை முதலியன மயிரில் வைத்து அலங்கரித்து புள்ளாங்குழலூதி பசுக்களும் கன்றுகளும் முல்லை நிலத்துச் சிறுவர்களும் சுற்றிவரக் காயாமபூவொதத மேனியில் புழுதி பொருந்திமூட ; வேத முதலியனவும் ஆசை கொண்டும் காண முடியாது, இடைப்பெணகளது கணகளும் மனமும் தன பின்வர இரண்டு புருவமாகிய வில வளைய புன சிரிபபு வரப் பெண்களின் தனத்தில பாலொழுகும் அத் தகை மாலைக் காலத்தில் பசுககளோடு வருகினற கோபாலா வருக எனகிருர் கவி. பமப — நெருங்க ; பொதுவர் மின்னூா வேல விழியும நெஞ்சமும் பினவர எனருர் அவர்கள் கண்ணனை எப்பொழுதும் நினைந்திருபபதால், கன்றினை உள்ளும பசுவொப்பக கணணனை நினைத்து மாதர்ககுப்பாலொழுகியது எனக.

168 கேசவன் வருகமது சூதனன் வருகநர
கேசரியின் உருவன் வருக
இளர்புனலின் முழுகுநில மகளை யொரு கோட்டேந்திய
கேழற்பிரான் வருகமா

பாசவெம் பிறவிவிட வடியவர்க் கருள்பரம
பாவனன் வருக கருடப்
பறவைவா கனனவருக தாமோ தரன் வருக
பதுமநா பன் வருகமா

ரீச வஞ் சனையடரும் வில்லொளி வருகபுவி
யாவைக்கு மிறைவன் வருக
இருடிகே சவன் வருக நாரா யணன் வருக
இமையவர்க் கதிபன் வருக

வாசவன் துணை வருக மாதவன் வருககலை
வாணிபதி தந்தை வருக
வண்ணன் மணி வெயிலொழுகு வெண்ணெய்நகர் வாழ்கமல
மங்கைநா யகன் வருகவே. (7)

(7) நரகேசரி — நரசிங்கம் ; கேழல்பிரான — வராகமூர்த்தி ; வஞ்சனை — வஞ்சகமாக பொன்மானுக வந்தவனை ; மாரீச வஞ்சன் — இருபெயரொட்டுப் பண்புத் தொகை. கலைவாணிபதி - பிரமன்.

## வேறு.

169 இரவி மதியம் நேமிபணிலம்
இகல் கொல் கலுழன் நிரதமே
இலகு கமல மாதுநிலமின்
இருவர் மருவு தெரிவைமார்

அரவின் அரசு சீதவமளி
அகில வுலகு மயினியே
அயனுன் மதலை தேவர் முழுதும்
அடிமை புரியும் அடியவர்

பரவ வரிய வான சுருதி
பலவு முணரு பெயர்களே
பதும மகள லாதுன் மகிமை
பகர வறிய வுளகொலோ

வரவும் எளியை போலு மடியர்
வருக வெனுமுன் வருகவே
வருபு வனமும் வேணு வனமும்
மகிழும் அதிபன் வருகவே. (8)

(8) இரவிமதியம் என்பதை முறையே நேமிக்கும் பணிலத்திற்கும் நிரனிறையாக்கி உவமிக்க. கலுழன — கருடன் ; நிரதம் — எப்போதும். கமலமாது நிலமின் — திருமகள், நில மகள ; உம்மைத்தொகை ; அரவின் அமளி — ஆதிசேடனே குளிர்ந்த படுக்கை ; அயினி — உண்வாகவுணடு. எலலா உலகங்களேயும் யுகாந்தத்தில் உண்ணுவதால் இங்ஙன் கூறினர். பதும மகள்......................கொலோ — இவ்வடியால் உன் பெருமைகூற உன் மனைவியான திருமகளுக்கேசாலும் என்றார்.

170 அறிவில் சிறுவ ரோடு தொடரில்
அலர்மெல் லடிகள் தளருமே
அலைகொள் குழலும் நீலநிறமும்
அளவில் புழுதி படியுமே

எறிவெவ் வெயிலின் ஊடுதி ரியில்
இளகு வெயர்வு சொரியுமே
இலகு திலகம் வேர்விலழியில்
எனது மனமும் உருகுமே

நறிய கனிகள் காய்கள் தருவன்
நறுநெய் தருவன் வருகெனு
நவிலு மெழில சோதை மனையின்
நடலை வகைசெய் சிறுவனே

மறுவின் முனிவர் தேடவரிய
மறையின் முதல்வன் வருகவே
வருபு வனமும் வேணு வனமும்
மகிழும் அதிபன் வருகவே. (9)

(9) குழல் — மயிர் ; நடலைவகைசெய் — அசைவுவகைகளைச் செய்யும் ; மறுஇல் — குற்ற மற்ற.

171 குறிய வுருவம் வானின் முகடு
குறுகு நெடியன் வருகவே
கொடிய சிலையை மாதினுருவு
கொஞ்சு சரணன் வருகவே

முறிய மருது சகடு சிதற
முடுகு மதுலன் வருகவே
முலையை யுதவு பேயி னுயிரின்
முதல் கொள் கபடன் வருகவே

நறிய கலவை பூசும் வளமெய்
நலமுண் ணமலன் வருகவே
நமனும் வெருவு நாக முடியின்
நடன மிடு மன் வருகவே

வறிய முனிவன் வாழ அவலின்
மகிழும் எளியன் வருகவே
வருபு வனமும் வேணு வனமும்
மகிழும் அதிபன் வருகவே. (10)

(10) குறிய......................நெடியன் — திருவிக்கிரமாவதாரததைக் **காட்டியது.** **மா**தின் — சீதைககாக ; அதுலன் — கடவுள ; பேய் — பூதகி. இவள் கம்சனேவலால் **கண்ண** **னு**யிரை முடிக்க அனுப்பபபட்டவள் ; நாகம் ஈண்டு காளிங்கன் எனற பாமபு ; நமன — **யமன்** ; வறிய முனிவன் - குசேலன் என்ற பிராமணன் ; முன்பிளளைத் தமிழ்க்கொத் **194-ஆம்** பாட்டில காண்க.

## அம்புலிப் பருவம்.

### சாமம்.

**172** சொன்னவரை வளைவைநீ இவனடிமை என்னுமுரை
சொன்னவரை என்றும் வளைவான்
சுழிதருங் குணகடலில் வருவைநீ இவனுமோ
சுபமிகும் குணகடலுளான்

மின்னமர் செழுங்கலா நிதிநீ மலர்த் தெரிவை
மேவிய கலாநிதியிவன்
வேளை நிழல செய்வைநீ இவனுலகி லுயிர்களை யெவ்
வேளையினும் அருள்நிழல் செய்வான்

மன்னுமம் புயமறுத் திடுவைநீ இவனும்விறல்
வாணனம் புயமறுத்தான்
வளர்சோதி மூவர்க்குள் ஒருவன்நீ யிவனும்
மூவர்க்கு ளொரு சோதியாவான்

அன்னவகை யர்க்குநீ இவனைநிக ராதலால்
அம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாட வாவே. (1)

| (1) | சந்திரன். | வைகுந்தநாதன. |
|---|---|---|
| (1) | சொன்னவரை (மேருமலையை) வளைவான் (வளைந்து சுற்றுவான்). | அடிமை எனறு சொன்னவரை வளை வான் (சொன்ன பேர்களைச சூழந்திருப் பான். |
| (2) | சுழிக்கும் அலைகள் பொருந்திய குணகடலில் (கிழக்குத்திக்கில் கடலில்) தோன்றுவான், | இவன நன்மை பொருந்திய குணகடல் (அறுவகைக் குணஙகளாகிய கடலை) உள்ளவன். |

அம்புலிபபருவம்.

(3) பிரகாசமிக்க அழகான கலாநிதி (கலைகளைப் பெற்றவன், சந்திரன) ஆவன்.

இலககுமியை மார்பில் பொருந்திய கலாநிதி (கல்விக களஞ்சியம்) ஆவான.

(4) வேளை (மன்மதனுககு) நிழல கொடுக்க உதவு வான (சநதிரன மனமதனுககுக குடையான மைப்பறறி, வேளை - உருபுமயககம).

இவனே உலகில் உயிர்களை எந்த வேளை யினும (சமயததிலும்) அருள்நிழல் (அருளாகிய தஙகும நிழலை) செய் வான.

(5) நீரில நிலை பெறற அம்புயம் (தாமரை மலா களை) மறுத்திடுவான் (மலரவொட்டாது குவித் திடுவான்).

திறமை மிகக வாணு சூரனது அம்புயமு அறுத்தான். (அழகிய புயங்களை (கைகளை) யெல்லாம் அறுத்துத் தள்ளினுன்.

(6) வளர்கின்ற சோதி மூவர்க்குள் (பிரகாசமிக்க சூரியன், சந்திரன, அக்கினி) ஒருவன்.

மூவர்க்குள் (திருமால், பிரமன், சிவ பெருமான்) ஒப்பற்ற சோதிமேல்னவன் ஆவான்.

**வாணன்.**—பலியின் குமாரன் தன்மகள் உஷை நிமித்தம் கண்ணன பேரன் அநிருத்தனைச் சிறையிலிட்டனன். நாரதரால் அறிந்த கண்ணன் சென்றெதிாத்து ஆண்டுள்ள விநாயகர், முருகர், சிவன் ஆகியோா புறமுதுகிட இறுதியில் சிவபூசை செய்த இரண்டு கைகளைத் தவிர மற்ற 998 கைகளையும் அறுத்தார். திருவரங்ககலம்பகம்" வாடியோட . . . . . . முக்கணீசன மக்களைத் தேடியோட வாணனுயிரம் புயங்கள் குருதி நீர் சிந்தியோட . ." என்ற பாட்டு நோக்குக. அடலரவு - காளிங்கன் ; முன் பிளளைத தமிழ்க்கொத்து 134 ஆம் பாட்டு நோக்குக.

173 மானினி விடாதமரு மார்வமுளை நீயிவனும்
மானினி விடாதமார்பன்
மதியான நாமத்தி நீயிவன் தொண்டர் சம்
மதியான நாமத்தனும்
கானகத் தோடதி சயந்தருவை நீகங்கை
கானகத் தோடதிசயங்
காட்டுமிவ னண்டர்பதி புகுவைநீ யண்டர்பதி
கைக் கொண்ட பெருமானிவன்
யானினி யுரைப்பதெ னிவன்றனை நிகர்வையிது
விண்றிமைத்துனனு மாவாய்
இருபக்க முண்டுன்க் காயினு மிவன்பக்கம்
இன்றுவிளை யாடவேண்டும்
ஆனினந் துயர்தவிர வரை யெடுத் தானிவனே
டம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே. (2)

(2) சந்திரன்

வைகுந்தநாதன்.

(1) மானினி (களங்கத்தை இனி எப்போதும், மான—களங்கம்) விடாத மரு மார்வம் (விடாது தங்கும் ஆர்வத்தையுடையவன்) மார்பம் - மார்வம் போலிபற்றி சொல்லொற்றுமைக்குக் காட்டினுர்.

மானினி (இலக்குமியாகிய பெண்ணை, மானினி—பெண்) விடாத மார்பன் (விட்டு நீங்காத மார்பினையுடையவன்

| | |
|---|---|
| (2) மதியான நாமத்தன் (மதி என்ற பெயரை யுடையவன்). | தொண்டர் சம்மதியான நாமத்தன் (அடியவர் இஷ்டத்திற்கேற்ற பெயரை யுடையவன்). |
| (3) கானகத்தோடு (காட்டினிடம்) அதிசயம் தரு வான் (பஞ்சதந்திரத்தில் ஒரு முயல் மலை மேலேறி யானைகட்குச் சந்திரனனுப்பிய தூதன என்று கூறி இரவில் நீரில் பிமபம் காட்டி ஓட்டியதை ஓாக) | கங்கையைக் கானகத்தோடு (கால நகத் தோடு) அதிசயம் காட்டுவான (திருவிக்கிரமாவதார காலததில் பிரமன் காலை பூசித்ததால் உண்டாகிய கங்கை வரலாறு காணக ) |
| (4) அண்டர்பதி (தேவர்கட்குத் தலைவனான இந்திரனிடம்) புகுவான். | அண்டர் பதி (தேவரது தலைநகரான அமராவதியைக்) கைக்கொண்டவன். (சத்தியபாமைக்காக பாரிஜாதம் கொணர்நத வரலாறு காண்க). |

இவன் மைத்துனனாதல் பற்றியும், தக்ஷனிடம் சிவனும் சந்திரனும், பெண் கொண்டிருக்கும் முறையினாலும், சிவனிடம் சநதிரன தஙகியிருத்தல் பற்றியும் மைத்துனனும் ஆவாய் என்றார். மைத்துனனும் என்றபோது மைததுனனிடத்திலும் என்று பொருள் கொள்க. இருபககம் என்றார் அமரபக்ஷம், கிருஷ்ணபக்ஷம் சந்திரனுககு உண்டாதலால கூறினார். பக்ஷம் என்ற வட மொழி பக்கம் என்ற ததபவ வடசொல ஆயிறறு பக்கம் - வைகுந்த நாதனுக்காகும்போது இடம் எனறு கொளக. வரை - கோவாதன மலை ;

174 கயல்விழி இரேவதியை மருவலால் கதிரோடு
கலப்பை யுள தன்னம யதனால்
கருதிநீ லாம்பரம் பெறலா லுரோகணி
களிப்பவரு காதல னதால்

செயல் மருவு காமபா லன்முயலி யென்னுமிரு
திருப்பெயர்க் கிசையுமிதனால்
திருமேனி வெண்மையால் தனதுமுன் தோன்றலால
சேர்ந்துவிளை யாட வெண்ணிப்

புயல் பொரு தடக்கையம் பலதேவ னென்றுனைப்
பூங்கை விரல் காட்டுகின்றான்
போதாது நீசேறல் போதாது சண்பகப்
பூந்தா தருந்தாதுவண்

டயன்மலர் விரும்புநவ நீதபுர நம்பனுடன்
அம்புலீ யாடவாவே
அட லரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே. (3)

| (3) சந்திரன் | பலராமன் |
|---|---|
| (1) கயல் மீன் போன்ற கண்களையுடைய இரேவதி என்ற தக்ஷன் பெண் 27 பேரில் ஒருத்தியையே மருவினவன். | இரேவதி என்பவளைப் புணர்ந்ததால் இவருக்கு இரேவதி, வாருணி என்ற இரு மனைவியர். |
| (2) கதிரோடு கலப்பை (சூரியனோடு சம்பந்தத்தை) யுடைய தன்மை பெற்றவன். சூரியனிட மிருந்தே சந்திரன் ஒளி பெறுகிறான் என்ற | கதிரோடு கலப்பை (பிரகாசத்தோடு கூடிய கலப்பை யாயுதத்தை) உடையவன். |

*சந்திரன்*

புராணக் கொள்கை வான நூற கொளகையும் மறறும அமாவாசை தினம் இருவரும் ஒன்று சேருவா என்ற புராணக் கொள்கையும் ஓர்க. சூரியனது சுகமுனே என்னும் கதிரால் ஒளி பெறுவான்.

(3) கருதி நீலாமபரம் (நீல நிறமான ஆகாயத்தை, நீல + அம்பரம்) அடைவான. — நீலாம்பரம் (நீலாம்பரன; போலி) எனற பெயரை அடைந்தவர். யமுனே இரண்டு நீல உடைகளும் ஒரு பொன் மாலேயுமளித்தனளாதலால் அதனே யணிந்து நீலாம்பரன் என்ற பெயர் பெற்ருர்.

(4) உரோகணி களிப்பவரு காதலன் 27 மனவியரில் உரோகணி என்ற அப்பெண் மகிழ்ச்சியடைய வருகினற கணவன்) ஆவான். — உரோகணி களிப்பவரு காதலன் (உரோ கணி என்ற தன் தாய் மகிழவ ருகின்ற ஆசைமிக்க மகன்) ஆவான்.

(5) செயல மருவு . . . இசையும்" காமச் செயல் மருவும் பாலன் ஆகவும், முயலே (களங்கத்தை) உடையவனுகவும் இருந்ததால் காமபாலன், முயலி என்ற இரண்டு பெயர்களேப் பெறறவன. காமச் செயல மருவுபாலன் எனப் பிரித்துச் சேர்க்க. காமம் மிக்கவனுனதால் தன் குருவான வியாழன் மனேவி தாரையை விரும்பினுன்) — அரிய செயல் பொருந்திய காமபாலன் முசலி என்ற இருபெயர்களேயுடையவன் (முசலம் - கலப்பை யாயுதம்).

(6) உடல் வெண்ணிறமுடையவன். — வெண்ணிற உடலேயுடையவன்.

(7) தனது (கண்ணன தனது) முன்பாகப் (விளே யாட்டுக் காட்டும் அச்சமயம்) உள்ளான். — தனது (கண்ணன் தனக்கு) முன் (முன் னவன் தமையன் ஆக) பிறந்தவன்.

போதாது - எதிர்கொண்டு வாராமல்; நீசேறல் - நீ வீணே செல்லுதல்; போதாது - போதாத வேளேயாகும்.

## பேதம்.

175 கொண்டலி னெடுங்குமுன் மேனியொளி யிவன்மேனி
கொண்டலொளி யினே யொடுக்கும்
குறையும் வெண் கலேயுனக் குளதெவ் வுலகும் விலே
கூறரிய பொற்கலேயுளான்

விண்டல மிரண்டிலக் கத்துயர்வை நீயிவன்
விண்முகடு கிழிய வுயர்வான்
மிகுமயல்கொ ளேழையர்கள் பகைவநீ யேழைகளே
விருதுகொடு காப்பவ னிவன்

கண்டமடை யுங்குறைப் பாந்தளுக் குளவை நீ
கதிர்மணிச் சிரமாயிரம்
காட்டும்விட நாகணேயின் வளர்வனிவ னிமைவர்
கவர்ந்துண்ணு மசனமாம் நீ

அண்டர்பெரு மாணிவ னுனக்கதிக மாதலால்
அம்புலீ யாடவாவே
அடலரவி நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே. (4)

| (4) சந்திரன். | வைகுந்தநாதன். |
| --- | --- |
| (1) இவன் உடல் மேகத்தில் ஒடுங்குவான் (மறைவான்). | இவன் உடல் கரு நிறமானதால் மேக ஒளியையே தன்கண் அடககுவான. " வெய்யோனொளி தனமேனியின " என்ற கம்ப ராமாயணப் பாட்டினை நோக்குக. |
| (2) குறைகின்ற (தேய்கின்ற) வெண்மையாகிய கலைகள் (வளரும் தேயும் பங்கு) உண்டு. | எவ்வுலகும் விலை கூறமுடியாத பொற கலை (பொன்னாலாகிய உடை) உடையவர். |
| (3) ஆகாய இடத்தில் இரண்டு லட்ச யோசனை தூரத்தில் உயர்ந்திருப்பான். | விண்முகடு (ஆகாய உச்சி) கிழிய உயர்ந்தவன். திருவிககிரமாவதாரம் செய் தபபோது காணக). |
| 4) மிகுந்த காம மயக்கங்கொணட பெண் களுக்குப் பகைவன். (விரகியர்கட்குக் சுவடுவது பறறிக் கூறினர்). | ஏழைகளை (எளிமையுடையேன் என்று அவையடக்கமாகக் கூறும் அடியார்களை) விருதுகொண்டு (சங்கற் பிததுக்கொண்டு) காப்பவன். |
| (5) கழுத்துவரை மட்டும் பொருந்தின அங்கக் குறையான பாம்பான இராகுவுக்கு உள்ளகப் படுவான். | மாணிககங்களையுடைய ஆயிரந்தலைகளைப் பெற்ற விஷம் பொருந்திய ஆதிசேடன் என்ற பாம்பின்மீது படுபபவன. |
| (6) தேவர்கள் கவர்ந்துண்ணும் உணவு ஆவான் (அசனம் - சோறு) வளர்பிறை பதினைந்து நாளில் சந்திரன் சொரிகின்ற அமுதத்தைத் தேவர் உண்ணுவர். தேவர்களின் உணவு என்று இழிவு கூறினுர். | தேவாகட்குத தலைவன் ஆவான். |

176 தேராத வன்றுணைவன் நீமறைப் பொருளுண்மை
தேர்ந்த பெரி யோர்துணையிவன்
தேளினிற் சிறியநீ முப்பத்து முக்கோடி
தேவரில் பெரியோனிவன்

நீராரும் நண்டினுக் கதிபன்நீ பிரமன் முதல்
நீடுயிர்க் கதிபதி யிவன்
நிறையவும் குறையவும் பெறுவைநீ யிவனென்றும்
நிறைகுறை யிலாத முதலோன்

பேராது நீகாட்டும் வழிவரின் நரகும்
பிறப்பும் வரு மிவன் வழி வரில்
பிறவிதவிர் பேரின்ப வீடுவரு மாதலால்
பேதமிக வுண்டாயினும்

மாறுத கருணைமா னுதலின் அழைத்தானே
டம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே. (5)

| (5) சந்திரன். | வைகுந்தநாதன். |
|---|---|
| (1) தேராதவன (தேர் ஆதவன் - ஒற்றைச் சக்கரத்தேரினையுடைய சூரியன ; ஆராயாத அறிவினன என்றும ஒரு பொருள கொளக) துணைவன் (தோழன்). | வேதப்பொருளுணமைகளைத் தேர்ந்த செயற்கரிய செய்யும் பெரியோர்க்குத் துணைவனுவான. |
| (2) புத்தேளிரில செயற்கரிய செய்கலாத சிறியவன். (தேள் - முதற்குறை புததேள - தேவா). | முப்பத்து முக்கோடி தேவரில் பெரியோன் ஆவன். |
| (3) நீரில பொருநதிய நணடினுக்குத் (கர்ககடக ராசிக்கு) தலைவன். | பிரமன் முதலிய உயர்ந்த உயிர்கட்கெல்லாம் தலைவன். |
| (4) வளர்வதும் தேய்வதுமடைவான். | என்றும் ஒரே சீர்மையுடன் இருப்பான். |
| (5) நீ காட்டும் வழியில தவறுது நடந்தால் நரக வேதனையும், மாறி மாறி இழிந்த சன்மம் எடுத்தலும் வரும். சந்திரன் குரு பத்தினியை மனைவியாகக் கொணடதும் சண்டை விளைவித்ததும், அவள் மூலமாகப் புதனைப் பெற்றதும் முதலானவைகளைக காண்க. பேராது - அடி பெயராது ; "பகைபாவம் அச்சம் பழியென, நான்கும் இகவாவாம் இல்லிறப்பான்கண்" என்ற குறளை ஒர்க. கருணைமான் - மான் பெயர்ப் பகுபதவிகுதி ; | இவன் காட்டும் வழி நடந்தால் பிறவி நீங்கும் பேரினபமாகிய மோட்சம் கிடைக்கும். |

## தானம்

177 நெடுமுடிப் பஃறலைத் திரள்புயத் துறுவலி
நிசாசரர் பதிக் கொதுங்கி
நிதிமதில் இலங்கையூர் புகவெருவி ஓடுமுனை
நிலையோடு நடக்க வைத்தான்

சுடுசினத் தழல் விழிச் சடைமுடிப் பரனடித்
துகளெனத் தேய்த்த வுன்னைத்
தூணுக்கி மந்தர கிரிக்கெதிர் நிறுத்தினுன்
தொடருமுன் பழைய பகையாம்

கடுமிடற் றரவையும் தலைதுணித் தானுன்வழி
காசினியின் நீங்கிடாமே
கருவினுன் குலமகவின் உயிரளித் தானினம்
கருதி யிவன் உதவிபார்க்கில்

அடுமைநீ செயவேண்டு மாதலினெனையனுடன்
அம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே (6)

(6) நிசாசரர் - நிசியில் சஞ்சரிப்பவர் என்று பொருள்படும் அரக்கருக்குப் பெயர். நெடுமுடி . . . . வைத்தான், முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 166 ஆம் பாட்டின் குறிப்பில் இவ்வரலாறு காண்க. சுடு . . . . பரன் - வீரபத்திரன்; சுடுசின . . . உன்னை - இவ்வரலாறு முன்பிள்ளைத் தமிழ்க் கொத்தின் 505 ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. தூண் . . . நிறுத்தினன். கடல் கடையும்போது தறியாகச் செய்து காண்க. கருமிடற்று அரவு - விஷம் பொருந்திய கழுத்தையுடைய பாம்பு, இராகு. இது ஷை 504 ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. உன்வழி . . . உயிரளித்தான — அசுவத்தாமாவின் பிரமாஸ்திரம் எல்லோருடைய கருவையும் போக்க அபிமன்யுவின் மனைவியான உத்தரையின் கர்ப்பம் மட்டும் தங்குமாறு செய்து பின் குழவி கரிக்கட்டை போன்று பிறக்கக் கண்ணன் நித்ய பிரமச்சாரி என்று கூறி எடுத்து உயிர் கொடுத்தார். இவனே பரீட்சித்து. "மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பித்து அவர்களையே மன்னராக்கி உத்தரைதன் சிறுவனையும் உய்யக்கொண்ட உயிராளன" என்ற ஆழ்வார் வாக்கு நோக்குக.

178 சோதிபெறு மேனியைக் கறையா னெனச் செய்து
தொலையாத வதுமானெனில்
துட்டமான் உயிர்பட வாளியில் போக்குவான்
தொடர்நடைக் குறுமுயலெனின்

நீதிசெறி வேட்டுவக் குகனிவன் துணையதுவும்
நீக்குமிது வன்றியரவின்
நெட்டெயிறு குத்துவிட மென்னில் வெங் கலுழனொரு
நீள்சிறைக் காற்றினது போம்

வேதனை செய் நோயெனில் கூனிநிமி ரச்செய்த
விஞ்சையான் அமையுமன்றே
மிகவினன் நீவேண்டு கருமமெல் லாமுற்று
வித்துவிழி என அளிப்பான்

ஆதியம் பொருளிவன் பெருமை நீ உணராய் கொல்
அம்புலி யாடவாவே
அடல ரவின் நடனமிடும் வைகுந்தநாதனுடன்
அம்புலி யாடவாவே. (7)

(7) கறையான் என - சிதல் அரித்தால் எங்ஙனமிருக்குமோ அங்ஙனமாக; தொலையாத - நீங்காத; துட்டமான - வஞ்சகம் பொருந்திய பொன் மானை மாரீசன்; களங்கத்திற்கு மான், முயல், கறை என்று வழங்குவதாதலால் இவன் முன்னமே மாரீசனாகிய மானைக் கணை எய்து தொலைத்தான் ஆதலால் மானைப் போக்குவான் என்றும், குகனாகிய வேடன் இவன் தோழனாதலால் அவன் வேட்டையாடி முயலைப்போக்குவான் என்றும், இவன் வாகனமான கருடனது சிறகு காற்றினாலேயே பாம்புகள் கெடுகின்றன ஆதலால் இராகுவின் விஷக்கறையாயிருப்பின் ஓடிவிடும் என்றும் சமத்காரந்தோன்றக் கூறினார். வேதனை செய்நோய், துன்பமிகத்தருகின்ற க்ஷய ரோகத்தினால் உடல் கூனடைவதுண்டு. எனவே கூனி நிமிரச் செய்த வித்தை என்றார்.

கூனி—கைகேயின் தாதியான இவள் குடங்கொண்டு தண்ணீர் கொண்டு வரும்போது இராமன் வில்லும் மண்ணுண்டையும் கொண்டு விளையாடுவான் வேடிக்கையாகக் கூனியின் முதுகைப் பார்த்தும் குடத்தைப் பார்த்தும் அடிப்பது வழக்கம். இதனால் கூன் சிதைந்ததென "கூனே சிதைய உண்டை வில்நிறத்தில் தெறித்தாய்" என்று ஆழ்வார் கூறியருளிய வாக்கை ஓர்க. முன் பிள்ளைத் தமிழ்க்கொத்து 127ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. மற்றும் கண்ணவதாரத்தில் திரிவக்கிரையின் கூனை நிமிர்த்தியதைக் கூறலாம். திரிவக்கிரை —மதுராபுரியில் கண்ணபிரானவதரித்து திருவிளையாடல்

செய்த காலத்து அவர்கருச் சந்தனம்பூசி அவரைக்கூட எண்ணங் கொணடவள் குப்சை. இவளைக் கணணபிரான தீணடிக கூனே நிமிாத்தி இவளிடம் உப சுலோகரைப் பெறறனர். கருமம எலாம் முற்றுவிதது என்க. விழி என அளிபபான—சிவபெருமானுக்கு இவைகளை யெலலாம போககிப் பிரகாசமான கண்ணுககுவன என்பது நோககிப் போலும். விழி என அளிபபன என்பது திருவிக்கிரமாவதார காலத்தில் சூரிய சந்திரரே விழியானதால் தனனை நோககிக கூறியதாகவும் கொளளலாம்.

**கண்டம்**

179 பாயிருட் படலம் கிழித்தெழும் பருதியும்
பனிமலர்த் தருநிழற் கோன்
பண்பறிந் தொழுகெழு மழைக் குலமும் வெண்டிரை
பரப்புதண் பரவை யேழும்

காயெரிக் கடவுளும் கனகவட கிரியையும்
கடலிடை மடுக்கும்வேகக்
காற்றினுக் கரசனும கடவுளர்க் கிறைவனொடு
காசினி படைப்ப னென்றே

தீயெழச் சினவுதவ முனியனைய முனிவரும்
தேவரும் பிறருமஞ்சிச்
செய்கையில் திரியாது நிற்பதிவ னாணைதன்
சென்னிமேல் கொண்டதறியாய்

ஆயிரம் திருநாம முள்ளவெம் பெருமானோ
டம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே (8)

(8) பருதி - சூரியன் ; பனி . . . கோன் - இந்திரன் ; பண்பறி . . . மழைக் குலம் - இந்திரன் கட்டளைப்படி நடக்கும் சப்த மேகங்கள் ; பரவை - சமுததிரம் ; எரிக் கடவுள் - அககினி ; கனக . . . அரசன் - வாயு ; இவனுக்கும் ஆதிசேடனுக்கும் பலம் பற்றி வாதம் வநது ஆதிசேடன் மேருமலையைப் பற்றிக்கொள்ள அதினினறு மூன்று சிகரங்களைப் பெயர்த்துப் போட்டனன். கடவுளர்க்கு இறைவன் - இநதிரன் ; தவமுனி - விசுவாமிததிரன் ; கடவுளர் . . . தவமுனி - திரிசங்குவைக் கௌசிகர் தபோ பலத்தால் உடலோடு சுவர்க்கம் அனுப்ப இந்திரன் அவனைப்பிடித்துத்தள்ள அவன் காப்பாற்று காப்பாற்று எனக் கூச்சலிட்டுத் தலை கீழாகவர இவர் தவ வலிமையால் அவனை அங்கேயே நிற்கச்செய்து வேறொரு தேவலோகம் ஏற்படுத்தினர்.

180 இத்தனை யழைக்கினும் விரைந்துவா ராயென்னின்
இரவியைக் கனியாகுமென்
றெயிறூன்று கவியிவன் தூதனு மிமையவர்
இருந்துகாக் கின்றவமுதைக்

கைத்தலத் திடைகொண்டு பணிகளுக் கீந்தவெங்
கலுழனிவ னூர்தியமிர்தின்
கலையுடையை தனியைவெளி யேதிரிவை வேறுமொரு
காவல்இலை யதுவுமன்றி

முத்தமணி வெண்குடை சேனாபதி யிவனெவண
முறைதிறம் பினரைவெற்றி
மூரிப் பிரம்பினி னடித்துவெஞ் சிறையிடுதல்
முன்னமறி யார்கொலென்றே

அத்தனையும் வருமுன்னம் ஒருநொடியி லேயுவந்
தம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன்
அம்புலீ யாடவாவே (9)

(9) இரவி - சூரியன் ; கவி - குரங்கு, அனுமான ; வாயுவுக்கும் அஞ்சனைக்கும் பிறநதவன. பிறந்தவுடனே தன் உணவு யாதென "சிவநதிருககும் பழம்" என உடனே உதிககும் சூரியனைப் பழமெனக்கணடு பறறப் பாய்ந்தவன் ; இமையவா . . கலுழன் —105 ஆம் பாட்டில் காண்க ; அமிர்தின கலையுடையவன் ஆதலால் முன்னமே அமிாததததைத தூககின கருடன உன்னைத் தூக்கிச் செல்வான எனறும், வேறுமொரு காவல் இலை என்பதற்கு முன்பு சூரியனைப் பிடிக்க வர இநதிரன் உதவி அனுமனை வச்சிராயுதத்தாலடித்து அது முறித்தான. நீ தேவ குருபததினி விஷயததில குறறம புரிநதாயாதலால அவன உதவமாட்டான். வேறு யாவரும் உதவமாட்டார் எனகிருர். சேனபதி - சேனையர்கோன. லோகாலோகப் பருவததில் எழுந்தருளியிருக்கும் விஷ்ணு வினவதார விசேஷம்.

181 குணமுடன் அழைககவா ராதநீ நந்தியங்
குன்றுநெறி யன்றிவேறே
குறுகுநெறி யிம்மையில் செல்லையிதி லிவன்முகம்
கோடிய தறிந்தவுடனே

பணம்விரித் தொருகோடி யரவம் விழுங்குவெண்
பால்கவள மென்றுமதமாப்
பணைநெடுங் கரன்நீட்டி வாய்க்கொளும் வெம்புலிகள்
பாய்ந்துமா னைககொடுசெலும்

கணமும்வெங் கொலைவிடா வெயினர்முய லாசையால்
கணைதுறந் திடுவர்முனமே
காயமேற் பட்டவுடல் காயம் பெறுதுபின்
காப்பவரும் இல்லையப்போ

தணுகுவது நாணுமிப் பொழுதே யெனையனுடன்
அம்புலீ யாடவாவே
அடலரவின் நடனமிடும் வைகுந்த நாதனுடன
அம்புலீ யாடவாவே. (10)

(10) நந்தியம் குன்று - திருமாலிருஞ்சோலை மலை ; வேறே குறுகும நெறி இமமை இல் - வேறு செல்லும் வழி இப்பிறப்பில் இலலை. இதில செல்லை - இவ் வழியில் செல்வா யானல் ; முகம் கோடியது - கோபத்தினுல் முகம் மாறுபட்டது ; இவன் மலையில் வாழ் பவனுதலால் ஆண்டுள்ள பாம்புகள், யானைகள், புலிகள், வேடர்கள் ஆகிய குறிஞ்சி நிலப் பொருளகளை நணபாயினமை கருதி அவைகளே தாக்கும் எனக் கூறினர். காயமேற்பட்ட உடல் காயம் பெறுது - முன்னமே வடு (பழி குரு பததினிககாக ஏற்பட்ட பழி) ஏறபட்ட உடலாதலால் இப்போது கணை எய்வதால் நிலைபேறு பெறுமல் ;

## சிற்றில் பருவம்

182 அரிக்கிண் கிணிப்பொன் சதங்கைதண்டை
அலம்பத் துவசம் வளைவயிரம்
அம்போ ருகமங் குசம் கிரி
ஆதி யிரேகை நிலம்பொறிப்ப

விரிக்கும் சுருதி தலைவிளக்காய்
விளங்கும் திருத்தாள் சிவப்பதன்றி
மிகவும் புழுதி படவடிகள்
மெல்ல நடந்து வருவதுதான்

தரிக்கும மடமைச் சிறுதகையோம்
தகுவெம் பாவைக் கமுதளிப்பான்
சமைத்த புளினச் சிறுவளைப்பைத்
தகர்க்கும் படிக்கோ தவமுனிவோர்

தெரிக்கும் பெருமைப் பரம்பொருளே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்த்
தேவே சிற்றில் சிதையேலே (1)

(1) அரி - பரல்; துவசம் - கொடி; காலிலும் இத்தகைய இரேகைகளிருந்தன என்பது தெரிகிறது. மணலில கட்டிய வீட்டைச சிறுமியர் "புளினச் சிறு வளைப்பு" என்கின்றனர். துவசம் . . . . தாள் —ஒரு காலில் சங்கு ஒரு காலில் சக்கரம் உள்ளபடி பொறித்தமைநத, இருகாலும் கொண்டு அங்கங்கு எழுதிறைபோல் இலச்சினைபட நடந்து . . " என்ற ஆழ்வார் வாக்கினை யோர்க.

183 வஞ்சப் புணர்ப்பில் சகட மன்றே
மாயா விராத னுடல மன்றே
மாமக் கொடியோன் சிரமன்றே
வளர்துந் துமியி னெலும் பன்றே

கஞ்சப் பதத்தா லடர்ப்பதற்குக்
கருநுண் மணலைக் கொழித் தெடுத்துக்
கடைவா சலும்பே ரரங்குமிடை
கழியும் சிறுசோ றடுமிடமும்

விஞ்சச் சமைத்துச் சுவர் வளைத்து
விரவிப் பலபே தமை மடவோம்
விளையாட் டிடத்தைக் கலைப்பதற்கு
விதியோ விதியைப் படைத்த வுந்தி

செஞ்சக் கரக்கைப் பரஞ் சுடரே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்த்
தேவே சிற்றில் சிதையேலே (2)

(2) சகடம் - சகடாசூரன் ; விராதன் - இவன் சாபத்தால இலிஞசன் குமாரனுய்ப் பிறந்து இராமமூர்த்தி காட்டில வந்திருக்கும்போது சீதா பிராட்டியைத் தூககிச் சென்று இராம லக்குமணரால் கையறுப்புண்டு சுவர்க்கம் புககவன. மாமககொடியோன் - மாமனுகிய கொடிய கம்சன் ; துந்துமி : மயன் குமாரன் வாலியால் கொல்லப்பட்டிறந்தவன். இவன் எலும்பின் குவியலே இராமர் காலால தள்ளித் தம் வலிமையைச் சுக்கிரீவனுக்குத் தெரிவித்தனர். இடைகழி - வாசற்றிண்ணே ; இஙஙனமே முன் பிள்ளேத் தமிழ்க் கொத்து 711 ஆம் பாட்டில் " விதியோ உந்தன் விளேயாட்டோ " என வருவது காண்க.

**184** நறைகொட் டலர்மென் பொகுட்டுறையும்
நல்லா ளுவப்ப வெழுதீவு
நன்கு விளேந்த கடலேழு
நடுவண் வளேத்திங் கிதைவளேப்பக்

கறைகொட் டுலோகா லோகவரைக்
கற்பித் திவ்வா றகிலாண்டம்
காட்டி யிருவீர் விளேயாடக்
கருது மிதற்கு மாறன்றே

பறைகொட் டவுணப் பெரும்புணரிப்
பசையற் றுலரக் கரிபரிதேர்
பஞ்சில் கிரிவெஞ் சூறையினில்
பறக்கும் அவைபோல் திசைசிதற

சிறைகொட் டுவணப் புள்வலவா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்த்
தேவே சிற்றில் சிதையேலே (3)

(3) நறை - தேன் ; அலர் - தாமரை ; நல்லாள் - இலக்குமி ; உலோகா லோகவரை ; சேனே முதலியார் எழுந்தருளியிருக்குமிடம் ; இருவீர் - நீயும் இலக்குமியும் ; பஞ்சில . . பறக்கும் - கொடிய சூறைக் காற்றில பஞசு பறப்பது போன்றும் மலே பறப்பது போனறும் ; உவணப்புள் - கருடன் ;

**185** குருளும் சிறிது முடிகூடாக்
குலேயும் களவும் விழிபயிலா
கொங்கைத் துணேயும் புனலிலெழும்
குமிழி யெனமார் பிடையரும்பா

மருளும் மருளுந் தரநகைக்கும்
வண்ணம் தெரியோம் பயிலுரைக்கு
மாற்ற மில்லோம் குறிப்புணரும்
மனமும் படையோம் மதனிருபன்

அருளும் தனியா ணேயைமதியோம்
அறிவில் மடவோம் குழாத்தணுகி
அடிகேள் குறும்பு செயத்துணிந்தால்
ஆகத் திருப்பாள் நகையாளோ

தெருளும் தவததோர்க் கருமருந்தே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்த்
தேவே சிற்றில் சிதையேலே. (4)

(4) குருள - பெணடிர் தலை மயிா ; குலை - நடுககம ; மருளும் மருளும் - அடுககுத் தொடா ; குறிபபு - காமக குறிபபு ; அறிவுஇல மடவோம் - அறிவறற இளைய பெண்கள் ; அடிகேள - பெரியோரை விளிககும விளி "எநதம அடிகேள் எம் முறை கேண்மோ" (மணி மேகலை மலர்வனம் புககாதை) ஆகத்திருப்பாள - இலக்குமி.

186 மகரப் பரவைக் குணடகழி
மதிலே முடைத்தென் னிலங்கையெனும்
வளமா நகரைக் கலைப்பதற்கு
வயவா னரத்தைச் செல்வித்தாய்

நகரத் துயர்ந்த புரம்மூன்றும்
நலியப் பகழி உருஎடுத்தாய்
நாகன் புரியும் வாணனுள
நகரும் குலையப் புள்ளூர்ந்தாய்

பகரக் கடிய நெடுந்தூரம்
பரந்த கிராதர் பதிசிதையப்
பகழி துரந்தா யவைகளைப்போல்
பகைப்பக் கருதேல் பழவடியோம்

செகரத் தினமே அருடகடலே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெல் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்த்
தேவே சிற்றில் சிதையேலே. (5)

(5) மகரப்பரவைக் குண்டு அகழி - சுறு மீனகளையுடைய கடலான ஆழ்ந்த அகழி சூழ்ந்த ; பகழிஉரு - திரிபுரமெரிக்குமபோது சிவபெருமானுககுத் திருமால் அம்பாய் நின்றமை ..... பாட்டுக் குறிப்பில் காணக. நாகன்புரியும் - தேவன் காவல் காக்கும். (சிவன், முருகன், விநாயகன், ஆகியோர் வாணன் நகரைக காவல் காத்தனர்) பகரக் . ., . துரந்தாய் வேடர்கள் வசித்திருந்த இந்திரன் காவற்காடான காணடவ வனத்தை அக்கினியின் பசி யடங்குவதறகாக அருச்சுனனும், கண்ணனும் கணைவிட்டு எரித்தனர்.

## வேறு

187 வாலி படக்கடு வாளி
மறப்பில் விடுத்ததும்
மாமுனி சொல்கொடு தாட
கையைப்பொரு தட்டதும்

கோலிய மாத்தலை ஓரடி
யிற்பட வைத்ததும்
கோபியர் சிக்கநெய் பால்திரு
டிப்புடை பட்டதும்

காலி துரத்திய கீழ்மையும்
　　மற்று முரைக்கிலோம்
காத லுனக்கடி யோமுன்
　　அடைக்கல மிற்றைநாள்

வேலி பயிர்த்தெறு மோசொல்
　　சிதைத்திடல் சிற்றிலே
வேணு வனத்துறை வாண
　　சிதைத்திடல் சிற்றிலே. (6)

(6) நீ மறைந்து நின்று வாலியை அம்பினால் கொன்றது, விசுவாமித்திரன் சொற் கொண்டு தாடகையென்ற பெண்ணைக் கொன்றது, அலங்கரித்த யானையை ஓரடியால் வீழ்த்தியது. கோபியர் - இடைப் பெண்கள் ; கோபியாசிக்க - ஏழாம் வேற்றுமைத் தொகை ; பால் நெய் திருடி இடைப் பெண்களிடம் சிக்கி அடிபட்டது, பசு மேய்த்தது, முதலியன தாழ்ந்த செயல்களாகப் பெண்கள் கருதினர். தன்மீது சினந்து வந்த வைகுந்தநாதனைக் கண்டு நாங்கள் இவ்வாறு கீழ்மையாகச் சொல்லாமலே இருக்க இங்ஙனம் தண்டிக்கலாமா என்கிறார். தெறுமோ - அழிக்குமோ "வேலியே பயிரை மேய்ந்தது" என்பது பழமொழி வாண - வாழ்க என்பதன் மரூஉ.

188　ஆதி முதற்பிர மாவென
　　எப்புவ னத்தையும்
ஆக விதித்தனை நீயென
　　முற்று மளித்தனை

பூதி யுடல்சடை யோனென
　　முற்று மழித்தனை
போத வுனக்கிது வேதொழில்
　　எப்பொழு துக்குமேல்

வீதியி னிற்சிறு சோறட
　　வைத்த வடுப்புநீள்
வீடு மமைத்தவெம் மாடல்
　　கலைப்பது மொக்குமோ

வேதிய ருக்கனு கூல
　　சிதைத்திடல் சிற்றிலே
வேணு வனத்துறை வாண
　　சிதைத்திடல் சிற்றிலே. (7)

(7) பூதி உடல் சடையோன் - விபூதி பூசிய உடலையுடைய சிவன் ; இவன் அழிக்குங் கடவுள் ; அழித்தனை - சிற்றிலை அழித்தாய் ; போத - அறிவுடையவனே ; விளி ; "போத - உனக்கு எப்பொழுதுக்கும் இதுவே தொழில்" என்க.

189　ஓடு நதிப்புன லாடும்
　　விருப்பி னிடைச்சிமார்
ஓகையி னுற்றுடை யாடை
　　கரைக்கு ளிருத்துநீ

கோடுடை நற்றரு மேலதை
முற்று மெடுத்துமேல
கோடலும் மற்றவா நாணி
இரக்கவும் உட்கொளாய்

பாடு படுத்தினை யாமவர்
ஒப்பநி னைத்திடேல்
பாதமி சைச்சர ணுகதி
உற்ற வவர்க்கெலாம்

வீடு கொடுக்கும் விநோத
சிதைத்திடல் சிற்றிலை
வேணு வனத்துறை வாண
சிதைத்திடல் சிற்றிலை. (8)

(8) ஓகை - மகிழசசி ; பாடுபடுததினை - இது கண்ணன் யமுனைக் கரையில் காத்தியாயினி விரதம் அனுட்டிதது வநத இடைப் பெண்கள் அவ்வாற்றில் சேலைகளைக் கரையில் வைத்து விட்டு உடையொனறின்றி நீராடக் கணணன இவர்கள சேலைகளைக் குருந்த மரத்தின்மீது வைத்துக் குழல் வாசிககக காரணம் அறிந்து அவர்கள நீரிலிருந்தபடியே கேட்கக் கொடாது இறுதியில் எல்லோரும் நீரினினறு எழுநது வந்து மரத்தின கீழ் நின்று கேட்கத் தந்தனன்.

190 பூவை கிளிக்குமுன் நாமம்
உரைக்க அருத்திணோம்
பூமலர் பட்டணி காலை
உமக்கிதெ னச்சொல்வோம்

பாவை பொருட்டடு சோறு
படைப்ப துனக்குமுன்
பாடு மிடத்தினு மாடும்
இடத்தினும் மற்றினும்

சேவை உனைப்புரி வோமடி
மைக்குடி முற்றும் யாம்
சேவடி யிற்பரல் நோக
உறுத்தற நீக்கிலோம்

மேவல ருக்கெதிர் கால
சிதைத்திடல் சிற்றிலை
வேணு வனத்துறை வாண
சிதைத்திடல் சிற்றிலை. (9)

(9) பூவை—நாகணவாய்ப் பறவை (மைனு) ; அருத்திணோம் என்ற இது சொல்லிக் கொடுத்தோம் என்று பொருள் தந்தது. பட்டு - பட்டுப் புடவை ; பாவை - மரப் பொம்மை ; அடு சோறு - நிலாச் சோறு ; பரல் - பருக்கைககல் ; மேவலர் - பகைவர்.

191 காலை முறுக்கவிழ் வாரிசம்
ஒத்த கடைக்கணைக்
காண வெமக்கு முள்ளாசை
பெருத்த துரைக்கிலோம்

மாலை மதுச்சொரி மார்ப
இமையபபிலர் பககமாய்
வாணன் முதற்றினர் தேய
குலக்கணை கட்டவா

சேலை மறுத்தகண் மாமகள்
செபபு முலைக்குளே
தேசு விரித்திடு நீல
றிறத்த விரத்தினமே

வேலை மதித்தகை யாள
சிதைத்திடல் சிற்றிலே
வேணு வனத் துறை வாண
சிதைத்திடல் சிற்றிலே. (10)

(10) வாரிசம் ஒத்த கடைக்கணை - தாமரையை யொத்த கண்களின் கடையை ; பெருத்தது - அதிகரிததது ; மதுசசொரி மாலை மாாப என்க ; இமைபபிலர் - தேவர்கள் ; கணை குலம் கட்டவா - அம்பு விடுக குலத்தைக களைநதவனே ; சேலை மறுத்த கண் - சேல் மீனை உவமையில் மறுத்த கண் ; செப்பு முலை - செப்புப் போன்ற முலை ; தேசு - ஒளி ; மதித்த - கடைந்த.

## சிறுபறைப் பருவம்

192 எறிதிரைப் புனல்மதகு பயமுழக் கங்கடைஞர்
ஈண்டியுழு தொழில் முழக்கம்
இணைமுலைக் கடைமாதர் குரவையின் முழக்கம்வித்
திடுநர் வாழ்த் திடுமுழக்கம்

பொறிதினைத் தடர்கருப் பாலையின் முழக்கமென்
புண்டரி கத்தடாகப்
புனலாடு மடமாத ரிளமைந்தர் சிவிறியால்
புனலூற்றுப் பெருமுழக்கம்

நெறிமுலைக் கனகுரல் காரெருமை கன்றுள்ளி
நெறிபடர்ந் திடுமுழக்கம்
நீலநிற வண்டினம் கள்ளுண்டு மதுரயாழ்
நிகர் மதுர விசை முழக்கம்

செறிதரப் பெறுதிரு முனைப்பாடி நாடாளி
சிறுபறை முழக்கியருளே
தேவகிக் குறுபுதல்வ மூவருக் கொருமுதல்வ
சிறுபறை முழக்கியருளே. (1)

(1) மதகு உபய முழக்கம் - மதகினின்று வரும் இருவித ஒலிகள் ; கடை ; ஓர் - மருத நில மககள் ; கடைசியர் என்பதறகுக் கடை மாதர் எனறூர். கடைசியர் - மருத நிலப் பெண கள் ; குரவை - மகளிர் தம் காதலரோடு ஆடும் ஒரு வகைக் கூதது. வித்திடுநர் . . . முழக்கும். " பாரு உடைப்பனர் போல பழிச்சினா கை தொழ ஏரோடு நினறூர் ஏர் மஙகல மும் . . . " எனற சிலப்பதிகார வடிகள் காண்க. கருப்பாலை - கரும்பு எனற மென் றொடர் கருப்பு என வன்றொடரானது ; சிவிறி - நீரிரைக்கும் கருவி ; கனறு உளளி - கன றினை நினைத்து.

193 கடமுற் றிருந்தொழுகு புகர்முகக் களியானை
கைதலைக் கொடுமுழங்கக்
கவனமாய் புரவிதம் மேற்கொளும் வயவரைக்
கைத்துமருள் கொடுமுழங்க

விடமுற்று வெம்பணிக் கொடியோன் பொருட்டுயிர்
விடுப்பவரு வேந்தர் நெஞ்சம்
மிகுபறை யறைந்துதலை பொதிரெறிந் திருகரம்
விதிர்த்துளம் வெரீஇ முழங்க

மடமுற்று யோகினி யிடாகினி முதற்கூளி
மல்குவகை யின்முழங்க
மாருதி தனஞ்செயன் தேர்மிசை இருந்துசெரு
மகிழ்கணத் தொடுமுழங்க

திடமுற்று வெண்ணிற வலம்புரி முழக்குமால்
சிறுபறை முழக்கியருளே
தேவகிக் குறுபுதல்வ மூவருக் கொருமுதல்வ
சிறுபறை முழக்கியருளே. (2)

(2) கடம் - மதம்; கைதலைக்கொடு முழங்க - தும்பிக்கையைத் தலைமேல் கொண்டு அஞ்சிப் பிளிறியோட; வயவரைக் கைதது மருள கொடு முழங்க - மேற்கொண்ட வீரர்களை வெறுத்துக் கீழே தள்ளி மயக்கம் கொண்டு கனைகக; வெம்பணிக் கொடியோன் - கொடிய பாம்பின கொடியையுடைய துரியோதனன; பொதிரெறிநது; நடுங்கி; விதிர்த்து - நடுங்கி; வெரீஇ - அஞ்சி; கூளி - பேய்கள்; மாருதி - அனுமன் இவன வீமன் வேண்டுகோளால் அருச்சுனன் தேர்மீது கொடியாக இருகக வரந்தநது அங்ஙனமே இருந்ததால் அவனும் முழங்கியதாகக் குறித்தார். வலம்புரி முழககும மால என்க. வலமபுரிச் சங்கோசையால் இங்ஙனம் நிகழ்ந்ததாகக் குறித்தா.

194 மருமலர்ப் பங்கய முகம் சுவைத் திதழூறு
மதுவுண்டு தாதளைந்து
வருசுரும் பினை யாம்பல் கண்டுளம் பொறாமையான்
மலரிதழ்க் கதவடைப்பப்

பெருமலர்க் கேதகை வசீகரம் செயுமாதர்
பெட்பெனப் பரிமளத்தால்
பிரசமுண் டெனவுட் புகுத்தி மென் பொடியினில்
பேதுறு மருள் கொடுப்ப

எமதுமண வாளன்வந் தனனெனப்
புன்னைநுண் தாதிறைப்பப்
பொன் சொரிய விதழிதன் விளநகை முகிழ்ப்ப மகிழ்
புதுமண விருந்து செய்யத்

திருமலி செழுஞ்சோலை வெண்ணெய்நக ராதிபன்
சிறுபறை முழக்கியருளே
தேவகிக் குறுபுதல்வ மூவருக் கொருமுதல்வ
சிறுபறை முழக்கியருளே. (3)

(3) கேதகை - தாழை ; பெட்பு - அன்பு ; பிரசம் - தேன மலரையுடைய தாமரையினது முகத்தைக் கண்டு இனபுற்று இனிமை மிக்க தேனைக் குடித்து மகரந்தப் பொடிகளைப்பூசி வருகின்ற வணடுகளை மலரையுடைய அலலி (வேறொருத்தியுடன் இன்பம் அனுபவித்தனன் என) கண்டு மனம் பொறுமல் தங்கள் இதழ்களை அழைத்துக் கதவை மூடிவிட கவர்ச்சி செய்யும் பொது மகளிர் காதல செய்வதைப் போன்று மலரையுடைய தாழை வாசனையால் தன்னிடம் தேன் இருககிறதெனக் கருதும்படியிருப்பதால வண்டுகளை உட்புகச் செய்து தேனில் லாததால் அறியாதிருககும் மயககத்தை கொடுக்க ; அவ்வண்டுகள் மலரையுடைய புன்னை மரத்திடம் செல்ல "எமது மணவாளன் வந்தான" என்று அவைகளிலுள்ள மலாகள் நுண்ணிய மகரந்தங்களைத் தூவ, கொன்றை மரததிடம் போக அவைகள் பொன் போன்று மகரந்தங்களைச் சொரிய, முல்லை மலர்களை அண்டையில் செல்ல அவை இளைய புன்சிரிப்புச் செய்ய அத்தகை சோலை சூழ்ந்த வெண்ணெய் நகர் என்க. பகற் காலத்தில் தாழை, கொனறை, புனனை, பங்கயம் முதலியன மலர்வதும், ஆம்பல, முல்லை குவிந்திருப்பதும் இயல்பாயே யிருக்க அவைகள் வண்டுகட்குக் கதவை மூடுவதாகவும் மற்ற செயல்கள் செய்வ தாகவும் கூறியிருப்பது தற்குறிப்பேற்றவணி.

195 தூரத்தும் கொடுஞ்சின விடங்கருக் கஞ்சிமேல்
துள்ளும் பகட்டு வாளை
துளிமழைக் குலவகடு கீண்டிரவி பச்சைவெம்
துரகத முகம்புடைத்துப்

பரத்தும் கதிர்த்திங்க ளமுதம் குழப்பிவிண்
பாய் நதியின் மீனோடாடிப்
பாரிசா தத்தின நிழல் மேயும் நிறைவெருவப்
பசும்பொன்மலர் சிந்திமீணடு

வரத்துன்ன வானமீன் வழிக்கொளத் தேங்கனி
வயின் வயின் இளைப்பாற்றவெண்
மடற்கமு கடைப்பைதர மாந்தரும் விருந்து செய
வளர் செந்நெல் கவரிவீசத்

திரத்துள்ள முன் பொய்கை புகும்வெண்ணெய் நகராளி
சிறுபறை முழக்கி அருளே
தேவகிக் குறுபுதல்வ மூவருக் கொருமுதல்வ
சிறுபறை முழக்கியருளே. (4)

(4) இடங்கர் - முதலை ; மழை - மேகம் ; இரவி - சூரியன் ; துன்ன - ஆலோசிக்க ; கமுகு- பாக்கு மரங்கள் ; அடபபை - வெற்றிலைப் பாக்கு, ஏலம் முதலியன ; ஓடத்தூரத்துகின்ற சின முதலைகளுக்கு அஞ்சி மேலே துள்ளுகின்ற பெரிய வாளை மீன்கள மேலேயுளள மேகக் கூட்டத தின் நடுவிடத்தைக கிழித்துச் சூரியனின் பசசைக் குதிரைகளின் முகத்தைத் தாக்கித் தண கதிர்களைப் பரப்பும் சந்திரனின் அமுதத்தைக் குழப்பி விண்ணில உள்ள கஙகா நதியில் அங்குள்ள மீன்களோடு விளையாடிப் பாரிசாத மரத்தின் நிழலில மேயும் காமதேனு முதலிய கூட்டங்கள் அஞ்சுமாறு கற்பகத்தின் பொன் மலாகளைச் சிநதி மீண்டும் அப் பொய்கை வர ஆலோசிக்க வானிலுள்ள கங்கை நதியின் மீன்கள் எதிர் கொள்ளத் தேன் பொருந்திய பழங் கள் தன்னிடமுள்ள மதுவைக கொடுததுத் தங்கும் இடங்களிலெல்லாம் இளைப்பாற்றப் பாக்கு மரங்கள் வெற்றிலைப்பாக்கு முதலியன தர மக்களும் விருநதினைச் செய்ய செந்நெல் தன் கதி களாகிய சாமரையால் வீச அத்தகை திறத்தோடு முன்னிருந்த குளத்திறகு வந்து சேரும் வெண்ணெய்நல்லூர் என்க. திறம் - திரம் என எதுகை நோக்கி நினறது. முன் உள்ள பொய்கை புகும் எனப் பிரித்துச் சேர்க்க. பொன்மலர் என்றுர் தேவலோகத்திலே உள்ளவை யாவும் பொன்மயமாதலால், ஆளி - ஆளுதலையுடையவன். இப்பாட்டு உயர்வு நவிற்சியணி.

196 வெம்பொறி பிறங்கு கண கனகன் புடைத்திடு
மிடற்கற் றூணனைக்கு
விழிவட்ட மாயிடா முகமதி வெளுப்புறு
மிகபசு நரம்பு தோன்றுக்

கொம்போடு நுடங்குமிடை கண்ணுறு வல்குல்
கொடிஞ்சி யந்தேர் கனமுறுக
கொங்கை வரை சீயம்பால பொதிந்தி டாக்கண்களும்
குழையுமணி வயிறு விம்மா

வம்பொடு சிறந்தவெதிர் புரைதோள்கள் மெலிவுறு
வரைகள் மூன்றுந் தெரிவுறு
வயாவுநோய் கொண்டிடா மதிபத்தும் நிறைவுறு
வந்துதித் தண்டமுகடும்

செம்பொன்வரை யும்பக முழங்குநர சிங்கமே
சிறுபறை முழக்கியருளே
தேவகிக் குறுபுதல்வ மூவருக் கொரு முதல்வ
சிறுபறை முழக்கியருளே. (5)

(5) பிறங்கு - விளங்கு; கனகன் - இரணியன்; தூண் அனே - தூணுகிய அன்னை; கருப்பம் அடைந்தால் விழி வட்டமாகும்; முகம் வெளுக்கும் (மூன்றுமாதம்) முலே மீது பசு நரம்பு தோன்றும்; இடை இடம் பரக்கும்; அல்குல் கனக்கும்; முலேயில் சீயம் பால் அடையும்; வயிறு பெருக்கும்; தோள்கள் மெலிவுறும்; வயிற்றிலுள்ள மூன்று மடிப்புக்களும் தெரியா; கருப்ப நோய் உண்டு; பத்துமாதம் ஆகவேண்டும். ஆகவே இங்ஙனம் ஒன்று மின்றித் தூணுகிய அன்னைக்கு வநதுதித்த நாரசிஙகமே என்க. முகமதி - உருவகம்; அல் குல் கொடிஞ்சி அம்தேர் - அல்குலாகிய தேர் மொட்டுளள அழகியதேர், உருவகம்; கண் களும்குழையும் அணி வயிறு - கண்களும் மாறுபட்டு நெகிழும் அத்தகை ஆபரணங்கள் கொண்ட வயிறு எனக. ஆபரணம் என்றது வயிற்றுக்கு மேலுள்ள முத்தாபரணங்கள் முதலியனவும் கீழேயுள்ள மேகலே முதலியனவும் நோககி. வம்பொடு சிறந்த வெதிர் புரைதோள்கள் - கச்சோடு சிறநதுள்ள மூங்கிலேயொத்த தோள்கள். கொம்பொடு நுடங்கும் இடை - கொம்பினுடன் மாறுபட்டு அசையும் இடுப்பு; கருப்பத்திற்கான குறிகளே முன் பிள்ளேத்தமிழ்க்கொத்து 542 ஆம் பாட்டில் காண்க. பொன்வரை - மேருமலே; பக - பிளக்க;

## வேறு

197 நாகணை மீதில் யோகுசெய் வாயுனை
நத்தினர் பெறுகதி நீ
நான்முக ஞர்மறை ஓதிமமாகி
நலத்தொடு மருளிணையான்

மாகன காசுரன் ஓரறை தூணின்
மலேக்குமுன் அவனெதிரே
வாளரி யாயவன் மாமகன் வாய்மை
மகிழ்ச்சியி னிருவினை தேய்

ஆகலினாலுனை யேசர ணாக
அடித்துணை தொழு பெரியோர்
ஆடுக பாடுக வாவென வோதினும்
அப்படிப் புரிகுவையால்

மோகன ரூப நாதர் சகாய
முழக்குக சிறுபறையே
மோதுறு சீர்நவ நீதபு ரேசன்
முழக்குக சிறுபறையே. (6)

(6) நத்தினர் - விரும்பினவர் ;
"முன்னில் ஏழேழுலகுணர் வின்றியிருளமிக உம்பர்கள் தொழுதேத்த "
அன்னமாகி யன்றருமறை பயந்தவனே."
என்றார் திருமங்கையாழ்வார்.
அன்று அன்னமதானானே ; அச்சோ வச்சோ
அருமறை தந்தானே அச்சோவச்சோ. என்ற
பெரியாழ்வார் வாக்கினையோர்க.

கனகாசுரன் - இரணியன் ; அவன் மாமகன - பிரகலாதன் ; தேய் ஆகலினால - தேய்த் தாய் ஆகையால்,

198 சீதர நாரண வாமன கோவல
சிட்டர்க ளுறுதுணையே
தேவர்கள் நாயக பூமி மணாள
திருவிக்கிரம னாகரியே

மாதவ மால்வசு தேவ குமார
மலர்க்கண் மணிவண்ணனே
வாம புராதன ஆயிரவாய
வத்திரி துயிலப வசா

கேதபு ராதிப மீனமோ டாமை
கிருட்டிய னுருவுடையாய்
கேசவ பூரண ராகவ தேவகி
புத்திர கரியவதா

மோதர ராம கிரீடி செல்பாக
முழக்குக சிறுபறையே.
மோதுறு சீர்நவ நீதபு ரேசன்
முழக்குக சிறுபறையே. (7)

(7) கோவல சிட்டர்கள் - யாதவர்களாகிய நல்லவர்கள் ; புராதனன் - பழைமை மேற்கொண்ட முதற்கடவுள் ; ஆயிர வாயவத்திரி துயில்பவ- ஆயிரம் வாய்களையுடைய முகங்களையுடைய ஆதிசேடன் மீது துயில்பவனே. வத்திரம் - முகம். அதனையுடைய வத்திரி ஈண்டு இகர விகுதி வினை முதற் பொருளைக் காட்டியது. சாகேத புர அதிபா எனக் கூட்டி அயோத்தி நகரத்திற்குத்தலைவா என்க. கிருட்டி - பன்றி. கிருட்டியன் - வராகவதாரம் தாமோதரராம என்க ; கிரீடி செல்பாக - அருச்சுனனைச் செலுத்தும் தேர்ப்பாகனே ;

199 ஆதியு மீறுமிலாத புராண வுன்
அற்புதச் சரிதை யெலாம
ஆதி பராசரன் வேத வியாதன்
அவர்க்கரு மக னிவர் தாம்

ஓதிய காதை அநேகம தேவிவ்
உயிர்த்துணை யெனவுலகோர்
ஓதுவ ராடுவர் பாடுவர் நாடி
உளத்திடை நினைவரதால்

சோதிகொள் வீட்டை வார்பிற வித்துயர்
துய்த்திடு கில ரெனில்நின்
தோம நாம மலா தெவ ர்க்குமோர்
துப்புடை நலமுளதோ

மூதறி வானவ நாதர்கள்நாத
முழக்குக சிறுபறையே
மோதுறு சீர்நவ நீதபு ரேசன்
முழக்குக சிறுபறையே. (8)

(8) பராசரனுக்கும் மச்சகெந்திக்கும் பிறந்தார் வியாசர் ; அவர்க்கு அருமகன் - சுகமுனிவர்; வியாசர் புத்திரபபேறு வேண்டிச் சிவபிரானை நோககி யாகாதி காரியம் செய்யத் தனித்து அரணியைப் பிடித்துக் கடைகையில் கிருதாசி என்னும் அப்சரசு தோனறி யவரைக் காமத்தில் மூழ்குவித்துத் தான்சுகம் எனும் கிளியுருக்கொண்டு இருக்கையில் வியாசர் வீரியம் அரணியில் விழுந்து சுகர் பிறந்தனர். வியாசரும் கிளியுருக்கொண்டு புணர்ந்து சுகர் பிறந்தனர் என்ப. தோம் அறு - குறற மறற ;

200 ஆலிலை மேலொரு பாலக னுயவண்
அற்புத முறுவடிவு
ஆர்கலி மீதர வாதன மாக
அணைத்தறி துயி லுருவு

மேலிரு நாலுட னூருள் சீர்பதி
மெச்சிய படி யுள நால்
வேதமு மோர்வரு சோதிகொள் தாமம்
விருப்புறு சடிலமும் நீள்

கோலம்தா மவ தாரநன் மேனி
குறித்ததும் இவைகளெலாம்
கோதறு சீரடி யார் தொழ நீ கொள்
குணத்திரு வுருவலவோ

மூலமு மீறு மிலா வகி லேசன்
முழக்குக சிறுபறையே.
மோதுறு சீர்நவ நீதபு ரேசன்
முழக்குக சிறுபறையே, (9)

(9) ஆர்கலிமீது அரவு ஆதனம் ஆக அணைத்து அறிதுயில் உருவு - கடல் மீது ஆதி சேடசயனத்தில் சேர்ந்து யோக நித்திரை செய்யும் வடிவம். ஓரவு அரு—அறிவதற்கு அரிய ; சடிலம் - சடை ; கோது அறு - குற்றமற்ற ;

201 சேவடி நோதர வேதரு மாதியர்
செப்பிய வுரை கொடுபோய்ச்
சீர்பெறு வாரண மாநகர் மேவு
திருக்கிலன் மகனுடனே

ஆவது பேசியும் நாடு கொடாமல்
அடர் சமர் புரிவனென
ஆயவ னோதிய வாசக நீமுன்
அமைத்தது தவிரு மதோ

கோவல னேகுட மாடும் விநோத
குகற்குயி ரின்துணைவா
கோகன கரசனை யாசைகொள் நாயக
குற்றுரு வுடையவனாய்

மூவடி மாவலி தாவெனும் மாய
முழக்குக சிறுபறையே
மோதறு சீர்நவ நீதபு ரேசன்
முழக்குக சிறுபறையே. (10)

(10) தரும ஆதியர் - தருமாதியர், தருமனை முதலாகக்கொண்ட பாண்டவர், தீர்க்க சந்தி பெற்ற வட மொழித் தொடர் ; வாரண மாநகர் - அத்தினபுரம் - அத்தி - யானைக் கொரு பெயர். அதனைக் குறிக்கும பரியாயமான வாரணம் என்பதால அத்தினபுரத்தைக் குறித்தார் திருக்கு இலன - கண்ணில்லாத திருதராட்டிரன் ; அவன் மகன துரியோதனன் ; நீமுன் அமைத்தது என்பது பூமிதேவிககு வாக்குக் கொடுத்து அதனை வில்லிபாரதம் சூது போர்ச் சருக்கம் 204—207 பாட்டுகள் காண்க. குடம் - குடக் கூத்து தனது பேரனாகிய அநிருத்தனை வர்ணன் சிறைப்படுத்த அவனது நகர வீதியிற் சென்று கணணன குட மெடுத்தாடிய கூத்து. குகன் - குகன் எனனும் பெயருடைய வேடன். இராமாவதாரத்தில் நட்புகொண்டவன் ; கோகனக ஆசனை - தாமரையை ஆசனமாகவுடைய திருமகள் ; குறுமை + உரு குற்றுரு வாமனாவதாரம்.

## சிறுதேர்ப் பருவம்

202 குங்கும மணிக்கலச விளமுலைப் பொற்றொடிக்
குறுநகைப் பசியவேய்த்தோள்
கோகனக மலர்முகப் பிறைநுதல் சுருள்குழல்
குதலையந் தீஞ்சொற்சினம்

பொங்கு மரவின்படம் புரையக லல்குல்
பொலன்சிறக் கோதிமநடைப்
புனைமடல் கமுகமிட ஈரிபரந் திருகுழைப்
பொருங்கரு நெடுங்கடைவிழித்

தங்கு மிளவாழைக் குறங்கலத் தகவடித்
    தளரிடைச் சுழிகொள் உந்தித்
தளிரியல் புருவவில் வளைவார் குழையொளி
    ததும்புசெம் மணிமேகலைச்

செங்குமுத மெல்லிதழ்க் கோபியர்க் குறுதுணைவ
    சிறுதேர் நடத்தியருளே
தெய்வம் பராவுபுகழ் வைகுந்த நாதனே
    சிறுதேர் நடத்தியருளே. (1)

(1) கலசம் - குடம் ; வேய் - மூங்கில் ; கோகனக மலர் முகம் - தாமரைமலர் போன்ற முகம் ; ஓதிமம் - அனனம் ; கமுகு - பாக்குமரம் ; அரி பரநது இரு குழை பொரும் கரு நெடுங் கடை விழி - செவ்வரி பரநது இருகாதுகளையும் போரிடும் கரிய நெடிய கடைகளையுடைய கண்கள் ; குறங்கு - தொடை அலத்தக அடி - செம்பஞ்சுக் குழம்பூட்டப் பெற்ற பாதம் ; சுழி கொள் உநதி - ஆற்றின சுழியொத்த உவமைகொண்ட கொப்பூழ் ; தளிர் இயல் -மாந் தளிரினை யொத்த உடல் தன்மை ; வளை வார் குழை - வள்ளைப்பூ வொத்த காதுகள் ; ஒளித்தும்பு செம்மணிமேகலை - ஒளி மிகுகின்ற சிவநத மாணிக்கம் பதித்தமேகலை ; ஈணடு கோபியாகளை வருணித்ததையும நோக்கறபாலது.

203 வஞ்சினக் கருமனக் கஞ்சமா மன்சிலை
    மகங்காண வருக என்ன
வந்தகாந் தினிமகன் தேர்விடக் காளிந்தி
    மாநதிக் கரைசென்றவன்

அஞ்சனப் புனல்படிந் தாடவந் நீரினிடை
    ஆயிரம் படநாகமேல்
அறிதுயில் கொளு முருவம் ஒன்றுகண் டதிசயம்
    அடைந்துகரை ஏறவங்கு

மஞ்சினைத் தொடவுயர மணிக்கொடித் தேரினும்
    மலர்க்கண் களிப்பநோக்கி
வந்தனை புரிந்துதுதி செய்யநீ செயுமாயம்
    வானவர்க் குண ரலாமோ

சிஞ்சிதப் பரிபுரச் சேவடிப் பரமனே
    சிறுதேர் நடத்தியருளே
தெய்வம் பராவுபுகழ் வைகுந்த நாதனே
    சிறுதேர் நடத்தி யருளே. (2)

(2) சிலை மகம் - தனுர்யாகம் ; காந்தினி மகன் - 'காந்தினி என்பவளுக்கு மகனான அக்குரூரர் ; காளிந்தி - யமுனை ; அஞ்சன்பிபுனல் - கருநிறமான நீர் ; யமுனை நதியின் நீர் கருநிறமாயிருக்கும்; மஞ்சு ; மேகம் ; வந்தனை - வழிபாடு ; பரிபுரம் - சிலம்பு. சிஞ்சிதம் அசையும் ஆபரணங்களாலெழுமொலி ;

அக்குரூரர்.—சுவ பலகனுக்கும காந்தினிக்கும் பிறந்தவர். கம்சனின் 'மந்திரி, இவர் கம்சன் வேண்டுகோளால் நந்தகோபரிடம் சென்று தனுர்யாகச் செய்தி கூறிப் பலராமகிருஷ் ணரைத் தேரில சாரதியாக நினறு அழைத்துககொண்டு யமுனு நதிக் கரையடைந்து தாம் தனித்து நீரில் மூழ்கி நீராடினுர். இவர் பலராம கிருஷ்ணரிடத்து அந்தரங்க பக்தியுடையவ ராதலால் பலராம கிருஷ்ணர்கள் இருவரும் இவர்க்கு நீரிற்குள் தேருடன் தரிசனம் தரத்

திடுக்கிட்டு வெளியில் வந்து அவர்களை மீண்டும் தேரிலே கண்டு களித்து மீண்டும் மூழ்கி நீராடும்போது ஆதிசேடசயனத்துடன் பரமபத நாதனாகிய திருமாலை நீரில் கண்டு தரிசித்து பலராம கிருஷ்ணர்களை அழைத்துச் சென்று கம்சனுக்கு வரவு கூறியவர்.

204 கார்நடத் துங்கொடைக் கர்ணனும் விசயனும்
காது சம ராடுபோதில்
கனலினுக் கமுதூட்டு நாளுடல் வெதுப்புறும்
காரணப் பகையுடைமையால்

போர்நடத் துஞ்சிலைக் கழன்முகப் பகழியாய்ப்
போதரும் கருமிடற்றுப்
பொறியுடைப் பணவரவு வெம்பிவரு மாகண்டு
பூமகள் நெகிழ்ந்துதாழப்

பார்நடத் துந்திருப் பதகமல மூனறியப்
பாண்டவர்க் கரசுநலகிப்
பாந்தள்வெம் கொடியவன் குலமடங் கலுமறப்
படையொன்று கைக்கொளாது

தேர்நடத் துந்தொழில் கண்ணமணி வண்ணனே
சிறுதேர் நடத்தியருளே
தெய்வம் பராவுபுகழ் வைகுந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (3)

(3) கார் நடத்தும் கொடை - மேகத்தையும் ஒப்புமையில் துரத்தி நடத்துகின்ற அத்தகைய கொடை; காதுசமா - கொல்லுகின்ற சண்டை; இது 17-ம் நாள் சண்டை; கனலினுக்கு..................அரவு—கண்ணனும் அருச்சுனனும் தனிததிருந்த போதில் அக்கினி பிராமணவடிவங் கொண்டு யாசித்து அதனபடி காண்டவ வனத்தை (இநதிரன் காவற்காடு, யமுனையாற்றங்கரை மேலிருநது) எரிககும்போது அதனுள்ளிருந்த தக்ஷன் மகனுன அசுவ சேனன் என்ற இப்பாம்பு அகனியில அகபபட்டு தப்பியோட நினைத்து ஓட அருச்சுனன் கணையெய்ய வாலினிடம் பட்டு இந்திரனால் காப்பாறறப்படடு அருசசுனன் பகை வன் யாரென யோசித்து இறுதியில் காணனிடம் செனறு வளாநதான. குந்தியிடம் தந்த வாக்குப்படி 17-ஆம் நாள் சண்டையில அருசசுனன தலையைப் பாாதது இககணையை ஏவ, அப் போது கண்ணன் தேரைச் சிறிது கீழ் அழுத்த அருச்சுனன கிரீடததை மட்டுமே கொணர்ந் தது. பின் அருச்சுனனால் கொல்லப்பட்டான். அழல் முகப்பகழி - அக்கினிக்கணை போன்று; பொறி - படப் பொறி: அரவு - அசுவசேநன்; பாந்தள் - பாம்பு.

205 பாராதி யைம்புலனு மைந்துநிலை யென்புதோல்
பசுநரம் பூன்தசையெலாம்
பருவாணி சிற்றாணி பலகைமேல் விரியாடை
பகருமிரு வினைபுமச்சுப்

பேராத வாருயிரும் மனமுதல் பொறிகளும்
பெரும்பரியு மூர்வலனுமாம்
பிறப்பிறப் பின்பதுன் பங்களும் நான்குருள்
பெயர்பெற்ற மாயைவீதி

ஆராத கருமவிந் திரியமோ ரைந்துமேல்
அமரலங் காரமெனமேல்
ஆசையொரு மூன்றுமே வோட்டமிவ் வாறுசீ
வான்மா வனந்தமுமோரோர்

தேராக்கி யவைகளை நடத்திவினை யாடுமால்
சிறுதேர் நடத்தியருளே
தெய்வம் பராவுசீர் வைகுந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (4)

(4) பாராதி ஐம்புலன் - நிலன், நீர், தீ, வளி, விசும்பு என்பன. நிலை - தேர்த்தட்டு. மனமுதல் பொறிகளைக் குதிரைகளுககும் தேர்ப்பாகனை ஆருயிர்க்கும் எதிா நிரணிறையாகக் கொள்க. இங்ஙனம் கூறியது மன முதலிய பொறிகள் தன் வழிச் சென்றாலும் ஒழுக்க முள்ள உயிர் நல் வழியே செலுத்து மாதலால் பாகனுக்குவமை கூறினர். "ஒழுக்கம் விழுப் பம் "........... ..படும்" எனற குறட் கருததை யோர்க. உருள் - சக்கரம். பிறப்பு மிறப் பும் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவன போன்று சக்கரமும் சுழன்று வருவதால் இங் ஙன் கூறினர். "துகடீர் .................... அகடுறயார் மாட்டும் நில்லாது செல்வம் சகடக்கால் போல வரும்" (நாலடியார்) என்ற பாட்டினை ஓாக. கரும இந்திரியம்.—வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்பன, ஆசை மூன்று.—மண், பெண், பொன்.

206 வெங்கதிர்முன் நின்றிரத முன்செலப் பின்சென்று
விஞ்சைகள் பயின்ற வனுமான்
வேதண்ட மன்னதிண் தோள்நிற்ப வாசவன்
விடுத்திடு தடந்தேர் மிசைத்

துங்கமர கதமணிப் பெருவரை யெனநின்று
தோள்பதித் திருநிருதர்கோன்
தொகையுடை முடிச்சிரம் பத்துமற் றற்றுமேல்
தோன்றுதல் வியந்துநோக்கிப்

பங்கய னயிற்கணைக் கவனுயிர்ப் பலியீந்து
பட்டவா னரருமுய்யப்
பைந்தொடி யுடன்மலர் விமானத் தயோத்தியம்
பதியடைந் துலகோர்தொழச்

செங்கதி ரவன்குலம் தழையவர சாளுமுகில்
சிறுதேர் நடத்தியருளே
தெய்வம் பராவுபுகழ் வைகுந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (5)

(5) கதிர் - சூரியன் ; வெங்கதிர்......அனுமான் ; இவர் இளமையில் சூரியன் இரதத்திற்கு முன் சென்று நவவியாகரணங்கற்றவர். வேதண்டம் - மலை ; அனுமான்...... மிசை—இராவணன் தேரிலிருந்து சண்டை செய்யும்போது இராமர் அனுமான் தேரின் மீதிருந்து சண்டை செய்ய, இந்திரன் கண்டு தன் தேரினையும் சாரதி மாதலியையும் அனுப்பினான். பின்னர் அதன் மீதிருந்து சண்டைசெய்து சிரம், கரம் முதலியன பல முறை கொய்தும் விபீஷணன் உதவியால் இரகசியம் அறிந்து பிரமாத்திரத்தை மார்பில் எய்து உயிர் போக்கினார். இரு நிருதர் கோன் - கருமையையுடைய அசுரர்கட்கு அரசன், இராவணன்

(இருமை - கருமை) வாசவன் - இந்திரன் ; தொகை.................... தோன்றுதல்—இராவணன் அமுதம் உண்டதால இவவாறு நிகழ்ந்ததென்பர். பங்கயன் அயில்கணை - பிரமனது கூரிய அத்திரம் ; (பிரமாஸ்திரம்) பட்ட வானரர் உய்ந்தது - மறுபடி சஞ்சீவி மலை கொணர்நது இறந்த குரங்குகளை பிழைப்பித்தார் இராமா ; பைந்தொடி - சீதை, அன்மொழித்தொகை.

## வேறு

207 மன்றல் நடத்தும் மலர்களெல்லாம்
வண்டு நடத்தும் செழுங்கமல
வாவி நடத்தும் சிறையெகினம்
மடுவு நடத்தும் தவள சங்கம்

குன்றம் நடத்து முருக்களிறு
கொடுவெஞ் சினமு மதனடத்தும்
குலவும் பரியைங் கதிநடத்தும்
கொடிகொள் மறுகு விழாநடத்தும்

ஒன்ற நடத்தும் பருவமின்னார்
உள்ளம் நடத்தும் அனங்கன்வெம்போர்
உயர்பொன் மதில்கார் முகில்நடத்தும்
உலகம் நடத்தும் நீதி தண்கால்

தென்றல் நடத்தும் வெண்ணெய் நல்லூர்ச்
செல்வா சிறுதேர் நடத்துகவே
செழிக்கும் மலர்மென் மங்கைமகிழ்
திருமால் சிறுதேர் நடத்துகவே. (6)

(6) மன்றல் - வாசனை ; எகினம் - அன்னம் ; உரு - பெரிய ஐங்கதி - "விகசிதம், வற்சிதம், வெல்லுமுப் கண்டம் மததிமம் சாரியோடைந்து" என்பதுகாண்க ; கொடிகொள் விழா என்க ; மறுகு - தெரு ; மினனார் உள்ளம் அனங்கன் வெம போர் நடத்தும் என்க உலகம் நீதி நடத்தும் என்றும் தண்கால் தென்றல் நடத்தும் என்றும் கொள்க. மற்ற பொருள்கள் என்னென்ன நடத்துகின்றன என்று கூறி நீயும் தேர் நடத்துக என்று கூறுவது சிறு பாலருடைய இயல்புக் கேற்பத தாயர் முதலியர் கூறுவது போன்று அமைந்துள்ளது கருதி மகிழற்பாலது. உயர் பொன் மதில்........நடத்தும் - உயர்வுநவிற்சியணி.

208 மலையை வளைக்கு முலையுருக்கும்
மணியைத் திணிதோள் சிசுபாலன்
மன்றல் விளைக்க வரவந்நாள்
மடந்தை விடுத்த முடங்கல் முன்னூல்

கலையை வளைக்கும் கிழமறையோன்
காட்ட வுணர்ந்து தடந்தேர்மேல்
கவுரி வளைப்பில் கவர்ந்து செல்லக்
கறுவிச் சமரா உருக்குமியைத்

தலையை வளைக்கும் சிகையைந்தாச்
சசிவாய்ப் பகழி விடுத்திறுகத்
தடந்தேர்க் காலில் பிணித்தெதிர்ந்த
தரணி பாலர் குலைந்தோடச்

சிலையை வளைக்கும் வெணணெய் நல்லூர்ச்
செல்வா சிறுதேர் நடத்துகவே
செழிக்கும் மலர்மென் மங்கைமகிழ்
திருமால் சிறுதேர் நடத்துகவே. (7)

(7) மன்றல் - கலியாணம் ; மடந்தை - உருககுமணி ; முன்னூல்கலையை வளைக்கும் - பழைய வேதமாகிய கலையை நன்கு கறற ; வளைப்பு - குடியிருப்பிடம் ; சசிவாய்ப்பகழி - அர்த்த சநதிரக்கணை ; தடநதேர்ககாலில் இறுகப் பிணித்து என மாற்றிக் கூட்டுக. உருக்குமணி—பீஷ்மகன் குமாரி, தமயனாகிய உருக்குமிதன்னைச் சிசுபாலனுக்கு மணப் பிக்க இருந்ததை ஒரு பிராமணர் மூலமாய்க கண்ணனுக்கறிவித்துக் கௌரி பூசையெனக் கூறி அக்கோயிலுக்குச் செல்ல அஙகுக் கண்ணன் வந்து தேரிலேற்றிச் செல்லத் துவாரகை சென்றனள். அப்போது உருக்குமி பொறாமல் போர்க்குவர அவனை அர்த்த சந்திரபாணங் களால் கலஙக அடித்து ஐந்து விதமாகக குடுமி வைத்துத் தோக்காலில் கட்டினார். பின் உருக்குமணி வேண்டக் கொல்லாது விட்டார்.

" உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக்கொண்டு விருப்புற் றங்கேக விரைந்து எதிர் வந்து செருக்குற்றான் வீரஞ் சிதையத் தலையைச் சிரைத் திட்டான் வன்மையைப் பாடிப்பற தேவகிச் சிங்கத்தைப் பாடிப்பற. "

என்ற ஆழ்வார் வாக்கினையோர்க.

209 நிறக்கும் வடநூல் மொழியதனால்
நிகழ்த்தும் வில்வப் பெயர்முனிவன்
நெடுநாள் முயன்ற தவத்தினுக்கு
நீவேண் டுவன வுரையென்ன

மறக்கும் கருத்தி னடியனுக்கு
மச்சம் முதலாய்ப் பரியீறாய்
வடிவம் பத்தும் கண்டுதொழ
வரம்வேண் டுமெனப் பணித்தனுமே

பறக்கும் பறவைக் கரசன்மிசைப்
பதும மடந்தை பக்கநிற்பப்
பகரும் முனிவர் விண்ணோர்கள்
பரவப் புவனம் தழைப்ப நன்மை

சிறக்கும் வெண்ணெய்ப் பதியுவந்த
செல்வா சிறுதேர் நடத்துகவே
செழிக்கும் மலர்மென் மங்கைமகிழ்
திருமால் சிறுதேர் நடத்துகவே. (8)

(8) பரி - கல்கி அவதாரம் ; பறவைக்கரசன்—கருடன் ; வில்வ முனிபன் - இவ்வரலாறு இவ்வூர் தலபுராணத்திலுள்ளது போலும்.

0 மனையும் மதிலும் மாதங்கம்
மறுகெங் கனுமா மாதங்கம்
வாவி தொறு நந் தனவனங்கள்
வாடை செறிநந் தனவனங்கள்

நினையற் கரும்வான் தொடுந்துவசம்
நிறைகற் புடையார் தமது வசம்
நிதிபூண் சொரியு மெவர் கரமும்
நிகரன் றிமையோர் பொன்கரமும்

புனையும் மணியா லிருள்விலகும்
புத்தேள் விழாக்கள் மிக விலகும்
பொழியும் செல்வம் திருவனிதை
போதன் தானே புகழ்வனிதைத்

தினமும் செழிக்கும் வெண்ணெய் நல்லூர்ச்
செல்வா சிறுதேர் நடத்துகவே
செழிக்கும் மலர்மென் மங்கைமகிழ்
திருமால் சிறுதேர் நடத்துகவே (9)

(9) மனையும் மதிலும் மாதங்கம் - மனை, மதில முதலியன பொன்; மறுகு எங்கனும் மா மாதங்கம் - தெரு வெலலாம் பெரிய யானைகள்; வாவிதொறும் நந்தன வனங்கள் (நந்து + அன + அனஙகள்)—குளங்களிலெல்லாம் சங்கினையொத்த வெண்மையான அன்னங்கள்; வாடை செறி நந்தன வனஙகள் - வாசனை மிகுந்த நநதவனத் தோட்டங்கள்; நினையற்கு அரும்வான் தொடும துவசம் - நினைத்தற்குமரிய தூரததிலுள்ள ஆகாயத்தைக் கொடிகள் தொடும்; நிறை கற்புடையார் தமது வசம் - கற்புடைய பெண்கள் தங்களைக காப்பாற்றிக் கொள்ளுவது அவர்களது வசமே; " சிறைகாக்கும் . . . . . . . தலை " என்ற குறள் நோககுக. இமையோர் - தேவர்; மணி - மாணிககம்; இருள்விலஙகும் - இருள் கெடும்; புத்தேள் விழாக்கள் மிக இலங்கும் - தெய்வத திருவிழாககள மிகவும் விளங்கும்; போதன் - பிரமன்; வனிதை - திருமகள்; புகழ்வனிதை - வினைத்தொகை;

## வேறு

21 நல்வருண நான்கினும் மானிடவர் தந்தொழில்
நடாத்திவுயர் புகழ்தழைப்ப
நன்மை பெறு திருமுனைப் பாடிநா டெங்கனே
நாளும்விளை செந்நெலோங்கப்

பல்வகைய மணிகளும் சாந்துமகி லும்மலர்ப்
பந்தியும் சிந்தியலையில்
பாவையர்க ளுந்திவரு பெண்ணைமா நதிபுனல்
பரந்து குறை யாது பெருகக்

கல்வி நிறை மாந்தரும் கற்பு நிறை மங்கையர்
கணங்களும் வயமைந்தரும
கனகமணி மேடையும் தேவர்மங்கல விழாக்
காட்சி மிக நனி சிறந்து

செல்வம் வளர் வெண்ணெயம் பதிதழைய மருவுமுகில்
சிறுதேர் நடத்தி யருளே
தேவாதி தேவவை குந்தநா யகர்வாழி
சிறுதேர் நடத்தி யருளே (10)

(10) மணி - இரததினஙகள் ; சாநது - சநதனம் ; பாவையர்கள் உந்திவரு பெண்ணை - பெணகளின கொப்பூழ போனறு சுழிதது வருகின்ற பெண்ணை நதி.

(திருவெண்ணெய்நல்லூர் வைகுந்தநாதன் பிள்ளைத் தமிழ் முற்றிற்று.)

## மணவைத் திருவேங்கடமுடையான் பிள்ளைத் தமிழ்

### காப்புப் பருவம்

### நம்மாழ்வார்.

212 பொன்னு ராழிப் படைசுமந்து
புவனம் காக்கும் பூவை வண்ணப்
புத்தேள் மணவை நகர் பொருந்தும்
புயலைத் திருவேங் கடமுகிலைத்

தென்னு ரமுதத் தமிழ்ப் பனுவல்
தெளிந்து பிள்ளைத் தமிழ்ப் பாடுஞ்
செய்ய பதநதோ றினுங் காக்கச்
செய்யும் கருணை திளைத்தோங்கி

முன்னாள் மறைநா லாயிரமாய்
முறையாற் றுறைச் செந் தமிழ்மாலை
மொழியுந் தோறு மனங்களிப்ப
மொழிந்த கனிவாய் முகிழ்முறுவல்

பன்னு ளடியா ருளம் விளங்கப்
பாணித் துறையும் பராங்குச நூல்
பாவேந் தருக்கும் வேந்த னினைப்
படரும் கிரணப் பதயுகமே (1)

(1) ஆழி - சக்கரம் ; பூவை வண்ணம் - காயாம் பூ ஒத்த நிறம் ; தென் - அழகிய ; பாணித்து - நிறைவேறறி ; பராங்குசர் - நம்மாழ்வார் ; முன் பிள்ளைத் தமிழ்க் கொத்து, 102-ஆம் பாட்டு, 562-ஆம் பாட்டு குறிப்பு காணக.

### திருமகள்

213 பாரும் புனலும் விசும்புஞ் சுசியும்
படர்தரு படியேழும்
பதமலர் முளரிகொ டளவிடு துளபப்
பச்சைப் புயல் மேனி

வீரம் புரிதரு வீரன் வேங்கட
முகிலமிசை யின்னிசையால்
விள்ளப் புகழ்பெறு பிள்ளைத் தமிழ்ச் சொல்
விரகொடு புகழ்பெறவே

காருந் துளியமு தாரும் பிறையுங்
 காணரு மலையமலைக்
கால்முந் திரதமுன் னூருஞ் சேய் பெறு
 காரணி யாரணி நேர்

வாரும் பூணும் பூணுங் கனதன
 மலர்மயி லிலகொளிசேர்
மலரடி கள்மென் மனமிசை கனிய
 வழுத்தி யழுத்தவனே (2)

(2) சுசி - ஈண்டு அக்கினி ; படி - பூமி ; பத முளரி மலா - உருவகம் ; பதமலர் . . . . அளவிடு - திருவிக்கிரமாவதாரத்தில ; விரகொடு - உறசாகததோடு காரும். . . . . சேய்-மேகமும் துளிகளும் அமுதமும் பொருந்திய சநதிரனும் காண்பதற்கரிய உயரமுள்ள பொதிய மலையினின்று வரும் தென்றல் காற்றுன மனத்தைக காட்டிலும் முநதிச் செல்கின்ற தேரை முன்னதாக ஊர்ந்து செல்கின்ற மன்மதன ; மலையமலை - பொதிய மலை மன்மதனுக்குத் தென்றல் தேராகும் ; சநதிரன தேவர்கட்கும் பிதிராககும அமுதம் கொடுப்பது தெரிந்ததே. சேய் பெறுகாரணி.—கண்ணனுககும திருமகளவதாரமான உருக்குமணிக்கும் மன்மதன் சிவனால் எரிககபபட்ட பினனர் மகனாக வநது பிறநது பிரத்தியும்னன் என்று பெயர் கொண்டதால் இஙஙனம கூறினர். வாா - கச்சு ; மலா மயில் - மலரின தஙகுகின்ற மயிலினை யொத்தவர்.

**கலைமகள்**

214 சில்லியந் தேர்மே . . . . . . கதந்
 திங்கள் நிறம் பாசடையதாய்ச்
செறிகதிர்க் கிரண நிறை யருவிசாய்த் தெழுமிரவி
 செங்கமல மென்னுப்பணே

புல்லியந் திரையே . . . . . . வுததியிற்
 பொறியுடற் கறையனைத்தே
பொங்குகண் ணவனையின் றித்துயி லுணர்ந்து வளர்
 பொழிகருணை யங்கடலினைச்

சொல்லியல் கொழித்ததமிழ் தேர்மணவை நகர்மேவு
 சுந்தர பரந்தாமனைத்
துதிசெயும் பனுவற்றொடைக்கவிதை நாவினில்
 தொன்று தொட் டினிதிருக்கும்

வல்லியபி ராமிவெண் கமலா சனத்திவெண்
 வடிமனைத் துதிகமேன
வடிசுடரி னுள்தண்டா மரைத் தழுவு மன்னமிரு
 மலரடித் துணைசரணமே (3)

(3) சில்லி - சக்கரம் ; பாசடை - பசிய இலை ; இரவி - சூரியன ; உததி - கடல் ; கறையணைத்தோ - விஷம் பொருந்திய ஆதி சேடனுகிய படுக்கையில், அணை - படுக்கை ; வெண் கமலம் - வெண்டாமரை ; அன்னம் - அனனம் போன்ற சரசுவதி.

### திருமங்கையாழ்வார் முதலியோர்

215 கல்வேழ முண்ணவெதிர் நல்வேழ முதவுமொரு
கண்வேழ மடுத்தமுன்னுள்
காயிரவைத் தீர்த்தருளும் மாயனைத் தூயனைக்
கருதுமல ருள்நேயனைக்

கொல்வேழ மிருகோ டொடித்தகோ ளரியினைக்
கோசலைக் கிருகண் மணியைக்
குன்றுத வளமைதரு மணவை வளர் கொண்டலைக்
கூறுமென் கவிதழையவே

பல்வேத முதலான வாறங்க மான நிரைப்
பரவையைக் கரை கண்டுமே
பரசிலைத் துளவமலர் வாசனைத் தமிழ் கொண்டு
பாடுமொரு பன்னிருவர் தாள்

சொல் வேலை யமுதமென நினைதோறும் புளகமொடு
தோத்திரம் செய்து கல்லில்
தோற்றுத வகையதனை மாற்றினே னடிமையில்
தோன்றுமுன் னடிமை பெறவே (4)

(4) கல்வேழம் - கல்யானை ; நல்வேழம் - நலல கரும்பு ; கண் வேழம் - கணுக்களை யுடைய மூங்கில் சிவபிரான் திரு மூஙகிலாய்ப்பிறநதது முன் பிள்ளைத் தமிழ்க் கொத்து 369-ஆம் பாட்டின் குறிப்பில் காணக. கலவேழம் . . . . . . . . . . உதவும் ; எல்லாம் வல்ல சித்தராய் எழுந்து மதுரைக்கண் திருவிளையாடல் செய்த சிவபெருமானைப் பாண்டியன் சோதிக்கும் பொருட்டு "இக் கல்லானையைக் கரும்பு தின்னவைப்பீரா" என அங்ஙனமே தின்னக் காட்டிப் பின்னும அவனது தாரையும் பிடுங்க ஆரம்பிக்க பழையபடி செய்தார். (திருவிளையாடற் புராணம், மதுரைக் காண்டம்). காய் இரவு - வருந்தும் பசிக் காக யாசிப்புத் தொழில் ; . . . . . . . .ஆம் பாட்டின் குறிபபுக் காண்க. கொல் வேழம் - குவலயாபீடம் ; அரி - சிங்கம் ; பின்னிருவர்களின் பெயர்களை முன் பிள்ளைத் தமிழ்க் கொத்து 110-ஆம் பாட்டின் குறிப்பில் கண்டு தெளிக.

### பன்னிரு சூரியர்கள்

216 போராழி சூழுலகி லிருபோதும் நிறைதந்து
போக்கினும் போகாதுநேர்
பொங்கிவரு நிருதரிருள் பருகு சுடர் நேயியைப்
பொன்னணியும் மணிமருமனைத்

தேராழி பார்த்தனுக் கூருமது சூதனைத்
திருவேங் கடப்புயலினைத்
தென்மணவை நகர்மேவு குழகனைத் துதிசெய்யும்
செய்யதமிழ் காத்தருளவே

போராழி நீள்சயில வெயிலுடுத் தோங்கிவரு
பின்னுதிரை யாழியுடைசேர்
பெருஞால வாழியும் வெற்பேழும் வாழிய
பிறங்குதிசை யொருபத்துமே

ஓராழி கொண்டதேர் கொண்டிருட் கடலுடைய
ஊருமொரு பன்னிருவர்தாள்
உட்கமல மலருவகை யளவிலன் புடனேத்தி
உவகையின் பரவுவேனே (5)

(5) போர் ஆழி - அலைகள் ஒன்றோடொன்று தாக்குகின்ற கடல்; இரு போதும் நிறை தந்து - பகல் இரவு என்ற இரண்டு காலங்களிலும வெயில் காய்ந்து; நிருதர் - அசுரர்; நேமி - சக்கரம்; குழகன் - இளையவன்; சயிலம் - மலை; எயில் உடுத்து - அரணாக உடுத்து; திசைபத்து; எட்டுத் திக்குக்களும் மேல கீழ் என்ற இரண்டும் நோக்கிப் போலும்; ஓராழி - ஒற்றைச் சக்கரம்; பன்னிருவர் - பன்னிரு சூரியர்.

## சப்த கன்னியர்

217 பால்வா யொழுகி வழிகுழவி
பச்சைப் பிள்ளை பிறைதவழும்
பவளச் சடைச்செவ் வரனைவல
மாகத் திருத்தி வளரவளர்

மால்வாய் வளைந்தாங் குயர் செங்கை
மணவைத் திருவேங் கடநாதன்
மலருங் கஞ்சச் சேவடிக்கே
வளையும் பிள்ளைத் தமிழ்மாலை

நூல்வாய் திரையூர் நிலவூர்ப்பில்
நுணந்த கேள்வி சிறிது மில்லேன்
நுவலக் கருணை புரிந்தருள்வார்
நுடங்கி யொசியின் துாசுபடி

சேல்பாய்ந் தெனவே களித்துவள்ளை
சென்று மீண்ட செவ்வரிக்கண்
செல்வி யெழுவர் மங்கையர்தாள்
சிரத்தி லிருத்திப் பரவுவனே (6)

(6) பிறைவாதமும். . . . . . .திருத்தி ஊழிக் காலத்தில் இவ்வாறு சிவனை வைத் தருளினர்; கஞ்சம் - தாமரை; திரையூர் நில ஊர்ப்பில் நூல்வாய் நுணந்த கேள்வி சிறிது மிலேன் எனக; நூல் - பலவித சாத்திர நூல்கள்; துாசுபடி சேல்பாய்ந்தென - வெளியே துள்ளின சேல் மீன்கள் துாசுபடிந்தால் மறுபடி நீரில் பாய்ந்து போக்கிக் கொள்வதைப் போன்ற, வள்ளை - வள்ளைப்பூ போன்ற காதுகட்கு உவம வாகு பெயர்; காதினை யெட்டும் கண்களுடைமை மாதர்கட் குரிய உயர் லட்சணம்.

## சிவபெருமான்.

218 குலவரை தவர்எனக் கோட்டுவார்
குழவிவெண் மதிசடைச் சூட்டுவார்
கொடுவிட மதுகழுத் தேற்றிநேர்
கொடியிடை யொருபுறத் தாற்றுவார்

அலகில அருவுருக் காட்டியே
அடியவர் பவமறப் போக்குவார்
அணிபொது வினிலநடக் கூத்து நேர்
அரனடி மலரிணைப் போற்றுவாம்

இலவிதழ் வனிதையர்க் காட்படா
தெனைமுதல் அடிமையில் போற்றியே
இருவினை ஒழிதரத் தீக்குமால்
இணரவிழ் மலர்மகட் கேற்றதோர்

மலரவிழ் துளபமெய்ப் பூத்தகார்
வளர்சதி பெறுகுடக் கூத்துநேர்
மணவையில் முகில்பதத் தேற்கவே
வனைதமி ழியலினைக் காக்கவே. (7)

(7) குலவரை – ஈண்டு மேருமலை ; தவா – வில் கோட்டுவார் – வளைப்பார். . . ஆம் பாட்டின் குறிப்பில் காணக. குழவிவெணமதி எனரூா மூனரும் பிறைச்சந்திரன் ஆனதால். ஆலகாலவிடத்தைப் பாற்கடல் கடைநதபோது பருகியது. கொடியிடை – கொடிபோன்ற இடையையுடைய உமாதேவி, அனமொழித்தொகை. ஒருபுறம் – இடப்புறம் ; பவம் – பிறப்பு ; இலவுஇதழ் – இலவம் பஞ்சொத்த மென்மையான இதழ் ; வனிதையர் – பெண்கள் ; இணர் அவிழ் மலர்மகள் – பூந்தாது தெரிய மலர்ந்த தாமரைமலரில் வீற்றிருககும் திருமகள் ; குடக்கூத்து....அம் பாட்டின் குறிப்பில் காணக.

## சக்கராயுதம்.

219 தண்சுடர் வெண்சுடர் கருமுகில் தாங்கித்
தங்கக் கிரிமீதில்
தங்கிய போலக் கலுழன் பிடரியில்
தனிதோன் றியபெருமாண்

பெண்சுடர் கல்லில் கண்ட பதப்புயல்
பின்னு திரைப் பொருநைப்
பேரா றினிதூர் மணவை முகுந்தன்
பிள்ளைத் தமிழ்ச் சொலவே

ஒண்சுடர் மகமுறை மறைவழி யொழுகிய
ஏழேழ் புவனமெலாம்
இனிதிற் பல்லுயிர் தழையக் குளிர் கொண்
டிமையவ ரிமையாநேர்

கண்சுடர் வளையும் வளைகடல் ரவிநிகர்
கருணைக் கடலங்கைக்
கவினொடு திகழ்வல னாழிப்படையே
காத்தருள் புரிவதுவே. (8)

(8) தண்சுடர் ; வெண்சுடர் ; கருமுகில் – முறையே சங்கு சக்கராயுதம் தாங்கிய திருமாலுக்குவமையாய் நின்றது ; கலுழன் – கருடன் ; சுடர்கல்லில் பெண் கண்டபதப்புயல் இராமாவதாரத்தில் கல்லைப்பெண் (அகலிகை) ஆக்கினது காண்க. மகம் – யாகம் ; ஏழ்ஏழ் – பதினான்கு ; ரவி – சூரியன் ;

### ஆழ்வார்கள்.

220 குருகையாழ் வார்பெரி யாழ்வார் மிகுத்தநெறி
கொண்டதிரு மங்கையாழ்வார்
கூறுதிருப் பாணும் வாருடன் பொய்கையார்
கூறுபூ தத்தாரினோர்

உருகுமன ஞானபே யாழ்வார் கருத்திலருள்
ஓங்குதிரு மழிசையாழ்வார்
உலகு புகழ் குலசேக ராழ்வார் பழுத்ததமிழ்
உடையதிரு மதுரகவியார்

முருகுவிரி பதகமல மலர்மகள் முறைபரவி
முழுதடிமை யுழுவல்புரிவாம்
முளைமதியின் நிலவொழுகு வளையிலகு கமலமலர்
முழுவாவி சூழ்கதலிமீ

தருகுவரும் இரவிதேர் அருணனுடல் வெயர்தணிய
அசை யால வட்டமென்ன
அழகுதரு திருமணவை வருவேங் கடக்குழவி
அணிதொடைக் கவிதழையவே. (9)

(9) குருகையாழ்வார் – நம்மாழ்வார் ; முளைமதியின் நிலவொழுகு வளை – தோன்றிய சந்திரனைக்காட்டிலும் நிலவு அதிகமாக வீசுகின்ற சஙகுகள் ; வாவி........அழகுதரு மணவை :—சஙகுகளும், தாமரைகளும் உள்ள தடாகததைச் சூழ்நத வாழை மரஙகள் மீது அங்கு வரும் சூரியன் தேரை நடத்தும் பாகனை அருணன உடலின் வெயர்வு தணிய அசைகின்ற ஆலவட்டம் (சாமரை) போனறு அழகாக நிறைந்திருக்கினற மணவை நகர் எனக. (உயாவு நவிறசியணி) இப்பாட்டில் ஆண்டாள், தொணடரடிப்பொடியாழ்வார் பறறிக் கூறப்படவிலலை. உழுவல் – இடைவிடாது தொடர்ந்த (அன்பு). எழுமையுந தொடாந்த.

### பெரிய திருவடி.

221 கோசலை யளித்ததொரு தாசரதி யான்வந்து
குலவுகவி யரசு முதலாய்க்
கொண்டசய வானத....வானர வீரர்
கொற்றநிறை இளையவீரன்

பாசறை யுடற்றிவரு மேகநா தன்விட்ட
பாசமது தளைபடுத்தப்
படுதளை களைகணுய்ப் படருமொரு கருடனிரு
பங்கயப் பதம்நினைகுவாம்

வாசநிறை பாசிலைத் துளவமலர் மூசிவளி
வண்டுவரி பாடுமாலை
மரகதச் சிகரநிகர் மணவைவேங் கடவாணன்
மகிழ்பெறத் தெள்ளு தமிழால்

தேசுபெற வேபேசு பிள்ளைக் கவித் தொடையல்
தேசத்தில் நின்றோங்கியே
தென்குமரி வடவேங் கடத்தளவும் இனிதூழி
தினமுமிக வாழி யெனவே. (10)

(10) தாசரதி – இராமன் ; தத்திதாந்த நாமம். கவிஅரசு – குரங்குக் கூட்டங்கட்கு அரசனான சுக்கிரீபன் ; இளைய வீரன் – இலககுமணன் ; மேகநாதன் – இந்திரசித்து ; பாசம் – நாகபாசம் ; இலக்ஷ்மணன் இந்திரசித்தைக கொல்ல தேரினையழித்ததும் அவன் ஆகாயத்தில் மறைந்து நாகாஸ்திரம் விட்டு அதனால் வானரங்களையும் இலக்குமணனையும் கட்டிவிட்டான். இராமபிரான் இவைகளைக் கண்டு விபீஷணனோடு கூறிப் புலம்பும்போது கருடன் வந்து நாக பாசத்தை நீக்கி பழைய நண்பனென்பதை உணர்த்திச் சென்றனன். பாசிலைத்துளவம் – பச்சை இலைகளையுடையதுளவமாலை ; மூசி – மொய்த்து ; வடவேங்கடத்திலும் இவர்காலத்திலும் தமிழ் ஓங்கியிருந்தது என்பதற்கு இவர் கவி சான்று காட்டுகிறது.

222 உழலும்வெம் பவமாயக் கடலில் புகுத்துநேர்
மனைவி மைந் தரெனுது கதியெற் களிக்குமால்
ஒருவனென் பதைநாடி யடிமைக் கெதிர்த்த நான் (அருப்படா)
ருழலும்வெங் கதிர்வீசு......த்தை யுற்றதோர்

கனியதென் றெதிர்பாயும் நெறிபெற்ற வெற்றிசேர்
உளி நெஞ் சணைசெயி னடியைத் துதித்துமால்
குழவிவெண் பிறைசூடி இரவைத் தணித்தகார்
.....கமலைதங் கியவர்க மெழில்பெற்ற வெற்றிமால்

கொடியநெஞ் சரையாளும் அடிமைக் கொருப்படார்
மழலைவண் டுகள்பாடு நளினத் தடத்துநேர்
எகினம்வண் படைத்தடி மருவிக் களித்துவாழ்
மணவைவேங் கடவாணன் இயலைப் புரக்கவே. (11)

(11) குழவி வெண்பிறை சூடி – இளையபிறைசந்திரனைத் தரித்தவன். இதரவிகுதி வினை முதற் பொருளைக் காட்டியது. இரவு – யாசித்தல் தொழில். முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 121-ஆம் பாட்டின் குறிப்புணர்க. கமலை – இலக்குமி ; நளினம் – தாமரை ; இயல் – இயற்றமிழ். வாணன் – வாழ்நன் என்பதன மரூஉ. சா.

## செங்கீரைப் பருவம்

223 தருமங்கை தருவென்ற சனகன்க ணன்மங்கை
தாளஞ்செய் முலைமுங்கவே
தழுவும்பொன் வரைவென்று வளரும்பு யசுகந்த
தனதந்த வெனவிஞ்சையால்

நிரைகொண்டு வரிவண்டு துளவின்கண் நறையுண்டு
நிறைதொங்கல் புனைநந்தனே
நிலனும்பு லனுமங்கி வெளியண்ட மிவையன்றி
நிமிருங்க ருணைநம்பனே

உரைகொண்ட தமிழ்நண்பி னவர்பின்பு நீநடந்தும்
உயர் சங்கப் பிரசங்கனே
உரலுந்தி மருதின்கண் நடுவின்கண் ணுதைதந்த
உகளஞ்செய் பததந்திரனே

திருமங்கை திரைமங்கை புணர்கொண்க புயவிந்த
செங்கீரை யாடி யருளே
செரு வோங்க டலிபஞ் சொல் திருவேங்கடமுகுந்த
செங்கீரை யாடி யருளே. (1)

(1) தருவென்ற தருமம் கை சனகன் – கற்பக மரத்தையே வென்ற தருமம் செய்யும் கையையுடைய சனகன்; கண் நல்மங்கை எனக கண் – 7-ஆம் வேற்றுமை உருபு; தரளம் செய்முலை – முத்தாபரணங்களணிநது ஒப்பனை செய்யப்பெற்ற முலை மூழ்க; பொன்வரை – மேரு; வளரும்புய சுகந்த – என்க; கண்ணன குழல் வாசிததுப் பாட்டுப் பாடியதை "தனதந்த" என்று பாடும் ஓர் விததை என்றூர் ஆசிரியர். நறை – தேன்; நந்தன் – நந்தகோபன்மகன், திருமாலுககொருபேர்; நிறை தொங்கல் – வண்டு உண்ண நிறைந்த மாலை என்க, உண்டு என்ற இறந்த வினையெச்சத்தை உண்ண என நிகழ்காலமாகத் திரிக்க; நிலனும்......நம்பன் :—திருவிக்கிரமாவதாரம் கருதியது இவ்வடி; "உரை கொண்ட........சஙகப் பிரசங்கன; முன் பிள்ளைத தமிழ்க் கொத்து 593–ஆம் பாட்டின் குறிப்பில் காண்க; மருது – நளகூபரமணிக்கிரீவர் என்றவர் சாபத்தினுல் மருதமரமாய்த் தோனறினுர்கள்; உகளம் – இரண்டு; திருமங்கை திரைமங்கை – இலககுமியாகிய பாற்கடலில் தோன்றிய பெண், மஙகையென்பது பருவப் பெயரை உணர்த்தாது பொதுவாய்ப் பெண்ணை உணர்த்தியது; திரை – சினையாகுபெயராய்க் கடலைக் காட்டிற்று; கொண்கன் – கணவன்; விந்தம்புய – விந்தியமலையையொதத புயமுடையவனே.

224 குறியங்கை படமகளிர் புழுகுகனி குழல் முருகு
குலவ வெதி ரெதிர் வீழவே
குளிதுரையின் முழுகமண மொழுகு புனல் ம....திசெய்
குருகு பெடை யருகு செலவே

வெறிகொள்புது மணம்விரவ மருவுகில புலவியொடு
விரைய வய லயல்மறையவே
விரியுமுகை யவிழ்வனச மதுமகளிர் முகமிதென
மிளிரவளர் சமுக கமுகார்

நறியமடல் கிழியநடு வொழுகுபுனல் பலபலவின்
நறியகனி நறையினுடனே
நளிர்கதலி கவிழ் குலையி னுமிழுநவ ரசபிரச
நதியுலவு குளநிறைவநேர்

செறியுமத கிடைப்பெருகி யலையெறியும் மணவை முகில்
செங்கீரை யாடியருளே
செருவோங்க டலிபஞ் சொல் திருவேங்கடமுகுந்த
செங்கீரை யாடியருளே. (2)

(2) படக்குறி அம்கைமகளிர் – பாம்பின் படம் போன்ற அல்குலினையும், அழகிய கையினையுமுடைய பெண்கள்; புழுகுகனி குழல் முருகு குலவ – ஓர்வித வாசனைப்பண்டமான புழுகு மிகுந்த கூந்தலின் வாசனை சேர; குருகு பெடையருகு செல – ஆண் அன்னம் தன் பெட்டையினிடம் செல்ல; மருவுகில புலவியொடு விரைய – புணராது ஊடலோடு வேகமாய்,

"வனசம் அது மகளிர் முகம் இது என" என்க ; சமுகம் — கூட்டம் ; மணம் வீசும் கூந்தலை யுடைய மகளிர் முழுகும் வாவியில் முழுகிய ஆண் அன்னம் பெண்ணன்னத்திடம் செல்ல புதுமணத்தைக்கண்டு அது புணராது ஊடல் கொண்டு ஓடி அயலில் மறைவதும், மகளிர் முகம்போன்று தாமரைமலர்கள் விளங்க வளரும் கூட்டமான பாக்குமரங்கள் மடல் கிழிய அதினின்று ஒழுகும் தேன் பல பலாப்பழங்களின் தேனுடனே கலந்தும், வாழை தன் குலையினின்று வெளிப்படுத்தும் புதியரசமான தேன் முற்கூறியவைகளோடு கலந்து நதி சென்று குளம் நிறைய பின்னர் மதகினிடையில் செறிந்து அலையெறிவதுமான மணவை நகர் என்க.

225 பூவேழு வரையேழு கடலேழு வானேழு
பூத்ததிரு வுந்திமேவும்
போதனைத் தந்தவன் தன்னால் சராசரம்
பொலியவே செய்வித்துமே

காவேழு நீழலின் வளரரிவிண் ணோர்முதல்
கடவுளர் தமைத்தாவுமே
கருணைசெய் தறிதுயில் உணர்ந்தண்ட கோளகைக்
கற்பாந்த வெள்ளம் நடுவே

மாவேழு வீழவிடு கவடுடைக் கான்மரத்திளகி
வளருமொரு முறியின் வழியே
வதியவெங்கு மொருபச்சைப் பசுங்குழவி யாகவரு
மாயனே வாயர் மனையில்

சேவே ழடர்த்தபுய தண்டகோ தண்டனே
செங்கீரை யாடியருளே
சேருவோங்க டலிபஞ்சொல் திருவேங்கடமுகுந்த
செங்கீரை யாடியருளே. (3)

(3) கீழுலகத்தைப் பூவேழு என்றும், மேலுலகத்தை வான் ஏழு என்றும் கூறினர் ; போதன் — பிரமன் ; கா — சோலை, ஈண்டு "எழு" நிழல் என்பன ஏழு நீழல் என நீண்டன ; அரி — இந்திரன் ; மாவேழு வீழ — ஏழு மராமரங்களும் வீழவிடுத்து (இது இராமாவதாரத்தில் சுக்கிரீபனுக்கு ஏற்பட்ட சந்தேகத்தைப் போக்க இராமர் ஓரம்பில் எய்து காட்டினார்) ; கவடுடைக் கான்மரம் — கிளைகளையுடைய ஆலமரம் ; முறி — தளிரிலை ; வீழவிடு பச்சைப்பசுங்குழவி முறியின் வழிவதியும் பச்சைப் பசுங்குழவி எனச் சேர்க்க ; சே ஏழு அடர்த்தது :— நப்பின்னைபொருட்டு கன்யாசுல்கமாக ஏற்படுத்தப்பட்ட ஏழு எருதுகளையும் (காலகேதுவின் குமாரர்களின் அம்சம்) ஏழுருக் கொண்டு கீழே தள்ளி நப்பின்னையை மணந்தனர்.

226 பரசமைய திமிரதின கரவுதைய வண்டுமொய்
அந்தாம வாம முகிலே
பனிதமிர்த மதமொழுகு முலைவிமலை நண்பனே
சங்காழி மேவு கடலே

அரசர் பதி தசரத னருள்மவலி கொண்டநாள்
அன்றே கை கேசி கொடியாள்
வளமொழியின் வழிகவன மதின் முடுகி
வந்தவா தாவாத நீதிமனுவே

குரைதிரைய வரநதியை விரிசடை புனைந்ததோர்
குன்றுத வார்சிலையினுர்
குழகரிர வொழிய நகை நிலவு பொழி கொண்டலே
பிந்தாத வீரவரியே

செருவி லெதிர் அசுரர் கிளை ஒருகணையில் வென்றவா
செங்கீரை யாடியருளே
செருவோங்க டலிபஞ்சொல் திருவேங்கடமுகுந்த
செங்கீரை யாடியருளே. (4)

(4) பரசமைய திமிர உதைய தினகர – வேறுபல மத இருளுககுத் தோன்றும் சூரியனை யொத்தவனே; வண்டு மொய் அம்தாம வாம முகிலே – வணடுகள் மொயககின்ற அழகிய மாலையணிந்த அழகிய மேகமே (வாமம் – அழகு); விமலை – திருமகள்; வளமொழியின வழி கவனம் அதில் முடுகி – வளமொழிப பிரகாரம் காடடில விரைநது; தாவாத – கெடாத; வரநதி – கஙகை; வாாசிலையினுர் – மேருமலையைச் விலலாக்கினவா; இரவொழிததது...... மூன் பிள்ளைத் தமிழ்க் கொத்து 121–ஆம் பாடடின் குறிபபில காணக; வீர அரி – வீரம் பொருநதிய ஆண சிஙகம.

227 மீனுர்கார்க் கடலின்நடு வானிலங் கைநகர்
வேந்தனைப் பொருகளத்தில்
வீறடக் கித்தனி நிராயுத னெனக்கணடு
வீட்டுதல் செ யாமலின்றே

போறாளை வாவெனச் சொல்லுமொரு சேவக
புங்கானு புங்கமுறவே
பூமாரி பெய்யவரு காமாரி காத்தவா
புதுப்பிறை வளைத்த தெனவே

காறுர் கடற்படைக் கரதூட ணன்திரி
சிராவினைக் கண்டமாகக்
கண்டருளும் விறல் வீர வீராகரத்துணைவி
காந்தனே யெந்தைவாகை

தேறுரு மெய்க்குழவி மேனுக ரத்துளவ
செங்கீரை யாடியருளே
செருவோங்க டலிபஞ்சொல் திருவேங்கடமுகுந்த
செங்கீரை ஆடியருளே. (5)

(5) மீன் ஆர் கார்க்கடல் – மீன்கள் பொருந்திய கரியகடல்; வீறு – கருவம்; வீட்டுதல் – அழித்தல்; புஙகானுபுங்கம் – மேன்மேல் தொடுக்கும் அம்புத் தொகுதி; பூமாரி – அசோகு, தாமரை, நீலம் முதலிய ஐந்து கணைகளாகிய மழை; காமாரி – மன்மதனை எரித்தழித்த சிவன்; கரன், தூடணன, திரிசிரா :—இவர்கள் மூவரும் சகோதரர்; தந்தை விசுரவசு, தாயர் முறையே இராதை, கலை, காலை என்பவர். இவாகள் சூாப்பநகை யால் தூண்டப்பட்டு தண்டகாரண்யத்தில் இராமபிரானிடம் வந்து எதிர்த்து இறநதனர். திரிசிரா பற்றி 40–ஆம் பாட்டில் காண்க.

### வேறு

228 பனகன துடல்நெளி கொள்முடி நின்றே
அன்றாடும் கோவே
பயவுத தியில் நடு வமுதுக டைந்தே
தந்தா ளன்போனே

மனவணி கோசலை யுயிரென முன்சேர்
மைந்தா பயந்தாராய்
அற இறை கௌசிக முனிபிற கின்றே
சென்றே வந்தோனே

அனமென நனிமறை மொழிதரு கன்றே
நீள் சீரும் கோலா
அகலிகை யெழில்கொடு வரிசிலை யின்பால்
வந்தரு ளுந்தாளா

தினகர னெனவளர் பருதி முகுந்தா
செங்கோ செங்கீரை
செகதல முழுவதும் அளவிடு நெடியவ
செங்கோ செங்கீரை. (6)

(6) பனகன் – ஈண்டு காளிங்கன் என்ற பாம்பு ; பய உததி – பாற்கடல் ; அமுது கடைந்து – அமிர்தத்திற்காக கடைந்து ; கௌசிகன் – விசுவாமித்திரன் ; அனமென........கன்றே :— 197–ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

229 காளெழுகு கரியகுழ லிடை மகளிர் முடை நாறு
கரியதுகி லதுவாரியே
கானெடிது வயங்கும் குருந்தேறி விளையாடு
கருமேக வார்கொழுந்தே

மாளெழுகு கற்பகக் கொம்பிற் கனிந்தநறை
வாரியே மாறை நகர்வாழ்
வள்ளல் முதியநம்பி பிள்ளை மலர் விரியவே
வளருமொரு திருமார்பனே

மீனெழுகு வாரிநடு வளறுபட நெடியதொரு
விற்குழைத் தருள் சிங்கமே
வெடியா நிசாசரக் கங்குலைப் பருகிவெயில்
விரியுமொரு கருஞாயிறே

தேனெழுகு துளவநவ நீதமயில் கள்வனே
செங்கீரை யாடியருளே
திருவேந்து புயவிந்த திருவேங்க டமுகுந்த
செங்கீரை யாடியருளே. (7)

(7) முடைநாறு – தயிர், பால் முதலியவை கலப்பதால் வீசும் ஒருவித நாற்றம் ; குருந்து – குருந்தமரம் ; " கான்........கொழுந்து " பாட்டின் குறிப்பில் காண்க ; " மாறை நகர்........மார்பனே " இது தலபுராணத்திலுள்ள ஓர் பக்தர் பெயரோ ! இங்ஙனமே

297-ஆம் பாட்டிலும் வருவது காண்க. மீன் ஒழுகு........சிங்கமே :—கடலுககு அணை கட்டுதற்காக வருணன் வாராததால் அக்கினிககணை விடக் கோபித்து எடுத்த நிலையைக் கூறுகிறது. வெடியா நிசாசரக் கங்குலே — பொழுது விடியாமல் செய்யாமல் அரக்கராகிய இருட்டை ; கரு ஞாயிறு — இல் பொருளுவமை ; நவநீதம் அயில் — வெண்ணெய் தின்கின்ற ; திரு — இலக்குமி ;

230 கொங்கார் பசுஞ்சோலை சொரிதளிரின் நாப்பணில்
குலவுமதி நிலமங்கை கைக்
கொண்டுதன் னுருநாட வாடியேந் தியதெனக்
கூர்வளங் கொண்டபுடையில்

சங்கார் தடம்பணைச் செய்ய செந் தாமரைத்
தாவுபெடை. யோடணைத்தே
தவள நில வுதறு சிறை யரசவனம் கண்துயில்
தரவளிகள் தாலாட்டவே

பொங்கார மாரமொடு குரவைபுரி கடைசிமார்
புதியமதி வதன நிழலில்
பூத்த செங் காவியு மவர்கண்மைக் காவியும்
பொலிமணவை வளநாடனே

சிங்காத னக்கனக னுகிரிவளே சிங்கமே
செங்கீரை ஆடி அருளே
திருவேந்து புயவிந்த திருவேங் கடமுகுந்த
செங்கீரை ஆடி அருளே. (8)

(8) கொங்கு—வாசனை ; நாப்பண் — நடுவிடம் ; ஆடி — கண்ணாடி ; புடையில் — பககத்தில். பணை சங்கு ஆர்தடம எனக. செயய செநதாமரை — மீமிசைககிளவி ; தவள நிலவு உதறுசிறை அரச அனம் — வெண்மையான நிலவினைக காலுதற்கு உதறுகின்ற சிறகுகளை யுடைய ஆண் அன்னம். அளி — வண்டு ; பொங்கு ஆரம் ஆரமொடு — மிகக ஆரவாரத் துடனும் முத்துமாலைகள் அசைதலோடும் ; குரவை — காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபுனைந் தாடும் ஒருவகைக் கூத்து. காவி — நீலோற்பலமலர். சிஙகாதன........சிங்கமே—சிங்காதனத் தையுடைய இரணியனை நகத்தினால் வளைத்துக் கொன்ற நரசிஙகமே. வாசனை பொருந்திய சோலைகள் சொரிகின்ற இலைத் தளிரின் நடுவில உள்ள சந்திரன் பூமி தேவியானவள் தன் கையில் கொண்டு தன்னுருவத்தைப் பார்க்க விரும்பிக் கண்ணாடியை எடுத்ததைப் போன்று மிக்க வளங் கொண்ட அப்பக்கததில் பருத்த சங்குகள் பொருந்திய தடாகங்களில் சிவந்த தாமரையில் தாவுகின்ற பெண்ணன்னத்தை அணைத்து வெள்ளை ஆணன்னங்கள் தூங்க வண்டுகள் ரீங்காரஞ்செய்து தாலாட்ட மிக்கு ஆரவாரத்துடன் குரவைக் கூததுச் செய்கினற மருதநிலப் பெண்கள் தங்களது சந்திரனைப் போன்ற முகமாகிய நிழலில தோன்றிய நிலத்தில் பூத்த செம்மையான காவிமலரும் அவர்கள கண்களாகிய கரியமை பூசிய காவி மலரும் விளங்கும் அத்தகை வளஞ் சிறந்த மணவைநகர் என்க.

231 எறிகுழை யெதிர்ந்து போய் மறியும் விழி மங்கைமார்
பந்தாடும் மேடையிடையே
எழில் மதியம் வந்துசா ளரநுழைவ கண்டனுர்
சிந்தூர வாணுதலின நேர்

குறியழகு கண்டுதாம் மனமகிழ் தவழ்ந்துலாய்
வந்தூரு மென்மைபெறவே
குளிர்திவலை சிந்தியே மணமொடு தவழ்ந்துலாய்
வந்தாரு மேன்மை பெறவே

நறியகர நின்றுசா மரையென வசைந்து சாய்
நந்தூர நீர்வயல் சூழ்
நளினமலர் பந்தியாய் மகளிர் முகம் வென்றுசேர்
நந்தாத நீதிவளமே

செறிமணவை வந்துவாழ் சினகர முகந்தவா
செங்கீரை யாடியருளே
திகழுமொளி நந்தனே துளபமலர் கந்தனே
செங்கீரை யாடியருளே. (9)

(9) எறிகுழை........மங்கைமார் – ஒளி வீசுகின்ற குழையுள்ள காதினிடம் எதிர்ந்துச் சென்று பின்பு மடங்கும் கண்களையுடைய (காதளவு பரந்த) பெண்கள் ; சாளரம் – சன்னல். சிந்தூரக்குறி – பொட்டு அடையாளம் ; இரண்டாவது அடி சரிவர எழுதுவோரால் எழுதப் படாமல் எழுதினதையே மறுபடி எழுதியுள்ளனர் எனத் தெரியவருகிறது. நந்து – சங்கு ; சினகரம் – கோயில ;

232 கலைபயில் நாவலர் வேந்திசை மீதே
அன்பா ருந்தூயா
குரவைகொ ளாய்மனை யேந்திழை யார்பால்
நின்று டுந்தாளா

கரையறு மாவின மேய்ந்திட வேயே
கொண்டூ துந்தூயா
மலர்மகள் வார்பொரு பூந்தன நேயா
வண்டூ துந்தாமா

ஒரு சிலை நேருரு வாய்ந்தெழ வேதாள்
கொண்டே கண்டோனே
மழுவுடை யான்வலி வார்ந்தவன் றவமே
வென்றே நின்றோனே

அலர்கதிர் நேமியி னுங்கிருள் சாய
அன்றே தந்தோனே
கடல்நடு வேவழி போந்தரி யோடே
பண்டே சென்றோனே

அரவணை நேர்துயில் கூர்ந்தருள் தேவே
என்பா லன்பாளா
சிலைமலி போரெதி ரேந்திய தோளா
பண்கூர் வெண்கோடா

தசரத னருள் கூர்ந்தருள் சேயே
செங்கோ செங்கீரை
திருமண வாபுரி வேங்கட வரனே
செங்கோ செங்கீரை. (10)

(10) ஏந்து இசை – ஏத்துகின்ற புகழ் நிரம்பிய பாட்டுக்கள்; ஆய்மனை – ஆயர்மனை – கடைக்குறை; கறை அறும் ஆவினம் – எகை; வேய – குழலுக்கு ஆகுபெயர்; வார் – கச்சு; ஒரு சிலை நேர் உருவாய் – ஒரு கல் அழகிய பெண் உருவாய் (அகலிகை) தாள் – பாதம்; மழுவுடையான் – பரசுராமன்; வலி வார்ந்து – அவனது வலியை அவனுக்கே தெரிவித்து; வார்தல் – தெரிதல்; மழு.........வென்றே :—இவர் சமதக்னிக்கும் இரேணுகைக்கும் விஷ்ணுவின் அம்சாவதாரமாகப் பிறந்தவர். இராமமூர்த்தி மிதிலையில் வில் முரித்துச் சீதையைத் திருமணம் புரிந்து மீளுகையில், வழியில் எதிர்த்துத் தம்மிடமிருந்த விஷ்ணு வில்லை வளைக்கச் செய்து தமது தவத்தை அவ்வில்லில் பூட்டிய அம்பிற்கு இலக்காகித் தவத்தை யிழந்தார். "என் வில் வலிகண்டு போவென்று எதிர் வந்தான் தன் வில்லி னோடும் தவத்தையெதிர் வாங்கி...." என்ற ஆழ்வார் வாக்கினைக் காண்க.

அலர் கதிர் – சூரியன்; இருள் சாயச் செய்தது – பார்த்தனுக்காகச் சக்கரம் விட்டு மறைத்துச் சயத்திரதனைக் கொல்லுமாறு செய்தது காண்க. கடல் நடுவே வழிபோந்து அரியோடு – கடல் நடுவே அணை கட்டிச் சென்று குரங்குகளோடு; வெண்கோடு – வெண்மையான சங்கு;

## தாலப் பருவம்

233 அமிழ்தினு மினியசொல் லன்னவள் புதுவையில்
அவள்குழல் சூடியபோ
தணிதொடை சூடியு மவள்தமிழ் மாலை
அணிந்தருள் சிறுகுழகா

கமழ்தரு விளவின் நறுங்கனி முனமொரு
கன்றால் விளவெறியும்
காயா மேனி உபாயா பஞ்சவர்
களிபெறு முனநேயா

இமிழ்திரை யெறிகடல் திலமு னிரந்ததே
இகல்மா வலிபாலே
இனிதினி மூவடி கொண்டே யோரடி
ஏழுலகும் கொண்டோய்

தமிழ்வரை ஒழுகிய பொருநைத் துறைவா
தாலோ தாலேலோ
சங்கணி கரதல வேங்கட வரனே
தாலோ தாலேலோ. (1)

(1) அமிழ்தினும் – இன் – உறழ்பொருவு (5–ஆம் வேற்றுமை) புதுவையில அவள் – வில்லிபுத்தூரில் வரும் ஆண்டாள்;....–ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. கமழ்தரு..... எறியும் :—கம்சனேவலால் வந்த வத்ஸாசுரன் முட்டிக் கொல்லும்பொருட்டு பசுங்கன்றாகியும் கபித்தாசுரன் கண்ணன் வந்தால் வீழ்ந்து கொல்ல வேண்டும் என்று விளாமரவடிவாகியும் நிற்கக் கன்றின் இருகால்களையும் பிடித்துச் சுழற்றி விளாமரத்தின் மேலெறிய இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தனர். தமிழ்வரை – பொதியமலை; மாவலி :—பிள்ளைத்தமிழ்க்கொத்து 189–ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

234 அளவில் மகிழ்ச்சி யசோதைக் கிருவிழி
அணிமணி யேயரசே
அழகுக் கழகே யரைமணி போத்திமுன்
ஆயர் மனைச்சீரால்

களவு விளைத்திழு தூறக் காய்பால்
கடவிளை தடவெண்ணெய்
கையில் முகந்துண் டவர்கள் சிறுரொடு
கன்று துடர்ந்தேகித்

துளவ சையச்சிறு தெருக்களின் முன்றில்
தொறுமின் னுளமுருகத்
தோள்தலை சாயக் கால்பின் னிச்சுடு
துளையூ தியவாயா

தளவ மலர்ச்சிறு குடுமிப் புயலே
தாலோ தாலேலோ
தாங்கிய சிலைவிறல் வேங்கட வாணா
தாலோ தாலேலோ (2)

(2) இழுது – நெய்; இழுது உற என்பது ஊற என நீட்டித்தது. இனம் – பெண்களின் கூட்டம்; சுடுதுளை – சுட்ட துளையையுடைய வேய்ங்குழல்; தளவ.......குடுமி :—ஆயர்ச் சிறுவர் முல்லை நிலத்தவராததால் முல்லை மலர்ச் சூடுவர். அங்ஙனமே இவரும் சூடினராததால் இங்ஙன கூறினார்.

235 அருவென வுருவென வறிவென வறினூ
டளவிய தெளிவெனவே
அடியவ ருளமிசை குடிகொளும் நெடியா
அலர்நில மகள்முலைதோய்

இருபுய மரகத மணிநிற வண்ணா
இளவெயில் பொழிகதிரே
இகல்புரி யசுரர்தம் மனவிடி யேறே
இசையளி நிறைதுளவா

கருவுத தியினுன தடியரு ருவகை
களைதரு களைகண்ணே
கண்ணா விண்ணவர் கோவே தண்ணங்
கதிர்மதி யேயாள்க

தருமிட றவிழ்தரு மணவை முகுந்தா
தாலோ தாலேலோ
தாங்கிய வில்விறல் வேங்கட வாணா
தாலோ தாலேலோ. (3)

(3) அவர் மகள் நிலமகள் எனக் கூட்டுக; இடி ஏறு – ஆணிடி; கருவு உததி – கர்ப்ப மாகிய பிறவிக்கடல்; மதி – சந்திரனொத்தவனே. ஆள்க – வியங்கோள் வினைமுற்று. தரும் இடறு அவிழ்தரு – வரும் துன்பங்களைப் போக்கி மலரச் செய்யும்.

236 போரணி ரதகச துரக பதாதி
பொலிந்த களத்திடையே
புயல்தவழ் மலையென வருகருணையுடல்
புழைபட வடுகளிறே

நாரண வாரண காரண காரியம்
நடுவிடை கடையுமிலான்
நாத பராபர வாமன பால்மதி
நடுவுறை கருமணியே

தோரண வீதியில் நடுவளர் கதலிகை
துவள்தரு கதலிகைபோல்
சுடரவன் இரதமும் எழுதுர கதமிசைத்
தொடுபுகழ் வளமையினுல்

தாரணி புகழ்மண வாபுரி முகிலே
தாலோ தாலேலோ
சங்கணி கரதல வேங்கட வாணு
தாலோ தாலேலோ. (4)

(4) கரன்......227-ஆம் பாட்டின் குறிபபில காண்க. பால்மதி – பால் போன்ற மதி தோன்றிய கடல்; துரகதம் – குதிரை; கதலிகை – வாழை. மூன்ருமடி உயர்வு நவிற்கியணி. வாமனன் :—முனபிளளைத்தமிழக்கொத்து 118, 189–ஆம் பாட்டுக்குக் குறிப்புக் காண்க.

237 புலலடைந்த இரவிமைந்த னிகல்புரிந்த பகையைவென்ற
வீரா வீராநீர்
பொதுவர்மங்கை யொருமடந்தை மகிழமுன்பு தருவழங்கு
லீலா நூன்மார்பா

அகிலமுண்டு முமிழுகின்ற தொழில்புரிந்த வதனசந்திர
வாமா பூமானோ
அழகுகொண்டு வளரிரண்டு வரையைவென்ற புயவனந்த
பாயா காயாநேர்

முகிலைவென்று கருமைகொண்ட வுருவசஙகு வளையணிந்த
பாலா நால்வேதா
முருகருந்து பொறியவண்டு குடியிருந்த துளவிலங்கு
தாரா சோராசேர்

சகடுதைந்து விறல்புரிந்த நிமலநண்ப தினவசந்த
தாலோ தாலேலோ
தமிழ் தெரிந்த மணவைவந்த திருமுகுநத கமலைகொண்க
தாலோ தாலேலோ. (5)

(5) இரவிமைந்தன் – சூரியனுக்குப் புத்திரஞன சுக்கிரீபன்; பகை – வாலியாகிய பகை; பொதுவர் மங்கை ஒருமடந்தை – சத்தியபாமை; தரு – கறபகத்தரு – 43 – ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. நூல் மார்பா – பூநூல் தரிதத மார்பன் – க்ஷத்திரியர்கட்குப் பூநூல

உரித்து. அகில........வதனசந்திர – உருவகம். முனபிளளைததமிழக் கொத்தின் 128-ம் பாடடின குறிபபில் காணக. வாமன அழகன ; பூமான – பூமிதேவி ; வரை – உவமவாகு பெயராய் முலையையுணாததிறறு. அனநதாயா – ஆதிசேடனுகிய படுககையையுடையவனே காயாநேர்—காயாம் பூவையொதத காயாநோ உருவ எனறு முகிலே..கொணட உருவ எனறும கூட்டுக. வளை –சக்கரம் ; முருகு – தேன ; பொறிய – புளளிகளையுடைய ; கோரா – வெண்ணெய், தயிாதிருடியுணடதால இவவாறு கூறினா. சகடு – சகடாசூரன்.

238 புரளும் கயல்வென் றிலகும் குழையின
புடைசென் றுலவும் கண்
பொருமங் கையர்செங் கையின்மென் கமலம்
பொதிவிண் டவிழ்தரவே

திரள்கொண் டுழுவெங் கொழுநன் படைமுன்
சிதறும் கழனியுளே
செருமுங் கமுகின் குலையின் புடையின்
திகழும் பழமுடனே

குரவம் கமழும் பொழிலின் பலவின்
குடநன் கனியுதிரும்
குமுதம் கமழும் குளனுந் தெருவும்
குளிர்தண் புனலமதகும்

தரளஞ் சொரியும் பணிலம் குமிறும்
தகுவள முறை மணவைத்
தருமம் தழையுந் திருவேங் கடமுகில்
தாலோ தாலேலோ. (6)

(6) குழை – காது ; கையின – 5–ஆம் வேற்றுமை உவமப் பொருவு ; செருமும் – நெருக்கும் ; கொழு நனபடை – கூர்மை மிகக கார் கட்டிய கலப்பை ; பணிலம் – சங்கு.

239 சூழும் திருவரை மணியும் பூணும்
தொங்கிய சுட்டிநுதல்
சோதித் திலதமும் முகிழ்நகை நிலவும்
துவர்வரு செவ்வாயும்

யாழும் குழலும் பணிய மழலையின்
இனிமை தருஞ்சொல்லும்
இருள்கனி குஞ்சியி னழகும் தெரிவையர்
எழில்கவர் மார்பணியும்

ஊழின் றருவினை யிருள்விரி யத்தனி
ஒளிரும் பதவுகளத்
துறுகுரல் நூபுர மணிபங் கயமலர்
ஒளியும் தோளிணையில்

தாழும் குழையும் தோயும் புயலே
தாலோ தாலேலோ
தசவரை மகள்புணர் மணவை முகுந்தா
தாலோ தாலேலோ. (7)

(7) நுதற்சுட்டி என்க. குஞ்சி – மயிர் ; ஊழின் – விதிமுறையால் தசவரை மகள் என்றார் எட்டு மலைகளோடு மேலுமிருமலைகளும் உடைய பூமிதேவியை நோக்கிப் போலும் ;

240 குழைகர மரியினர் பொதுவிய ரவரவர்
குறைசொல வனமிடையே
குறுகா நிரையொடு துடரிசை யொடுபடா
கோலச் சிறுபுயலே

புழைதரு கரமலை யதிர்குரல் செவிவழி
புகுமுனம் எதிர்கொடுபோர்
புரிகரா வினையொரு திகிரிக் கொடுபுகழ்
புனையருள் பொழிகடலே

சுழியெறி திரைபொரு பகிரதி நதிமகள்
துயல்வரு பதகமலா
துணையென இணையில் குகனையீன் றருள்கொடு
துணையென வுரைசதுரா

தழைதரு பசுநிற மரகத மணியே
தாலோ தாலேலோ
தமிழ்தெரி மணவையில் வருதிரு முகிலே
தாலோ தாலேலோ. (8)

(8) குழைகரம் அரியினர் – குழைநத கரததில் மததாகிய ஆயுதத்தையுடையவாகளாய் ; அரி – ஆயுதம் ; புழைதருமலை – ாணடுகசேந்திரன் ; கரா – முதலை ; துயலவரு – அசைநது வருகின்றன. குகன – இராமரிடததுநடபுப் பூணட வேடவரசன.

241 முரணு லெழுமெழு மராமு டுருவா
முனியா லொருகணையால்
முனியா தெதிர்விடு முதிர்சே வகனே
முலையா னடர்புயனே

கருணு கரவுப நிடதா மறைகனி
கனியே தமனியமே
கலையார் கடலே யமுதே யடியார்
கதிசே ருந்தவமே

பொருநா நதிதிகழ் மணவா புரிவளர்
புயலே தமிழினியல்
பொருளே தெருளே வெளியே ஒளியே
போற்றரு மனவிருளே

தருணுத பன்னகி ரணு பரணு
தாலோ தாலேலோ
தாங்கிய சிலைவிறல் வேங்கட வாணு
தாலோ தாலேலோ. (9)

(9) உருவா – செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத்திரிந்தது. முனியால்–இல்லால் ; முனியாது – வெறுக்காது ; தமனியம – பொன் ; பனனசி – தாமரை ;

242 கதழெரி யெரிதர வான்கடல் மீதே
யேவாலே வாளா
குரைகழ லடியவர் வேண்டிய வொழ்வே
தாயா நேயாநீ

எதிர்பொரு வான்கரி கோடே கவடுக
போரா நேர்தோளா
எதிர்வரு நிதியுழை காண்டலு மேபோய்
மீள்வோய் மாமாலே

சததள மலரவள் பூங்கொடி கேள்வா
நாதா நீள்காதா
சபரிமெய் யுறுகதி போந்திட நேர்சேர்
வீரா தார்மார்பா

தமனிய நிறம்வளர் பூந்துகில் மீதே
சூழ்வோய் தாலேலோ
தமிழ்மண வையில்வரு வேங்கட வாணு
தாலோ தாலேலோ. (10)

(10) எதிர்பொருவான்கரி – குவலயா பீடம் ; சததளம் – தாமரை ; மலரவள் – திருமகள் ; பூஙகொடி – பூமியாகியகொடி – பூமிதேவி ; சபரி :—மதங்காச்சிரமத்திலிருநத வேடுவச்சி. இவள் சுவைத்து வைத்திருந்த பழங்களை இராமர் தின்று அவளுக்கு முததி யீந்தார்.

---

N.B.—இவ்வடி கீழே மிகையாகக் காணப்படுகிறது :—
அரவுறு கொடியவர் சேண்பொதி தூதோ
தாய வேய்வாயா

### சப்பாணிப் பருவம்

243 மின்னுமுகில் தவழும்வரை பிறைகவ்வி யண்ணுந்த
வீறுபோல் சீறுகடமா
வெண்குருகு கோட்டுண்ட வரசகே சரிசுவடு
வேட்ட மெதிர் தருகிராதர்

மன்னியுறை குடிமுன்றி லறைமீ துணங்குமெய்
வனமேய வந்தசெந்தண்
வளையும் வாய்க கிள்ளையெழில் வாலன்ன வரிநிறம்
வாய்ந்தகுரல் கவ்விவிடநேர்

பொன்னிறந் தருதினையும் வேங்கைவீ யுங்கொண்டு
பொலன்வரைச் சாம்பு நதிபோல்
புடைபரந் திருகரையு மாரம்வீ சிக்குலவு
புகழ்பெற்ற புதுவளமையால்

தன்னிகரில் பொருநைநதிகழ் கன்னிவளர் நாடனே
சப்பாணி கொட்டியருளே
தமிழ்பொங்கு மணவைநகர் வருவேங்க டேசனே
சப்பாணி கொட்டியருளே (1)

(1) மின்னு........கடமா – மின்னுகின்ற மேகம் தவழ்ந்த மலை பிறைச் சந்திரனைக் கவ்வி யண்ணுந்துள்ள பெருமை போலும் கோபிக்கின்ற மதமுடைய யானைகள் பிறை – தந்தத்திற்கும், மின்னுதல் பிளிறுதற்கும், மேகம் – கருமைக்கும், வரை உருவத்திற்கும் மிகப்பொருத்தமாக உவமைகள் விளங்குகின்றன. வெண்குருகு – வெள்ளிய யானையின் மூளை ; கேசரி – சிங்கம் ; சுவடு – ......கிராதர். யானையைக் கொன்று தின்ற சிங்கம் சென்ற காலடிச்சுவட்டினைக் கண்டுசென்று வேட்டையாடுகின்ற வேடர் ; அறை – கற்பாறை ; உணங்கும் – உலரும் ; வேங்கைவீ – வேங்கைப்பூ ; பொலன்வரைச்சாம்புநதி – மேருமலையி லுற்பத்தியாகும் சாம்புநதி போல ; ஆரம் – முத்துக்கள் ; நிகர் இல் – தனக்கு ஒப்பில்லாத ;

244 கழையுடைக் குந்தோறு மிடிக்கும் கடுங்குரல்
காணுமிதி யாலைவாயால்
கான்றுசொரி பாலால் நிறைக்கினற கூனையுட்
காரண்டம் முழுகியொழுக

இழையிடைப் பேதையர் இழைக்கின்ற வண்டல்மனை
ஈர்த்துமருங் கெங்குநிறைவாய்
இளகின்ற மரகதப் பாசடைக் கமலவயல்
எதிர்பாய வோங்கு செந்நெல்

குழைவுண்ட கருமேதி மேய்தோறுங் கடைவாய்
குதட்டவழி பாகுவழியும்
குலமணிப் பூண்சிறுர் கால்வழுக் காதுமலர்
கொண்டுபூந் தாதுசொரியும்

தழையுடைப் பொழிற்குலவு மணவைநக ராதியே
சப்பாணி கொட்டியருளே
சயமங்கை நேசனே திருவேங்க டேசனே
சப்பாணி கொட்டி யருளே. (2)

(2) கழை – கரும்பு ; மிதி ஆலை – அழகிய கரும்பாலை ; கூனை – கருப்பஞ்சாறடுகூன் ; காரண்டம் – நீர்க்காக்கை ; மரகதப்பாசடை – மரகதம் போன்ற பச்சை இலை ; மேதி எருமை ; குலவு–பொருந்திய ; கரும்பு உடைக்கும்போது சப்தத்தைக் காணும் அழகிய ஆலைகளின் வாயினின்று ஒழுகுகின்ற பாலால் நிறையும் கூனை என்ற பாத்திரத்திற்குள் நீர்க்காக்கை முழுகி அதனால் ஒழுகின சாறு பெண்கள் இழைகளினால் செய்கின்ற விளையாட் டிடத்தை அடித்துக்கொண்டு பக்கமெல்லாம் பரவி பசிய இலைகளையுடைய தாமரை சூழ்ந்த வயலில் எதிர்த்தும் பாய அதனால் ஓங்கின செந்நெலானது குழையும்படி உண்ட எருமை யானது மேயும் போதெல்லாம் கடைவாய் குதப்ப அதினின்று வெல்லப்பாகு வழிய அதனால் சிறுவர் கால் வழுக்காதவாறு அங்குள்ள மலர்கள் மகரந்தங்கள் சொரியும் அத்தகை வளமிக்க சோலைகளும் பிறவும் சூழ்ந்த மணவை நகர் என்க.

245 காதல்நறை வீசுகுழல் யாழின்மொழி யாய்மகளிர்
காதலுள மீதுதரவே
காணவிழி யாயிரமும் வேணுமென வேகுழைகொள்
காதுதவழ் தோளசையவே

நாதமறை வேயினிசை யூதுகனி வாய்குவிய
    நர்ண்மலரின் மூரலெழவே
நாலுகவி தேர்குருகை மாறனருள் கூர்கவிதை
    நாளுமிக வேவளரவே

பாதமலர் சூடுமவர் நாடும்வர மேயுதவு
    பார்வை யருள் மாரிதரவே
பாரவட மேருசிலை வீரமனு சீதமுறு
    பாலநவ நீதகள்வா

தாதுலவு தார்துளவ மேவுமுகில் மாயனே
    சப்பாணி கொட்டியருளே
சதுமறையி ஞெலிகடலி ஞெலியின்வளர் மணவைமுகில்
    சப்பாணி கொட்டியருளே. (3)

(3) நறை – மணம் ; ஆயமகளிர் – இடைப்பெண்கள் ; நவநீதம் – வெண்ணெய் ;

246 ஆறுபத நடுபேடை யோடிசைகள் தேர்நறை
    வற்றுத பொற்கமலமே
ஆரநிறை நீர்பெருகு வாவியுகள் வாளைஎதிர்
    முட்டா வயற்கடைசிமார்

நாறுநடு வாரிடை தளாட வயலேகியே
    நத்தார் திடற்புளினமேல்
நாள்மலரின் நாளமது வால்நறைக ளாரவே
    துய்ப்பார் மயக்கமுறுவார்

சேறளையும் நீள்வயல்கொள் சாலிகழை போலவே
    முற்று விளைத்தகதிரே
தேஞெழுகு பூகமடல் மீதுகொடு வாள்கள்போல்
    உற்றே பழுத்தகுலைநேர்

தாறினிடை சேர்வளமை கூர்மணவை மாயனே
    சப்பாணி கொட்டியருளே
தாள்பிறவி தீரவருள் கூர்கருணை மேகமே
    சப்பாணி கொட்டியருளே. (4)

(4) ஆறுபதம் – வண்டுகள் ; சாலிகழைபோல் – சாலிநெல் கரும்பினைப்போன்று ; பூகம் – பாக்குமரம் ; ஆறுபத........முறுவார் :—சங்குகள் நிறைந்த வாவியினுள் வாளை தாவி வயலிலுள்ள உழத்தியரை முட்டிடவும் அவர்கள் நாறு நடும் மற்றவர்களிடையே தள்ளாடி விழுந்து வயலை விட்டுச் சென்று மணற்றிட்டின்மேல் மலரினின்றெடுத்தகள்ளை தண்டினையே உறிஞ்சு கருவியாகக் கொண்டு குடித்து மயக்கமடைவார் என்க. தாறு – குலைகள் கொண்டது; வாழை, பாக்கு, தென்னை முதலியவைகட்குக் கூறுவது. தாள்பிறவி தீர – உனது தாளை நினைத்தாலே பிறவி தீருமாறு ; "தனக்குவமையில்லாதான் தாள் சேர்ந்தார்க்கு...." என்ற குறள் காண்க.

247 துவளுமிடை நிலையாது வளருமுலை குறியாது
துரிதமொடு சுழல்போதநேர்
சொருகுமிருள் கனிகோதை யவிழும்வகை யுணராது
சுறவினெதிர் புடைபாயவே

குவளைவிழி யோகுருகு புனைகமல மோதளிர்செய்
குலவுபத மோபுடைமின்னோ
குனிவில்தொழி லால்முறைபின் முறைவழுவி லாதுகதி
குறுகும்வகை யானதெனவே

பவளவிதழ் வாய்முறுவல் படர்நுதல நீவுகுறி
பனிவெயர்வி னுலழியவே
பவுரிகொடு பாவையர்கள் தாளம்வினை வாகமிளிர்
பந்தாடு நீடுவளநேர்

தவளமணி மாடநிறை மணவைநக ராயனே
சப்பாணி கொட்டியருளே
தணிசந்திர தூசனே திருவேங்க டேசனே
சப்பாணி கொட்டியருளே. (5)

(5) சுறவு—மகரக் குழை ; ஈண்டு காதுகளைக் காட்டிற்று. கோதை—மாலை ; பவுரி—மண்டலமிடுகை ; தாளம் வினைவாக மிளிர பநது—முத்தினுல் செய்த பந்து ; குருகுபுனை கமலம்—அனனம் வீற்றிருக்கின்ற தாமரை. நீவு—தடவின, (இட்ட), இடை நிலையாமலும் முலையைப் பாதுகாவாமல விரைவாகச் சுற்ற மாலை கூந்தலினினறு அவிழும் விதமும் பாராது குவளையொத்த கண்கள் காது வரை பாய அவாகள அனனங்களுள்ள தாமரையோ, தளிரைக் கோதுகினற அறுபதமுடைய வணடுகளோ, மினனலோ எனறு கூறுமாறு கணித்தலில்லாத தொழிலால் முறை வழுவாமல வேகம் பெற்றது என்று கூறுமாறும் நெற்றியினுள்ள திலகங்கள் வெயர்வினுலழியவும் வட்டமாயிருந்து பெண்கள் முத்துப்பந்து ஆடுகின்ற வெண்மை நிறமுள்ள அழகிய மாடங்கள் நிறைந்த மணவை என்க. தூசன—உடையையுடையவன் ;

248 இன்னு மிலங்கியே மெழிலி னிலங்கைவாழ்வு
பெற்று யுனக்கருள்வன்யான்
எனமுன் நடந்தவீ டணனை மகிழ்ந்துகாத்
தல்வைத்தாய் மகிழ்ச்சிபெறவே

நனவினு நெஞ்சின்மேவு கனவினும் வந்துகோல
மிக்கான பச்சைமுகிலே
நதிபதி முன்புசேர பயமும் வழங்குஞாலன்
மற்போர் தொலைத்தபுயனே

அனக வனந்தபாயல் மருவும னந்தரூப
பச்சா லிலைத்துயி லுவோய்
அழகுக னிந்தகோ கனகமகள் நண்பதே
சகயக்கார் முகக்கடவுளே

சனக சனந்தராதி முனிவர்கள் தங்கள்நேய
சப்பாணி கொட்டியருளே
தணிபொ னிலங்குதூச மணவையில் வேங்கடேச
சபபாணி கொட்டியருளே. (6)

(6) நதிபதி—ஈண்டு பாற் கடல்; பயம்—அமுதம்; அனக—குற்ற மற்றவனே; காரி முகம்—வில்; சனக—ஆதி; சனகா, சனநதனா, சனாதனர், சனற்குமாரர் என்பவர்கள்;

249 விண்பொருத விறல்நிசா சரர்நெஞ்சு பறைகொட்ட
வெங்களத் தெழுகூளிபோர்
மீளிக ளுடற்றசைக ளுண்டுகை கொட்டவே
மிகுசோரி விழிகொட்டவே

புண்குடைந் துறுகழுகு சிறைகொட்டி யாடவே
பொங்குடற் குறையொட்டியே
பொருதாவி லங்கொட்ட வவர்கள்சிர மூளைசொரி
பூளையென வேகொட்டவே

கண்குடைந் துண்டலறு கடியகுரல் விடுகொடிகள்
கரியமணி வாய்கொட்டவே
களிகொட்டி வானரப் படையாட வார்சிலைக்
கணைதொட்ட கருமேகமே

தண்பொருந் வம்பணில மணிகொட்டு திருநாட
சப்பாணி கொட்டியருளே
சயமங்கை நேசனே திருவேங்க டேசனே
சப்பாணி கொட்டியருளே. (7)

(7) விண் பொருத—தேவர்களோடு போரிட்ட; விண்—இடவாகு பெயர். கூளி—பேய்; சோரி—இரத்தம்; பூளை—இலவம் பஞசு; கொடி—சாககை; வாய் கொட்டல்—கத்துதல்; பொருந—பொருநை நதி அண்மைவிளி; பணிலமணிகொட்டம்—சங்குகள் முத்துக்களைக் கொட்டும்; ஈண்டு போர்க்கள் வருணனை காண்க.

250 குனிசிலையை நிகர்புருவ நெரியநில வொழுகிவழி
குளிரும்நகை யிதழ்குலவவே
குழைகிழிய வெதிரும்விழி புரளநுத லெழுதுகுறி
குறுவெயர்வு விளைய வமுதார்

பணிமதிய முகமிலகு மலரளகச் சுருளழகு
படர்பிடரின் மிசையசையவே
பரதவிதி யுறுசதியி னதிர்முழவு சுருதியொடு
பயிலுமிட றுலியும்மிகவார்

தொனிவிளைய விசையொழுகு துளைமுரல நடனமொடு
துரிதவகை யொடுதொடரவே
சொரியுநறை யெ.......மைகுரலின் மனமும்வளர
துறுகல்நிரை களுமுருகவே

தனிமகளிர் மகதியிசை பயில்மணவை யாதியே
சப்பாணி கொட்டியருளே
தரைமங்கை நேசனே திருவேங்க டேசனே
சப்பாணி கொட்டியருளே. (8)

(8) நகை—பல்; நகை இதழ் குல்வ—பல்லோடு உதடுகள் சேர; குழை—குண்டல மணிந்த காது; குறி—திலகம; சுருள—கூந்தலின் ஐவகை ஒப்பனையில் ஒன்று; பிடர்—கழுத்து; சதி—நடனம்; பரத விதி—பரத நூலிற கூறியுள்ள விதி; முழவு—மத்தளம்; மிடறொலி—கண்டப் பாடல; துளை—துளையொடு கூடிய புள்ளாங குழல்; கலநிரைகள்—கல் கூட்டங்கள்; மகதி—வீணை; இதில் இசை பயிலும் வகை கூறப்பட்டுளது காணக.

251 அருமறைகள் வாழவே யசுரர்கிளை மாளவே
அமரர்பதி தான்மகிழவே
அலகிலுயிர் நீடவே யடியர்வினை யோடவே
அபயம்எளி யோர்கள்பெறவே

திருவனிதை பூணுலாம் முலைபுளகம் மேவவே
செழுமுனிவர் ஞானமுறவே
தினகரனு மானமோ டெழுமதிய மேருவே
தினமும்வல மாகவரவே

கருவின்மழை தூவவே குலமகளிர் சாலிநேர்
கவையின்முறை மென்மைபெறவே
கருதிமகம் வானுளோா ரவியுணவு கூறவே
கதிமிகவும் வாழ்வுபெறவே

தருமபரி பாலனே மணவைநக ராயனே
சப்பாணி கொட்டியருளே
தரைமங்கை நேசனே திருவேங்க டேசனே
சப்பாணி கொட்டியருளே. (9)

(9) எழுதினகரனும் மதியமும் மானமோடு மேரு தினமும் வலமாகவர என்க. மானம்—விமானம் (தேர்); சாலி—அருந்ததி; மகம்—யாகம; அவியுணவு—யாகத்தில் தேவர்கள் பெறும் உணவு; கதி—செலவம்.

252 அலகில் கருணைசெய் குருகையில் வகுள்மல
ர்த்தொடை பெற்றோறு
லழுதொழு கியதமிழ் மறைமொழி புனைபுயக்
கட்ட முகிற்காரே

மலையென மலைநிசி சரர்பதி பலதலை
வெட்டு சரத்தோனே

.. ... .. ... ..
.. .. .. .. ..

.. .. . .. .. ..
.. .. .. .. ..

எழிலடி மையர்தமை விலையெழு தியவட்
டத்திர விலைப்பால

குலமறை யவர்பயில் மணவையில் வருமுகில்
கொட்டுக சப்பாணி
குவலய முழுவதும் அளவிடு நெடியவ
கொட்டுக சப்பாணி. (10)

(10) குருகை . . . . பெற்றேன்—நம்மாழ்வார் 568-ஆம் பாட்டினுரையில் காண்க.

## முத்தப் பருவம்.

253 அகிலூ ராவி குடியிருந்த
அம்மெல் லோதி யணங்கனையார்
ஆவி யன்ன கொழுநருளம்
ஆடக் குழைதோ ளசைந்தாட

நகிலூர் முத்த வடமசைய
நளிர்வெண் மதியம் நகையாட
நானம் திருத்தி வரித்தகுறி
நனைந்து நுதல்வே ரெழுந்தாடத்

துகிலூர் கொடியா டியவீதித்
துவர்த்த பவள மரகதம்போல்
தூக்குந் தாற்றும் கமுகரடித்
துவள வூசல் துதைந்தாடு

முகிலூர் பொதும்பர் திகழ்மணவை
முகுந்தா தருக முததமே
முத்தா ரணியும் பொத்துபத
முகுந்தா தருக முத்தமே. (1)

(1) அகில் . . . ஓதி அணங்கு அனையார்—அகிலினின்று பெருகிய புகை குடியிருந்த அழகிய மென்மையான கூந்தலையுடைய தெய்வப் பெண்களை ஒத்தவர். ஆவி—புகை. கூந்தலின் ஈரம் புலர அகிற புகை யூட்டுவதியல்பு. நகில்—முலை ; மதியம் நகை—சந்திரனையொத்து நிலவு காலும் பற்கள் ; நானம் திருத்தி—வாசனைப் பொடியாலலங்கரித்து ; குறி—திலகம், தூக்கும்—தொங்கும் ; த்தாற்றும் கமுகு—தாற்றினைப் பெற்றிருக்கும் பாக்கு மரம். பாக்கு மரத்தின் கீழ்க் கட்டிய ஊஞ்சல் என்க. பொதும்பர்—சோலை. இப்பாட்டில் மகளிர் ஊசலாடும் சிறப்புக கூறப்பட்டிருத்தல் காண்க.

254 தத்தும் திரைவா யோவாது
தனியே கதறுந் தடங்கடலில்
தணிசூல் குடக்கூன் முள்வெள்வாய்ச்
சங்கம் கோடி தவழ்ந்துகரை

குத்தும் பொருநை யுவட்டெடுத்துக்
குலவும் சங்கத் துறைவழியே
குறுகி மறுகா தெதிரேகிக்
கூண்டு மணிக்குப் பைகாலத்

தொத்து விரியும் கமலமிசைச்
சுருள்விண் டொளிரும் செம்முறியில்
துளங்கும் துளிபோல் கருவிமழை
சொரிந்து விரிந்த நிலாக்கற்றை

முத்த மிலங்கு வயல்மணவை
முகுந்தா தருக முத்தமே
முகுந்தா திருவேங் கடநாதா
முத்தம் தருக முத்தமே. (2)

(2) சூல்—கருப்பம் ; குடக்கூன்—சங்கம்—குடம் போன்று வளைந்த முள்ளையுடையதும் வெள்ளிய வாயினை யுடையதுமான சங்கு ; சங்கத்துறை—சஙகமமாகுமிடம் ; மறுகாது—பல காலுந்திரியாது ; கருவி மழை சொரிநது துளஙகும துளி போல முறியில் விரிநத நிலாக் கற்றை முததம் இலங்கு எனப்பிரித்துச் சோக்க. கூண்டு—சேர்ந்து ; மணிக் குபபை கால—மாணிக்கத் தொகுதிகள் ஒளி வெளியிட ; முறி—இலை ; தொத்து—பூங் கொததுக்கள் ; கடலிலுள்ள சங்குகள் பொருநையாற்றின் சஙகமமாகுமிட வழியே தவழநது வநது கரை மீதேறி வயலிலுள்ள தாமரை யிலையில முததுக்களைச் சொரியும சிறப்பினைக காணலாம.

255 காவா யாதி மூலமெனக்
கறைக்கால் பிறைக்கோட் டிபமழைப்பக்
காலும் விரும்புங் கவனமுடைக்
கலுழன் பிடரில் தனித்தோன்றி

தீவாய் வடவை தீத்தழலும்
சிகைவாய்ப் பருதி யொன்றேவித்
தீரா யிரவா ளனவாலால்
சினங்கூர் முதலை தனையடர்த்த

கோவா மணியே தீங்கரும்பே
குறிப்பா ருளத்தில் குடியிருக்கும்
குணவா ரிதியே பிறவாத
கோலப் பூவை மணிவண்ணா

மூவா முதலே மணவைநகர்
முதல்வா தருக முத்தமே
முகுந்தா திருவேங் கடநாதா
முத்தம் தருக முத்தமே. (3)

(3) இபம்—யானை ; கறைககால்—உரலடி போன்ற கால ; கால்—காற்று ; பருதி—வட்டமாயுள்ள சக்கராயுதம் ; தீர் ஆயிரம் வாளஅனவாலால் எனப்பிரிகக.

256 வழங்குஞ் சங்கச் சுதையிழுகி
வாய்த்த நெடுவாய்த் தளைப்புனல்நேர்
வழங்கா வாறு பருவாளை
மறியப் பெருக்கி யிருகரையும்

பழங்கொண் டோங்கு முப்படைக்காய்ப்
பரஞ்சேர் முடத்தா ழைகள்நெருங்கும்
பழனம் பெருகப் பொருகயல்கள்
படர்ந்து கரைசெய் சுருங்கைவழி

ஒழுங்கோ டொழுகு நீர்பொசியா
உகளும் செங்கண வரிவரால்
ஊடே நுழைய மள்ளரொலி
உரல்வாய்ப் பம்பை போலிடித்து

முழங்கும் பொருநை திகழ்மணவை
முதல்வா தருக முத்தமே
முகுந்தா திருவேங் கடநாதா
முராரி முத்தம் தருகவே (4)

(4) சுதை—சுண்ணும்பு ; சுருஙகை—கள்ள வழி ; வரால்—மீன் வகை ; முராரி—முரனை அழித்த திருமால் ;

257 சீத நறுங்கடல் விளைமுத்து வலைப்படும்
சிறுமுத் தேகண்ணர்
செங்கழை தங்கிய முத்தெனிலாலை
செறிந்துடை படுமுத்தே

தாதுறு பங்கய முத்தோ பங்கந்
தானுறு கறை முத்தே
தந்தா வளமுத் தாமிட நடுவுட்
டங்கிய குறை முத்தே

சோதி நறுங்கழை முத்தே தீவாய்ச்
சுடுதுளை படுமுத்தே
சொரிமுகில் முத்தோ விடியுறு முத்தே
தோமில் குணத்தொளிசேர்

மூதுரை வேதம் கனிகனி வாயால்
முத்த மளித்தருளே
முகிலே புகழ்மண வாபுரி மாலே
முத்த மளித்தருளே. (5)

(5) கண் ஆர் செங்கழை—கணுக்கள் பொருந்திய கரும்பு ; பங்கம்—சேறு ; தந்தாவளம—யானை ; சோதி நறுஙகழை—மூஙகில ; முகில்—மேகம் ; இங்குப் பல விடங்களிலும முத்துத தோன்றுவதாகக் கூறி அலைபடும் (அலைககப்படும்) உடைபடும் ; சேறுறும், குறைபடும், தீவாய் சுடு துளைபடும், இடியுறும் என்றும் குறறம் கூறி உனது முத்தம் குற்றமில்லாததால் கொடுப்பாய் என்கிறார்.

258 விளரி யளிகள் பயில்துளப
விதுரன் மனையி லுற்றவா
விரவு மமரர் முடியுமுத
கழல்க ளொளிரு மற்புதா

தளரு மடிமை யுறுபிறவி
　　தவிர வருள்செய் யச்சுதா
சனக னுதவு மகள்கொழுந
　　தனுவை முனமி றுத்தவா

அளவில் மகளி ரொடுகலவி
　　அளையு மொருவ வுத்தமா
அழகு கனியும் முகலளித
　　இரவி குலமு தித்தவா

முளரி நயன திருமணவை
　　முகிலே யருள்க முத்தமே
முனிவர் பரவு முருவவருவ
　　முதல்வ தருக முத்தமே. (6)

(6) அளி—வண்டு ; விதுரன் மனையில் உற்றது, கண்ணவதாரத்தில தூது சென்ற போது, கழல்கள்—கழலணிந்த பாதங்கள் ; சனகன் மகள்—சீதை ; அளவில் . . . உருவ—கண்ணவதாரத்தில் பதினாயிரம் கோபிகையரோடு ராசககிரீடை செய்தது காண்க. இரவிகுல முதித்தது—இராமனாகத்தோன்றியது.

259　கோவாத முத்தம்விலை கூருத வச்சிரமணி
　　கூடாத கற்பதருவே
கோடாத பற்பமெழில் கோணுத பச்சைவரை
　　கூசாத சக்கிர வரையே

பேவ வெற்றியிபம் வீயாத புத்தமுத
　　மே......வெறுக்கமலரே
யான்வாய் மிழற்றுமொலி வீரா விசித்திரமணி
　　யே......மனத்திலிடியே

நாவீரர் சொற்ற தமிழ் வீரா கரக்குரிசில
　　ஞானு கரப்புணரியே
நாதா தொகுத்த மனுகீதா மலர்த்துளவ
　　நாலா ரணத்துபநிட

தேவாதி மெய்பொருட் கோலாக லப்பிரவுட
　　திருவாயின் முத்தமருளே
தேனூறு பொற்றுளவ நாலா ரணக்குழவி
　　திருவாயின் முத்தமருளே. (7)

(7) பற்பம்—தாமரை, நீலம், பச்சை, கருமை, முதலிய நிறங்களைப் பேதமின்றிக் கூறுவது கவி மரபு. பச்சை வரையென்றூர் நீல நிறமுடைமையாா சக்கரவரை—சக்கராயுதம் தாங்கிய. மலை யொத்தவன் ; இபம்—யானை ; நாவீரர்—நம்மாழ்வார் ; வீராகரம்—வீரதிற் குறைவிடம் ; பிரவுடன்—பெருமையுள்ளவன் ; நால் ஆரணம்—நான்கு வேதம்.

260　தா நீக....யும் வாளிற் பட்டுந்
　　தரங்கத் திடையே மொத்துண்டும்
தாழும் துலையில் தூக்குண்டும்
　　தணிந்தும் கருஞ்சேற் றிடைப் புதைந்தும்

. . . . ா மீக்கூர்த் துலைபட்டும்
 உடலம் கவைக் கொண் டுரைபட்டும்
ஒளிமட் கியும்கொடி யும்விளர்த்தும்
 ஒதுங்கி யதுங்கி யுரலசுமி

வர போக்கா . . . . . . திதிரு . . . . லபுரை
 வழங்காக் கரைப்போக் கனமனுண்டு
மதிக்குந் தரமாய்ப் பகரதலே
 வணிகர் பழிக்கப் பழிப்புண்ணு

மூரல் வேய்கீ தங்கனிவாய்
 முத்தந் தருக முத்தமே
முகுந்தா மணவை யுகந்ததிரு
 முகிலே தருக முத்தமே. (8)

(8) துலே—தராசு; உரைபடல்—உரை கல்லிலிட்டுப் பார்த்தல். விளர்த்தும்—வெண் மையாகியும்; ஈண்டு முத்தினை வணிகர் விலை மதிக்கும் நிலையைக் காட்டுகிறது. பெரும் பாலும் சிதைந்துள்ளது.

261 இழைக்கும் நுண் ணூல் சிறியமருங்
 கேந்தச் செம்மாந் தெழுமுலையோர்
இலவத் துவர்வாய்த் தவள நிறம்
 எய்த வெய்தும் கலவிநலம்

விளைக்கும் பொழுதி லிறைவிழித்தன்
 மெய்யி னழலைக் குறித்துளத்தில்
விரும்பும் மடவா ரிருந்ததென
 வெறுத்து மிகுந்த புலவியினல்

திளைக்கு மாகக் குங்குமத்தைத்
 திமிர்ந்த முன்றில் செங்காந்தள்
செறிவெண் குருகை யுடைத்த வதிற்
 சேரச் செவ்வான் பலகோடி

முளைக்கும் பிறைபோல் மிளிர் மணவை
 முகுந்தா தருக முத்தமே
முதலே திருவேங் கடநாதா
 முகிலே தருக முத்தமே. (9)

(9) இழைக்கும் நுண் நூல் சிறிய மருங்கு—இழைக்கின்ற நுண்ணிய நூலினும் சிறிய இடை; கலவி விளையும் பொழுது பவளம் போன்ற சிவந்த அதரம் வெளுக்கும். எனவே "தவள நிறம் எய்த" என்றார். பெண்கள் ஊடல் கொள்ளுதல் போல அன்னங்களும் ஊடல் கொண்டு முன்றிலில் உள்ள குங்குமத்தைப் பூசிச் செங்காந்தள் பூவில் சேர அவை சிவந்த வானத்தில் பல கோடி பிறைச் சந்திரன் தோனறுவது போலிருந்தது என்க. செங்காந்தட் பூ சிவந்த வானத்திற்கும் குங்குமம் திமிர்ந்த குருகுகள் சிவந்தெழும் சந்திர னுக்குமுவமை.

262 மைக்கட் குவளை குழை வள்ளை
வன்னக் குமிழ் வெண் டளவு கொவ்வை
மதிக்கீற் றரக் காம் பலுந்தாங்கு
மதியம் வல்லி பூத்ததெனக்

கைக்கட் கமலங் கழங்காடிக்
கமழுந் தாழிக் குவளை (சிந்தி)
கோவது கனிந்த......ழல் சும்மை
காரில் மின்போ லிடையசையத்

தொக்க மடவார் பயில்மேடை
சுதைவெண் ணிலவு வழிந்தொழுக
துலங்கு கழுத்தில் மைவதியத்
தூய மதிமா முடி தவழ

முக்கட் கனிபோல் பொலி மணவை
முகுந்தா தருக முத்தமே
முத்தா ரணியும் பொத்துபத
முதலே முத்தந் தருகவே. (10)

(10) மைக்......என :—கரிய கணபோன்ற குவளையையும், காதுகள் போனற வள்ளைப் பூவினையும், அழகிய குமிழம்பூவும் (மூககிறகு உவமை கூறுவது) வெள்ளிய முலலையும் (பலலுக்குக் கூறுவது) கொவ்வைப் பழஙகளுமம (அதரததிறகுக கூறுவது) பிறைச் சநதிரனும் (நெறறிக்குக் கூறுவது) செவவலலியும (வாயககுக கூறுவது) தாங்கிய ஒரு சநதிரன கொடியில் தங்கியது போனறு இல்பொருளுவமை; தாழிககுவளை - தாழியில போட்டு மலர்விககும குவளைப்பூ, சுதை - சுண்ணும்பு; மை - மேகம்; முககணகனி - சிவன; முதலிரணடடிகளும் பெண்களுககுறற அடைமொழி; மெத்தையிலுளள சுண்ணும்பு பூசியதால நிலவு ஒளிவழிந்தொழுகுவது சிவபெருமான் பூசிய வெணணீற்றுககும, அம்மேடைகளின மேல நடுவிடத்தில் மேகம தஙகுவது சிவபெருமான கழுத்தில [illegible]சுண்ட கறைககும், அமமேடையின் உசசியில் சநதிரன் தவழ்வது சிவபிரான் தலையில வைத்துள்ள பிறைச சநதிரனுககும உவமையானமை காண்க.

## வாரானைப் பருவம்.

263 குழையிற் றுலங்கு குழையசையக்
குறுக்குத் தசைக்காற் கிண்கிணியும்
குரல்வாய் மணியும் மிக முழங்கக்
கோலப் பதநூ புரமலம்ப

இழைத்தொத் தியபே ராகத்தில்
இளகுந் துவர்வா யமுதொழுக
இலகு முறுவல் நிலாமகளிர்
இருகண் சகோர வினந்தெரிப்ப

நிழலிற் பொலியு மரைமணி நேர்
நிறைத்த சுட்டி நுதலசைய
நெய்த்த புழுகார் மயத்த குஞ்சி
நிரைக்கும் நீலச் சுரும்பார்ப்ப

மழலைக் குழல்வாய்ச் சிறிய மொழி
　　மழவே வருக வருகவே.
மணவா புரிவேங் கடவாண
　　வரதா வருக வருகவே. (1)

(1) குழையில - காதில் ; ஆகம் - மார்பு ; சகோரம் - நிலவை யுண்ணும் பறவை.

264 அல்லி மணக்கும் நறைக்கமல
　　அலரே மணக்கும் குளத்தருகே
ஆரம் மணக்கும் ச....க்கின்ற
　　அள்ளல் மணக்கும் வயல்மணக்கும்

சொல்லின் மணக்கும் குலைநீழல்
　　தூவி யன்னப் பெடைமணக்கும்
சோலை மணக்கும் கரும்பொடியத்
　　தூண்டில் மணக்கும் பருவரால்

முல்லை மணக்கும் சுரும்பார்ப்பக்
　　குதிக்கும் பெருமை மணத்தவளங்
கூர்ந்து மணக்கும் திருமணவைக்
　　குழகா கோக னகமணக்கும்

வல்லி மணக்கும் பச்சைநிற
　　வரையே வருக வருகவே
வரதா திருவேங் கடநாதா
　　மாலே வருக வருகவே. (2)

(2) ஆரம் - முத்து ; அள்ளல் - குழை சேறு ; சொல் - நெல பயிர் ; தூவி - சிறகு ; கரும்பொடிய சோலை மணக்கும் என்க. அரால் - ஓர் வகை மீன் ; தூண்டில் - மீன் பிடிக்கும் கருவி ; முலலை - ஓர்வகைப்பண். ஈண்டு மணக்கும் என்ற சொல் பல முறை வந்து பொருள் வேறு பட்டதால சொற் பின் வரு நிலையணி ; கோகனகம்......வரையே - தாமரை மலரில சேர்ந்த வல்லிபோனற திருமகளை மணம் புரிந்த பச்சை மலையொத்த மாலே.

265 வேரிக் கனியே கனி கனிந்து
　　மிகுந்த ரசமே ருசிப்பொழுக
விள்ளுந் தமிழே தமிழினியல்
　　விரித்த பொருளே பொருள்ஞான

மூரித் தருவே தருவித்தே
　　முத்தே முத்தின் மூலம்மே
மூலச் சுடரே சுடர்க்கொழுந்தே
　　முதுநான் மறைக்குவை யேகொழுந்தே

தேரப் படுவுண் ணுவமுதே
　　அமுதே வமுதத் தெளியடியார்
சிந்தைக் கொளிர்சிந் தாமணியே
　　செல்விச் செல்வ வருள் மணியே

வாரிக் கடலே கடலின்மணி
வண்ணா வருக வருகவே
மணவா புரிவேங் கடவாணா
வரதா வருக வருகவே. (3)

(3) வேரி - தேன ; மூரி - வலிமை ; மறைகருவையே என்க.

266 தளையார மலர்கஞ்ச நடுவிடை முத்தமுத்
........னன விண்ணோர்
தருகற் பகக்கொடித் தணந்தவண் டெனவே
தழல்நிறத் தழைசிந்துரமே

விளைவே . . . . , . . .
. . . . . . . . . . . . . .
வழுகொழுத் தாய்செவிலி நற்ரு வதென மிக்க யெனத்தக்க
மேன்மையா குடங்கை மிசையே

அளைவாரி யுண்டகைத் தாமரைத் துணையினால்
அவர்முலை புடைத்துண்டுமே
அண்டரண் டம் . . . . . . . த்தா மரைச்சிலம்
பார்ப்பமுகிழ் நகைபூப்பவே

வளையாழி திகழ்வைய மொருபத்தன் மொய்ம்புவரை
வளருமழை முகில் வருகவே
மதகூடு வரிவாளை யெதிர்பாயும் மணவைநகர்
வளருமா தவன் வருகவே. (4)

(4) அளை - வெண்ணெய் ; அவா - கோபியர் ; வளைஆழி - சஙகு சக்கரம்.

267 அரிலூடு படர்கானி னிடைசீதை யொடுபோகி
அடல்மீறி வருமொருவனே
அறிவளார் மனநேய கொடியாரு ளதிதூர
அடைமீது துயில்குழவியே

முருகூறு மணம்நாறு துளவவேறு தொடைமார்ப
முதிராத கதிரிரவியே
முளைமேவு துளையூது கனிவாய முனிவோர்கள்
முறையரக வடிபரவுவோய்

தரைமேவு வரையேழு மெனலான தருவேழு
தனதூடு விடுகணையனே
தமிழ்தேரு மலைமேவி யொழுகாறு புடைவேவு
தடநீடு மணவைமுகிலே

வரிபாடு மலிகோடி நறைபாய மலர்மாது
மணவாள முகில்வருகவே
மழைமேனி யதிரூப குழைக்காத முகசோப
வளர்சோதி யெதிர்வருகவே. (5)

(5) அரில - சிறுதூறு ; அடை - ஆலிலை ; முளைமேவு துளை - மூங்கிலால் செய்த புள்ளாங் குழல் ; முளை - மூங்கில் ; மலையை யொத்த எழு மரங்களை யெய்தது - இராமவதாரத்தில் சுக்கிரீவன் ஐயத்தைப் போக்க ; தமிழ்தேருமமலை - பொதியமலை.

268 துளிதூங்கு மாமுலைப் பால்சங்கி னிடைபெய்து
துவர்வா யதுக்கியூட்டிச்
சுடரவனை மதியம்வலம் வருவதென மணியணிச்
சுட்டிநுதல் வளைசுற்றியே

களிகூர்ந்து தரையில் சங்கங்க விழ்த்திமுலை
கான்றபால் துளியிழைத்தே
கவினும்வகை திலதமிட் டய்யவி யகிற்புகை
காண்வர வெழுப்பிமணியால்

ஒளிகூர்ந்த யரமியத் தெய்துபுன் மாலையிடை
உற்றபுட் குரல்கள்கேளா
துள்ளிருத் தித்தனி வளர்த்ததாய் கோசலைக்
குளமகிழ் பிள்ளையரசே

அளியேங்கள் காணவேங் கடவாண பூணசைய
அசையுநடை யுடன்வருகவே
அமுதொழுகு பொருநைநதி சுலவுதிரு மணவைநகர்
ஆயரே றேவருகவே. (6)

(6) தூங்கு - தங்கு ; அதுக்கி - அமுக்கி ; சுடரவனை........ சுற்றி - சூரியனைச் சந்திரன் வலம் வருவது போன்று மணியணிந்த சுட்டியென்ற ஆபரணம் தங்கும் முகத்திடம் பால் வார்த்த சங்கினைச் சுற்றி திருஷ்டி கழித்தது ; நுதல் - முகத்திறகாயிற்று ; களிகூர்ந்து...... திலதமிட்டு - மகிழ்ந்து தரையில் சங்கினைக் கவிழ்த்துப் பால் துளியினால் மண்ணைக் குழைத்து அழகாகத் திலகம் வைத்து ; அயயவி - வெண்சிறுகடுகு, ஐயவி என்பதன்போலி ; அரமியம் - நிலாமுற்றம் ; புட்குரல்கள் - வௌவால், கோட்டான் முதலியவற்றின் குரல்கள். இங்ஙனம், பார்ப்பதும் கேட்பதும் குழவிகட்கு “ பக்ஷிதோஷம் ” நேரு மென்பர். இப்பாட்டில் கோசலை இராமரை வளர்த்த திறம் காட்டப்பட்டுள்ளது. சங்கினால் திருஷ்டி சுற்றல், நிலப்பொட்டிடுதல், அகிற் புகையூட்டல், மாலையில் வௌவால் முதலிய பறவைகள் குரல் கேளவொட்டாது வீட்டினுள்ளிருத்தல், ஒவ்வொரு தாயரும் இன்றும் கைப்பற்றிவரும் முறைகளாகும். அளியேங்கள் - அளிக்கத்தக்க நாங்கள் ; சுலவு - சூழும்.

269 குனிதவழ வமுதுபொதி குழவிமதி பொன்னிதழ்க
கொன்றைநதி வளவும்வேணிக்
குடிலகோ லத்தர்நுதல் விழியழல் குளித்துருவு
கொண்டமக ரக்கொடியினன்

முனியிலழி யமுதெனத் தருமகளிர் குழையுறவு
முடுகுசடை நெடியவிழிபோல்
முழுநெறிக் குவளைமுகை புரிமுறுக் கவிழவனி
மூசுவா சத்தடமெலாம்

பனிபொதியும் வள்ளைவண் கொடிமாது தரநேரு
பவளவாய்த் தூவியன்னம்
பங்கயக் கோதையர்கள் . . . மணக் கவினோடும்
பலகாலு மெதிர்காட்டியே

வனிதையர்கள் குழுவினொடு நடைபயிலும் வயல்குலவு
மணவைமா தவன்வருகவே
வண்டுநிறை தண்டுளவ கொண்டல்நிற வேங்கட
மலைக்கொழுந் தேவருகவே. (7)

(7) குனிதவழ........மதி - வளைவு பொருந்திய அமிர்தம் பொருந்திய இளைய சந்திரனை யும; பொனனிதழ்ககொன்றை - பொனபோன்ற இதழ்களையுடைய கொனறைப்பூ; நதி - கங்கை; வேணிக்குடிலம் - ஒருபொருட்பன்மொழி; இவ்வடைகள் சிவபெருமானைக் காட்டுகின்றன. நுதல விழி......கொடியினுன்—சிவனது நெற்றிக கணணின் தீயில் மூழ்கி உருவு அழித்துக கொண்ட மனமதன்; சிவபெருமான கோபித்துப் பார்க்க அழிந்த மனமதனை யொப்ப மகளிரும் கோபித்தால் அழிகின்ற ஓர் அமுதத்தை (நஞ்சினை)க் கொடுப்பது போன்ற காதினிடம உறவுகொண்ட விழிகளைப் பெற்றிருந்தனர் என்றும், அக்கணகளை யொததுக குவளைகள் முறுக்கவிழும் எனவும் விரித்துப் பொருள் கொள்க. புரி - கட்டு; அளிமுசு - வணடுகள மொய்க்கின்ற; தடத்திலுள்ள அன்னங்கள் மடவார்கள் நடைபோல நடககப பயிலுகினற மணவை நகர் என்க.

270 கோலச் சிலைப்புருவ நுதல்நாம மெழுதவிழி
கூருமஞ் சனம்வரிப்பக்
குஞ்சிமிசை மஞ்சினிடை சேருமதி போற்றளவு
கொண்டணிய விண்டமலர்நேர்

காலிற் சதங்கைநூ புரமணி மணியணிக்
கலன்வகை திருத்த வழகார்
கனகவரை நாணரையி னணியமஞ்சள்பொடிக்
களபமுட லதுப்பவகலந்

தாலத் திணங்குமய் படையணிய விருகரத்
தாமரைத் தொடிநிரைப்பத்
தையலார் கண்ணெச்சில் தோயாம லுப்பிலைத்
தாலமெதிர் தலைசுற்றவே

வாலப் பிறைப்பருவ மாகவள ரொருவுருவ
மழைநிறப் புயல்வருகவே
வணடுநிறை தண்டுளவ கொண்டல்நிற வேங்கட
மலைக்கொழுந் தேவருகவே. (8)

(8) அஞ்சனம் - மை; மஞ்சினிடை சேருமதிபோல் குஞ்சிமிசை தளவு கொண்டணிய என்க. தளவு - முல்லை மலா, இது கணணுவதாரத்தில அணிந்தாா. தாலதது இணஙகும் அய்(ஐ) படை அணிய - உலகததிறகொதது ஐயம்படை (திருமாலின் ஆயுதங்களை ஐந்தும் பொருந்த ஆபரணம் செய்து குழவி கழுத்திலிடுவது மரபு); அணிய தாலம் - உலகம்; கண் எச்சில் - திருஷ்டி தோஷம; உப்பு இலைத்தாலம் உப்புடன கூடிய பனையோலை; தாலம் - பனை; மூன்றுவீட்டிலுள்ள பனையோலைககூறை வேய்ந்த வீடுகளினின்று ஓலை ஒடித்து வந்து உப்புவைத்துச் சுற்றித் திருஷ்டி போக்குவது தாயார் வழககம்; வாலப்பிறை - வெள்ளிய பிறை.

271 கற்பூத் தெதிர்ந்த வகலிகைக்குக்
கதிர்பூத் தலர்ந்த வனசமலர்
கழல்பூத் தெழுநத துகள்கதுவக்
கலைபூத் திலங்கு மதிவதனம்

தற்பூத் தெழுந்த கரந்தையென
தரும்பூத்து வரக்கண்ட
சதுரே மதுர முறுமவசனத்
தருணம் பூத்த பதகிரண

விற்பூத் தெழுந்து கருணைவெள்ளம்
விழிபூத் திலங்கு மழைமுகிலே
விருது பூத்துப் பொருகளத்து
வெற்றி பூத்த போர்விளைத்து

மற்பூத் தெழுந்த திணிதடந்தோள்
மலையே வருக வருகவே
மணவா புரிவேங் கடநாதா
வரதா வருக வருகவே. (9)

(9) கதிர் பூத்தலாந்த வனசமலர் கழலபூதது எழுந்ததுகள் கதுவ - சூரியனுல் பூத்து அலாந்த தாமரை மலரை யொதத கழல விளங்கும் காலில பொருநதி எழுநததுகள்பட ; கல்லாயிருநத அகலிகையை இராமா பாததூளி நீககியது காண்க. அதனுல் இலங்கு மதி வதனம் என்க. கரநதை - ஒரு பூணடு. இதன பூ மாலையை நிரைமீட்போரணிவர். வில் - ஒளி ; விருது - வெற்றிச சினனம ; மல்-மலயுததம.

272 கரமும் விழியும் முகமு மலர்செய்
கமல மெழிலி யுருவனே
கனக னகல முகிரி லிளசெய்
கடின கருணை யொருவனே

உரமு னுடைய வசுரர் பதிமெய்
உருள வடல் செய் விசயனே
அருளு மிரத விரவி மதலை
உறவு புரியும் வரதனே

குரவை புரிய விடையர் மகளிர்
குழுவி னளையு நடனனே
குருதி யொழுகு மழுவி னரசர்
குணமு னடரு நெடியனே

வரமு மளவி லருளு முதவு
மணவை வரத வருகவே
மருது பொருத விருத சதுர
மழவ வருக வருகவே. (10)

(10) எழிலி - மேகம் ; கமல உருவனே, எழிலி உருவனே எனக் கூட்டுக. கனகன் - இரணியன் ; உரம - பலம் ; இரத் இரவி மதலே - ஒற்றைச் சக்கரத் தேரினையுடைய சூரியன் மகன் ; குரவை பாடடில் காண்க. மழு - பரசு ; பரசுராமர் வரலாறு 232-ஆம் பாட்டின் குறிபில் காணக. மருது - மருத மரங்கள், 34-ஆம் பாட்டின காணக.

273 தோற்றிய திருக்கோயில் வாசலில் தமனியத்
தூணங்க டைந்தமைத்துச்
சுடர்வயிர மரகதச் சாளர மிணக்கிமணி
தூங்குகொ டுங்கை சேர்த்து

நாற்றிசை முகங்கொண்டு தாமரைக் கடவுளுறை
நாட்டையு மதட்டி நீணட
நவமணி குயிற்றிய திருச்சித்ர கூடமும்
நவரங்க சப்பரமுமெண்

மாற்றரிய செம்பொன்மக ரக்குழையு மரவிந்த
மங்கையுறை யாபரணமும்
மற்றுள திருப்பணிகள் முற்றவும் கண்ட புகழ்
வைகுந்த நாதனுதவும்

போற்றியடி யானமகிப ரேத்தமன மகிழ் கொண்டல்
பூதலந் தொழவருகவே
பூங்கமு கிளம்பாளை தேங்கமழு மணவைபுன
சீதுழாய்க் கடல் வருகவே. (11)

(11) தமனியம - பொன ; சாளரம் - சனனல ; மணி - இரததினம் ; தாமரைககடவுள் உறைநாடு - பிரமன் வாழும் சத்திய உலகம். சிதரகூடம் - சித்திர சாலே ; சபபரம் - மேற் கட்டமைநத சிஙகாரக் கட்டில ; " அடியான மகிபா எதத " எனக.

## அம்புலிப் பருவம்

சாமம்.

274 மண்டல முனக்கு முள திவனுககு மோவளவில்
மண்டலமு முளதுனக்கே
மரணமுண் டிவனுக்கு மரணமுள த........
மருவர விவனுழியான்

புண்டரிக பதியுற வுனக்குமிவ னுக்குமோ
புண்டரிக பதியுறவுகாண்
பொழியமுத கலேயுண் டுனக்குமின் னெழுகுசெம்
பொற்கலேயி னுடையனிவனே

எண்டிசையு நிலவுநில வுண்டுனக் கிவனுக்கும்
இளநகையின் நிலவுண்டுகாண்
இரவொழித் தருள்வை நீ இவனுமோ கா'சரி
இரவொழித் தாளுதலால்

அண்டர்பர வுங்கிரண சரணமண வைப்புயலோ
டம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (1)

(1) (1) சநதிரன் மண்டலம் (பரிவேடம்) பெற்றுள்ளான—வேங்கடநாதன் அளவில்லாத மண்டலம் (தங்கி யிருக்கும் ஊர) உணடு.

(2) மரணம் (அமாவாசை நாளில் காணப்படாததால் இங்ஙன் கூறினர்) பெறுவான்—(விடுபட்டுள்ளது).

(3) புண்டரிக பதியை (தாமரைக்குக் கணவனை சூரியன்) உறவு பெறுவான்—புண்டரிகபதி( தாமரையில தோன்றிய தலைவனை பிரமனை) உறவினன் (மகன் முறை) ஆவான்.

(4) அமுதம் பொழிகினற கலை (வளரும பங்கு தேயும் பங்கு) உண்டு—பிரகாசமிகும் சிவந்த பொற்கலை (பொன்னுலான உடை) உடையவன்.

(5) எலலாத்திககிலும் நிலவுகின்ற குளிர்நத நிலவு பெற்றிருப்பான்—இளநகை (பல்லினொளி)யின் நிலவு பெற்றுள்ளான்.

(6) இரவு (இராத்திரி) ஒழித்தருள்வான்—சிவபிரானது இரவினை (இரத்தல் தொழிலை) ஒழித்தவன்......... ஆம் பாட்டுக் குறிபபு காண்க.

அண்டர் - தேவர்.

### தானம்.

275 தாரணியி னெடு செம்பொன் வரைவலஞ் செய்வதுந்
தனுவென வுடற்கோடலுந்
தவளநிற மாய்வுற்று வளர்வதுந் தேய்வதுந்
தணிவட்ட நடுவணுறலும்
வாரண வுரிப்போர்வை யரனடிப் பட்டதும்
வானவர்க் குணவாவதும்
மையலுறு தையலார் வாய்வசைப் படுவதும்
மந்தர மிடத்தாவதுங்
காரண மிலாதுகா கோதர முணக்கடிது
காய்வதுங் கங்கைமடுவில்
கலையொன்றில் நரலலையி னலையுண்ப துந்த விர்வை
காரிய முனக்கல்ல காண்
ஆரணம் பயில்மணவை நாரண னழைத்தனன்
அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (2)

(2) செம்பொன்வரை - மேருமலை ; தனுவென உடல்கோடல் - தக்ஷன் சாபத்தால் பிறைச் சந்திரன் வில்லைப்போன்று உடல் வளைந்துள்ளது காண்க. தவள நிறம் மாய்வுற்று - வெண்மை நிறம் அழிந்து ; தணிவட்ட நடுவண் உறலும் - குறைந்த களங்கம் நடுவிடத்தில் பொருந்துவதும் ; உரி - தோல் ; வானவர்க்குணவு - முதல் 15 நாள் சந்திரன் அமுதத்தைத் தேவர் அருந்துவர் ; வசைப்படுவது - திட்டுவது ; மந்தரம் இடத்தாவது - மந்தரமலை மத்தாகிக் கடையும்போது சந்திரன் தறியாகி இருந்தான் ; காகோதரம் - பாம்பு ; நரல் அலை - ஒலிக்கும் அலை ; ஆரணம் - வேதம்................

### தண்டம்.

276 வெம்புகட் டழலொழுகு சுடிகையா யிரமுடைய
வெள்ளரவ மேவிலகல்வாய்
மென்றுமென் றுமிழாது வெம்பசியி னுனே
விழுங்கும் விரி கதிராழியான்
உம்பருற் றெழுமிரவி வெயில்மறைத் தவன் எண்ணில்
உனதமுத நிலவரியதோ
உரகநாட் டமுதகட நல்குபுள் ளரசினுக்
குனைநல்க மொழியி லெளிதோ
இம்பரிற் செலநிற்பன் ஓரிமைப்பி லருளுவன்
உனை......குமிதாதலால்
ஏழேழு புவனமும் மதிக்கவருமதியமே
எய்துத லுனக்கு மதிகாண்
அம்புயத் திருவளரும் மணவை நகர் முகிலுடன்
அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்த புய வேங்கட முகுந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(3) கண+தழல் - கட்டழல ; கண்ணினின்று எழும் அக்கினி ; சுடிகை - சூட்டு ; அரவம் ஈண்டு - ஆதிசேடன ; ஆழி - சககரம் ; இரவிவெயில் மறைத்தது 232-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. உரகம் நாடு அமுதகடம் நலகுபுள் அரசு - பாம்புகள விரும்பின அமுத குடத்தைக் கொணர்ந்து தந்த கருடன ; நலக - தூககிவர ; உனக்கு மதி- உனக்குத் தகக புததி ; அம்புயத்திரு - தாமரையில் வாழுமிலக்குமி ;

### தானம்.

277 காலையெழு தரணிகதிர் காலொளி மழுங்காது
கதிராயி ரஞ்சேரிவாய்
கனல்திகிரி யுண்டுனது கலைநிறையி லாவுணக்
கருதிலருள் கருடனுளன் காண்
மாலையெழு போதினுடல் கூனெழிப் பனினிது
மந்தரைக் கூனெழித்தான்
வளராது தேய்வுண் டுனக்கெனில் கலைமதி
வளர்க்குமிவ னேயாகுமால்
வேலையடை கல்லெனக் கொண்டமு தெழக்கடைய
வேண்டிலிவன் மொழியமுதமே
விண்ணுட ருக்கருள்வ னதுவன்றி யேயுனது
மேம்பாடு சொல்ல வெளிதோ
ஆலைவயல் சூழ்மணவை மாதவ னழைத்தனன்
அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (4)

(4) **காலை........உண்டு** - காலையில எழுகின்ற பூமிககொளிவீசும் சூரியனைப்போன்று வெளிவிடுகினற ஒளி மழுஙகாமல ஆயிரம கிரணஙகளைச சொரிகினற கூர்மையையுடைய கனல் கினற சக்கரப்படை உனககு ஒளி கொடுக்க உணடு. சூரியனிடமிருந்து சந்திரன் ஒளிபெறுவதால் இங்ஙன் கூறினுர். **கலை. . . . . . காண்** :—கலை நிறையாதபடி தேவர்கள் சாப்பிட நினைத்தால் தேவாகளுடைய அமுத குடத்தைக் கொண்டுவந்து நிரப்பக் கருடன் உள்ளான். **மாலை. . . . . . ஒழித்தான்** :—முன பிள்ளைத் தமிழ்க் கொத்து 127-ஆம் பாட்டினும் . . . . . . ஆம பாட்டின் குறிபபில் காண்க. **வேலை** அடைகல் என - பாற்கடலில் தரியாக ; மேம்பாடு சொல்ல என்றுர் நணபனுயின் எனபது பற்றி.

278 மஞ்சினைக் கிழியவெழு நொச்சிபுனை மதிலாழி
வளையிலங் கைக்கூடுபோம்
வழிகண்டு தந்தவந் நாள் முத லிநாள் வரையும்
மானமொடு நீயிருந்தாய்

தஞ்சனக் கிவனலது வேறில்லை...... பகா
தங்களுக் கபாரமே
தருவரே மதியுடையர் இனிவேறு காரணம்
தக்கசொல் மிக்கவகைகேள்

நஞ்சினிற் கருகுமிட றுனைவலம் வைத்தருளும்
நாதனிவ ஞர்ந்த மாமன்
நான்மறைப் பொருளுமிவன் ஞானசற் புருடருள்
நகுகமல முகையிநடுவார்

அஞ்சனக் கிரிமணவை நகர்வரு முராரியுடன்
அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
அம்பிலீ யாடவாவே (5)

(5) **மஞ்சு** - மேகம். **மஞ்சினை. . . . இருந்தாய்** :—முன் பிள்ளைத் தமிழ் கொத்து 166-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. **தஞ்சு** - தஞ்சம் ; **நஞ்சு** - ஆலகாலவிடம் ; **நஞ்சினில் . . . . வைத்தருளும்** சிவனை வலப்பக்கமாக வைத்தருளும். 70-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

279 ஊறுபால் நறையொழுகு கழைகணு வெடித்தநிரை
ஒளிர்முத் திறைக்கவுழுவார்
ஊடே யொடித்துநிரை யே....சசி விடிகுரல்
உரைப்பவெரு விக்கவரியின்

ஏறுபாய் மடுவினெதிர் வாளைபா யக்கமு
கிளம்பாளை நறைபாயவே
எதிர்பாயும் வரிமருப் பார்கவரி முலைபாய
இனிதுநிறை பால் பாயவே

நாறுபாய் பாசிலைச் சுருள்விரிய வரியளிகள்
நறையுண்டு மலர்பாயவே
நகுகமல முகையவிழ நடையோதி மம்பாய
நரலைநிகர் பொருநை நன்னீர்

ஆறுபாய் புகழ் மணவை யச்சுத னுடன்கடிதின்
 அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்த புய வேங்கட முகுந்தனுடன்
 அம்புலீ யாடவாவே. (6)

(6) கழை - கரும்பு ; கவரியின ஏறு - எருமைக்கடா ; வாளை - வாளை மீன் ; மருப்பார் கவரி - எருமை ; நாறு - நாற்று ; அளி வணடு ; முகை - அரும்பு ; ஓதிமம் - அன்னம் ; நரலை - கடல் ;

280 அரவிந்த மெனவளரு மூலைமாத ருயிரென்ன
 வருகொழுந ரொடுகலவியால்
மகிழ்களவை செய்து மாற்றுவகை யால்வந்து
 வளர்பழ வினைப் பகுதியும்

இரவுந்தன் கைந்நிலவு பாய்மலர் குமுத விதழ்
 எழில் மாதர் வதன மொவ்வா
என்னவுல கத்தினில் இசைப்பதுங் கடல் நடுவண்
 எற்றுதிரை மொத்துண்பதும்

பொரவுந்து சோதி விழி யழல் முழுகி யடலையாய்
 புரமற்றான் வெண் கவிதையாய்
போந்தனை யெனக்கண் டிசைக்கின்ற கொடுமையும்
 போக்கிமிகு புகழ் மேவலாம்

அரவிந்த மலர் மங்கை கொழுநன்மண வைப்புயலோ
 டம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
 அம்புலீ யாடவாவே. (7)

(7) அரவிந்தம் - தாமரை யரும்பு ; வருகொழுநர் உயிரெனன மூலைமாதரொடு கலவியால் மகிழ களவைச் செய்து. இது சநதிரன் குருபததினி தாரையை புணர்ந்தது காணக. . . . ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. பழவினை - ஊழ்வினை ; "இரவு. . . . இசைப்பதும்" இவன் களங்கமுடையவனாதலால் மாதா முகத்திற்கு ஒப்பில்லை என்பர் கவிகள். இரவிலே சந்திரன் தன நிலவால் குமுதத்தை மலாததுவது காணக. குமுதவிதழொத்த அதரமுடைய மாதர் என்க. எறறு - வீசும் ; சநதிரன எழும்போது கடறகண எழுவதுபோலுள்ளது காண்க. பொர உந்து. . . . . . வெண கவிகையாய் போர் புரிவதற்காக முனனதாகச் சென்று சிவனது நெற்றிக கண்ணின் நெருப்பில மூழகி சாம்பலாய் சரீரமறறவனின (மனமதனின) வெண் கொற்றக்குடையாய். அடலை - சாமபல் ; புரம் - சரீரம் ;

281 விரைசெறி யிருட்கற்றை வாணளக பந்தியார்
 விரைமலர் பொதுள குழல்வாய்
மிளிரு நீ லக்கழங் காடல்போல் வரியளிகள
 வீழ்ந்தெழுங் கஞ்சமிசையே.

முரசொலி யெனக்குமிறு கருவிமுகில் துளியரு
 முன்றில் மறு கெங்கு நிறைபோல்
மொய்த்தமா டத்தினிரை நெற்றிதோய் பவர்குழலின்
 முழுகு பூ மாரி சொரிய

கரசரிகள் சரியும் வகை பந்தாடு போதுகலை
    கானறமணி மாரி பொழியாக்
கடிமனை யிடந்தோறுந தோலடிப் பவளவாய்க்
    கடிகைவெண் தூவி தாங்கு

மரசவன நிறையும்வள மணவை நக ராயனுடன்
    அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
    அம்புலீ யாடவாவே. (8)

(8) அளகம்-கூந்தல் ; பொதுள-நிறைய ; நெற்றி-கட்டடத்தின் மேனிலை முகப்பு ; காசரிகள் கரம்-கை ; கலைகானறமணி—கலைத்திறன நிறமபிய மணிகள பதிததமேகலை ; கடிகை-துண்டம், தூவி-இறகு மாதரிடத்தில வணடுகள் கழற்சிககாய் ஆடுவது போல் விழுந்தெழும், தாமரையிடத்தில் முரச வாத்தியம் போன்றொலிக்கும். தெரு, முன்றில் எஙகணும் சூழந்து மேகம் நீஙகாது மொய்த்த மெததையின மேனிலை முகப்பு இருக்கும் மாதர் கூந்தலினின்று பூக்களை மழை போனறு சிநதும். அவர்கள் கர முதலியன ஓயும் வகையான பநதாடும போது கலைத்திறம் நிரமபிய மேகலையினினறு மணிகளாகிய மழை பொழியும். அங்ஙனமுள்ள வீடுகளிலெல்லாம வெண சிறகுகளுடைய அனனங்கள் தஙகும் அத்தகைய வளம் பொருந்திய மணவை நகர் எனக.

282 ஈரநறை யருவியுமிழ் தேம்புனற் கமல மலர்
    ஈன்ற நீள் கூலமூடே
எருமுத தொளியிமுது போன்றநற் கழனியிடை
    சந்தமார் சோலை மீதே

வாருலவு புளகமுலை யேந்துபொற் கொடி மகளிர்
    வண்டல்கூர் நிழல்வாயே
வானளவு கமுகுமிட றேந்துமெய்க் குலையின்மிசை
    துங்கநீள் வாழைமாடே

காருலவு வரையை நிக ரோஙகு சொற் குவையினிடை
    திங்களூர் மாடமீதே
காசின்மணி குலவுமதில் சூழ்ந்தசித் திரவுருவின்
    மன்றலார் வீதிநேரே

ஆரவளை தவழ்மணவை சேர்ந்தமைப் புயலுடன்
    அம்புலீ யாடவாவே
ஆதிமறை பரவுதிரு வேங்கடக் கடவுளுடன்
    அம்புலீ யாடவாவே. (9)

(9) கூலம்-மகரந்தக்குவியல். சந்தம்-சந்தனம், காசு இன் மணி - குல பொன்னிஞசி, மணிகள் விளஙகு வண்டல் விளையாட்டு ; மனறல + ஆர்வீதி - கலியாணங்கள் நிறைந்த வீதி.

283 வீழியங் கட்கனியி னிதழ்விமலை இருநிதிய
மிருளாத தருவினுடனே
வெள்ளிவெண் பாற்கடலின் நடுவிவன் மதிக்கவே
மேவிவினை தொகுத்த செவ் (வ) ல்

வாழியன் புற்றுமுன மவனிடம் பயில்கின்ற
வாற்றிந் தும் சிறியர் போல்
வரவழைத் தருளவும் வாராத தென்னை நீ
வண்மையிலை வெண்மையுடையாய்

ஊழியங் கற்பனை கடந்தகா லத்துமுனை
ஒருவர்நலி யார்கருணையால்
உபநிடப் பொருளிவ னெனக்கொண்டு வருவதே
உறுபொரு ளுனக்கு மிதுவே

ஆழியங் கைக் கொண்ட புயல்மணவை யாதியுடன்
அம்புலீ யாடவாவே
ஆங்கடல் மிகுந்தபுய வேங்கட முகுந்தனுடன்
அம்புலி யாடவாவே. (10)

(10) " அம்கள் வீழிக்கனி " என்க வீழி-விழுதி. ; மதிக்க-கடைய ; இருநிதி-சங்க நிதி, பதும நிதி ; தரு-கற்பகத்தரு ; பாற்கடல் கடைந்த போது இலக்குமி, சங்க நிதி, பதும நிதி, கற்பகத்தரு முதலியவைகளுடன் சநதிரன் தோன்றியது காண்க, ஊழி-யுகங்கள் முடிவடையும் காலம் ; ஆழி - சக்கரம் ; செம்மல என இருப்பின் ொருள் இனிதுக காணபபடும்.

## சிற்றில பருவம்

284 பூப்பாய் புடவி முழுது முனம்
பூத்துக் கவினும் திருவுந்திப்
பொன்னூர் கமலப் புத்தேளால்
பொலியும் வகை செய் தந்நெறியைக்

காப்பாய் நீயே துடைப்பதுவுங்
கருதில் தமியேங் கைவருந்த
கவினி யிழைத்த வண்டல்மனை
காலால் துடைக்குங் கருணையனே

நாப்பா டியநான் மறைத்தமிழால்
நவின்ற குருகை நாவீறன்
நயனங் களிப்ப வுளங்களிப்ப
நல்குஞ் தொடைச்செந் தமிழ்மாலை

சேப்பார் கமல மிகச் சிவக்கும்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேங்கூர் துளப வேங்கடமால்
சிறியேம் சிற்றில் சிதையேலே. (1)

(1) பூப்பாய்ப் புடவி-அழகுமிகக பூமி ; உந்தி கமலப் புத்தேள்-நாபித் தாமரையில் தங்கியுள்ள பிரமன் ; துடைப்பது-அழிப்பது ; நாவீறன்-நம்மாழ்வார் ; தேம் கூர்-தேன் மிகக ;

285 நிறக்குங் குமப்பொற் குடக் கொங்கை
நீல வுண்கண் திருமகளை
நிறத்திற் பரித்த தநுவன்றி
நிலமா மகளென் றறியார் போல்

மறக்குந் தொழிலா லுனதுபதம்
வருந்த மிதித்தால் புலவிமிக்காய்
வருந்தும் வாரஞ் செய்வதுவும்
மனு நூல் வரம்பின் வழக்காமே

பிறக்கும் பிறவி துடைத்தருளும்
பெருமா னிராம னுசம்பிள்ளை
பெற்ற வரத்தா னழகப்பன்
பேணுஞ் சடகோ பனுளத்துஞ்

சிறக்கு மிருக்கு மிருக்குமுகில்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருமா மணவை வருபெருமான்
சிறியேம் சிற்றில் சிதையேலே. (2)

(2) நீல உணகண்-மையுண்ட கண்கள்; நிறததில் பரித்தது - மார்பில் தாங்கியது; "நிறக்குங்கும..................................வழக்காமே" திருமகளை மார்பில் தாங்கினுய். அங்ஙனம் நிலமகளை அனபுடன் காக்க வேண்டும். அதுவன்றி மறந்து உனது பாதமும் வருநதும்படி அவளை மிதித்தால் அவள் ஊடல் கொண்டு வருந்துவாள். எனவே நீ அனபு செயவது மனுநூலபடி வழக்காக உள்ளது. ஈண்டு நிலமீது மணலில் சிற்றில் கட்டி விளையாடிய சிறுமியர் தங்கள் வீட்டைக் கலைப்பது கண்டு "நிலமகளா யிறறே. உன் மனைவியாயிற்றே" என்றனர், இராமானுசம் பிள்ளை. இரமானுசம் பிள்ளான் பிரபந்தத்திற்கு அரும் பதவுரை எழுதியவராய இருக்கலாம் போலும. சடகோபர்-நம்மாழ் வார். ஈண்டு அழகப்பன் என்று கூறியவர் யாரென்பது ஆராயததககது. மாறை அழகிய நம்பி எனபவரோ!

286 தீரா நேயத் துடன்தாயர்
தீட்டுந் திலத நுதல்வேர்வை
சிந்தச் சிந்தா மணிப் பொற்றேள்
திருமா னிலமின் சேர்வதென

நேரார் பாகம் பொதிய வெல்வாய்
நிறைக்குங் கிரண மெய்யுறைக்க
நிலவந் திசையைப் பிளந்ததென
நெடிய மறுகி னிடை குறுகி

தாரா திரங்கப் பதஞ்சிவக்குந்
தரமோ வென்னச் சதங்கை யெதிர்
தழங்க வொழுங்......மழவர்
தம்மோ டொன்றித் தனிமேவி

ஆரா வமுதே மணவை நகர்
அமலா சிற்றி லழியேலே
அருள்சேர் திருவேங் கடநாதா
அளியேம் சிற்றி லழியேலே. (3)

(3) தாயர்-ஐவகைத் தாயர்; "திருமான் நில மின்" எனக; நேரார்-பகைவர் உறைக்க-சிந்த; நிலவம்-நிலவு அம்சாரியை; மறுகு-தெரு.

மத்தால் நெடிய மந்தரத்தால்
வரிகோட டரவம் கடைகயிறாய்
மண்டி யெறிதெண் டிரையமுத
மதிக்கத் தெறித்த சுதைத் துளிபோல்

கைத்தா மரையும் நாபிமலர்
கடித்தா மரையும் கருணை வெள்ளக்
கட்டா மரையும் செழுங்கனிவாயக்
கனித்தா மரையும் முகிழ்துங்கி

ஒத்தா லென்னைத் திருவுருவத்
தொழுகு வேர்முத் தொளிர் நல்லா
ருடன்பின் னிருட்ர வண்டரண்ட
மூடே பொதிந்து மலர்ந்த செம்பொன்

அத்தா மரைத்தா ளேவருந்த
அளியேம் சிற்றி லழியேலே
அருள் கூர் மணவை வேங்கடமால்
அளியேம் சிற்றி லழியேலே. (4)

(4) அரவம்-வாசுகி ; மதிக்க-கடைய ; கண்தாமரை-கட்டாமரையானது ; முகில் + தாஙகி - முகிழ்துங்கி ; வேர்-வியர்வு ; சுதைத் துளி போல்க கைத்தாமரை என்றார் உள்ளங்கை வெண்மையாயிருததல் நோககி ; நாபி-கொபபூழ்.

288 கனனி றந்தரு நிசிசரர் கோன்கிளை
யோவா மயத்த கடல்நீர் சூழ்
கடியி லங்கை யீதல முரன்வான்
பதியா மெயிற்றை யிடமேதான

இனனு மிந்துவு முணவெழு வான் கொடி
நீணுகத்தன் இனிடமீதோ
ஈரணிந் திகழ வடிவினன் வீங்கிய
மார்போ போற்ற முடிதானோ

சினவி வந்தெதிர் கரன்முதலே யந்த
ஆவா ணுளொத்த திவைதானோ
சிறிய மிங்கிவை புரிதொழி லோர்ந்திலை
யாதோ மிக்க செயலீதோ

வனச மண்டப மயில்மகிழ் கூர்ந்தருள்
மார்பா சிற்றில் சிதையேலே
மணவை யம்பதி வருதிரு வேங்கட
மாலே சிற்றில் சிதையேலே. (5)

(5) கனல் நிறம் தரு-நெருப்பின் புகையொத்த நிறம் தருகினற ; இநது-சந்திரன ; ஒவா-நீங்கா ; கரன் - ஆம்பாட்டின் குறிப்பில காண்க. சிறியம்-சிறுமையை யுடையோம் ; வனச மண்டபம் மயில் - தாமரை மலர் மண்டபத்திலுளள மயில் போன்ற திருமகள.

289 நெறிந்து கருமை கனிந்து மிக
நெய்த்து நீண்ட கடை குழைந்த
நீலச் சுருளோ தியற்புடைபோய்
நிலவி வள்ளைக் கடிப்பெதிர்ந்து

மறிந்த விழிக்கோ வியரிழைத்த
வண்ட லிடத்தும் பழகியநீ
வளைநீர்ப் புவியில் சராசரத்தை
வகுத்துக் காக்கும் வகைசெய்ய

அறிந்த சிறுவா திருமேனி
அலரும் வனசப் பதஞ்சேப்ப
அரையில் மணிக்கிண் கிணிபோதத்தி
அளவிற் களவால் வளவில்வளஞ்

செறிந்த மணவை வருமுகிலே
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேங்கூர் துளப வேங்கடமால்
சிறியேம் சிற்றில் சிதையேலே. (6)

(6) நெறிந்து-சுருண்டு ; நெய்த்து-எண்ணெய்ப்பசுமையுற்று ; ஓதி-கூந்தல் ; வள்ளை-வள்ளைப் பூப் போன்ற காதுகள் ; கோவியர் இடைப் பெண்கள் ; வண்டல் ; விளையாட்டு ; வளை நீர் - சங்குகளையுடைய கடல் ; பொததி-நிறைதது ;

290 எண்ணத் துயர்ந்த பலவண்டம்
யாவும் பெருகும் புனலிடையே
எழும்புற் புதம்போ லுடைந்திடவே
றெய்தி யால விளந்தளிரின்

கண்ணுற் றிருகண் வளர்ந்திமைப்பில்
கண்ணி யெல்லாப் புவித்தோற்றம்
கணத்தில் கருதிக் காட்டியருள்
கருணை படைத்த களைகண்ணே

பண்ணிற் சிறந்த தமிழ் வேதப்
பரவை தோன்றும் தெளியமுதே
பரவு மடியார் பவக்கடலைப்
பருகுங் கிரணப் பனிப்பகையே

தெண்ணித் திலங்கூர் வயல்மணவைச்
செல்வா சிற்றில் சிதையேலே
தேங்கூர் துளப வேங்கடமால்
சிறியேம் சிற்றில் சிதையேலே. (7)

(7) புற்புதம்- நீரகுமிழ் ; ஆல இளந்தளிர்-ஆலிலை ; இருகண் வளர்ந்து என்க. இமைப்பில் கண்ணி-கண் இமைக்கும் நேரத்திற்குள் கருதி ; களைகண்-துன்பத்தைப் போக்குபவன் ; பவம்-பிறப்பு ; " தென் நித்திலம் கூர் " —என்க, நிலத்திலம்-முத்து.

291 கலைநாண் மதியின் மறுத்துடைத்த
தென்னக் கவினும் நுதல்திலதம்
கரைந்து வழியச் செங்கனிவாய்க்
கான்ற நகைவெண் ணிலவொழுக

முலைவா யுண்ட பால்வழிந்து
முழுச்செம் மணிப்பொன் னிறமபுரை
முருகார் துளபத் திருப்படலை
முழுகிப் பழகுஞ் சுரும்பார்ப்ப

அலையா ரமுதே தமனியமே
அரக்கர் மகளிர் கருப்பமுடன்
வரமங் கலநாணுள நாளே
டாவி வாங்க வாங்குகுதை

சிலைநாண சிலைக்கும் புயப் புயலே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செறிந்த வளங்கூர் திருமணவைச்
செல்வா சிற்றில் சிதையேலே. (8)

(8) மறு-களங்கம்; மறுத்துடைத்த மதியமொத்த திலதம் என்க. கான்ற-உமிழ்ந்த; முருகு-வாசனை; படலை-பசிலையோடு மலர் கலந்த மாலை. சுரும்பு-வண்டு; அலை ஆர்-பாற் கடலில் பொருந்திய; அலை-சினையாகு பெயர்; மங்கல நாண-தாலி; உள நாண-மன வலி; ஆவி-உயிர்;

292 மனநெக் குருகிப் பூணபழகி
வளரு மொட்டு முலைப்பீரே
மாரு தொழுகி மறுகினிடை
மறுகித் தாயார வரவர்கண்

டினணிற் கதிர்கால் நிறத்தின்மணி
இருகை யளையும் புழுதியினுல்
இமையா தாகக் கனித்துவர்வாய்
இழியு மமுதத் தால் விளங்கக்

கனலிற் றுறைமா மகம் வளர்க்கும்
கருணை யிராமா னுசமுனிவன்
களிகூ ரத்தான் சடகோபன்
கருத்தி னுறைந்தே யடியவர்தம்

சென்னக் கடலைச் சுவற்றியநீ
சிறியேஞ் சிற்றில சிதையேலே
தேங்கூர் துளப வேங்கடமால
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (9)

(9) முலைப்பீர-முலையினின்று தெறிக்கும் பாலின, பீர; அளையும்-தொட்டு அழுக்காக்கும்; இழியும்-கீழேம் வரும்; "கனலில் துறை மாமகம-" என்க; மகம-யாகம்; களிகூரத்தான-களிக்கும் கூரத்தாழ்வார; கூரம் என்ற ஊரிலே 'இராம சோமயாசி' என்பவருக்குப்

பிறந்தார். உடையவரிடம் பக்தி பூண்டவர். சோழனால் கண்ணிழந்து திருவரங்கத்திலிருந்து பெருமானைப் பிரார்த்தித்து உடையவர் திருப்பாதத் தீர்த்தம் பெற்று திரு நாட்டுக் கெழுந்தருளி னவர். சடகோபன் - நம்மாழ்வாருக்கு ஒரு பெயர். இராமானுசன்-முன் பிள்ளைத் தமிழக் கொத்து 111-ம் பாட்டின் குறிப்பில் காண்க.

293 அறுபத மூழ்கிய பூந்துண ரேதாள்
கொப்புள மருவாதோ
அமுதுகு மாமதி போன்றரு ளோகால்
வத்திரம் வெயராமே
மறிவிழி கோசலை யீன்றருள் பாலா
மெய்த்தொடை புலராதோ
மணிநிற மேவெயில் காய்ந்திடு போதே
புக்கெனச் சினவாளோ
உறுதுணை யேயடி யேம்புகழ் வாழ்வே
தற்பர ரெகுராமா
உபநிட தாமறு கேந்திழை யாரோ
டுற்றெதிர் வரலாமே
சிறுபத நோவுற வேந்திழை யார்நேர்
சிற்றிலை யழியேலே
திருமண வாபுரி வேங்கட மாலே
சிற்றிலை யழியேலே. (10)

(10) அறுபதம்............................துணரே-வண்டுகள் மூழ்கிய அழகிய துண ராலான மாலையை உடையவனே. தாள் கொப்புளம் மருவாதோ-(எங்கள் சிற்றிலைகலைத்தல் அதிலிருக்கும் கற்களுழுத்திக்) காலில் கொப்புளம் ஏற்படாதா. அமுது உகு............ வத்திரம் - அமுதினைச் சிந்தும் சிறந்த சந்திரன் போன்று அருளொலி விடும் முகம்; வத்திரம் - முகம்; வெயில.....................சினவாளோ-வெயில் காய்கின்ற போது வந்தாய் என்று (மேனி கனறுவதால்) கோசலை கோபிக்க மாட்டாளா. உபநிடதா; மறுகு ஏந்திழை யாரோடு--என்க. மறுகு-தெரு; ஏந்து இழை-வினைத்தொகை.

## சிறுபறைப் பருவம்

294 இரவியொரு பன்னிருவ ரிருவரென மாகனகத்
திணைவரையி லிழைவதெனவே
ஏந்துதோள் மிசையொளிகள் சாய்ந்துகுழை மணியொளிர
இளநீல மேனிகுழையா
அரையணி மணிக்குரல் முழங்கவெண் ணாயிரத்
தகல்வாய பாம்பணையின்வாய்
அறிதுயி லமர்ந்தசிறு குழவியே விண்ணவர்க்
கமுதீந்து சேந்த கையால்
நிரைநிரைத் தளிமுரல் கருங்கூந்த லாய்மகளிர்
நெய்த்திலகு கைத்தளிரின் நேர்
நின்றுதொட் டேகுரவை புரியுநீ புடவியில்
நெடுங்கடல் உடுத்ததெனவே

திரைபொருது வருபொருநை நதிகுலவு மணவை முகில்
சிறுபறை முழக்கியருளே
திறலோங்கு விற்குழக திருவேங் கடக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே (1)

(1) இரவி . . . . . ஒளிர—ஒப்பற்ற பனனிரண்டு சூரியர்கள் இரண்டு சூரியர்களாய் சிறந்த இரண்டு மேருமலைகளின் மீது கலந்து தோனறுதல் போன்று தாங்கிய தோளின மீது ஒளி பொருந்திய குழையொன்றும் மணிக குண்டல மொனறும பிரகாசிக்க ; இல் பொருளுவமையணி; குழையா—செய்யா வென்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்து நின்றது. அரை அணி—இடுப்பில கட்டிய ஆபரணம் ; பாம்பணை—ஆதிசேடனுகிய படுகைகை; நிரை நிரைதது அளி முரல்—வரிசை வரிசையாக நினறு வணடுகள் சப்திக்கினறன ; ஆய் மகளிர்—இடைப் பெண்கள் ; குரவை : பாட்டின் குறிப்பில் காண்க ; புடவி—பூமி.

295 குவளைவிழி யெதிர் பொருது குழைமுடுகு குழல்மழலை
குளிரமொழி தருணமடவார்
கொடியிடைகள் துவளநட முறைபுரிய முழவு சதி
குமிறுநெடு மறுகினிடையே
தவழுமதி நிலவனைய சுதைமெழுகு வரையநிகர்
தகுமாட மேனிலைமினர்
தனதனன வெனமகர விசையாழ் முழக்குமொலி
தார்ப்புரவி யார்ப்பினொலியும்
கவளயிபம் வெடிபட யிடிக்குரல் முழக்கமுங்
கழனியுழு வோர்துழனியும்
ககுபத்தர் செவிடுபட வேகடல் முழக்கென
கடிமண முழக்கமுடனே
திவளும்வளை பலபல முழக்குமண வைக்குழக
சிறுபறை முழக்கியருளே
திறலோங்கு விற்குழக திருவேங் கடக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே (2)

(2) குவளை விழி . . . . மறுகினிடை—காதுகளெதிர் சென்று போர் செய்து ஓட்டும் குவளை மலர் போனற கண்களும், புள்ளாங்குழலிசை போன்று மழலை மொழி கூறி மகிழச செய்யும் மொழியையுடைய இளம் பெண்கள் தஙகளது கொடிபோன்ற இடுப்புகள் துவளுமாறு நடனம் முறையே செய்ய மததளம் ஒலிககும் நீண்ட தெருவினிடையில ; சுதை—சுண்ணும்பு; இடிக்குரல—இடி சப்தம் போனற குரல் ; துழனி—சப்தம்; ககுபத்தர்—திசையிலுள்ளார் ; ககுபம்—திசை ; வளை—சங்கு.

296 அந்தர முதித்தமுத மருவிசாய்த் தெழுமதி
யன்னலார் வதிமேனிலத்
தருகுசா ளரநுழைந் தாடியென மெய்யெழிலை
யவர்நோக்க மருவிமருவும்
நந்தன வனத்துநிறை சண்பகத் தாதாடி
நடையசைத் தென்றிளங்கால்
நாகுவரி வண்டோடும் போந்துமறு கெங்குமே
நறைதெளித் தாரமலையப்

பைந்தமிழ் மணக்குமண வைப்பதி விளங்கிய
பாந்தாம தாமவகுளப்
பாவலர்கள் தம்பிரா னெம்பிரான் திருமொழிப்
பண்ணமுத முண்டசிறுவ

சிந்தூர நுதற்கமலை விமலைபுண ரமலனே
சிறுபறை முழக்கியருளே
திறலோங்கு விற்குழக திருவேங் கடக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே (3)

(3) சாளரம—சன்னல ; ஆடி—கண்ணாடி ; நாகு—இளமை ; வகுளததாமம்—மகிழமபூ மாலை ; தெனறிளஙகால—தெனறறகாறறு ; நறை—தேன ; சிநதுரம்—பொட்டு.

297 கோவாத வாரநறை கொட்டுமிரு கோட்டிளம்
கொங்கைவரை தாங்கி யொசியும்
கொடிநுண் மருங்கிலிள நகையசோ தைக்குவிழி
குளிரவிளை யாடுகளிறே

நாவீறர் கூறுதமிழ் நறைபாய வோங்கிவளர்
நாண்மலர்க் கற்பதருவே
நகைவளைகள் தவழ் மாறை வள்ளலழ கியநம்பி
நாடோறும் பரவுநிதியே

மூவாது வளர்திரு மறைக்கொழுந் தேஞான
முத்தனே முத்தமெதிர்பாய்
முந்நீரி லூடுபிற வாததெள் ளமுதமே
முத்தரணி யும்பாலவே

தேவாதி தேவதிரு மணவைநகர் மேவுமுகில்
சிறுபறை முழக்கியருளே
திருவேந்து புயவிந்த திருவேங் கடமுகுந்த
சிறுபறை முழககி யருளே (4)

(4) கோவாத. . . . கொங்கை வரை—கோககப்படாத முததுக்கள் உடையதும் வாசனை வீசுவதும் ஆன இரு யானைத் தநதஙகளைப் போனற முலைகளாகிய மலைகள் ; உவமையுருவகம; நாவீறர்—நமமாழ்வார்; தமிழ் நறை—தமிழ்த் தேன்; மாறை வள்ளல்—மாறை நாட்டிலுள்ள; மூவாது—அழியாது ; முநநீர்—கடல ; முததரணி உம்பால—மூன்று உலகங்களும் உம்மிடம் உள்ளன.

298 முக்கணு னுலகமுத லண்டகோ டிகள்பலவும்
முறைநீக்கி மறையோதுவோர்
முன்னர்தன் நாமமே யோதவே தானருளு
முத்திமே தக்கசிறுவன்

மிக்கநா தக்குடிலை மொழியுமவ னைச்சினவி
மெய்ப்பொருள் தெரித்தியென்று
வினவு நிரு தக்கனகன் முன்மதலை வெடிபட
வெடிக்குர லெழுப்பி யெதிரே

புக்கனுன் நகமுகிரி லிலேயும்நர வரியுருவு
பொலியுமுடல் பூத்தவல்லி
பொன்னிறத் தாதுகமழ் கமலநிகர் கையினுல்
போற்றடிய ருளமுருகவே

தெக்கணு பூமியில விளங்கும்வேங் கடவிமல
சிறுபறை முழக்கியருளே
சிலேதாங்கு புயவிந்த திருவேங் கடமுகுந்த
சிறுபறை முழக்கியருளே (5)

(ப) முககணுன உலகம—சிவலோகம ; முறை நீக்கி—நெறி முறை தவறச் செய்து ; 'மறையோதுவோர் தன நாமம் முனனா ஓத முதறி தான அருளும்' எனக. மேதகக சிறுவன்—மேனமை படத்தக்க பிரகலாதன ; நாதககுடிலே—நாத தத்துவமாகிய பிரணவம (ஓம நமோ நாராயய) ; நிருதக்கனகன்—அசுரனுகிய இரணியன ; மதலே—தூண; புகவு + அனுன + நகம—சென்று அநத இரணியனின மலே போலொதத உடலே ; அனுன—அனனுன எனபதன தொகுத்தல. நகம்—மலே; ஈண்டு உவமவாகுபெயர். உகிர்—கைநநகம் ; நரஅரி—நரசிங்கம் 'போன்று அடியர் உளம்' என்க. தெக்கணு பூமி—தட்சிணபூமி.

299 தருவொரு மகள்முன் முனமீந் தருள்வர
தரைமயில் மணத்தபுயனே
தடவரை குடையென நிரைவாய்ந் திடவரு
பா......மழை தடுத்தபுயலே

கருமணி யுருவின் வலேதாங் கியகர
கமலமலர் மயத்தகடலே
கடமுறை நவநித மனேயுண் பொதுவர்தம்
மனேதொரு மெடுத்தகள்வா

வரிசிலே மகளுரு வுறவேய்ந் துயர்சிலே
மிதிலேயி லிறுத்தசிறுவா
வளேகடல் நடுவரண் மதில்மூன் றிடிபட
ஒருகணே தொடுத்த சதுரா

திருமணி நிறைநின்ற முறைபூந் துளவின
சிறுபறை முழக்கியருளே
செழுமணவை யில்வரு திருவேங் கடமுகில்
சிறுபறை முழக்கியருளே (6)

(6) தரு—கற்பகத்தரு ; ஒருமகள்—சத்தியபாமை ; தரைமயில்—பூமிதேவி ; தடவரை—கோவர்த்தன மலே ; நிரை—பசுக்கூட்டங்கள ; வளே—சககரம் ; நவநிதம அளே—ஒரு பொருட்பன மொழி ; பொதுவர்—இடையா. வரிசிலே—அகலிகையாகிய கல் ; உயர்சிலே—உயாநத சிவதனுசு ; இறுதத—ஒடித்த ; வளேகடல . . . . மூனறு—திரிபுரம். இதனே யெரிக்கச் சிவனுக்குத் திருமால கணேயானுர்.

300 பொற்பரா கந்திகழ்வ தென்வுததி பூத்துவளர்
பொம்மல்முலே யம்மெலோதிப்
பூவையர் பயில்தரு வள்ளேயிசை நாடொறும்
பூவைகள் படித்து வளரும்

கற்பகா டவிநிறை முருக்கல ராக்கொழுகு
கவிழ்தலைத் துண்டவலைவாய்
காரணக் கிள்ளைகட் கேயுரைக் குந்தொறுங்
கரியகுயில் கூவாதுவாய

நிற்பரா கப்பொறிய வரியளிகள் மிஞிறொடும்
நிரைகொண்டு சுருதிசெய்ய
நெடியகாற் பிறகிட்ட பீலிமயி லாலவே
நெடுமாட கூடநெற்றிச்

சிற்பரா கந்திகழும் மணவைநக ராதியே
சிறுபறை முழக்கியருளே
சிலைதாங்கு புயவிந்த திருவேங் கடமுகுந்த
சிறுபறை முழக்கியருளே (7)

(7) பராகம்—தூள ; உததி—கடல் ; பொமமல—பருமை ; வளளையிசை—உலககைப் பாட்டு ; பூவை—மைனா ; கறபக அடவி—கற்பககாடு ; நிறப ராக வரிபபொறிய அளிகள் எனக. ராகம்—' ரீ ' எனற ராகததையுடைய ; மிஞிறு—வணடிலொரு சாதி ; நெற்றி மேனிலை முகப்பு; சிறபம—சிறபககலை; ராகம்—நிறம—சிற்பததில அலங்கரிதத நிறம் என்க. பெண்களின் உலககைப் பாட்டை மைனாககள் படித்து வளரும் கறபக மரஙகள நிறைந்த முருக்கம் பூவிதழ். அரக்கு போனறு சிவந்த துணடமாகிய வளைநத வாயையுடைய கிளிகட்குச் சொல்லும் போது மேகததையொதத கரிய குயிலகள் வாய கூவாது அடைதது நிறப, இராக மிசைக்கும் வரிக ளோடுகூடிய வணடுகள் மிஞிறோடு வரிசையாகக் கொண்டு கீதமிசைககக காற்றும் பினனிடும்படி பறக்கின்ற தோகைகளையுடைய மயில்களா ஆரவாரிகக மாட கூடங்களில சிற்ப வேலைப்பாடுகள திகழும் மணவைநகர் என்க.

301 காவதங் கமழளக அயிராணி முதலான
கன்னியரும் நாமகளிரும்
கற்பினிற் கவைபடா தென்றுளம் குளிரழ
கையேந்து கோலதிரித்தே

நாவகங் கொள்ளாத வாசிசொலி முனிவரர்
நடிப்பமறை யாதியெவையும்
நாமறை . . . யிலாது வாழ்த்துயர்ந்த
. . . . . . மெக்கருமமுந்

யாமவல கின்மேனகை . . . சுரர்
சினையற்ற கொற்றமேகூ
. . . காற்றவை துதிக்கவடை யார்தங்கள் பவவினையோ
மாயா மௌனமவே . . . வே

தேவதும் புருநார தன்பரவு மணவைமுகில்
சிறுபறை முழக்கியருளே
சிலைதாங்கு புயவிந்த திருவேங் கடமுகுந்த
சிறுபறை முழக்கியருளே. (8)

(8) காவதம் கமழ்—காதம் (10 மைல்) வரை வாசனை வீசும் ; நாமகள்—சரசுவதி ; தும் புரு நாரதர்—யாழ்வாசிபபதில வல்லவர் ; இப்பாட்டு, பெரும்பாலும் சிதைந்துள்ளது.

302 கஞ்சன்விடு சகடுருளை நின்றவிரு மருதுபொரு
சதுரமுதிர் வெற்றிமக
வங்கநீழ லிடைவரு கபந்தகண் ணிணமயில
அசுரர்களை யட்டவிறலா

நஞ்சுந்தி குமிழியெழு வெங்கணர விலில்நடன
சதிகொடு விதித்தநம்ப
அடியவர் சனனநன் பந்தமற மிகுதியை
உதவுகரு ணைப்புணரியே

மஞ்சகடு தொடுகுடுமி யிஞ்சிதிகழ் தருமிதத்திலே
முனிவனொடு புக்குறுபவா
மண்டியெறி திரைபொருத சிந்துநடு வழிபுகுத
கோடணை யிட்டவிமலா

செஞ்சரண கிரணவெயில் தங்குமணி மருமனே
சிறுபறை முழக்கியருளே
தெறிக்கின்ற வளைகுலவு குணபழன மணவைமுகில்
சிறுபறை முழக்கியருளே. (9)

(9) கஞ்சன்—கம்சன; சகடு—சகடாசுரன; மருது—நள, கூபரன், மணிக்கிரீவன என்ற இருவா. கவந்த கணம் நிணம் அயில—பேய்ககூட்டங்கள தசையைத்தின்ன; நஞசு நதி குமிழி யெழு அரவு—விஷமாகிய நதியினின்று குமிழியெழுவ்தைப போன்று விஷம சொரியும் காளிங்கன்; பநதம—கட்டு; மஞ்சு அகடு தொடு—மேகத்தின நடுவிடத்தைத தொடும் ; குடுமி இஞசி—உச்சியை யுடைய மதில ; மணடி எறி . . . . விமலா—நெருங்கித் திரை வீசுகின்ற கடலின நடுவில செல்ல மலைகளை அணையாக இட்ட குற்றமற்றவனே. சிநது—கடல் ; கோடு—மலைச்சிகரம ; ஈணடு மலையைச் சுட்டியது. இது இராமாவதாரததிலாகும்.

## சிறுதேர்ப் பருவம்

303 வாரென . . . . . . . சலைக்கெட
. . . பயத்தே
ருலவுகா னுறுவனென விஞ்சொல் வ . . .
. . . . . . . புறுத்திக் கூறியே

பாரொ . . . . . .
. . . , . . . சென்றுமீள்
பரதனுறு கனல்முழுகு முன்னம்வந்து தாய்மனம்
படுகவலை யஞ்சுகோ . . .

நீரத் . . . . . . . . .
. . . . . . . . . . திரையிரு
நிதிக்குவை சொரிந்தே யிலகுவீதிகடிது
நெட்டது தேரோட் ரொன்றில்

காார்தேர் பத்தும் வென்ருன் சிறுவ
சிறுதே ரு நட்டியருளே
. . . . . . . . . . . வேங்கட விமல
சிறுதே ருருட்டியருளே. (1)

(1) பரதன—இராமன தம்பி ; கான்—காடு ; கார் தேர் பத்தும் வென்ருன் சிறுவ—கரிய தேர்கள பததையும் வைத்துக்கொணடு வென்ற தசரதன் மைந்தனே ; முன் பிளளைத தமிழக் கொதது 199-ஆம் பாட்டின குறிபபில் காணக.

(முற்றுப்பெறவில்லை.)

# இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத் தமிழ்

## சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர் மருகராகிய சைவப்புராணிகர் சிதம்பரம
வடிவேல் பிள்ளையவர்கள் இயற்றியது.

304 அன்பின்மய மானவரு ளுருவாகி யன்பர்மனத்
துவகை யாக்கும்
அரியதிரு வருட்பாவி னருமையெவ ருரைப்பரின்ப
மளித்து ஞான

இன்பதனால் நிறைந்தவருட் பிரகாச வள்ளலெனும்
இராம லிங்கம்
எங்கள்குரு தேசிகன்தன் கீர்த்தியெலாம் அடியார்கள்
ஏத்திப் போற்ற

மன்புகழும் செந்தமிழா மொருபிள்ளைத் தமிழதனுள்
மாண்பு வாய்த்த
வண்மைபெறு மலங்கார கற்பனைக ளாதிநயம்
மலிந்து மேவ

மின்பொலியுஞ் சடைமவுலிச் சரிதமது யாவருக்கும்
விளங்கக் கூறும்
வியனகர்பொன் னேரியுறு சுந்தரநற் புலவன்தான்
விளம்பி னானால். (1)

(1) தேசிகன்—குரு ; சடை மவுலிச சரிதம்—சிவனுடைய சரிதங்கள்.

## இந்நூலாசிரிய குமாரர் பொ. பரமசிவம் பிள்ளையவர்கள் இயற்றியது.

305 அருள்மயமாஞ் சமயகுர வர்கள்நால்வர் அருளுருவாய்
அவனி தோன்றி
அரும்பாவுக் கரசான விராமலிங்க அரிய வள்ளல்
அன்பாற் சொன்ன

தெருள்வளர்நல் திருவருட்பா வெனுமாறு முறைகளினால்
தெளிந்த ஞானச்
சிவபத்தி காருண்யம் வளர்த்தவருட் பிரகாசச்
செல்வன் மீதே

மருவுபல சொல்நயமும் பொருள்நயமும் தொடைநயமும்
மருவ யாரும்
மகிழ் பிள்ளைத் தமிழெனுமோ பிரபந்த நவரசமும்
மலியச் சொன்னான்

அருமறையா கமப்பொருளாம் புராணகதை யன்பர்களுக்
கன்பால் கூறும்
அண்ணல்சுந் தரக்கோமான் அவனடிகளென் சிரசிற் (2)
கணிக ளாமால்.

**சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல் பாடசாலைத் தமிழ்ப் புலவராயிருந்த சோடசாவதானம் தி. க. சுப்பராய செட்டியாரவர்கள் இயற்றியது.**

306 சீர்வளரும் தென்வடலூர்ச் சிவஞானத்
தெள்ளமுதந் தெவிட்ட வுண்ட
பேர்வளரு மிராமலிங்கப் பிள்ளைமே
லப்பெயர்கொள் தமிழைச் சொன்னான்

தேர்வளரும் பலகலையின் தேர்ச்சியினால்
சிவபுரா ணங்க ளோர்ந்தே
ஏர்வளரு முபநியடா தஞ்செய்யும்
சுந்தரனு மியல்வல் லோனே. (3)

(3) ஏர்—அழகு ; தேர்—ஆராய்ந்து.

**அஷ்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியாரவர்கள் இயற்றியது.**

307 கலியுகத்தின் வயத்தினையும் காலன்தன் தரத்தினையும்
கால்கீ ழாக்கிக்
கருணைவளர் சிவானந்தக் கடற்பெருக்கித்
திருவருளின் காட்சி நோக்கி

மலியுமரம் மண்மலையா தியுமுருக்கி யன்புமயம்
வாய்ந்த பாக்கள்
மகிழ்ந்தளித்த நம்ராம லிங்கமுனி வரனாரும்
வள்ளல் மீது

சொலியுவந்தான் செந்தமிழி லுளநயங்க ளெவ்வளவுந்
துலங்கித் தோன்றத்
துதிகவிஞர் சிரமேற்கும் புகழ்பிள்ளைத் தமிழெனுநூல்
முனிசூ தன்போல்

பொலியுஞ்சொல் புராணிகப்பேர் கொண்டுசைவப் பிரசங்கம்
புகல வல்ல
பொன்னேரிக் கருணீகர் மரபின்வரு சுந்தரநல்
புலவன் தானே. (4)

(4) காலன்—யமன் ; வரன்— சூதன்—சூதமகாமுனிவர்.

## விநாயகர் துதி.

308 கார்கொண்ட மேனிக் கரும்பனைக் கைக்களிறு
கண்டுரித் ததுபரித்த
கனசகள வுருவாகும் முக்கட் கரும்பினைக்
கண்பொத்தி விளையாடல்செய்

வார்கொண்ட முலையம்மை காமாட்சி யாள்தன்
வளைத்தழும் பொடுமுலைக்கண்
வளமுறப் பெற்றருட் டிருமேனி யங்ஙனே
வாடிக் குழைந்திடப்பெற்

றேர்கொண்ட வருளுருக கொண்டோங்கு சிவபிரான்
எந்தையரு ளும்பலுருவாம்
இன்பவறு பவவருட் பிரசன்ன மாம்ப்ரணவ
ஈசனைப் போற்றிநிற்பாம்

தேர்கொண்ட நடராசர் கோபுர வடிப்பார்வை
தெரியுமே வடபாலெனத்
தேர்ந்தோது திருவருட் பிரகாச வள்ளல்
திருத்தமி ழெடுத்தோதவே. (1)

(1) கண் பொத்தி விளையாடல செய்தது :—அபிதானசிந தாமணி 349-ஆம் பக்கத்தில் 5-வது செயல் காண்க. வார் கொண்ட . . . . . சிவபிரான :—முன பிள்ளைத் தமிழ்க் கொத்து 459 ஆம் பாட்டின் குறிப்பில் காணக. 'பெற்ற+ஏர் கொணட' எனக. அகரம் தொகுத்தல். உம்பல்—யானை ; பிரணவ ஈசன ; முன பிள்ளைத் தமிழ்க கொதது 69-ஆம பாட்டின் குறிப்பில் காணக.

## காப்புப் பருவம்.

### திருமால்.

309 சீர்வளர் பராபரை யதில்பரந் தோன்றுமதில
சிவமதில் சத்தியதிலே
செம்மையுறு நாதமதில் விந்துவதி லுயர்சதா
சிவமதில் மகேசுரத்தில்

பேர்வளர வந்துறு முருத்திர னதிற்பெரிய
பெருமைவளர் சித்தில் சிறிதும்
பீடுறத் தோன்றியது வதுவாதல் முத்திநிலை
பேசுமொரு சித்தாந்தமே

நேர்நிலை யெனுங்கரிய மால்பதம் கருதியே
நேர்பணிந் திடுதல் செய்வாம்
நித்தியவ ருட்பிரகா சத்தலைமை யெங்குமே
நீண்டொளி விரித்தோங்குநல்

தார்வளர் சடாமுடிப் பெருமா னுருக்கொளுஞ்
சாமிகுரு சாமி வடலூர்
தண்ணரு ளிராமலிங் கபிள்ளை தன்னையே
தயவுடன் காத்திடுகவே. (1)

(1) சீர் வளர் . . . ; . . . சிததாநதம் :—இதனைச் சிததாநதப் புலவர்களிடததுக் கேட்டுத தெளிக.

மால—திருமால ; சடா முடிப பெருமான—சிவன.

### பரசிவம்.

310 நந்துமைம் பூதபௌ திகமெலா மோங்கவே
நாடுமைந் தொழிலியற்றும்
நாயக மெனுந்தேவ ரைரதி காரவினை
நாடிப் பரிந்தொடுக்கும்

விந்துசிவ தத்துவம் பரத்தினி லொடுக்குதலை
வேண்டுபர சிவ மங்ஙனே
விரிபொரு ளனைத்தும ருளுருவாய் விளக்குமவ்
விமலனடி போற்றி நிற்பாம்

பந்தமுறு மாறத்து வாமுத லடக்கிவளர்
பரதத்து வாதீதமேல்
பரவுரு சிவானந்த வெள்ளந் ததும்பிமேல்
பாய்ந்தொழுகு மங்ஙனமுறாஉம்

சிந்தையி லுறுஞ்சீவ செகபரமவ் வருளுருச்
செம்பொருள தாகவமருந்
திண்மைவட லூரருட் பிரகாச வள்ளலெம்
சேயைப் புரக்கவென்றே. (2)

(2) ஐந்தொழில—சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபாவம, அநுககிரகம்.

ஆறத்துவா—மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்வா, கலாததுவா என ஆறு.

### சிற்சக்தி.

311 திருவருட் பிரகாச ஞானவனல் தன்னிலே
தெளிவிலஞ் ஞானமுழுதும்
தேய்ந்துறச் சுட்டுவெறு வெளியாஞ் சிவத்திலே
சேர்க்கு மருளுருவாகியே

உருவளர்ந் தோங்குசிவ சிவமது தானுகி
ஓங்குமெய்ஞ் ஞானமகலா
துயர்ஞான வமுதத்தை யுண்டருளி யென்னுளே
ஓங்கியருள் சத்ய ஞானம்

மருவுமுயர் சீவன்முத் தரையே வளர்த்தோங்கி
 வாழுமொரு சிற்சத்தியை
மறவா திருந்துதொழு தேத்துவா மென்னருமை
 மாணிக்க மாத்துயர்ந்து

வருமருளி ராமலிங் கப்பெயர்கொள் மெய்ஞ்ஞான
 வள்ளலவட லூரிருந்து
வாழுமுயர் மெய்ஞ்ஞான வாழ்வையருள் மெய்ஞ்ஞான
 மைந்தனைக் காக்கவென்றே. (3)

(3) சட்டு—பொசுக்கி.

### முருகவேள்.

312 செவ்வே ளெனுந் தொடர்முன் மொழியொரு பொருட்குணம்
 சேரவதி னிறுதிமொழியே
செம்மைநல முறுநற் குணிப் பொருளதாக மருள்
 சேர்ந்துலவு மதனவ னெனும்

அவ்விய மிலாப் பொருள் பண்புடைமை பெறவளரும்
 அப்பன்முத்து விதானனத்
தாநந்த முறுமுமதோ முகநடுப் பிரணவ
 அதீதனடி போற்றி நிற்பாம்

செவ்விய மறைப்பொருள் சொல்பொருள தாகிவளர்
 சிவஞான சித்தர்கணமே
செயசெய வெனப் போற்றி நாளும் பரிந்துவாழ்
 செல்வச் செருக்குடையரைத்

திவ்வியவுற வாக்கியே செகமெலாம் பரவுமவர்
 தீவினையகற்றி வடலூர்
தெளிவுடை யிராமலிங் கப்பிள்ளை தன்னையே
 தேடிப் புரக்கவென்றே. (4)

(4) முத்துவிதானனம—முத்துப் பநதல். முத்துப் பந்தல் பெறறவர் திருஞான சம்பந்தா. இவர் முருகனின அவதாரமெனபா. அதோமுகமே பிரணவ மென்பர். அதோமுகம்—கீழ் நோககிய முகம். பிரணவம—முன பிளளைத தமிழக் கொத்து 309 ஆம் பாட்டில காண்க. அதீதன—எல்லாவறறையுங கடநதவன்.

### சித்தி விநாயகர்.

313 எள்ளா வடலூ ரிருந்துமருள
அள்ளாத வருட்பிர காசனையே
தள்ளாது புரந்தருள் சித்திதரும்
பொள்ளாப் பொருணுயக போதகனே. (5)

(5) மருள் அள்ளாத-மயக்கமடையாத. பொள்ளா—உளியால் பொள்ளாத.

### நீறு.

314 மாதங்க மகலாத மாதேவன் நெற்றி விழி
மாப்பெரு வனல கொளுத்த
மன்னிவளர் புவனங்கள் நீரு யரன்திரு
மணித்திரு வுடற்பூத்துநன்

மாதங்க மொத்துயர்ந் தோங்கு முயர் மெய்ஞ்ஞான
மன்னுமத் வைதநீருய்
மாசுடைய வாணவ விருட்பிழம் பறவே
வளர்க்குமொரு மாபூதியாய்

மாதங்கு றக்கொண்ட மாலுறுச் சடகோபன்
மாண்புறு முரைப்பனுவலில்
மாதங்க மாநீறு செவ்வே யிடக்காணின்
மாலடிய ரென்றேடு மென்

மாதங்க மென்றேது மாத்துல்ய நீறுதனை
மாண்புடன் போற்றி நிற்பாம்
மன்னும்வட லூரருட் பிரகாச வள்ளலென்
மைந்தனைக் காக்கவென்றே. (6)

(6) மாது அங்கம் அகலாத மாதேவன் என்க. மாது—உமாதேவி; நன் மா தங்கம் ஒத்து—நனகு சிறநது தங்கம் போன்று; ஆணவ இருள—ஆணவம், மாயை, கனமம் என்ற மூனறில் ஒன்று. மாதங்கு . . . . . என—"எறிய பித்தனோடு எல்லாவுலகும் கண்ணன் படைப் பென்னும், நீறு செவவேயிடக்காணன நெடுமாலடியா ரெனறோடும், நாறு துழாய் மலர்க் காணில் நாரணன் கண்ணி ஈதென்னும். . . . ." என்ற நம்மாழ் வார் வாக்கை நோக்குக. இதில் நீறு என்பதனைத் திருமண எனப் பொருள் கொள்வர் வைணவர்.

### உருத்திராட்சம்.

315 அணிகொளர னமரர்கள் செயுந்தவங் கண்டுருகும்
ஆனந்த நீர்க்கண்மணியாம்
அரிய சைவத்தாழ் வடக்கல னன்கறு பந்தம்
ஆனவிரு வினையறுக்கும்

மணியெனது மலவிருளறு க்குமுயர் பூதிதனை
மாரு தணிந்துயர்ந்த
மாதங்க மேனியரன் மேனி கொளும் மாமணி
மறைப் பொருள் தனக்கு மெட்டாத்

திணிகொண்ட மாமணி திகைப்பறுத் தருள் செய்மணி
தெய்வந் தனைப்போற்றுவாம்
தெளிவுடைய திருவருட் பாமுறை திரட்டியே
திண்ணிய வருட்கவியது

பணிவுடைய மெய்விளக் கேவிளக் கென்பதது
பார்க்கில தண்ணீர் விளக்காய்ப்
பாங்காக வேற்கு மருளாட்சிபெற் றிமதனைப
பாடுமக னேக்காக்கவே. (7)

(7) தாழ் வடக்கலன—உருததிராககமாலை ; இரு வினை யென்றா நல வினையும் பிறததற கேது வாகலின் ; மாது அஙகம் மேனி எனக. "மெய் விளககே விளககென்பது" "எலலா விளககும் விளககலல சான்றோாக்குப பொய்யா விளககே விளக்கு." எனற திருக் குறளை யோாக. மெய் விளக்கே. . . . எறகும் :—இராமலிஙக சுவாமிகள கருஙகுழிககு வந்து தமதினைய சோதரர் பரசுராம பிள்ளைக்கு நீாக்கடனையாற்றிய அநநாளில தணணீரால விளககெரித்துக் காட்டினர். பின சென்னையிலுள்ள நணபருட் சிலர் தாமிருககுமிடம் வருமபடி வேண்ட, "மெய் விளக்கே விளககலலால வேறு விளக்கில்லை யென்றுா் மேலோா" என னும் பாடலை வரைந்து விடுத்து அகமுக வழியே தாம் பெறற அருள் நிலையுடைமையை வெளிப்படுததினர். தண்ணீர் விளககெரித்த தனமை போல் மாநதா் கடமுண்ணிர் சிவம விளகக வோங்குவிககுங்—கணமணியாம் நஙகளுளிராம லிஙக னலல வருட் பாமுறையைத் துங்க முற மாணு தொழு . எனற மதுரைத் திருஞான சமபந்த சுவாமிகளாதீனம சிதம்பர சுவாமிகள் வாக்கினைக் காணக.

## பஞ்சாக்கரம்.

316 திருவெழுத் தைந்திலுயிர் த்ரோதைமா சருள்சிவம
தேர்ந்த வுயிர் மணமலமொரீஇ
திவ்ய வகரத்தருளி லுற்றதுசிவ் விறையினில்
சேர்ந்துறச் சிவ்வொன்றிலே

மருவுமுப் பொருள்சச்சி தானந்தமு றுசூக்ம
மந்திரந் தனையேற்றதும்
மன்னுருச் சிறுதிருகண ணிருபுறஞ் சாய்வுறீஇ
வாடாத வாட்டமுறு மோர்

குருமேனி செம்மைகொண் டிருசெவி பரந்துகால்
கோப்புண்ட பாதரட்சை
கூடுதல கன்றுநன் குறுவளா கச்சித்தி
குறுகிகற் பூரதீபம்

பெருசிவ வெளிக்கேற்றிப் பேரின்பக் கூத்தாடிப்
பிரியா திருந்தவு ருவாம்
பேசரிய திருவருட் பிரகாச வள்ளலைப்
பெருமையொடு காக்க வென்றே. (8)

(8) திருவெழுத் . . . . . . மருவும் :—சிவபெருமான் திருநாமமாகியநமச்சிவாய என்ற ஐந்தட்சரங்களில நகாரத்தில திரோத சத்தியம் மகாரத்தில் மலமும சிகாரததில சிவமும வகாரததில் அருளும் யகாரத்திலான மாவும் நிற்கும். முப் பொருள :—இவ் வைநதும பதி, பசு, பாச மூன்றிலடங்கும். வளாகச்சித்தி—சித்தி விளாகம் எனற திருமாளிகை. இது கருங்குழிக் கருகிலுள்ள மேட்டுக்குப்பம் எனனும் சிறறூரிலுள்ளது.

## சமயகுரவர்.

317 ஆறுமுக மேசாந்த முகமெனும் தெய்வமாம்
அருள்ஞான சம்பந்தநல்
அருள்மொழி மறகொணு நாவினுக் கரசு மரன்
அரியவருள் பெறமேருங்கியே

தேறும ருளாலால சுந்தரன் மாணிக்க
தேசிக னருட் பதங்கள்
தினமுமற வாதிருந் தேத்திக் கனிந்துருகித்
தேடிப் பணிந்து நிறபாம்

பேறுதரு வேதாந்த சித்தாந்த மாகிப்
பெரும் பொருட் பீடகலுருப்
பேசாத மோனவெளி ஞானவெளி தன்னையே
பேசா திருந்து பேசும்

வீறுபெறு சன்மார்க்க மேயரிய நன்மார்க்க
மென்றே விளம்பு மரிய
வீட்டுநெறி காட்டுறு மிராமலிங்கப்பிள்ளை
வித்தகனைக் காக்கவென்றே. (9)

(9) மறக் கொணு—ஈறு கெட்ட எதிரமறைப் பெயரெச்சம் ; பீடு—பெருமை.

## சந்தான குரவர்.

318 கயிலைமலை தன்னி லுயா நந்திமுதல் நால்வரைக்
காண்பதங் கனமரியநல்
கருணைமொழி மெய்கண்ட தேவர்முதல் நால்வரைக்
காண்பதிங் கனமே யெனப்

பயிலுரைசெய் சந்தான குரவர்தம் பாதமலர்
பண்பொடு பரிந்தேததுவாம்
பண்பகலு ளுதவருள் மோனவெளி தன்னில்
பரந்தொளி பரப்புகிரண

வெயிலொளியி னைசசொர்ன்ன பொக்கிச மெனுஞ்சபை
விளங்கும் வட லூரடுத்த
மேல்சித்தி யாம்வளா கத்தமரு மாமணியை
வேதாந்த முதலாறுமே

துயிலறுத் திடுமரிய பீடமென வதன்மேல்
துணிந்துறு மிராமலிங்க
துரியவெளி யனுபவச் சோதியுரு வாங்குழவி
தூயனைக் காக்கவென்றே. (10)

(10) மெய் கண்ட தேவர் முதல நாலவர்—மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியார், மறை ஞான சமபந்தர், உமாபதி சிவாசாரியார் எனபவர். துரியவெளி—யோகியர் தன மயமாய் நிற்கும் உயர் நிலை.

## செங்கீரைப் பருவம்.

319 வானோங்கு மருள் மணம் மணக்குமலர் வளர்ஞான
வாசமருள் நீரின் மூழ்கி
மாற்றுயர்ந் திடுமருள் பட்டாடை கொண்டருள்
மாமேனி மேலுடுத்தித்

தானோங்கு மாணவ விருட்பந்த மற வருள்
தணணருள் விளக்கி யெழுமோர்
தண்ணொளி விர்க்குமருள் முத்தணி தரித்தினிய
சாந்தபத வியோமநிலையாய்த்

தானோங்கு மெய்ஞ்ஞான வஞ்சன சலாகையால்
தானென்னு மாத்மவிழியின்
தனமலத் திமிரந் தெறச் செய்து வத்வைத
தணபூதி தனையணிந்தே

தேனொழுகு பொழில் சூழும் வடலூ ரமர்ந்த நீ
செங்கீரை யாடியருளே
செம்மை நல முறவளர்ந் தோங்கும் வட லூர நீ
செங்கீரை யாடியருளே (1)

(1) ஆணவ இருள—ஆணவ மலம், ஐநது மலஙகளில ஒனறு. வியோமம்—ஆகாயம் ; **சலா**கை—இரண வைததியக கருவி வகை ; திமிரம—இருளாகிய குறறம் ; தெற—அழிய ; **பூதி—விபூதி** ;

320 தெள்ளறல் கொழித்திடு திருப்பால் தடஙகடல்
தேடிவட வாலுறங்கும்
தேனளி முரன்று மொய்த் தூதும் திருத்துழாய்ச்
செநதொடைத் திருமார்புடைப்

புள்ளிறையொ டகலாத புருகூத னய னுறும
புவனங்கள் மூன்று முத்தி
பொருள் தரும் சாமிவளர் புண்யவட லூரெனப்
போற்றுமுயர் சித்திபுரமாய்க்

கொள்ளுமுத் தர்ஞான முயர்சிதம் பர மதில்
குருஞான வளள லாகிக்
குரைகடல் புவிராச தவராச கவிராசர்
கூடியடி போற்று மரிய

தெள்ளியர்களுள்ள மகலாப்பெருந் தேவன் நீ
செங்கீரை யாடி யருளே
செம்மைநல முறவளர்ந் தோங்கும் வட லூர நீ
செங்கீரை யாடியருளே. (2)

(2) அறல் - கருமணல் ; தேன் அளி - ஒரு பொருட் பன்மொழி ; தேனுக்காக அளி என்றலுமாம். புளளிறை - கருடப் புளளுக்குத தலைவனான திருமால் ; அவனோடகலாத புருகூதன் என இந்திரனைக் கூறினார். திருமால் அதிதி வயிற்றில் உபேநதிரனாக பிறந்தமை நோககி. குரை - ஒலிக்கும்.

321 உன்னுதற் கரிய வொளி வீசும் பெருங்கருணை
உருவருட் பணிதரித்தே
ஒல்லென வசைந்தசைந துள்நகைத் தும்பி விரை
வோடும் தவழ்ந்து சென்று

நன்னல முறப்பெற்ற வென்னம்மை சின்னம்மை
நற்றாய் மடித்தலத்தே
நன்னயத் தொடுமிருந் தோங்கு மருள் நாயக
நயக்குமுன தினன் சொலதுகேட்

டின்புறும் தந்தைமடி மீதிருந் தோங்கி விளை
ஆடு மருளெந்தை யன்பால்
இன்புட னழைப்பவர்க் கின்புதவு மென்கணே
எங்கள் குரு ராமலிங்க

தென் தமிழ் மணக்கும் வட லூரருட் பிரகாச
செங்கீரை யாடியருளே
செம்மை நல முறவளர்ந் தோங்கும் வடலூரநீ
செங்கீரை யாடியருளே (3)

(3) சின்னம்மை - அடிகளின் தாயார் ; நயககு - ..........தந்—" குழலினிது யாழினிதென்பதம் மக்கள மழலைச் சொல் கேளாதவர் " என்ற திருக்குறள் ஓர்க.

322 நெட்டுடல் நிணச்சுவர் தனக்கிசைய வென்புதனை
நீள்சுவர்க் காலென நிறீஇ
நீண்டபெரு முதுகிடை நிமிர்ந்தபழ விளைதனை
நேருறு பெருந்தூ ணெனப்

பட்டுற வமைத்து நடு வோங்குமுக டெனுமேற்
பரப்பைத் தசைக்கொடதனுல்
பாங்கு பெற மூடியிரு ளாங்கற விளக்குமதி
பகலிரவி மண்டலத்தை

இட்டுமற் றுளதத்து வப்பெருநன் மேடைகள்
எடுத்தடுக் கிப்பெரியதோர்
இவ்வுடல்களென்னு மொரு சிறுவீ டமைத்தவையுள்
இன்புயிர்த் திரள்கள்தமையே

திட்டமொ டுறச் செய்து விளையா டருட்குழவி
செங்கீரை யாடியருளே
செம்மைநல முறவளர்ந் தோங்கும்வடலூரநீ
செங்கீரை யாடியருளே (4)

(4) மதி பகலிரவி மண்டலம் - முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து...... ஆம்பாட்டுக் குறிப்பில் காண்க. தத்துவம் - பூதமைந்து முதலிய 25 தத்துவங்கள்.

323 கொந்தார் மலர்க்குழ லளிக்குழாம் சூழ்ந்துறு
கொழுந்தே னயின்று நிற்க
கொங்கையுறு பாரமது கொண்டிடை யிளைக்கும்
கோமாட்டி யென்றறிந்தே

வந்தொரு மருங்கணைந் தொருகைதனை யோச்சியே
வாள்நகை யொடுங்களித்தே
வருமுடல் தனையற வொழித்த நம் கடவுளை
வளைக்கரம் கொண்டு தழுவும்

எந்தா யருட் குரிய பார்வதி புரப் பெயர்
இயைந்த வட லூரில் வாழும்
இனிமையக லாதமுக் கனி யிரதமாயுள்
இனிக்குமரு ளொழுகும் நல்ல

செந்தேன் மணக்கு முயர் திருவருட் பிரகாச
செங்கீரை யாடி யருளே
செம்மைநல முறவளர்ந் தோங்கும் வடலூர்நீ
செங்கீரை யாடியருளே (5)

(5) அயின்று - உண்டு ; ஓச்சி - ஓங்கி ; வாள்நகை - ஒளிபொருந்திய பற்களையுடைய பார்வதி. பார்வதிபுரம் - வடலூருக்கொரு பெயர்.

## வேறு

324 நகமுறு மமணர் முகம்கவி முறமத
நாளும் நலிந்தாட
நாயக மாமருண ஞானம் விளங்கி
நயந்து நயந்தாடத்

தகதக எனு மரு ளொளிமுழு தோங்கித்
தழைந்து தழைந்தாடத்
தையுடை நின்னரு ளழகொளிவேத
சதங்கை யசைந்தாடச்

சகமகிழ் சத்திய ஞான முறும் பொருள்
தண்ணருள் சாயாதே
சாந்த மிகப் பொலி வார்ந்து வளர்ந்தெழு
சத்திய ஞானமுறீஇ

அகமதி னின்று வளர்ந்துட னுடிட
ஆடுக செங்கீரை
அழகொளி நின்றருள் பழகுறு குழவி நீ
ஆடுக செங்கீரை (6)

(6) நகம் உறும் அமணர் – மலைகளில் வாழ்தலைப் பொருந்திய சமணர்கள் ; சமணர்கள் முகம் கவிழ்ந்தனர். இவர் சைவ சமயமோங்க வைப்பதால். சகம் – உலகம்.

325 அணிகிளை ரகிலநல் லுயிர்கள் பெருஞ்சிற்
றவல மசைந்துறவே
அவ்விய மாயுறு பூத மசைந்துற
ஆடைம் புலனசைய

பிணியுறு வாதம் பித்தம் சீதம்
பேர்ந்து புரண்டாட
பிங்கலை யிடைகலை யென்னு மிரண்டும்
பேர்ந்து துவண்டாட

தணிவில் சடப்பொரு ளெழுவகை தாது
தளர்ந்து தளர்ந்தாடத்
தடையுறு கரண முழந்துதி யங்கி
தசைந்து தசைந்தாட

அணிவளர் வடலூ ரருட்பிர காச நீ
ஆடுக செங்கீரை
அழகொளி நின்றருள் பழகுறு குழவி நீ
ஆடுக செங்கீரை (7)

(7) அவலம் – துன்பம் ; பிங்கலை – வலது மூக்கு வழியாய் வரும் மூச்சு ; தாது 7–இரதம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல், என்பன.

326 பண்டரு நற்புரு டந்தனில் மூலப்
பகுதி நலிந்தாடப்
பண்புறு பர சொப் பனமதில் மாயை
பதைத்துப் பதைத்தாட

விண்ணுறு வியோம மதில்பெரு மாயை
விலங்கி யசைந்தாட
விதியுறு சிவசாக் கிரமதில் விந்து
வெளிப்பட நின்றாட

கண்மணி நிகர்சிவ சொப்பன மதிலே
காண்புறு நாத மதே
காண்பற நின்று கலங்கித் தளர்ந்து
கசிந்து கசிந்தாட

அண்ண லுறுஞ்சிவ சத்தி புரத்தினில்
ஆடுக செங்கீரை
அழகொளி நின்றருள் பழகுறு குழவி நீ
ஆடுக செங்கீரை (8)

(8) சாக்கிரம் – சொப்பனம் ; முதலியன கீழாலவஸ்தைகளில் கூறப்படுவன. முன் பிள்ளைத் தமிழ்க்கொத்து 722–ம் பாட்டின் குறிப்பில் காண்க.

327 செம்மைகொ ளுபசாந் தம்மதின் மாமயல்
சேர்வை சிதைந்தாடச்
சீர்மை பெறுங்குரு சாக்கிர மதிலிருள்
சிந்தி நசிந்தாட

நம்புறு சீவவு பாதி நலிந்து
மெலிந்து நலிந்தாட
நாயக மாம்பர மானவு பாதி
நடுங்கி நலிந்தாட

விம்மித மற்ற விடந்தனி லோங்கி
விளங்குறு பிரமமதாய்
மேவின மென்பது போயற நின்று
விளங்கல் விரிந்தாட

அம்புய மலர் வயல் வடலூ ரப்பநீ
ஆடுக செங்கீரை
அழகொளி நின்றருள் பழகுறு குழவி நீ
ஆடுக செங்கீரை. (9)

(9) உபசாந்தம்—மனவமைதி, உபாதி - இடையூறு.

328 நன்றரு ளாந்தனை நாடுத லற்று
நயந்ததின் மீதேறி
நங்குரு சுருதியின் முடிபி லிருநததின்
நாயக மாஞ்சிவமாய்

நின்றருள் பேத மகன்றக லநுபவ
நேர்மை யுறப் பெற்றே
நின்மல சொரூப சுபாவ மகன்றருள்
நித்திய சத்தியமாய்

அன்றங் கருளு மத்தன் நீ முத்தன் நீ
அருளாய் நின்றவன் நீ
ஆண்டவன் நீயருள் தாண்டவன் நீயெனை
ஆள்பவன் நீ வடபால்

அன்பக லாதருள் சித்திபு ரத்தன் நீ
ஆடுக செங்கீரை
அழகுற நின்றருள் பழகுறு குழவி நீ
ஆடுக செங்கீரை. (10)

(10) சுருதி - வேதம்; சித்திபுரம - சிததிவளாகமாளிகையை இங்ஙன் கூறினர் போலும்.

## தாலப் பருவம்

329 சத்தாம் பொருளில் சகஜீவ
    பரங்கள் தோன்றும் பேதமது
சத்தாம் பொருள்தா னன்றிவே
    றிலவென் றேதும் சதசத்தே

சித்தாய் விளங்குஞ் சிவஞானம்
    தெளிந்த வறிஞ ருளத்தூறித்
தித்தித் தொழுகு மருளமுதே
    தெவிட்டா வமுதொத் தோங்குமொரு

கொத்தார் மலர்சூழ் குழல்சத்தி
    குமரி யருட்சீர் மெய்ஞ்ஞானக்
கொழுந்தாய் விளங்கு மரியகுலக்
    கொழுந்தே வென்னுட் குறை தவிர்க்கும்

அத்தா வறிஞர் மகிழவரும்
    அப்பா தாலோ தாலேலோ
அருள்மெய்ஞ் ஞான சித்திபுரத்
    தரசே தாலோ தாலேலோ. (1)

(1) சதசத்து - உள்ளதும் இல்லதும்.

330 சோதி மரஞ்சேர் சிலமந்தி
    சோர்வங் கடையா தெழுந்து மரச்
சோதிப் பிழம்பால் நோக்குறவிண்
    தோன்றும் கடக ராசிதனை

நீதி நிலஞ்சே ரலவனென்
    நினைத்தங் கஞ்சி நிலையின்றி
நீண்ட தெங்கின் நேருற வீழ்ந்
    திருந்து நிமிர்ந்தங் குறுமதுவை

பாதி யறவுண் டுறமயங்கிப்
    பாளை யுடனக் குலைபறித்துப்
பார்த்தங் கிறங்கும் பழஞ்சோலை
    பழம்பூ மணக்கும் பண்பகலர

ஆதி யாகும் வடலூருக்
    கரசே தாலோ தாலேலோ
அருள் மெய்ஞ் ஞான சித்திபுரத்
    தரசே தாலோ தாலேலோ. (2)

(2) சோதி மரம் - இரவில் ஒளியுடன் விளங்குவதாகக் கருதப்படும் மரவகை. தெங்கு - தென்னை மரம்; சோதி மரத்தை யடைந்த குரங்குகள் அம்மரத்தினொளியால் விண்ணில் தெரியும் கடகராசி (நண்டு)யை நிலத்திலுள்ள நண்டு என நினைத்துப் பயந்து அங்கு நிலைக்க முடியாமல் தென்னை மரத்தின்மீது விழுந்து சிறிது தங்கி ஆண்டுள்ள கள்ளைக் குடித்துப பாளையோடு குலைகளைத் தூக்கிக்கொண்டு இறங்கும் அத்தகை வளஞ்செறிந்த வடலூர் என்க.

### வேறு.

331 காரணு கும்பொழில் மாங்கனி நைந்து
கசிந்தொழு குறுமணமே
கால்கொடு வீசிக் கடுகி நடந்தொரு
கடிதட நின்றதிலே

நீரணு வுஞ்சிறு மேன்மணம் நீக்கி
நிமிர்ந்தே விளையாடும்
நேரிழை யணியிரு கொங்கைகொள் மகளிர்
நெகிழ்ந்த விடைக்குளுறும்

சீரணி வளர்சிறு குழிகள் மணக்கச்
செய்துறு பொழில் நீங்காச்
செம்மை மிகுங்குயில் பாடக் கேட்டுடன்
ஆடும் செழு மயில் வாழ்

தாரணி புகழ்வட லூருக்கரசே,
தாலோ தாலேலோ
தங்கு மருட்பிர காசத் தலைவ நீ
தாலோ தாலேலோ. (3)

(3) கால் - காற்று.

332 பொற்புறை சுருதி யகப்பொருள் சத்துப்
பொன்றுத லின்றியுறும்
போக்கறு சித்தினை விட்டக லாதுயர்
பொருளா நந்தமதே

நற்பொரு ளென்றுனு மன்பர் நயந்து
நயந்தே நாளுமரு
நழுவுறு தண்ணீ ரைப்போல் நினைவது
நயமல வென்றிங்கே

அற்புத மொடுவொழு குறுதயி லம்போல்
அன்புற வகமதனில்
ஆங்கே நின்று நினைந்து நினைந்திட
அழிவி லரும்பொருளாம்

தற்பர மாயச மாதியெ னப்புகல்
தகையே தாலேலோ
தங்கு மருட்பிர காசத் தலைவ நீ
தாலோ தாலேலோ (4)

333 எண்டிசை யோரு மெழுந்து துதிக்க
எழுந்தரு ளும்மரசே
இன்புட னுற்ற விருங்கழல் தன்னை
இறைஞ்சும் தவமுடையோர்

உண்டரு ளமுத வொழுக்கினை யகலா
துறுசிவ வநுபவமாம்
உள்ளழ கொடுநின் ேறாங்கி வளர்ந்தருள்
ஒழுங்கு மருட்பொலிவைக்

கண்டவர் தங்க ளகங்கனி வுறவருள்
கண்ணுள் மணியே நல்
காட்சி யுடைப்பே ராட்சி யுறும்பொருள்
கதிபெற வந்தோடித்

தண்டமெ னப்பணி வார்க்கரு ளரசே
தாலோ தாலேலோ
தங்கு மருட்பிர காசத் தலைவன் நீ
தாலோ தாலேலோ. (5)

(5) கழல் - தானியாகு பெயராய்க் கால்களை யுணர்த்திற்று.

334 கயிலைப் பதியிறை யாமர னிரு
கண்ணுட் கருமணியே
கைதொழு மடியர் பவப்பிணிய றவருள்
கற்பக நற்பரமே

பயினுறு மினிய பரம்பொரு ளென்று
பதம்பணி யும்பண்பில்
பத்தர்க ளுக்கருள் போக மனைத்தும்
பாங்குட னருள் சிவமே

இயலிசை கொண்டு துதிப்பரி தாமெழில்
கொண்ட விறைப் பொருளே
என்பு கரைந்து கரைந்து தவஞ் செயும்
இன்புடை யாளர்களும்

தயவிற் பொலிவுறு வடலூர்க் கரசே
தாலோ தாலேலோ
தங்கு மருட்பிர காசத் தலைவ நீ
தாலோ தாலேலோ. (6)

(6) பவப்பிணி - பிறவியாகிய துன்பம்; கண்ணுட் கருமணியென்றார் கண்ணுக்கு மணிகள் முக்கியமாதலின்.

**வேறு.**

335 தற்பர வெளியருள் அற்புத முடையாய்
தாலோ தாலேலோ
தானெனு முண்மை தயங்கொளி யுடையாய்
தாலோ தாலேலோ

அற்பக லாத வருட்கதி தந்தருள்
அய்யா தாலேலோ
ஆன வகண்ட வருட்பரி பூரண
அப்பா தாலேலோ

பொற்புற வளரருள் பூரண காரண
புனிதா தாலேலோ
பூத்த வருட்சிவ பூரண வின்பப்
பொருளே தாலேலோ

சற்குரு வேயருள் சிற்பர நாதா
தாலோ தாலேலோ
சத்திய வடலூர் சித்தி புரத்துறை
சதுரா தாலேலோ. (7)

(7) சதுரன் - சமர்த்தன்.

336 அஞ்ஞா னப்பெரு மதகரி தனையடும்
அரசே தாலேலோ
அருளமு தம்பொழி யானைக் தப்பொருள்
அரசே தாலேலோ

மெய்ஞ்ஞா னப்பொருள் வேண்டுப வர்க்கருள்
விமலா தாலேலோ
மெய்யரு ளின்பம் முப்பொரு ளொன்றெனும்
மெய்யாய் தாலேலோ

எஞ்ஞான் றன்பர்த மிதயந் தனிலுறும்
எந்தாய் தாலேலோ
என்னுளி ருக்கும் மலப்பிணி தீர்த்தருள்
இறைவா தாலேலோ

தஞ்ச முறுந்திரு வ டலூர் தனில்வாழ்
தனியே தாலேலோ
சத்திய வடலூர் சித்திபு ரத்துறை
சதுரா தாலேலோ. (8)

(8) அஞ்ஞானம் - அறியாமை ; மலப்பிணி - ஆணவம், மாயை, கன்மம் எனும் மும்மலமாகிய நோய்.

337 துன்னிய கரணத் துகளற வென்னுள்
துன்னுவை தாலேலோ
தூய்மை யரும்பொருள் வாய்மை தருங்கதி
தூயா தாலேலோ

மன்னிய சைவச் சற்குரு வாகிய
மணியே தாலேலோ
மாதவ மோதுறு வாத மகற்றிய
வாழ்வே தாலேலோ

தன்னிலை யேயருள் நன்னிலை யென்றருள்
தவமே தாலேலோ
தயவுடை நாயக மான தயாபர
தற்பர தாலேலோ

தன்மய மாகித் தயங்கு மொளிக்குள்
தயங்குவை தாலேலோ
சத்திய வடலூர் சித்திபு ரத்துறை
சதுரா தாலேலோ. (9)

(9) துன்னுவை - பொருந்துவாய்.

338 துன்மார்க் கப்புலை கொலையற் றவர்தம்
துணைவா தாலேலோ
துன்பக லருளுரு வாகிய வின்பத்
துரையே தாலேலோ

பன்மார்க் கப்பரி சற்ற வதீதப்
பரமா தாலேலோ
பண்புறு நண்பு கலந்த வருட்கதி
பரமே தாலேலோ

நன்மார்க் கம்பெறு வார்க்குளி ருந்தருள்
நட்பே தாலேலோ
நாடுதல் வாடுத லற்ற விடத்தருள்
நலமே தாலேலோ

தன்மையிடப் பொரு ளற்ற விடத்தொளிர்
தனியே தாலேலோ
சத்திய வடலூர் சித்தி புரத்துறை
சதுரா தாலேலோ. (10)

(10) துன்.............துணைவா என்றார் இவர் சீவகாருண்ய வொழுக்கம் கூறலால். அதீதம் - மேற்பட்டது.

## சப்பாணிப் பருவம்

339 உன்னையந் தொழுகுமிரு கண்களுற் றெங்கணும்
ஒளிப்பிழம் பாலிருளொழித்
தோங்குறு மருட்டா யுனைப்போன றுறுந்தெய்வம்
உண்டெனு வுரைக் கொணுமை

கண்டுமும் மலமங் குடைச்சீவர் தாமுளக்
காட்சிபெற வேக்கமுற்றே
காதலொழி யாதிரு கழற்ருணி தந்தொழல்
கடைப்பிடித் தொழுகும வர்தம்

பண்டைவினை முழுதும் பறந்திடச் செய்வைசிவ
பரமவனு பவநிலையெனும்
பண்புதனை வாயால் புகழ்ந்தினி தறிந்துனைப்
பாடுவோர்க் குதவுநல்ல

தண்மல ரிதழ்த்தா மரைப்பொருவி ணைக்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
சந்தமறை புகழும்வட லூரருட் பிரகாச
சப்பாணி கொட்டியருளே. (1)

(1) அருள்+தாய் - அருட்டாய் எனப் புணர்ந்தது. கழல்தாள் - நிதம் தொழல் என்க. அனுபவ நிலை - திருவருட்பா ஆருவது திருமுறை அனுபவ நிலை. 617-ம் பக்கம் பார்க்க.

340 பங்கயா சனனுமரி யாயிரங் கண்ணன்
பரந்திடு பணுமுடிச்செம்
பாந்தளுரு வங்கொண் டிரும்புவி பரிக்குமொரு
பண்ணவன் வியாக்ரபாத

புங்கவன் தும்புருவ நாரதா தியருமே
புகழ்நந்தி யொடுபிருங்கி
பொருவில்விண் ணவருமெண் ணுறுப்ரமத கணமொடும்
புவனநா தாக்களுடனே

தங்கள்தங் கட்குரிய விருதுபே ரிகைவீணை
தண்ணுமை பெருங்குடமுழாச்
சச்சரியுடன் சங்க மாத்திடச் சிவகணத்
தலைவர்தொழ நடனஞ்செயும்

சங்கரன் அருட்படிவ மாகிவளர் சற்குருநீ
சப்பாணி கொட்டியருளே
சந்தமறை புகழும்வட லூரருட் பிரகாச
சப்பாணி கொட்டியருளே. (2)

(2) பாந்தள் - பாம்பு ; பண்ணவன் - பதஞ்சலி ; வியாக்ரபாதர் - முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து ......-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

பிருங்கி ..இம்முனிவர் வீடு விரும்புபவராய் சக்தியை விட்டுச் சிவனை மட்டும் தரிசித்துச் செல்ல உமாதேவியார் இவரிடம் தமது கூருகிய உதிர மாமிசங்களை வற்றச் செய்ய சிவன் ஒருகோலுங் காலுந் தந்து கருணை செய்யப் பின் உமாதேவி தவஞ்செய்து பாதிப்பாகம் பெற்றனள். நாதாககன் - ஞானியா ; சச்சரி - ஒரு வாத்தியம்.

341 சித்தனெல் லாம்வல்ல தீரனரு ளால்சங்கம்
சேர்ந்துறும் புலவர்சூழச்
செற்றமில் காய்சின வழுதிமுத லீறெனச்
செப்பும் கடுங்கோன்மகன்

வித்தெனவி ளங்கும்வெண் டோட்செழியன் முதலீறு
வேய்முடத் திருமாறனும்
வேண்டுமம் மன்னன்முத லீறென விளம்புமொரு
வீரமுறு முக்ரவழுதி

சத்யமுறு வங்கியசே கரனென்னு முச்சங்க
சார்புடைய பாண்டி வெள்ளம்
தான்வழுத் துறுலிங்கம் சொக்கலிங் கப்பெரும்
சாமியருள் வடிவானவா

சத்திய மகன்றுருச் சிததாந்த முத்தனே
சப்பாணி கொட்டியருளே
சந்தமறை புகழும்வட லூரருட் பிரகாச
சப்பாணி கொட்டியருளே. (3)

(3) எலலாம் வல்ல சித்தன் - சிவபெருமான் திருவிளையாடற் புராணம் கூடற்காண்டத்தில் இப்படலத்தைக் காணக. காய்சின வழுதி - இவன் முதற்சங்கமிருத்தினன். இவனை உக்கிரபாண்டியன் என்பர். கடுங்கோன - தலைச்சங்கமிருத்திய பாண்டியர்களிலிறுதியானவன் வெண்டோட் செழியன் - இப்பாண்டியன் இடைச்சங்கமிருத்தினன். முடத்திருமாரன் - இடைச்சங்கம் நிறுவிய பாண்டியர்களில் கடையானவன். உக்ரவழுதி - இவன் காலத்தில் கடைச்சங்கமழிந்தது. வங்கிய சேகரபாண்டியன், நக்கீரர் முதலிய 49 பேரை ஆதரித்துக் கடைச்சங்கம் வளர்த்தவன்.

342 பஞ்சஞ்சு மெல்லடி பரந்தவிழி யருள்நீர்
பரிக்கொழுகு முக்கணுடையெம்
பார்ப்பதிம ணாலின் பரஞ்சோதி யென்னுட்
பதித்தொளிர் பராபரன்மறைக்

கொஞ்சுறு சதங்கையணி குஞ்சித பதாம்புயக்
குரிசிலென் நெஞ்சதுவிடாக்
குருநாத நடராச மணிவேத வொலிநாத
குணத்தவ வொலிபோலெழும்

எஞ்சலி லாதார மாறிலே ஆதார
மூர்த்திகளை யேத்திநாளும்
இன்புறூஉம் யோகியர்க ளுள்ளே யெழுந்தோங்கி
எங்குநிறை இன்றபொருளே

சஞ்சலம் மகற்றியருள் திருவருட் பிரகாச
சப்பாணி கொட்டியருளே
சந்தமறை புகழும்வட லூரருட் பிரகாச
சப்பாணி கொட்டியருளே. (4)

(4) வேதங்களே சதங்கையெனக. குஞ்சிதம் - ஒரு காலேத் தூக்கி நிற்றல்; எஞ்சலில் ............மூர்த்தி - முன்பிள்ளைத் தமிழ்கொத்து 660-662-ம் பாட்டின் குறிப்பில் பார்க்க.

343 சீர்கொண்ட பூதபௌ திகவண்ட பிண்டாண்ட
செம்மைவளர் பகிரண்டமாம்
செகமெலா மீன்றவொரு பகுதிக்கு மேலான
தெய்வநட ராசமனிதன்

பேர்கொண்ட பதிகமரு ளிச்செய்து திருவருள்
பிரகாச மாகிஎன்னுள்
பிணிமல மகற்றியரு ளானந்த வெளிதனில்
பேரா திருத்துமரசே

சூர்கொண்ட சற்குரு அருட்பொலி வுறும்தலைவ
துரியந் தனக்குமேலாம்
சுத்தமெய்க் கதியருளி ராமலிங் காயநம
தூய்மையறு மூலபந்தச்

சார்போத மகலச்செய் தருள்சத்ய மூர்த்தி நீ
சப்பாணி கொட்டியருளே
சந்தமறை புகழும்வட லூரருட் பிரகாச
சப்பாணி கொட்டியருளே. (5)

(5) தெய்வ..........பதிகம் - திருவருட்பா 256-ம் பக்கம் பார்க்க (1902-ம் வருஷப் பதிப்பு).

### வேறு.

344 கண்டவர் விண்டவ ரென்றிடு ஞானிகள்
காணுங் கதியகலாக்
காரண பூரண நாரண னாரணன்
காணுக் காட்சியருள்

பண்ணமை கண்ணி யருட்பா வொன்றும்
பார்த்ததி லோங்குகதிப்
பண்புறு ஞான வருட்பயன் துய்க்கப்
பரிவுறு மறிஞர்க்கே

தண்ணளி புரியு மருட்பிர காசத்
தலைவநீ தாங்குமருள்
தந்தை தயாபர வுத்தம ஞானச்
சபைதனி லோங்கு முருக்

கொண்ட அருட்சிவ ஞானச் செல்வநீ
　　கொட்டுக சப்பாணி
கொஞ்சுறு ரஞ்சித ஞான சிகாமணி
　　கொட்டுக சப்பாணி (6)

(6) தண்ணளி - கருணை ; உத்தரஞானசிதம்பரம் - வடலூரில் நாற்பது காணி அளவுள்ள விடத்திற்கு உத்தரஞானசிதம்பரமென இராமலிங்கர் கடவுட்திருவருட்டுணையால் பெயரிட்டார்.

345 கல்லா தவரனு பவியாக் கதிதனைக்
　　காட்டும் கருணையுருக்
கண்மணி விண்மணி தெய்வசி காமணி
　　காண்புறு காட்சிதரும்

பொல்லா மணியுயர் கொல்லா மணியென்
　　புன்மை தவிர்த்தருளும்
பொன்மணி நன்மணி யென்மணி யெனறும்
　　பொய்ம்மை யொழித்தருளும்

சொல்பொரு ளாயதி னுட்பொரு ளாமீமணி
　　சொல்பிழை தனையறவே
சொல்லித் துதிசெய் பவர்க்கருள் நாயக
　　சோதியுள் சோதியன்நீ

கொல்லா விரதியர் போற்றுங் குருமணி
　　கொட்டுக சப்பாணி
கொஞ்சுறு ரஞ்சித ஞான சிகாமணி
　　கொட்டுக சப்பாணி. (7)

(7) பொள்ளா என்பது பொல்லா என நின்றது.

346 மணமக ளாவருள் கற்பக நற்கனி
　　மாண்புட னருள்ஞானம்
மன்னுறு நன்மை மருத வருட்கதி
　　வாய்க்க வழங்குறுநீ

பணவர வல்குல் பாவையர் மயலொழி
　　பண்புடை யவர்தொழுநல்
பரம வருட்குரு வாகியென் னுள்ளம்
　　பார்த்தருள் யோகியருள்

கணகண வெனுநல் நாத வொலிக்கும்
　　காண்பரி தாயவருள்
கண்மணி யுத்தர ஞானச் சித்தி
　　புரத்தே காண்புறுசற்

குணரசி தப்பொருள் அருண்மணம் வீசிநீ
　　கொட்டுக சப்பாணி
கொஞ்சுறு ரஞ்சித ஞான சிகாமணி
　　கொட்டுக சப்பாணி. (8)

347 அருண்மணம் வீசுறு மொருதனி மலரே
　　அற்புத வானந்தம்
அகலா துறுநல் லதீத நிலைக்கே
　　அன்புகொ ளனுபவநல்
பொருள்நிலை தத்வமசிப்பொரு ளூறுபொருள்
　　போக்கறு பூரணமாம்
பொய்ம்மையி லாப்பொருள் புண்ணியர் நண்ணுறு
　　போதம் விளக்குறு நல்
கருணைக் கற்பக நற்பொரு ளதனைக்
　　கண்ணுள் மணியாகிக்
கருணையொ டுறைசெய வல்லா யென்னுள்
　　கரவா தொளிருமருள்
குருநிலை யொருநிலை யென்றருள் ஞானிநீ
　　கொட்டுக சப்பாணி
கொஞ்சுறு ரஞ்சித ஞான சிகாமணி
　　கொட்டுக சப்பாணி. (9)

(9) போதம் - ஞானம் ; கரவாது - மறையாது.

348 சூரக லுறவருள் சுப்பிர மப்பொருள்
　　சுகசொரு பானந்தச்
சுத்த வெளிப்பொருள் தன்னை மறைக்கும்
　　துர்க்குண மாமண்டம்
பேரக லாக்கலை வித்தையெ னும்பெரு
　　அண்டம் பேசவொணுப்
பிணிவளர் காலமி ராகம் புருடன்
　　பேசுறு பலவண்டம்
நேரக லாச்சிவ தத்துவ வண்டம்
　　நேருறு பலவண்டம்
நிற்கும் நிலைக்குள் வெளிப்பட லாகா
　　நீடொளி தனையறியக்
கூரக லறிவை விளக்கும் குருபர
　　கொட்டுக சப்பாணி
கொஞ்சுறு ரஞ்சித ஞான சிகாமணி
　　கொட்டுக சப்பாணி. (10)

(10) சுப்பிரமம் - ஒளி ; இராகம் புருடன் - வித்தியா தத்துவம் ஏழனுள் கூறப்படுவது. கூர் - மிக்க.

## முத்தப் பருவம்.

349 கால நியதி கலைகடந்த
கருணை யுருவாம் சிவபோகக்
காட்சி முடிவில் கனிந்தவருள்
கனியின் விளைவித் தாகியென்றன்

தூல வடிவைக் கரைத்துருக்கும்
துரிய வெளிக்கப் பாலாகும்
துரியா தீதப் பொருண்மோனம்
துளும்பு மிராம லிங்கனெனும்

மூல குருநீ உண்மகிழ்ந்து
முத்தம் தருக வெனும்முன்னே
மூலப் பகுதி யற்றிடத்தே
முளைத்த முத்தம் தந்தருள்செய்

மூலப் பொருளே வடலூர்வாழ்
முதல்வா முத்தந் தருகவே
முதலீ றில்லா விடத் தொளிரும்
முதல்வா முத்தந் தருகவே. (1)

(1) துரியம், துரியாதீதம் – முனபிள்ளைத் தமிழ்க்கொத்து 722-ம் பாட்டின் குறிப்பில் காண்க. முத்தம் – முத்தி (மோட்சம்).

350 கமல யோனி செயுஞ் சிருட்டி
கழன்ற விடத்தங் கொளிருமருள்
கருணை முத்தாய் விளைந்த வருள்
கடலே யென்னுள் கலந்தோங்கும்

நிமல தோற்றம் கடந்தப்பால்
நீண்ட பிரம வனுபவத்தில்
நிமிர்ந்தாங் கொளிசெய் நிசாநந்த
நித்ய மாகி யென்னுள்ளே

அமரும் முத்தே யென்னருமை
ஆணி முத்தே யானந்த
அருள்சீ ராகி விளையமுதம்
ஆகித் தனித்த வருண்முத்தே

மும்மல மறுக்கும் வடலூர்வாழ்
முதல்வா முத்தந் தருகவே
முதலீ றில்லா விடத் தொளிரும்
முதல்வா முத்தந் தருகவே. (2)

(2) கமலயோனி – பிரமன்; மும்மலம் – மூமலம் எனத் தொக்கது.

351 முத்தாய் விளைந்த வருள்மோன
முத்துள் முளைத்த முத்தினுக்கு
முத்தா மிராம லிங்கமெனும்
முத்தே முதலீ றில்லாத

முத்தி தானு யுயர்முத்து
முளைத்த சிவசாக் கிரசுழுத்தி
முதலாய் நின்று நிகழ்பிரம
முனையின் நீங்கா தொளிர்முத்து

சத்தாம் பிரம சாக்கிரத்தே
சார்ந்தங் கொளிரும் சாந்தபத
சத்யா னந்த வருண்முத்தே
சாகா விடத்துச் சாயாத

முத்தே தருமோர் சித்திபுர
முத்தே முத்தந் தருகவே
முதலீ றில்லா விடத் தொளிரும்
முதல்வா முத்தந் தருகவே. (3)

(3) மோனம் – பேசாமை ; சாக்கிரம், சுழுத்தி – முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 722–ம் பாட்டின் குறிப்பில் காண்க. சாயாத முத்து, – அழியாத முத்தி நிலை.

352 சொக்கப் பெருமான் வெள்ளிமன்னுள்
சோதிப் பெருமான் தன்னருளால்
தோன்றி விளங்கும் நின்வடிவம்
தோன்றுத் துணையாம் சோதியனல்

பக்க வழியால் பரந்தோங்கும்
பார்வைக் கனலால் பாகமுறப்
பண்டை மூலப் பகுதிமுளை
முளையைப் பழுக்கப் பார்த்தங்கே

ஒக்க மிளிரும் பிரம வொளி
தானே யதுவா யொளிவிடச்செய்
துன்னற் கரிய குருமுனையில்
ஒளிவிட் டோங்கு மொருமுத்தே

முக்கண் பெற்ற வரன ருளால்
விளைந்த முத்தந் தருகவே
முதலீ றில்லா விடத்தொளிரும்
முதல்வா முத்தந் தருகவே (4)

(4) மூலப்பகுதி – சுத்தா சுத்த தத்துவம் எழனுள் போகஇய ரூபமாய் நின்ற தததுவப் பிரபஞசங்கட்கெல்லாம் மூலகாரணமாவதும் கலாதத்துவத்தின் விகுதியாவதுமான பிரகிருதி.

353 சொருபந் தனையு மச்சொருபம்
தன்னை யறிநல் லுயிர்தனையும்
சொல்லு மிருபத் தொருநான்கு
கருவி தனையும் சோர்வின்றி

உருவ தரிச னஞ்சுத்தி
ஒளிவிட் டோங்க வுறச்செய்து
உன்னற் கரிய பரம்பொருளை
உன்னி யுன்னி யுறங்குமவர்

மருவு மறிவில் பூத்தொளிரும்
மணியே யன்பர் மறவாத
மன்னும் பிரம வொளிதானாய்
மலர்ந்த முத்தே மறைப்பொருளே

முருகு மணக்கும் நிலவொளி செய்
முத்தந் தருக முத்தமே
முதலீ றில்லா விடத்தொளிரும்
முதல்வா முத்தந் தருகவே. (5)

(5) இருபத்தொரு நான்கு கருவி 24 பிருதிவி, அப்பு, தேயு, வாயு முதலிய ஆன்ம தத்துவமாம்.

வேறு.

354 சந்தத மென்செயல் நின்செயலி யானறி
தன்மைநின் தன்மையதாம்
சமரச நிலையா கமவே தாந்தத்
தத்துவ நிலையெனு மோர்

பந்தமி லாநிலை துவிதாத் வைதப்
பரநிலை யெனுமந்தப்
பண்புறு மருள்நிலை மெய்ந்நிலை யதுவே
பரமா னந்த நிலை

இந்தநி லைச்சுத் தாத்வித சமரசம்
இந்நிலை மேனிலையே
என்றறி யெனுமரு ளுத்தர ஞான
இலக்கண முறுவெளியே

முந்திமு திர்ந்து கனிந்து பழுத்தருள்
முத்தந் தந்தருளே
முக்கனி சர்க்கரை யொக்க வினித்திடு
முத்தந் தந்தருளே. (6)

355 முச்சக முழுதும் மகிழ்ந்துனை யேத்த
முருக்கரு ணைக்குளுறும்
மோகமோ டொழியாச் சோக மொழிந்து
முழுப்பொருள் முத்திபெறும்

சொச்சம தான சுகக்கடல் தன்னைச்
சுகித்தெழு மறிஞர்குழாம்
சொந்தஞ் சொந்தமெ னப்புடை நின்று
துதித்தெழ வருளமுதே

பொச்சமில் மோன முழுப்பொரு ளேயென்
பொய்ப்பிணி யெய்ப்பறவே
புந்தியுள் நின்றருள் சிந்தா மணியென்
பொற்புவி சாந்தமணி

முச்சக சீவ பரம்பொரு ளானநீ
முந்தந் தந்தருளே
முக்கனி சர்க்கரை யொக்க வினித்திடு
முந்தந் தந்தருளே. (7)

(7) முச்சகம் – மூன்றுலகம் ; பொச்சம் – குற்றம்.

356 தத்துவ நீக்கம் சரிதையின் முடிபைத்
தண்ணரு ளாலறிதல்
சாலோ கந்தான் தற்போ தந்தான்
தானற வேநீக்கி

சத்திய அருளுரு வாகிநீ தங்குதல்
சாமீ பம்மெனவே
சாற்றித் தற்போ தங்கெட நிற்பது
தண்ணருள் யோகமதில்

சத்துவ முறுபரை தானய் நிற்பது
சாரூ பம்மெனவே
சற்குரு வருளா லங்ங னறிந்தே
தற்பரை நீக்கமதில

முத்தெனு ஞானம தீதஞ் சாயுச்
சியமுத் தந்தருவாய்
முக்கனி சர்க்கரை வொக்க வினித்திடு
முத்தந் தந்தருளே. (8)

(8) இப்பாட்டில் சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதவிகளை விளக்கியிருத்தல் காண்க.

357 அண்டர்கள் தொழுதெழ வருளுரு வாகிய
ஆதிய நாதியதாய்
அற்புத மாகு மருள்குரு வாகியென
அகமதை விட்டகலா

விண்டுறு மலரை நிகர்த்திடு மடியிணை
வேண்டுறு சித்தாந்தம்
வேதாந் தப்பொருள் நாதாந் தம்வெளி
யோகாந் தப்பொருளே

உண்மை யகன்றுற லாகா வுத்தமம்
ஓங்கிய போதாந்தம்
உருவெளி யருவெளி யுருவரு வெளியாய்
ஓங்கிய வொருபொருளே

முண்டக மலரோன் கண்டுணை ரப்பொருள்
முத்தந் தந்தருளே
முக்கனி சர்க்கரை யொக்க வினித்திடு
முத்தந் தந்தருளே (9)

(9) அண்டர் – தேவர் ; உருவெளி........வெளி : முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 69-ம் பாட்டின் குறிப்பில் காண்க. இப்பாட்டில் ஆசிரியரைச் சிவனாகக் கூறியிருத்தல் காண்க.

358 சொன்னிலை பொருணிலை யறியவொ ணாநிலை
சொல்லுங் கதிநிலையைச்
சொல்லு மருட்பா சொல்லச் சொல்லச்
சுகஞ் சுக மென்றுரைசெய்

மன்னுறு மனுபவ நிலையருள் நிலையது
மாறு நிலையதனை
மாண்புட னுணரும் மகானு பவர்க்கருள்
மாதவ னேயருள்வாய்

பொன்னம் பலமே யென்னம் பலமென
போற்றுப வர்க்கருளும்
புண்ணிய னேயுயர் திண்ணிய னேபுகழ்
போகாப் பொருணிலையே

மூன்னிலை வடலூ ருத்தம னேயருள்
முத்தந் தந்தருளே.
முக்கனி சர்க்கரை யொக்க வினித்திடு
முந்தந் தந்தருளே

(10) மாண்பு – பெருமை.

## வருகைப் பருவம்

359 ஏழிலம் பாலைதனை சீறிக் கடம் கவிழ்த்
திருமாந் துயர்ந்து செல்லும்
இருகையா னைப்பிடியின் நடைசெருக் கறவன்னம்
இளநடை தளர்ந்துறச்செய்

தோழிமட வார்மய லகற்றியருள் மெய்ஞ்ஞான
சோதிச் சுயம்ப்ரகாசச்
சுத்தமா மயிலாட வம்மயில் குயிலான
சொருப வனு பவமதனையே

ஏழிரண் டுலகமுழு துற்பவல யமபோன
எந்தை யருள் நாட்டமும் உடையோர்க்
கின்புடன் தந்தருளி ராமலிங் கக்குரு
இயற்கையரு ளாட்சிநாளும்

வாழியரு ளோங்கும்வட லூவரிலுறை வள்ளல்நீ
வருகநீ வருக நாளும்
வண்மையருள் திருவருட் பிரகாச வள்ளலே
வருகவென் மணி வருகவே. (1)

(1) ஏழிலம்பாலை - மகளிரான் மலருமரம் பத்துளொன்று. இது மகளிர் நட்பாட மலரும். இதன் வாசனை யானைகளுக்காகாது. கடம் - மதம்.

360 ஒருபொருள் தத்வமசி யெனும்மகா வாக்யமதை
உணரிலஃ துள்ளதத்வம்
ஓங்கிவளர் தானதா யுள்ள வானந்தமாய்
உறுபொருள தீதமாகி

வருபொருள் சச்சிதா னந்தமா யழியாது
வாழுமுப்பா மொன்றதாய்
வளர்துரிய மூன்றுமொன் றுயதின் மீதிலுறு
வாழ்வுதா னுகிநின்ற

குருவனுப வாதீத குணரகித விசுவமுதல்
குறைவிலா நிறைவதாகி
குணமாயை வேறதாய் வேறென்ப தில்லதாய்
கோதின்முப் பொருளொன்றதாய்

மருவியே யொளிர்மூல காரணப் பொருளான
மறையினுள் மணிவருகவே
வண்மையருள் திருவருட் பிரகாச வள்ளலே
வருகவென் மணிவருகவே (2)

(2) இதிலுள்ள சித்தாந்தக் கருத்துக்களை 1932-ம் ஆண்டில் வெளியிட்ட ஆறும் திரு முறையில் வசனபாகத்தை நோக்குக.

361 பதிநித்ய வறிவாம் பசுத்தறிவ தேபசு
பகர்ந்திது வெனச் சுட்டவே
பாசமெனும் முப்பொருளு மொன்றே யெனக்கண்டு
பகர்ஞான வள்ளலுரை நல்

கதியருளு மண்ணல்தா ளத்வைத மாதலே
காணிரண் டின்மையென்றே
கழலுமொரு சிவஞான போதவெண் பாப்பொருள
கருத்திற் கிசைந்த நல்ல

மதிவழி யுயிர்த்தொகை மதித்திடா வழியுக்தி
வழியால் விளங்கு முண்மை
மாட்சிதனை நோக்கிமுப பொருளொன் றெனக்கொண்டு
வாழு மறை சித்தாந்தநன்

மதிதனை யெமக்கருள் செய் யுத்தர சிதம்பர
மகானுபவ நீவருகவே
வண்மையருள் திருவருட் பிரகாச வள்ளலே
வருகவென் மணி வருகவே. (3)

(3) ————————————.

362. உலகநிலை தானறும் சுருதிதனில் மருணீங்கும்
ஒருசா தகந்தன்னிலே
உலைவிலிருள் சாத்திய மதிற்போ மதீதநிலை
ஓங்கிவளர் சகச ஞானம்

கலகமொரு சிறிதுமில் லாதோங்கு மநுபவக்
கருணையுரு ஞானம கலாக்
கனிவுபெற் றிடுசாந்த முகக்காட்சி நாளுமே
கரவாது காட்டியருளும்

நலமுடைய குருவே நின் முகம்வற்றி வளர்காட்சி
நாததத் துவமுழுதுமே
நாடுறு மடக்குமுறு தருணமதறியார்கள்
நானு விதங்களாக

வலனற்ற வாதமே பேசுவ ரவர்க்கு மருள்
மணியேநீ வருகமுத்தி
வண்மையருள் திருவருட் பிரகாச வள்ளலே
வருகநீ வருகமணியே.

(4) நானுவிதம் — பலவிதங்கள் ; வலன் — வெற்றி.

363 திருவருட் பிரகாச வள்ளல்நீ திருநீ
றணிந்துருத் ராக்கமணியால்
திருமந்தரம் நாளும் செபித்துவிழி நீர்பெருகி
சிந்தமி ழெடுத்தோது நீ

உருவங்க மொத்தசிவ ஞானியா யொரு சித்தி
உயர்வளா கத்தமர்ந்து
உண்மைசிவ ஞான வனலொளியா லுண் மாசொழித்
தோங்கு பசு மலச் சாம்பல்தான்

ஒருபசும லத்தினுக் கொருபுறப் பொருளென்
றுரைத்ததனை யணியாது விட்
டோங்குமத் வைதவெண் நீறணிந் துயர் கருணை
உருவான பின்னரு ருவாய்

வருக்கம ணிதனை யகற்றி யரு ளப்பனே
வருகநீ வருகஞான
வண்மை யருள் திருவருட் பிரகாச வள்ளலே
வருககண் மணிவருகவே. (5)

(5) தீம்தமிழ் - இனிய தமிழ் ; வளாகம் - சித்திவளாகம் என்ற மாளிகை ; உண்மாச
மனக் குற்றம்.

364 அருளுருக் கொண்டவொரு வடிவுசிவ யோகிவடி
வானநின் னரிய முடிமேல்
அங்கே வளர்ந்த சிகை மூன்றுபிரி வுள்ளே நின்
அரியதாய் சின்னம்மைதான்

அருள்சிவ னடிச் சேர்ந்த பின்னரொரு சிகை கொண்டு
அரியவெண் துகில்மேற் கொளீஇ
அருட்பாத மேற்கும் நன் இருபாத ரட்சைதனை
அங்ஙன மகற்றியா ளும்

இருளறு வளாகமது சித்தி யெனு மோ ரிடம்
இருந்துகற் பூரதீபம்
ஏற்றிபா ராதித் தானந்த மேலிட்(டு)
இனிய கூத் தாடி நின்று

வருமுடல் மறைத்து வெளி யாணவர சேவருக
வருகநல் லரிய சித்தி
வண்மை யருள் திருவருட் பிரகாச வள்ளலே
வருக வென் மணி வருகவே.

(6) கொளீஇ - கொண்டு, சொல்லி சையளபெடை.

## வேறு

365 சீரார் கருணைக் கற்பகநல்
தெய்வத் தருவே வருகவருட்
செம்மல் வருக மன்பதைக்கோர்
தெய்வப் பொருளே வருகபவத்

தீராப் பிணிக்கட் டவிழ்த்துமயல்
தீர்த்துக் கதிதந் தருளுமென்றும்
தெவிட்டா தென்னுள் தித்திக்கும்
தெய்வக் கனியே வருகநல்ல

ஏரார் பிரம வெளிக்குள் வளர்
இனிய சச்சி தாநந்த
இன்பக் கடலே வருக வென்னுள்
இனிக்கு மெந்தாய் வருகவெழில்

காரார் சோலை புடை வளரக்
காக்கும் வடலூ ராசேயெம்
கண்ணே வருக விராமலிங்கக்
கருணா நிதியே வருகவே.

(7) மன்பதை – உலகத்துயிர்கள்.

**வேறு**

366 சிறந்தி டும்பொ ருட்குளுத்
தரச்சி தம்ப ராவருள்
சித்திதா னியற்ற வல்ல
தெய்வ ஞான வள்ளலே

இறந்து ளோர்கள் தமையெழுப்ப
வல்ல வெங்க ளீசனே
எல்லாம் வல்ல ஞான சித்த
இடர் செய் பாவ நாசனே

மறந்த விர்த்த வன்பருள்
மறந்தி டாதி ருந்தவா
மாதவம் செய் பெரிய ருன்னை
வாழ்த்த வாழும் மன்னவா

வறந்தி டாத நீர் வளங்கொள்
வடலூ ரெந்தை வருகவே
வளர ருட்ப்ர காசவள்ளல்
வருக வருக வருகவே. (8)

(8) இறந்துளோர்.......................ஈசனே. இராமலிங்கர் இறந்வர்களையெல்லாம் எழுப்புவேனென்று விடுத்த செய்தி சமாதிவற்புறுத்தும் பத்திரிகையில் இந்தக் கடிதம் வெளிப்பட்டறிந்துகொள்ளாமுன் இறந்து தகனமானவர்களையும் எழுப்பியருளுவார்........ எனது தந்தையார் திருவருளை நான அடையும் வரையில்....இருந்து இறந்தவர்களையெல்லாம் எழுப்பிக்கொடுத்தும்........" என்பதை 566-ம் பக்கம் ஆறுந் திருமுறை (1932-ம் வருஷம பதிப்பு) உள்ளது காண்க." செத்தவர்கள் எழுந்துலகில் திரிந்து மகிழ்ந்திருப்பார் " பக்கம் 379. செத்தாரையெல்லாம் திரும்ப வெழுப்பபுதலிங்கெத்தான் முடியுமெனில்..........சத்தியமிதே ;" என்ற அவரது திருப்பாடல்களை நோக்குக.

367 நீதியுடைய தாகு மரிய
நிமல சித்தி செயவலாய்
நீண்ட வுலகி லெய்துங்காட்சி
நேர்ந்தி டச்செய் நித்தனே

சாதி சமய மாமசத்ய
சதிரழிந்து றச்செயும்
சத்ய நித்ய முத்த சித்த
சாமி யிங்குச் சார்ந்தருள்

சோதி யாகி நின்றருட்கண்
சொரந்த மாய்வி ளக்கியாள்
சுத்த ஞான சித்தனே
சுயம்ப்ர காச முத்தவீண

வாதி வாய்கள் மூடவேநீ
வருக வருக வருகவே
வளரருட்ப்ர காசவெந்தை
வருக வருக வருகவே. (9)

(9) நிமலன் – குற்றமற்றவன்.

368 வேத வாக மச்சமத்த
வித்த கப்பொ ருட்குணம்
வேண்டு சித்தர் கணமதைப்
பணிந்த வேத வித்தகன்

மாத வஞ்செய் தாயுமான
வள்ளல் ஞான மூர்த்திபால்
மன்னு சமர சானுபூதி
வாழ்வு பெற்று வந்தவா

நாத தத்வ முடிபிறந்த
நல்ல ருட்ப்ர காசனே
நாடு நானெ னும்தியக்கம்
நாசமாக்கும் நல்லவா

வாதமற்ற நல்லருள்
கதிக்குள்ளாக்க வருகவே
வளரருட்ப்ர காச எந்தை
வருக வருக வருகவே (10)

(10) தாயும் ஆன வள்ளல் – திருச்சிராப்பள்ளி சிவபிரான். இதன் வரலாறு அபிதான சிந்தாமணி முதற் பதிப்பு 503-ம் பக்கம் காண்க. நான் எனும் தியக்கம்—" "யானென தென்னும் செறுக்கறுப்பான்.............புகும் " என்ற குறள் காண்க. கதி – மோட்சம்.

## அம்புலிப் பருவம்

369 திருவளர் திருப்பாற் கடற்கு ளுதித்தனைச்
செம்மைவளர் திருவருட்பால்
தீங்கட லுதித்தவ னிவன்பேர் திரைக்கடல்
தீங்கிலிட கிரணவமுதம்

உருவள ருடற்குள்ள மைத்தொழுகு மதிநீயுன்
ஒழுகுமறு பூதிமதிகாண்
உயரிரவி யொளிகொளீஇ யோங்குமதி நீயிவன்
ஓங்குசிவ வொளியிெனாளிகாண

இருளகல வெழுமொளிகொள் ளினியமதி நீமூல
இருளொழித் தருளும் மதிதான்
இன்பமுதொ ழுகுமதி நீயிவன் மூலவழி
எழுமமுத கற்றி யென்றும்

அருளமுதொ ழுக்குமதி ராமலிங் கச்சேயோ
டம்புலீ யாடவாவே
அரியவட லூரருட் பிரகாச வள்ளலுடன்
அம்புலீ யாடவாவே. (1)

| (1) சந்திரன். | இராமலிங்கா. |
|---|---|
| 1. திருப்பாற்கடலில் தோன்றினவன். | செம்மை மிக்க திருவருட்பாலாகிய இனிய கடலில் தோன்றினவன். |
| 2. பாற்கடலிலிருந்த தீங்கற்ற குளிர்ந்த அமுதத்தை உடற்குள் வைத்திருக்கு மதியாவன் (சந்திரன்). | மனத்தை அடக்கியொழுகும் அனுபவமிக்க மதி(புத்தி)யுடையவன். |
| 3. சூரியனின் ஒளிகொண்டு உயர்பவன். | சிவவொளியின் ஒளியாவன். |
| 4. உலக இருள் நீங்க எழும் ஒளிகொண்ட மதியாவான். | மூலமாகிய அஞ்ஞான விருளை ஒழித்தருளும் மதி (புத்திசாலி) யாவான். |
| 5. இனிய அமுதத்தை தேவர்கட்கும், பிதிரர்க்கும் கொடுக்கும் மதியாவான். | மூலவழி உண்டாகும் அமுது நீக்கி என்றும் அருளமிர்தத்தைக் கொடுப்பவன். |

### பேதம்

370 மதிமண்ட லந்தனி லிருந்துகுறை மதியாகி
வாழ்வா யிவன் தனக்குள்
மதிமண்ட லந்தனி லிருந்தொழுகு மமுத்தனை
வாங்கியீந் தெங்கும் நிறைவான்

மதி விண்ணுழு தெங்கும் மயங்குமதி நீயிவனுள்
மாயையை மிதிக்கும்மதிகாண்
மன்னிரவி தன்னுள் கலந்தின்மை யாவையிவன்
மாறு வகண்டமதிகாண்

புதியபூச் சாயா களங்கமுறு வாயிவன்
பொருமாயை தன்களங்கம்
புரையற விடுத்தின்ப பூரணா நந்தமாய்
பொலிவுபெற் றோங்குமதிகாண்

அதிகமுறு மெஞ்ஞான வாநந்த போதனுடன்
அம்புலீ யாடவாவே
அரிய வடலூரருள் பிரகாச வள்ளலுடன்
அம்புலீ யாடவாவே. (2)

(2) மதிமண்டலந்தனிலிருந்தொழுகும் – முன்பிள்ளைத் தமிழ்க்கொத்து 663-ம் பாட்டுக் குறிப்பில் காண்க. இரவி.' – சூரியன் ; இன்மையாவது அமாவாசையன்று ; இப்பாட்டில் பேதங் கூறியமை காண்க.

தானம்

371 விண்ணுலகில் வந்துனைப் பற்றும்விட தாரிபால்
வேதனை விடாதுதிரிநீ
விதிவிலக்கி னையறிந் துறுமறிஞர் விடுகாம
வினைநோ யுழன்று கயநோய்

நண்ணுறும் முடல்கூ னடுத்துலவு முனைமாதர்
நாடிப் பழிக்குமதனை
நாடிமனம் நொந்துடலம் வாடிப் புழுங்கியே
நாடிநா டித்திரிந்தே

எண்ணுநீ யருளுறு மிராமலிங் கப்பெயர்கொள்
எந்தையரு ளமுதமுண்டு
இன்புறுத் துன்பமுறு பசிநோயகன் றுநீ
எந்நாளு முலவ வருள்செய்

அண்ணலரு ளாநந்த வமுதுடையென் னப்பனுடன்
அம்புலீ யாடவாவே
அரியவட லூரருள் பிரகாச வள்ளலுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(3) விடதாரி – இராகுவெனும் பாம்பு ; கயநோய் – க்ஷயம் ; இது தக்ஷன் சாபத்தால் கலைகுறைவது நோக்கியது. மாதர் பழிப்பது – காமதாபத்தின்போது சந்திரன் சுடுவதால்.

372 பூதமுறு மாயையை யொறுத்துமேல் கீழான
புவனதத் துவமடுக்காய்
பூண்டவரி சைகள்தமை யெடுத்தெறிந் துலமொரு
பொருவில்மெய்ஞ் ஞானவீரன்

பூதபௌ திகவுயிர்க் குளஞுறுமஞ் ஞானவதை
போகாத மோகவதையும்
போகப் புடைத்தெறிந் தோங்குமுய ரருள்ஞான
போதம் வளர் வீரனெனவே

வேதனை யகன்றுமெய்ப் புலவர்பர ணித்தமிழ்
விளங்கப் புகழ்ந்துபாட
விண்ணவர்கள் மண்ணவர்க ளேத்த வருள்செய்தே
விளங்குபவ னென்றறிகிலாய்

ஆதித்த னேங்கமறை யுங்குழவி யாகிவளர்
அம்புலீ யாடவாவே
அரிய வடலூரருள் பிரகாச வள்ளலுடன்
அம்புலீ யாடவாவே. (4)

(4) பௌதிகம் - ஆறும் திருமுறை 89-ம் பக்கம் (1932-ம் வருஷப் பதிப்பு) காண்க. பரணி - 96 பிரபந்தங்களில் ஒன்று.

373 நீண்டவைம் புலன்நாலு கரணங் கழன்றுமன
நேருறக் கண்டுவாயு
நேருரு துழலுத லகன்றுமல விருளற
நிமிர்ந்துகூ டத்தணுகி

காண்தொறும் துரியவெளி தனையும் கவர்ந்துமேல்
காணுறும தீதவெளியும்
காணது காணுமம் முத்திநிலை தன்னையே
காட்டுமொரு மூலகுருவாய்

ஈண்டமர்ந் தருள்சுத்த வீரனொரு பாவனை
எனும்மூல ஞானவனலால்
இன்புடன் மதிமண்ட லந்தாக்கி யின்பமுதம்
ஏற்பது விலக்கியுள்ளே

ஆண்டவரு ளுடையமையால் தாண்டவ னழைப்பனுனை
அம்புலீ யாடவாவே
அரியவட லூரருள் பிரகாச வள்ளலுடன்
அம்புலீ யாடவாவே. (5)

(5) அழைப்பன் - காலவழுவமைதி.

### தண்டம்

374 நீறுபட மலவிரு ளொதுக்கி யருள் தரவரிய
நிமலகுரு வாகி யென்னுள்
நின்றுமுக் குணமவை யொழித்தவைக் காதார
நேர்ந்துறு வியக்கமதனைக்

கூறுபட் டறவொழித் தங்கன மெழுந்தரிய
கூடத்த னைக்குப்தமாய்க்
கொண்டெழுந் தறுமாயை வெந்துறு படம்போல்
குழைந்துற வொழித்தருவமாய்

வேறுபடு தனுமற வொழித்துசுப் பிரமமாய்
　　வீற்றிருந் திடவருள்செயும்
வித்தகன் தானுனே யொழிப்பதரி தோவினைகொள்
　　வீங்குமயல் கொண்ட வுயிர்கள்

ஆறுதத் துவசட மகற்றியரு ளப்பனுடன்
　　அம்புலீ யாடவாவே
அரியவட லூரருள் பிரகாச வள்ளலுடன்
　　அம்புலீ யாடவாவே. (6)

(6) நீறுபட - சாம்பராக ; முக்குணம் - சத்துவம், இராசசம், தாமதம் என்பன. வியக்தம் - புலன்கட்கு விஷயமாவது.

375 தெருளோங்கு தெண்ணில வெறிக்கும் முழு மேனிகொடு
　　தேர்ந்துலவு மொருமகனெனச்
சென்றுறு செருக்குடையை யுனசெருக் குடைய வுயர்
　　செம்மலரு ளமுத மகலாப்

பொருளருள் மதவெள்ள மொழுகிய பெருங் கருணை
　　போகாத பொருகளிறெனும்
புண்ணிய விராமலிங் கத்தலைவனுட் சினம்
　　பொங்கிப் பொழிந்துற வெழீஇப்

பருகிலொரு கவளமாய்ப் பாங்காய் முடிந்திடுவை
　　பார்த்திலே கொலைய னருளாம்
பார்வைக் கொதுங்கிமெல் லென வெழுந் துலவியுறு
　　பண்பிலாத் திருடன் நீயென்

றருளமுத முண்டவ னறிந்தானின் றுதலால்
　　அம்புலீ யாடவாவே
அரியவட லூரருள் பிரகாச வள்ளலுடன்
　　அம்புலீ யாடவாவே. (7)

(7) ஒருமகன் - ஒப்பற்ற மகன் ; தேவர்க்கு அமுதங் கொடுத்தல் ஓஷதிகட்கு இறைவனாதல், சிவனின் முடியில் விளங்குதல் முதலிய சிறப்புக்கள் களிறெனும் இராமலிங்கம் என்ற உருவகத்திற்கேற்ப கவளம் என்றார்.

**வேறு—தானம்.**

376 குழக னகண்ட சிவானு பவந்தரு
　　கோதி லருட்குருவாம்
கொற்றவன் நற்றவ முற்றிட வோங்கும்
　　குருவரு ளுருவாகிப்

பழநிகர் சிவகதி யுற்றவ னருளால்
　　பார்த்தருள் நீர்பாய்ச்சிப்
பண்புறு மனவயல் தன்னி லருட்சிவ
　　பதமுறு வித்திடவே

அழகுற நின்று வளர்ந்து விளைந்தருள்
அமுத வொழுக்கதனை
அங்ஙனம் நின்று புசித்தரு ளன்பர்க்
கான் வருட் சிவமாம்

மழகளி றெத்திடு பவனே டாடிட
வாவம் புலிவாவே
மழலை யருட்பிர காசன தருகே
வாவம் புலிவாவே. (8)

(8) அருள் நீர்பாய்ச்சி, மன்மாகிய வயலில் சிவபதமாகிய வித்திட்டு அருளமுதமாகிய விளைவை அன்பர்கட்கெல்லாமருளும் இராமலிங்கன் என்ற உருவக நயத்தைக் காண்க.

377 சிந்தனை நைந்து கசிந்திடு வோர்க்கருள்
செய்பவன் திருவகலாச்
செம்பொருள் சற்குரு வனுபவ மதனில்
துவிதாத் வைதநிலை

தந்திடு வதுபய னென்றருள் பவனெனைத்
தானுக் குறுபவன் நம்
தற்பர சிற்பர தகரா காயம்
தானது வென்பது மோர்

சொந்த மெனப்படு முபதே சப்பொருள்
சொல்லிப் பணிவித் தெனச்
சொல்வழு பொருள்வழு வென்பது முழுதும்
சோர்வடை வுற வாங்கே

வந்தான் கொண்டருள் பவனுட னுடிட
வாவம் புலிவாவே
மழலை யருட்பிர காசன தருகே
வாவம் புலிவாவே. (9)

(9) ——————.

378 மோனம தாகி முளைத்தெழு முதலாய்
முன்பின் மலைவறவே
மூண்டெழு துயரற வாங்கெழு பவனெம்
முனிவு தொலைத்தருளி

ஊனம தாகு முடற் சுமை யாவும்
ஒழித்தரு ளோங்குறவே
உண்மலம் முழுது மகற்றி யெனக்கருள்
உத்தமன் முத்தி யெனும்

தானது வாமென நானற நின்று
தனித்திட வருள்பவ னெம்
தண்ணரு ளாம்பர மானத யாபர
சாமி யெனத் தலையால்

வானவர் தொழுதெழு பவனுட னுடிட
வாவம் புலி வாவே
மழலை யருட்பிர காசன தருகே
வாவம் புலி வாவே. (10)

(10) முனிவு - வருத்தம்.

## சிற்றில் பருவம்

379 கல்லார் தமக்கும் கற்றவர்க்கும்
களிப்பை யருளும் களிப்பெனுமோர்
கருணைப் பாட்டும் கற்பூரம்
மணக்கு முடலில் கலந் தெனுமோர்

சொல்லார் கவியும் சொலச் சொலவுள்
இனிக்கு மினிப்புக் கொருகவி நீ
சொல்லி முடித்த தனித்தனி முக்
கனியும் போதும் சுயகதிக்கு

வல்லார் மதிக்கும் மணவாளா
வடலூர்க் கரசே வழுத்துபவர்
வாழ வருள்செய் திடுமழியா
வாழ்வே யெனக்கும் வாழ் வருளும்

செல்வா ஞான சிகாமணியே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே. (1)

(1) கல்லார்................பாட்டு - திருவருட்பா 577-ம் பக்கத்தில காண்க.

380 கொல்லா விரதங் கொண்ட வர்க்கும்
குணமாம் மேரு வாகியருள்
குழகா வருள்நோக் கதனாலே
குறிக்கும் பொருள் நல் துரியபதம்

வல்ல வருட்பா வொன்றும்மே
வாழ்த்து மடிய ருட் புகுந்து
வழங்குங் கதிக்கு மணி போலும்
வள்ளா லுனது மலரடி யென

பொல்லா முடியின் மீதேற்றிப்
பொல்லாச் சிறியேன் புன்மலங்கள்
போக விடைதந் தருள் செய்யுமென்
பொல்லா மணியே புலைப் பிறவி

செல்ல வேண்டு மவர்க்கருள்வாய
சிறியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே. (2)

(2) கதி - மோட்சம் ; சத்தியவான் - " சத்தியவான் வார்த்தையிதுதானுரைத்தேன் கண்டாய்.........."என்ற பாட்டு ஆருந்திருமுறை 379-ம் பக்கம் பார்க்க.

381 அம்மை யப்ப னுருமெங்கள்
அரிய பெருமான் தோன்றி வளர்
அருமை யகலாச் சிவஞான
அருட்பா லமுதம் தரவுண்டார்

தம்மை யுணர்ந்த வனுபவத்தால்
தயங்கு மருளால் நீ யுரைத்த
தாயா மருட்பா நூலதிலே
தான்நீ யுரைத்த சத்தியவான்

வெம்மை யகல் மெய்க் கவியொன்றை
விளம்பிற் றம்முள் விளக்கமுறும்
வேதப் பொருளின் முடிபுணர்ந்து
வேண்டும் பெரிய ருட்களிப்பர்

செம்மை யவரால் புகழவரும்
சிறுவா சிற்றில் சிதையேலே
சீராம் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(3) ——————

382 வாட்ட மோடு சிறியனெனும்
வள்ளல் கவிக்குள் வளரருள்தேன்
வழுத்து மடியர் உளஞ் சுரந்து
வழிந்து திரண்டு வாழ்த்துபவர்

தேட்ட மொழித்துத் திகைப் பொழித்துத்
தினமு மாறு வின்ப வெள்ளம்
தேக்கித் திளைத்தங் கொழுகு மருள்
தெய்வப் பொருள்தான் என்றன் மனக்

கோட்ட மொழிக்குங் குணமளிக்கும்
குறையாப் பேரின் பளிக்குமது
குறித்த குறிப்பின் வழிநின்ற
குணமாம் மேரு வனையபொருள்

திட்டு மறிஞ ருளந்தேடும்
தேவே சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே. (4)

(4) 'வாட்டமோடு சிறியன்'].—இப்பாட்டு திருவருட்பா 700-ம் பக்கத்தில் காண்க. கோட்டம் - குற்றம்.

383 குறிகள் குணங்கள் கடந்ததனிக்
கூத்த னுருநல் லைந்தெழுத்தாய்க்
குறிப்ப தொருவா சகமதனுள்
கூடும் பொருள்தான் வாச்சியமென்

றறிய உணர்த்து மநுபவத்தின்
அருமை யகலா வதீதநிலை
ஆளும் பொருள்தா னரசாட்சி
ஆத லறிந்திங் கெமக்கருள் நீ

செறிந்த வுயிர்தா னிறந்தபினும்
திரும்ப வெழுப்ப வருட் சோதித்
தெய்வ வழியா லாகுமெனத்
தெரிக்கு முண்மைத் திருப்பாட்டே

சிறியேன் றனக்கும் சாட்சியது
தெரியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே. (5)

(5) செறிந்த...................... பாட்டு :— செத்தாரையெல்லாம்.......... அருட் பெருஞ்சோதியதனுன் முடியுந தெருட் பெருஞ் சத்தியமிதே. என்ற பாட்டு.

384 கரண வண்டம் புலனண்டங்
காணும் பஞ்ச பூதமுதல்
காணு மாத்ம தத்வமருக்
கால தத்வம் கருவுற்று

மரண மறியா தெழுஞ்சுத்த
வித்தை முதலாய் மருவுமண்டம்
மன்னும் விந்து முதல் நான்காய்
மருவு மண்டம் வளர்ந் தோங்கி

இரண முதலா யுறுபிண்டம்
　　ஏற்ற பகிரண் டங்களுமே
ஏற்ற மூலப் பகுதிகொடு
　　இயற்று மெந்தாய் மறை நான்கின்

சிரங்கொண் டமரும் செல்வமே
　　சிறியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
　　சிறியேம் சிற்றில் சிதையேலே. (6)

(6) ஆத்ம தத்துவம் 24 முன் கூறியது காண்க.

385 அகரந் தானெம் பாற்குமுதல்
　　ஆகி யுயிரா யமைந்துறுமவ்
ஆற்ற லுடைமை போன்றமரும்
　　அப்பா வரசே வருளுதய

தகர வித்தை ஆகுமது
　　தானுங் கதிதா ளுகுமுனே
தானு யுறுவோர் தாமறிவார்
　　தானல்லாத நானறிந்து

பகரப் படுமோர் பசு ஞானம்
　　பாச ஞானம் பதி ஞானம்
பரந்த மூன்றுள் பதிஞானம்
　　பாங்கா யுணரே னகலமுறும்

செகங்கண் டுணரா மணம் புணர்ந்தாய்
　　சிறியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
　　சிறியேம் சிற்றில் சிதையேலே (7)

(7) அகரம்............அமைந்துறும் - ஆறுந்திருமுறை வசனப் பகுதி 108, 109-ம் பக்கங்களில் காண்க. தகரவித்தை - இறைவனைத் தகராகாசத்தில் வைத்து தியானஞ் செய்யும் முறையை உணர்த்தும் வித்தை. பசு - ஆன்மா, பதி - கடவுள்.

386 தப்பி லதுநீ யாமென்று
　　தனித்து மறைகள் கூறுமருள்
தானய் விளங்குஞ் சிவனே நீ
　　ஆறு யென்னுஞ் சைவமது

தப்பில் சைவஞ் சிவத்தோடும்
　　உறுசம் பந்த மென வுரைத்து
ஓங்குஞ் சைவ மத்துவிதம்
　　உயர்வே தாந்தப் பொருட்கூறென்

றிப்பார் தனில்நின் றியம்பும் வள்ளல்
இனிய சுருதிக் கெதிரிலை யென்
றெடுத் தென் போல்வார்க் கியம்புமருன்
எந்தா யின்ப வுருவாகும்

செப்பும் கல்வி ஞானமிலாச்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே. (8)

387 உயர்வில் சனனம் கருப்பைதனில்
உறைதல் மரணம் மது நீங்கல்
ஒழியா நரக மாயாசம்
உயர்வாம் சொர்க்கம் நாயாசம்

மயக்கும் மலமே மறைக்குமொரு
மாயை விளக்கும் மயலகலா
மாளாக் கன்மம் விகாரமது
மருளச் செய்யும் மாண்பதனால்

தயங்கு மான்மா சனன மொடு
மரண மடையும் தரமகன்று
தானாய் விளங்கு மநுபூதி
தானென் றுரைக்கும் மறைஞானச்

செயங்கொள் வள்ள லுரைமெயெனும்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே.

388 அருளாம் வெளியின் வடிவாகும்
ஆதி சிகர வாநந்த
அரிய மவுனந் தனிலாகும்
அதுவே வுண்மை என வுரைத்துக்

கருவி யறுக்கு முருத்திரனே
காணும் சாகாத் தலை யரிய
கண்ணுள் மணிமா யேசுரனே
கருதற் கரிய வேகாக்கால்

மருவு மரிய சதாசிவமே
மண்ணுள் போகாப் புனலன்றி
மாண்ட வுப்பின் வகைபேத
வழியன் றெனநீ உரைத்து மனச்

செருக்கை யகற்றி யருள்வாய் நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே
சீரார் வடலூர்க் கரசே நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே. (10)

(10) சாகாத்தலை, வேகாக்கால், போகாப் புனல், என்ற இதன வரலாற்றை ஆறாந் திருமுறை 16-ம் பக்கத்தில் கண்டு தெளிக.

## சிறுபறைப் பருவம்

389 அம்மையருள் முலையமுத முண்டசம் பந்தர் போல்
அய்யநின் தாயின் முலையுண்
டங்ஙனம் வளர்ந்தநின் னருண்மேனி யுள்ளே
அருத வருள் ஞானமதனால்

வெம்மைவளர் மூலவனல் வேதனை யகன்றுலகம்
வேண்டாத ஞானகுருவே
வேந்தேயென் னப்பாநல் வடலூ ரிருந்து நீ
விளையாடு மேன்மை யதுதான்

வெம்பவ மிலாக்குரு தருஞ் சோற்றைச் சின்னம்மை
வேண்டியுட் கொண்டதிறனே
வேண்டுமிவ் வுலகமதில் மோனகுரு வாகும் நீ
விமலகதி யருள்வை கண்டாய்

செம்மைவட லூரருட் பிரகாச வள்ளலே
சிறுபறை முழக்கி யருளே
சிற்சொருப மாகிவள ரற்புதச் சோதிநீ
சிறுபறை முழக்கி யருளே. (1)

(1) வெம்பவ..............ஆகும். சின்னம்மையார் சிவயோகியாரொருவர்க்கு அமுதிட அவர் திருநீறளிக்க அதன் காரணத்தால் இவர் உதித்தார்.

390 பிச்சுலகம் மெச்சப் பிதற்றுகின் றேனேனும்
பெருமைகொள் விருத்த மதனில்
போராத வாந்த நித்திரை செய்யுந்திறம்
பேசுமவ் வுண்மை யறியேன்

நச்சுவிழி மாதரொடு கூடியெந் நாளுமே
நாடித துயின்ற துயிலும்
நாய்க்குமொரு பேய்க்குமுள ததனையெந் நாளுமே
நாடிக் களித்து நாளும்

இச்சிக்கு மென்மனத் தாசைதனை நீக்கியே
எளியேன் தனக்கருள் செயாய்
என்செய்கே னெந்தைநின் னருட்பாவி லொன்றினை
இயம்பிலென் நெஞ்ச முருகும்

செச்சைமலர் சூடியருள் நச்சுமறு பவமுடையை
சிறுபறை முழக்கி யருளே
சிற்சொருப மாகிவள யற்புதச் சோதிநீ
சிறுபறை முழக்கி யருளே (2)

(2) பிதற்றுகின்றேனென்றதற்கேற்ப பிச்சுலகமென்றார், பிச்சு - பைத்தியம். நஞ்சு - நச்சு என ஆயது. செச்சை - வெட்சி.

391 சத்துசித் தாநந்த வநுபவச் சோதியருள்
சரிதைநிலை நான்கு முதலாய்
சார்ந்தநிலை நந்நான்கு நானறிந் தேனெனும்
சாந்த வநு பவ வருட்பா

சத்தறிகி லாவெமை யுருக்கு மவ் வுண்மைதனை
சாமிநீ யறியாய் கொலோ
சந்நிதி தனிறசென்று நான்பெற்ற பேறதனைச்
சாமியறி வாரடி யெனும்

சித்திதரு நின்பாவின் நிலைதனை நினைந்துருகிச்
சின்மயா நந்த நிலையைச்
சேர்வதெந் நாளரிய சாமியரு ளாய் கொல்நீ
சித்தநிலை முழுது மருளும்

சித்தாந்த வேதாந்த சமரசப் பொருளே நீ
சிறுபறை முழக்கி யருளே
சிற்சொருப மாகிவள ரற்புதச் சோதிநீ
சிறுபறை முழக்கி யருளே (3)

(3) சரிதை நிலை......அறிந்தேன் :—முன் பிள்ளைத் தமிழ்க்கொத்து......ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. "நான்........அறிவாரடி". ஆம் பக்கம் திரு வருட்பா காண்க.

392 சுத்தசன் மார்க்க மெச் சமயசன் மார்க்கமொடு
சோர்வில்மத சன்மார்க்கமும்
சொற்பொருள் விடுத்தோங்கி நிற்கு மரு ளநுபவச்
சொற்பிரகா சத்தலைவனே

அத்தனரு ளாலேம சித்தியுடல் சித்தியுடன்
அழியா திருக்க வருளும்
அருமையக லாமையுறு சுத்தசன் மார்க்கனே
அப்பனே யருமருந்தே

வித்துமத சன்மார்க்க மாற உட்டாமே
விளைந்தமத மளவில் கோடி
வேண்டாது மேலுயர்ந் துறுபொருள் விளக்குமொரு
வேதமுடி வான பொருளே

சித்தி யருள் முத்திநிலை நன்றருள்செய் செல்வமே
　　சிறுபறை முழக்கி யருளே
சிற்சொருப மாகிவள ரற்புதச் சோதி நீ
　　சிறுபறை முழக்கி யருளே (4)

(4) அத்தன் - சிவபிரான் "சுத்தசன்......மார்க்கனே" ஆறறிவு படைத்த மனிதன் தேகத்திற்கு இடைக்கிடை நேருகின்ற மரணம், பிணி, மூப்பு முதலிய அவத்தைகள் எல்லாவற்றையும் தவிர்த்து இத்தேகத்தையே நித்திய தேகமாக்கிக்கொண்டு எக்காலத்தும் எவ்விடத்தும் எத்ததுணையும் தடைபடாத பேரின்ப சித்திப் பெருவாழ்வைப்பெற்று வாழ்தல் வேண்டும் என்பது. அதை எப்படிப் பெற முடியுமெனில் வேறு எந்த வழியாலும் பெறுதல் கூடாது. எல்லாமுடைய கடவுளது திருவருள் சுதந்தரம் ஒன்றுலேயே பெறுதல் கூடும். அத்திருவருள் சுதந்தரம் ஜீவனுக்குள்ள மூன்றான தேக சுதந்தரம், போக சுதந்தரம், ஜீவ சுதந்தரம் ஆகியவைகளை விட்டொழித்தாமல்லாது சித்திக்காது. மற்றும் சுத்த சன்மார்க்க சாதனையான ஜீவகாருண்யம் என்றதைக் கடைப்பிடிக்கவேண்டும்.

393　புகல் கர்ம்ம சித்திசா காக்கல்வி அணிமாதி
　　புகழ்யோக சித்தி யகலாப்
புனிதமுறு மெய்ஞ்ஞான சித்தியுய ரகலாத
　　புவியுள் புதைத்த பிணமிச்

செகமீ தெழுப்புமச் சுகஞான சித்தியின்
　　சீர்மைபன் னிருவருடமே
சேர்ந்தமுத லிருநூற்றே டெட்டாண்டி லாமெனச்
　　செப்பியருள் ஞானசித்தி

சுகமுறக் கொண்டிரண் டரை கடிகை யளவிட்டுச்
　　சுகமா யிருந்த குரு நீ
சொல்லுமா சித்திக ளந்தமுஞ் செய்யாது
　　சுகியா யிருந்த வுளவு

சிகரமலை வாழ் சித்தர் முனிவரறி வார்கள்நீ
　　சிறுபறை முழக்கி யருளே
சிற்சொருப மாகிவள ரற்புதச் சோதிநீ
　　சிறுபறை முழக்கி யருளே (5)

(5) சாலைக்கல்வி —ஆறுந்திருமுறை 17 ஆம் பக்கம் காண்க.

394　நெற்றிக்கு நேர்நீண்ட புருவந் தனில்கொண்ட
　　நிமலஞா னக்கண்ணையே
நேராய் திறக்கப் பெறில்புவிகள் யாவுமே
　　நேர்நிற்கு மன்றி யந்த

நற்றவ முறும் பெரியர் தயவோடு பார்க்கிலோ
　　நாசமுற் றிடு பிணங்கள்
நலியா தெழுந்துயிர்கள் பெற்றெழுந் துறுமென்று
　　நாடிப் புகன்று பின்னும்

சற்றே சினம்கொள்ளி னுயிர் நாசமாகுமச்
சக்தியர்கண் கண்ணுக்குமே யருளான
சார்ந்தகத வும்பூட்டு மூளததனை யருளான
தாழ்வின்நல் திறவுகோலால்

செற்றே திறந்திடுதல் வேண்டுமென் றருளியநீ
சிறுபறை முழக்கியருளே
சிற்சொருப மாகிவளர் ரற்புதச சோதிநீ
சிறுபறை முழக்கி யருளே (6)

(6) ஞானக்கண் - சிவபிரான் நெற்றியிலுள்ள திருக் கண் ; முன்பு காண்க.

395 முழுமல முறப்பெறுவர் மூடப் பசுக்கள்மலம்
மூன்றுபங் குடையவர் சீவர்
முதிருமுய ராதமமல மொருபங் குடைத்தாய்
முடிந்துமும் மல மற்றதாய்ப்

பழுதுறுச் சிவமொன் றெனக்கூறிப் பரமார்த்த
பரஞான வொளி சபையதில்
பண்புறு மொளிக்கு மொளியாம் தெய்வ வொளியாகி
பாங்கான நடமதாகி

ஒழுகா வெளிக்குள் வெறு வெளியா யுயர்ந்தோங்கி
ஒருசச்சி தாநந்த நல்
ஓங்கார வடிவாகி சிவனீச் சரனுகி
ஓங்குமறு பூதிதன்னை

செழுமையுற வோதிய விராமலிங் கக்குருநீ
சிறுபறை முழக்கி யருளே
சிற்சொருப மாகிவளர் ரற்புதச் சோதிநீ
சிறுபறை முழக்கி யருளே (7)

வேறு

396 தரைமுதல் நாதம தீருக் காணுதல்
தான்றிய மந்தாணும்
தானது நீங்குறல் நியம மரும் பொருள்
தனையறி வதுஞானம்

வரையுறு மாதன மருள்வளர் ஞானம்
வளர்ந்துறு தரிசனமே
வளமுறு ப்ராணு யாமம் தண்ணருள்
வாய்ந்துறு பரைநோக்கம்

புரையறு ப்ரத்யா கார மொலிவுறு
போக்கக்று பரையோகம்
புலனுறு தாரணை யப்பரை நீக்கம்
புகழ்த்தியா னமதாகும்

குரையில் சமாதியவ் வின்பம தாமெனக்
கொட்டுக சிறுபறையே
கோதறு வடலூ ரருட்பிர காசநீ
கொட்டுக சிறுபறையே (8)

(8) பரைஞானம், பரையோகம்—முன் பிள்ளைத்தமிழ்க் கொத்து 657-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

397 திருவளர் ஞானப் பிள்ளைமு தற்பொருள்
தேசுறு நால்வருமே
தீதக லொருமல மிருமலம் மும்மலம்
தெளிவுறு மலநான்கற்

றருவா யுருவா யருவுரு வாங்கதி
அழகக லாதுறவே
அன்புடன் பெற்றவ ராதலி லிங்ஙனம்
அவர்பின் னவராகும்

ஒருமை பெறும் பொருள் தேறுதி யென்றருள்
உயர்ஞா னக்குறியின்
உயர்வறி யாவுல கம்பே யென்பதும்
உண்மைகொ லென்றருள்நீ

குருவளர் ஞானசி காமணி யருள்மணி
கொட்டுக சிறுபறையே
கோதறு வடலூ ரருட்பிர காசநீ
கொட்டுக சிறு பறையே (9)

(9) ஞானப்பிள்ளை—திருஞானசம்பந்தர்.

398 கலைவளர் ஞான முறும்பெரு ளாம் சிற்
கனவே ளிப்பொருளைக்
காணு துலகமெ லாம்போ யுழலும்
கற்பனை யாகுறுமிவ்

அலையுறு மனமுள் நெகிழ்தலு மாகிநன்
காகும் பொருள்பத்தி
ஆருவன்பஃ தாத்ம நெகிழ்ச்சிகொள்
அறிஞ ரவர்க்குளொளி

வலையு ளகப்படும் வள்ள லரும் பொருள்
வாசக வாச்சியமாய்
வாழ்பொரு ளேழ்நிலை மாட மிருந்ததில்
வளரதி சயமறிவாய்

கொலைபுரி யாவட லூரி லிருந்தநீ
கொட்டுக சிறுபறையே
கோதறு வடலூ ரருட்பிர காசநீ
கொட்டுக சிறுபறையே. (10)

## சிறுதேர்ப் பருவம்

399 தூலவுடல் பிண்டாண்ட பகிரண்ட முழுதுமே
தூக்கிச் செயுந் தெய்வநல்
தொழிலைந்தி னல்பாச மல பந்த மறவே
தொலைத் தருள்செய் தூயஞான

மூலமெனு மொருபொருள் திருவருட் பிரகாச
மோனகுரு வானமுதலே
மூதறிஞ ருள்ளின்ப வாநந்த வெள்ளம்
முதிர்ந்தோங்க வங்ஙனமுறாஉம்

ஆலமொத் துறுமூல பந்தங் கழற்றி யருள்
அமுதகுண சாந்தமகலா
அமல வத் துவிதமுய ராநந்த வநுபவ
அருட்சோதி யானகுருவே

சீலமுறு வேதாந்த நாதாந்த போதனே
சிறுதே ருருட்டி யருளே
செம்மைவளர் வடலூ ரருட்பிரகா சத்தலைவ
சிறுதே ருருட்டியருளே. (1)

(1) உறாஉம் - இன்னிசையளபெடை.

400 தங்குமுய ரகலாத வுலகரத மதனிலே
தாங்குமரு ளாநந்தமாம்
தண்ணருள் சச்சிதா நந்தவுரு வாகும்நீ
தண்மறைப் பரிபூட்டியே

அங்ஙனம் சாந்தியா தீதகலை யயனுல்
அடுத்தூர்ந் துறச் செய்துறீஇ
ஆதித்த வருள்ஞான மண்டலந் தனையாழி
ஆக்கிப்பொன் சோதிமலையைப்

பொங்கறிவெ னுஞ்சேட னூல்வளைத் தச்சேடன்
புந்திதனு ளறிதுயிலு(ம்)மால்
புண்ணியனை ஞான வம் பாக்கி யருளிரதம்
பொருந்தி நகை ஞானவனலால்

சிங்கமே சீடர்முப் புரமுட லெரித்தருள்வை
சிறுதே ருருட்டியருளே
செம்மைவளர் வடலூ ரருட்பிரகா சத்தலைவ
சிறுதே ருருட்டியருளே. (2)

(2) புந்தி - அறிவு ; ஈண்டு திரிபுரமெரித்த சிவனுக்கொப்பிட்டு இராமலிங்கரைக்கூறிய திறமுணர்க.

401 அப்பன் வரு தருணமிஃ தெனுமருட் பாவதனில்
அடியில் குறித்த பொருள்தான்
ஆர்க்குமரி தாகுமரி பிரமர்முத லியவறிஞர்
அகமகிழ்ந் திடவங்ஙனே

செப்புமுறு திருவருட் குருகளிப் பாலிங்குச்
செத்தவர்கள் தாம்எழுதலே
திண்ணமுணர் மன்னேயெ னப்புகன் றிட்டதனைத்
திண்மையென் றுணர்வதெந்நாள்

இப்புவியி லெந்தையா மெங்கள்குரு சாமியருள்
இன்னருட் பாவிலொன்றில்
எல்லா மறியவே யென்சாமி யெனதுதுரை
என்றதில் குறித்தபடியே

செப்புநா ழிகையிரண் டரையில்வெளி யாக்குறீ
சிறுதே ருருட்டி யருளே
செம்மைவளர் வடலூ ரருட்பிரகா சத்தலைவ
சிறுதே ருருட்டியருளே. (3)

(3) திருவருட் . . . . திண்ணம் . . . . . ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

402 செத்தார்க ளெழுவரெனக் கைத்தாளம் போடெனும்
திருஅருட் பாவொன்றுமே
செகமுழுது மேபரவி செயமெனும் பண்பதனைத்
தேர்ந்திடாச் சிறியர் தமையும்

பெத்தமுறு மலவுட லழித்திட் டுறும் சிறுமை
பேராத நரகழுத்தி
பேர்த்துமுயி ருடலாதி தந்தவர்க் காமரிய
பேரின்ப முதவுமரசே

புத்தமுதம் மொழுகுமதி காரமல சுத்தமாய்ப்
போந்தவருள் ஞானமணியே
பொய்ம்மையுறு மிப்புவியில் பொய்யுடலெடுத்தே
பொருந்திவாழ் பவர்கள் தமையே

சித்துருவ மாக்கி யருள் சிவஞான வள்ளலே
சிறுதே ருருட்டி யருளே
செம்மைவளர் வடலூர் ரருட்பிரகா சத்தலைவ
சிறுதே ருருட்டியருளே. (4)

(4) பெத்தம் - கட்டு.

403 கலைவல்ல கருணிக குலமுழுமுய்ந் துறவந்து
கருணைப்பிர காசமுறுநல்
கலையோகப் பிராணலய சர்ம்மத்தை நாட்டாது
காண்புறு நிராசை யொன்றை

மலைவற வுணர்த்தியருள் மகராச சிவயோக
மாண்புறு மிராமலிங்க
மாதேவ தேவன்நீ மாளாத தபுதுவ
மலக்கூட்டை மாளுறச் செய்

தலைவற விளக்குமருளைந்தொழி யியற்றியது
அதுவாதல் முத்தியெனு நன்
கானயொரு ளுபதேச மங்ஙன முரைத்தாசை
அதனைப் பறித்துமதனுர்

சிலைவில் கரும்பொடித் துறுநா ணறுத்தவா
சிறுதே ருருட்டி யருளே
செம்மைவளர் வடலூ ரருட்பிரகா சத்தலைவ
சிறுதே ருருட்டி யருளே. (5)

(5) தபு - அழியும்.

404 கொந்தார் மலர்க்குழ லளிக்குழாம் குழறிமது
கோத்துண்டு தனைமறந்த
கொள்கைபோ லாநந்த முறுமருள் தேனுடு
குவலயா நந்தமாகும்

பந்தமறு மெய்ஞ்ஞான வாநந்த முடையாய்
பகர்ந்திடி லரிக்கு மரிதாம்
பார்க்கொணு வரியபர சாக்கிரங் கருணைவளர்
பரமசொப் பனமுதலதாம்

நந்தாத குருதுரிய வறுபவப் பொருளையே
நாடியுறை வேதாந்தமே
நாடொணு துறுமகா வறுபவ நடுப்பொருளை
நாள்பெறுவ தெங்ஙனரசே

இந்தா வருட்சோதி மலைவீதி தன்னிலே
சிறுதே ருருட்டி யருளே
செம்மைவளர் வடலூ ரருட்பிரகாசத்தலைவ
சிறுதே ருருட்டி யருளே. (6)

(6) அணி - வண்டு.

வேறு

405 நானற நீநா னென்றரு ளநுபவ
ஞான மொழிக்குருநீ
நன்குய ரறிவநீ யானுத மாநம்
சிவமா நன்கதனைத்

தானறி வேதப் பொருள்மா வாக்யத்
தன்மை யுணர்த்தி யருள்
தானே யதுவா யதுதா னாகும்
தன்மை யுருச் சத்தின்

மானருள் விந்துறு மோகினி யெனுமும்
மாயை யகற்றி யருள்
மன்னு மலைப்பொருள் மாறுக் கதிதரு
மணியென் கண்மணியே

ஊனற வேயரு ளுண்மைப் பொருளே
உருட்டுக சிறுதேரே
உத்தர ஞானச் சித்திபு ரத்த
உருட்டுக சிறுதேரே. (7)

(7) பொருளே - பொருளினையுடையாய்.

406 மூப்பா மும்பா மென்றருள் மூலர்
முடிந்த பொருட்குளுறும்
மூதறி யுடையவர் நாடுறு மமல
முதிர்ந்திடு சடகோபர்

அப்பா லும்பா மென்று ரறிவினில்
அங்கறி பொருளதனை
ஆரறி வாரது தானறி புமது
தானே தானதுவாம்

தப்பா வநுபவ சாதக சாத்திய
சத்ய முறுங்கதியைத்
தந்தருள் சமரச வேதசன் மார்க்க
சமர்த்த சதாநந்த

ஒப்புயர் வில்லா வொருவ வென்னப்ப
உருட்டுக சிறுதேரே
உத்தர ஞானச் சித்திபு ரத்த
உருட்டுக சிறுதேரே. (8)

407 கொல்லா விரதக் குலநல் குலமெனக்
கூறும் பெரியவர்தம்
குருமொழி யருள்மொழி யென்னுள் கொண்டே
கொலைசெய் வார்தமையும்

கொல்லுதல் பாவம் பாழ்த்த வினைக்குள்
கோப்புறு தோல்முகமே
துரிசுற நோககுதல் பாவம் பாவம்
தூய்மையி லாவந்தப்

பொல்லாப் பாவிக ளைத்தொட லுந்துயர்
போகாப் பெரும்பாவம்
புலைகொலை செய்பவ னிடமுண் பவனும்
புலைகொலை யுடையவனென்

றெல்கலி லருள்மொழி யோதும் பிள்ளை
உருட்டுக சிறுதேரே
உத்தர ஞானச் சித்தி புரத்த
உருட்டுக சிறுதேரே (9)

(9) பெரியவர் - திருவள்ளுவர் ; இப்பாட்டில் கண்டவைகளை ஆருந்திருமுறை பக்கம் 1 முதல் 48 பக்கம் வரை காண்க.

408 வேத முதல் பொரு ளாறந் தம்மதில்
மீதா னம்மதுவே
வேறு காத விதிப்பொரு ளுண்மை
விலாச மறைப்பொருள்நல்

பேதமி லாபபொருள் ஞானவி நோதப்
பீடுறு சிவயோகம்
பேசறு மோனப் பெருவெளி யாகும்
பேராச் சிவபோகம்

ஏதமி லாச்சிவ தரிசன மாத்மமாய்
இலிங்க சிதம்பரமாய்
எங்கும் பொங்கி வழிந்து புரண்டு
எழுந்துய ரெங்குருவென்

ரேுத வளர்ந்த வருட்பிரகாச
    உருட்டுக சிறுதேரே
உத்தர ஞானச் சித்திபு ரத்த
    உருட்டுக சிறுதேரே. (10)

(10) சிதம்பரம் இராமலிங்கவென மாறுக. ஆநந்தம் - நாதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், யோகாந்தம், காலாந்தம், வேதாந்தம் என்பன.

---

இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத் தமிழ் முற்றிற்று.

# யோகி சாத்தையர் பிள்ளைத்தமிழ்

## சப்பாணிப் பருவம்

409 விரைசெறி மலர்பொலி இரசத கிரி யாய்
வெற்றி மிகுத்தோனே
விரிசிலை நதியாய் அடிசையில் வளமுயர்
மிக்க திசைக்கோவே

வரையள இடையாய் பரியுடை யவனே
மத்த கெசத்தோனே
வரிவிழி மடவா ருளமகிழ் வோனே
மல்புய வில்காமா

நிரைமணி யணியிடை யசையுற வொலியெழ
நிறத்து.. .. .. .. .. ..
நிதமிகு ரணமுர சொடுவிசை யமுமதிர்
நீற்ற............கோலம்

குரைகட லெனவரு மழைமுர சுடையவன்
கொட்டுக சப்பாணி
குலதா வடிசையி லரியர குமரா
கொட்டுக சப்பாணி. (5)

(5) இரசதகிரி - மேருமலை ; சிலை நதி . . . . . . . வரி விழி - செவ்வரி படர்ந்த கண்கள் ; செவ்வரி - கண்களுக்குள் படர்ந்திருக்கும் சிவந்த நரம்புக் கோடுகள். மல்புயம் - மல்யுத்தம் செய்யும் வலி மிகுந்த புயம் ; வில் காமா - கரும்பு வில்லையுடைய மன்மதனை யொத்தவா.

## முத்தப் பருவம்

410 ஓசைக் கடலில் திரையேறி
ஒதுங்கிக் கரையில் வலம்புரிசூல்
உகந்தே யுகுத்த வெண்தரளம்
உவப்ப மதிக்க விலையிடலாம்

கோசக் கரட மதமாவின்
கூன்வெண் பிறைக்கோட் டிடைபிறந்த
குளிர்வெண் மணியை விலையிடலாம்
கொங்கார் சோலை வயல்சிறந்த

ஆசைப் பயிர்க்காய்க் குலைச்சாலி
அதில்சேர் தரளம் விலையிடலாம்
அய்யா வுனது வாய்முத்தம்
ஆர்க்கும் மதிக்க விலையில்லைத்

தேசுற் றினிய மழலைமொழித்
திருவாய் முத்த மருள்வாயே
சிறக்கும் யோக சாத்தயநின்
திருவாய் முத்த மருள்வாயே. (1)

(1) சூல் - கருப்ப நோய்; கோசக் கரடம் - கோசத்தினால் விடும் மதம்; கோசம் - குறி; கூன் - வளைவு; கொங்கு - தேன்; தேசு - ஒளி.

411 வர்த்தித் திருக்கும் பெருங்கடலில்
மணிமுத் தலைபட் டுழன்றமுத்தம்
வானில் பிறந்த முத்தமடர்
மாசில் பிறந்த முத்தமது

குத்தித் திருக்கும் மதயானைக்
கோட்டில் மணிமுத் தமர்க்களத்தில்
குருதி தோய்ந்த மணிமுத்தம்
கோக நகத்தி லுறைமுத்தம்

சுத்தித் திருக்கும வண்டுநகில்
சுவைத்த பருமுத் தம்மூங்கில்
துளையில் மணிமுத் தனல்கொண்முத்தம்
துதிகொளு முனது மதிமுகவாய்

தித்தித் திருக்கும் கனியதரத்
திருவாய் முத்தம் அருள்வாயே
சிறக்கும் யோக சாத்தய நின்
திருவாய் முத்தம் அருள்வாயே. (2)

(2) வர்த்தித்தல் - அதிகரித்தல்; கோடு - தந்தம்; நகில் கோகநகத்தில் என்று கூட்டி ஸ்தானம் போன்ற தாமரை என்க. கடலில் பிறந்த முத்து அலைபட்டுழன்றது, மேகத்தில் பிறந்தது குற்றம் நிறைந்தது, யானைத்தந்தத்தின் முத்தம் போர்க்களத்தில் சண்டையிடுவதால் இரத்தம் தோய்ந்தது, தாமரையின் முத்தம் வண்டுகள் சுற்றிச்சுவைத்தது, மூங்கில் கணுவில் பிறந்தது நெருப்புகொள்வது என்று குற்றங்கள் கூறி உனது முத்தம் அங்ஙனமுடையது அல்ல. அது தருவாய் என்கிறார் ஆசிரியர்.

412 காதூர் கயற்கண் விலைமடவார்
காலில் சிலம்பார்ப் பொலிபுலம்பக்
கமலத் தடத்தி லனம்சிலம்பக்
கன்னற்சா றடுவெம் புகையினமர்

மீதூர் குயில்கள் காரெனவே
விள்ளா தொடுங்க மயில்கள் சிறை
விரித்துக் கூவி விளையாட
வேரித் தாளை மலர்க்கனகத்

தாதூர் மலர்செண் பகந்தேடித்
 தருப்பைம் பூகம் கனியரம்பை
தண்தே னொழுகும் சுளைவருக்கை
 தனிலே கவிதா வித்திரியும்

மூதூ ரடிசை வளருமுயர்
 மொய்ம்பா முத்த மருள்வாயே
முனைவர்க் குகந்த சாத்தய்ய
 முதல்வா முத்த மருள்வாயே. (3)

(3) காதூர் கயற்கண் - காது வரை நீண்டிருக்கும் கயல் மீனை யொத்த கண். கார் காலத்தில் மேகநதோன்றலால் குயில்கள் அடங்குதலும், மயில்கள் தோகை விரித்தாடுதலும் வழக்கம். ஈண்டு புகையினை மேகம் என நினைத்தன குயில்களும் மயில்களும். பைம் பூகத்தரு என்க. பூகம் - பாக்குமரம். வருக்கை - பலா ; கவி - குரங்கு ; முனைவர் - முனிவர்.

413 பாடஞ் சிறந்த வெண்மேனிப்
 பசும் பொன் னுடனே மணிதுலங்கும்
பவளக் கொடியா லிரசதப்பூண்
 பணியா லிலங்கும் மணிமேடை

சூடுஞ் சிகர முடிமீது
 தோகை நடிக்கு மகில்வாசந
தூபங் கமழும் வண்டு நறை
 சுவைத்தே வெறியால் சுழன்றுடும்

வேடஞ் சிறந்த கயல்மதர்க்கண்
 வியன்சேர் களப முலைமடவார்
வீணை பயிற்று மிசையொலியால்
 விளங்கும் நெடுந்தோ ரணவீதி

மாடஞ் சிறந்த திரு வடிசை
 வரதா முத்த மருள்வாயே
வளரும் யோக சாத்திய நின்
 மணிவாய் முத்த மருள்வாயே. (4)

(4) யாடம் சிறந்த - பதனஞ்செய்து சிறந்த விபூதியால் ; வெண்மேனி என்றார் விபூதி பூசியுள்ளதால், மணி - உருத்திராக்கமணி ; தோகை - மயில் ; அகில் - ஓர் வாசனைப்பொருள் ; நறை - தேன் ; வியன் - பெருமை ; மாடம் - மெத்தை.

414 கத்துந் தரங்க விரிசிலைநீர்
 கரையிற் காவி லிருமருங்கில்
கமழ்பூம் பாளை கமுகடியில்
 கன்னல் வனத்தில் கழைநெருக்கில்

மத்த மாவின் தறியிடத்தில்
வளருஞ் சாலி வயல்வரப்பில்
மருவார் வனசப் பூம்பொகுட்டில்
வளைசேர் குவளை மடுவதனில்

வைத்த வணைக்குள் ளூத்தோளி
வரப்பில் மடையில் மறுகாலில்
வானிற் சிறந்த மழைத்துளியில்
மதித்தார் . . . . . . குளி மந்தநில

முத்தந் திகழுந் திருவடிசை
முதல்வா முத்த மருள்வாயே
முனைவர்க் குகந்த சாத்தய்ய
முதல்வா முத்த மருள்வாயே (5)

(5) தரங்கம் - அலை ; சிலை நீர் - ஒலியையுடைய கடல் ; கழை - மூங்கில் ; மத்தமா - மதம் பொருந்திய யானை ; தறி - கட்டுத்தறி ; வளை - சங்கு ; மறுகால் - மதகு ; அணை - மடைபோடுவது ; இப்பாட்டில் முத்துக்கள் ஈனும் பல விடங்களைக் கூறி ஆண்டும் மற்ற சில இடங்களிலும் முத்துக்கள் செறிந்திருப்பதைக் கூறுவதனைக் காண்க.

## வாரனைப் பருவம்

415 பொற்பார் பசும்பொன் மணி யரைஞாண்
பூட்ட வருக விரலாழி
புனைய வருக வுடம்பினில் தூள்
போக்க வருக தளர்ந்தநடை

சொற்பார் துதித்த முலைக்குளமு
தூட்ட வருக வொருவசனம்
சொல்ல வருக புதுப்பனிநீர்
சொரிய வருக விணைக்களப

வெற்பார் புயங்க ளசையமடி
மிசையில் இருக்க வருகவஞ்சா
மீனு தொழிய . . . . .
. . . . . வருக வரிக்குயில் நேர்

கற்பார் மடவா ரிதையத்துக்
கதிபா வருக வருக வருகவே
கடவுள் யோக சாத்தய்யநீ
கனிவாய் வருக வருகவே. (1)

(1) ஆழி - மோதிரம் ; முலைக்குள் அமுது ஊட்ட என்க. அமுது - பால் ; கடவுள் - தெய்வத்தன்மையுடைய.

416 எண்டலந் தன்னிலே வெகுகாரணப் பிரபல
எந்தைநீ மிகவருகவே
ஏழை யடி யார்தங்கள் பங்கிருந் தவரவர்க்
கிடர்தீர்க்கும் நிதிவருகவே

விண்டலந் தனிலமரர் துதியோது புயல்வருக
வேதநா யகன்வருகவே
மேலான நன்மதுர வாக்கறிந் துயர்வரிசை
மிகவருள்செய் தவன்வருகவே

குண்டலம் திகழ்சந்திர விம்பவா . . . .னருள்
கூரல . . . வன் மிக வருகவே
குஞ்சரம் தனிலேறி யஞ்சாதி ரென்றுறுதி
கூறினேன் மிக வருகவே

மண்டலந் தனிலுள்ள சகலசன ரட்சகன்
வாசியான் மிகவருகவே
மிஞ்சுதிகழ் கோபுரஞ் சூழுஞ் சினேந்திரபுரி
மாசாத் தயன் வருகவே. (2)

(2) குஞ்சரம் - யானை ; வாசியான் - அடிசையில் வசிப்பவன் ; மஞ்சு - மேகம் ;

417 அண்டமா மதிகதிரை யிருபுறத் திலுமணிய
தாகத் தரித்துவடவெற்
பதிரவே நடைகள்கொண் டீரிரு மருப்பினல்
அட்டகுல கிரியைமோதி

எண்டிசையில் வேழங்கள் பின்காட்டி யோடவே
எழில்வால் பிடித்துவீசி
இகல்சுரர்கள் மதியமுச லாயுதத் தாலிடித்
தோடவே விரட்டி , . .

மண்டுவா ருதித்வ மனத்திரள் பணைக்கையால்
வ . . . . . . றுண்டு சேடன்
மணிமவுலி யுதிர்வே குண்டெட்டி விசியெதிர்
மழையெனப் பிளிறி யுதவும்

சண்டமா ருதவேக மும்மதவெள் ளானையாய்
தாமரைக் கயல்வருகவே
தருமபுரி காவலா் யோகசாத் தய்யநீ
தயவுடன் மிகவருகவே. (3)

(3) வடவெற்பு - மேருமலை ; அட்ட குலகிரி - எட்டு மலைகள் ; முசலாயுதம் - வச்சிராயுதம். பணைக்கை - பருத்த தும்பிக்கை ; மவுலி - கலை ; மணி - மாணிக்கம். " அண்டமாம் . . ஆனையாய் " யானைக்கடைமொழி.

418 இன்பக் கதித்தே வேவருக
இடர்தீர்த் தெமையாள் பவன்வருக
இருள்நீக் கியவர் கோன்வருக
இமையோர் குலத்துக் கிறைவருக

துன்பக் கலிதீர்த் தவன்வருக
சோதி யருள்நிச் சயப்பொருளின்
துணிவோன் வருக மிறையுணரும்
தூயன் வருக வருகவே

வன்பர்க் கிரங்கா தவன்வருக
மாசி லாத மணிவருக
வறுமை . . . . . . தவன்வருக
வாம நெறிகாப் பவன்வருக

அன்பர் . . . ரய புயல் வருக
அறிவில் பெரிய முதல்வருக
ஆதி புரத்தில் வளர்மாசாத்
தய்யன் வருக வருகவே. (4)

(4) மிறை - குற்றம்; வன்பர் - கொடுமையாளர்; வாமம நெறி - வாம மத நெறி; ஆதிபுரம் அடிசை நகருக்கொருபெயர் போலும்.

419 விண்ணி லமரர் துதிபகரும்
வீரன் வருக வருகவே
வேசை செய்கூ வலில் வீழ்த்தி
மீட்டோய் வருக வருகவே

நண்ணு தீம்பால் பாம்பாக்கும்
நாதன் வருக வருகவே
நவ்வீ வீட்டோன் மனைவிபோறி
லபித்தோய் வருக வருகவே

வண்ணமலர்ச். . . . . . . . . . . .பூ
வடிவோன் வருக வருகவே
மாங்கா யகலான, . . . . .
வைத்தோன் வருக வருகவே

அணணல் வருகத் தென்னடிசை
அய்யன் வருக வருகவே
அழகு வளரும் யோகசாத்
தய்யன் வருக வருகவே. (5)

(5) கூவல் - குழி;

## அம்புலிப் பருவம்.

### தானம்

420 முண்டகா சனமூர்த்தி யெண்குணத் தலைமையான்
மூர்த்தியில் செல்வனறிவன்
மூவாத முதல்வனுயர் தாவாத நெறியுதவு
மூடச் சசிரெரிற்றின்முன்

பிண்டிவர் மட்செளிய தொண்டர் நாயகன் நிபன
பீடுயரு மாதிபகவான்
பெம்மான் திகம்பரன் முனிவரன் கயிலையான்
பிஞ்சுமதி புனைவேணியன்

பண்டுமா ரன்பட னுதல்விழி விழித்தவன்
பகர்மாதி னொருபாகனூர்
பங்கன்விடை யேறிவரு திங்கள்முக் குடையுளோன்
பண்ணவ னாதீசுபரன்

அண்டர்நா யகனைநித மர்ச்சனைசெய் மெய்யனுடன்
அம்புலீ யாடவாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தய்யனுடன்
அம்புலீ யாடவாவே. (1)

(1) முகன்டகாசன மூர்த்தி - தாமரையில வீற்றிருக்கும் பிரமன்; எண்குணம் - தன் வயத் தனாதல், தூயவுடம்பினனாதல் முதலிய எட்டுக் குணஙகள் (குறள் - 9) ; நினபீடு என்றூர் சந்திரனை அணிந்ததால் வளரும் கலை குறித்து. பிஞ்சுமதி - பிறைச்சநதிரன் ; மாது - உமாதேவி ; ஆதி - ஈசுபரன் எனக.

### சாமம்

421 மறைவலவ நீயுமொரு மறைவலவ னல்லாது
வயங்கேழ் விமானமுடையோன்
வானிலே நீயுமபி மானமுடை யோனின்ப
வாரியில் முளைத்த சோதி

எறிதிரையி லேமுளைத் தெழுசோதி வடிவுநீ
இகல்மஞ்சு திகழ்மேனியான்
எந்நாளு மஞ்சுபல மூசவே வருதன்மை
இருவரது மொன்றுகலால்

பொறிவிழி யிறுக்கியுயர் முனிவோர்கள் துதியோது
புங்கவன் பிண்டிவாமன்
புகலரிய மூவுலகில் நால்வகைத் தேவரும்
போற்றுமிரு சரணநெடுமால்

அறிவன்நெறி தழைகவரு தேவகுரு நாதனுடன்
அம்புலீ யாடவாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தய்யனுடன்
அம்புலீ யாடவாவே (2)

| சந்திரன் | யோகசாத்தய்யர். |
|---|---|
| (2) (2) வலி மிகுந்த புட்பகவிமானத்தையுடையவன். | வெற்றிமிக்க தேரினையுடையவன். |
| (3) வானிலே (ஆகாயத்திலே) அபிமானம். (நேசம்) உடையவன். | வானிலே இயங்குதற்கு (யோக சத்தியால்) நேசமுடையவன். |
| (4) இன்பமாகிய வாரியில் (பாற்கடலில்) தோன்றிய சோதியாவான். | இன்பமாகிய கடலில் தோன்றிய சோதியாவான (யோகத்திலுல் இன்பம் விளைத்தலை நோக்கி). |
| (5) வீசுகின்ற அலைகள் கொண்ட கடற்கண் தோன்றி எழுகின்ற சோதியாவான். (சந்திரன் தோன்றும்போது கடலில் தோன்றுவது போன்றதால்). | வீசுகின்ற அலைகள் கொண்ட நீர்க்கண் தோன்றி எழுகின்ற சோதியாவான் - யோகத்திறமையால் நீரினும் மிருப்பான். "கந்துமதத்க்கரியை சலமேல் நடக்கலாம், கனல்மேலிருக்கலாம் . . . . . ." என்ற தாயுமானவர் பாட்டினை நோக்குக. |
| (6) மேகம் போன்றுள்ள களங்கம் திகழ்கின்ற உடலையுடையவன். | மேகம்போன்று கருமை விளங்கும் உடலையுடையவன். |
| (7) எப்போதும் மஞ்சு (மேகங்கள்) பல சூழ இருப்பான். | எந்நாளும் மஞ்சு (ஆபரணம்) பல சூழ இருப்பான். |

பிண்டிவாமன் - மாமரத் தடியிலிருக்கும் அழகுபெற்றவன் (காஞ்சீபுரம் ஏகாம்பரநாதரைக்காண்க) நால் வகைத் தேவர் - யக்ஷர், கந்தருவர், கின்னரர் போன்றவர். கேழ் - நிறம்.

422 தயவுயர்செய் மெய்யர்க்கு மெய்யெனத் தோன்றலார்
தயவிலார் தமையறிந்தே
சந்ததம் தோற்று திருந்துவனர் தண்மையார்
தண்மதி குறைந்தநிலவாய்

உயர்மகிமை திகழ்மேனி யோய்விலர்கள் தருகாசி
உலகினில விளங்குமொழியால்
உல்லாச சம்பிரம மிகுந்ததிரு வழகினுல்
ஒக்குமிரு வர்க்குமதனுல்

வியன்மேனி பகர்ந்தமுதல் எண்குணத் . . . . . ளி
வேதசிற் பர்சொரூபன்
மீறு மறவாழியன் குளிர்தழில் பிண்டியான்
விரிமலர்த் தாள்பரவியே

அயமேறி வருவென்றி வீரகெம் பீரனுடன்
அம்புலீ யாடவாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தய்யனுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(3) சந்ததம் - நிதம் ; அறவாழியன - " அறவாழி யந்தணன் - அரிது " குறள் நோக்குக.

### தானம்

423 இருள்வரவு கண்டுவந் துழலுமதி நீபெற்ற
ஈரெண் கலைப்பிரபலமா
மிதுவும்நிச மிலைமற்று நிலைபெற்ற வன்வளர்ந்
திடமேனி ஞானதவன்

தெருளுநிறை மதியென்று நாட்பெற்று மென்னநின்
றேகளங் கமலவோ......
தேகவுன் களங்கம் தவிருமென் றுமேதீர
நிறைமதிசேர்..........ர்

பொருள்வடிவு தோணவெப் போது
புனிதனே ணெண்கலைகளும்
போற்றுமன் பாதங்கள் களங்கமற் றுதவியே
புகழ்பெருகு மிகவாழ்வையும்

அருள்புரியும் மகிமைகண் டினிதுகொண்டாடியே
அம்புலீ யாடவாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தயயனுடன்
அம்புலீ யாடவாவே (4)

(4) " கண்டு உவந்து " எனக. தோனற என்பது தோண வென நின்றது. எண் எண் கலைகள் - 64 கலைகள் இகவாழவு - இவவுலக வாழ்வு ;

### பேதம்

424 துதிசெய்யு முனதுவெண் முகதரி சனத்தினால்
சோரிமதுக் குவளையலரும்
சோதியிவ னழகுமுக தரிசனத் தினலத்
தொண்டர்பூ விழிமலர்வுறும்

புதியவெண் நிலவுகதி ரொளிர்பிரபை யினுலுலைப்
பூதலமெ லாம்போற்றினோம்
....ல்கீர்த்திவெண் கதிரினால் இவனையே
புவியேழு மேபோற்றினோம்

......வலறக் கிருநிதியு முதவுவான்
இரவலரிடம்............
முன்வந்து தோன்றுவாய் வளர்தண்மை யா.....,
..............முகையால்

அதிசெயம் நிறைந்ததரு ம . . . ரிக் கதிபனுடன்
அம்புலீ யாடவாவே
அன்பர்க்கு மெய்யான யோகசாத் தய்யனுடன்
அம்புலீ யாடவாவே (5)

(5) மது சொரி குவளை என்க. பூவிழி - தாமரைப்பூப் போனற கண்கள்; பிரபை - ஒளி;

## சிற்றில் பருவம்.

425 காமே வுயர்ச்ண பகஞ்சூதம்
கைதை பாரி சாதகம்நற்
கமுக சோகு வலம்புரிநீள்
கனிமா தளைகற் பகவல்லி

பூமே வலரி இருவாட்சி
புனைபூங் குரவம் புன்னுகம்
பொற்பார் நறைமல் லிகைமுல்லை
பொன்னுர் கொடிஞ்சி......ர்

மாமே வுயர்பொற் புரிசையின்மேல்
மா..............கு
மகிழ்குங் குமஞ்சவ் வாதுசுண்ணம்
மருவாட்சி......மலியும்

தேமே வளைசைத் திருநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே யோக சாத்தய்யா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (1)

(1) சூதம் - மாமரம்; கைதை - தாழை; கமுகு - அசோகு என்க. வலம்புரி - நந்தியாவட்டச்செடி; குரவம் - குருக்கத்திச் செடி; புனனுகம் - புன்னைமரம்; அளைசை நாட்டில் அடிசை நகர் போலும் இவர் ஊர். ஈண்டு பல மரங்களும், செடிகளும் கூறப்பட்டிருத்தல் காண்க.

426 பாரே சிறந்த நெடுஞ்சோலைப்
பண்டே டெறிந்து குதித்துமந்தி
பலவின் கனிமாங் கனிவாழைப்
பழங்கள் சிதற மதுவோட

நேரே யுடைந்த செழுந்தேனும்
நெகிழ்ந்த மலர்க்கா வுறைதேனும்
நெருங்கிக் கலந்தே மழைபொழிய
........நீர்ப்பாய் மடுப்பெருக்க

காரே சிறந்த மணித்தோகை
க..........களித்தாட வதுகஞ்ஜடே
கருங்கோ கிலம்பா டக்கேட்டு
............கள்களிக்க

சீரே சிறந்த திருவடிசைச்
　　செல்வா சிற்றில் சிதையேலே
தேவே யோக சாத்தய்யா
　　சிறியேம் சிற்றில் சிதையேலே. (2)

(2) கோகிலம் - குயில ; மநதியுடைத்த முக்கனிகளின் தேனுடனே சோலையில் மலரிலுள்ள தேனும் சேர்ந்து வெளளம் பெருக்கியது எனக.

427 மஞ்சுடர் புயவெற் புயர்சீ ருள்ளாய்
　　வர்த்தனை நற்றருமா
வஞ்சனை யலகைத் தீர வய்யா
　　மற்கிருபை யுற்றவனே

அஞ்சன விழிமேற் புயமா னுள்ளாய்
　　அப்பு விழித்திருமா
தம்பிகை யுயர்முக கனிபொற் சொல்லானுறை
　　ய(ற்)புத புட்கலைசேர்

வெஞ்சின வெகுளிக் கடமா வல்லாய்
　　வெற்றி மிகுத்தோனே
வேம்பன் நிழலில் பெருமா னல்லோன்
　　வெ . . . . தியவாய்ச்

செஞ்சர ணிணையைப் பணிமால் மெய்யா
　　சிற்றில் சிதையேலே
செந்தமி ழடிசைப் பதியோ கய்யா
　　சிற்றில் சிதையேலே. (3)

(3) மைந்து - மஞ்சு எனப்போலியாயது. வஞ்சனையலகை - வஞ்சனையாகிய பேய், உருவகம் ; அஞ்சனம் - மை ; வேம்பன் - பாணடியன ; ஈணடு சிவபிரான சுநதர பாண்டியராய் வந்ததைக் குறித்தது போலும் ;

428 காருங் கடலும் கலிப்பொருபால்
　　கடிமும் முரசி ஞர்ப்பொருபால்
கழனி நடுகைக் குரலொருபால்
　　கால்வாய்ப் பம்பை யதிரொருபால்

கூரும் சங்கத் தமிழொருபால்
　　குலவு மறைகூ றொலியொருபால்
கோகநக . . . . டிசையொருபால்
　　குமிறும் மேளத் தொனியொருபால்

வாரும் வடமும் அணிந்த கொங்கை
　　மடவா ராடன் த. . . . .
, . . . . . . . . . . .யாழி னிசையொருபால்
　　மகிமை விளங்கும் மிகுந்தவளந்

சேரு மடிசைத் திருநகராய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே யோக சாத்தய்யா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (4)

(4) கலிப்பு - மிகுதி ; நடுகை - நாற்று நடுவது ; வார் - கச்சு ; இப்பாட்டில் அடிசை நகரி லுள்ள வளத்தை ஒலி மூலம் கூறியுள்ளது காண்க.

429 அம்பொன் புரிசைக் கொடியாடை
அறிவில் லாரை நீப்பவுயிர்
அறிஞோர் தம்மை மகிழ்ந்தழைப்ப
அடருஞ் சோலைத் தடமனைத்தும்

வம்பிற் பொலிந்த மலர்த்தருக்கள்
மகிழ்ந்து கூர்ந்து முடிகுலுங்க
வாமக மென்றி யாகமெல்லா
மாவிற் குயில்கள் மிகப்பயிற்றக்

ல் கதிரோன் தேர்ப்புரவி
விரைந்து செலும்போ....தலி
விசையால் விலக வெண்மதிதோய்
விளங்கு பிரபைசே ருயர்தூபிச

செம்பொன் சிகரத் தருமபுரித்
திறலோய் சிற்றில் சிதையேலே
தேவ யோக சாத்தய்யா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (5)

(5) புரிசை - மதில் ; அம்பொன் . . . . . அழைப்பவர் கிருஷ்ணன் தூது—வில்லி பாரதம் காண்க.

முடிகுலுங்கின - தோரண நாட்டினாற்போல. மாவிற் குயில்கள் என்றார் குயில்கள் மா மரத்தில் விரும்பிப் பயில்வதால். பிரபை - ஒளி ; தூபி - ஸ்தூபி ; அடிசைக்குத் தருமபுரி என்றும் பெயர் போலும்.

## சிறுபறைப் பருவம்.

430 வருத்திட்ட தனமாதர் நடநா டகஞ்செய்ய
மகிழ்பஞ்ச வாத்தியங்கள்
வரிசையாய் வெவ்வேறு தொனிகள்மிக வதிரவே
மாற்றலர்கள் தம்மை விம்மி

உருத்தோட்டி வீசிவரு வீரகுஞ் சரமீதில்
உக்கிரமுட னேறிமீறி
உம்பர்புடை சூழவரப் பவனிவந் தடியவர்க்
குண்மைவர நல்குமுரவோய்

கருத்தோட்டி யுண்டென்று நம்புமன் பார்க்குவெங்
　　கனவுகள் கடும் பெய்வனுக்
கர்மரோ கங்கள்வஞ் சனைபில்லி சூனியம்
　　கதிர்முனிருள் போலநீக்கி

திருத்தேர்டடி மண்மருந் தாற்பிணி தவிர்த்திட்ட
　　சிறுபறை முழக்கியருளே
திருஞான குருபரா யோகசாத் தய்யனே
　　சிறுபறை முழக்கியருளே (1)

(1) வருத்திட்ட தனம் - பிறரை வருத்தத்திற்குள்ளாக்கும் ஸ்தனம் ; பஞ்ச வாத்தியம். தோற்கருவி, துளைககருவி, நரம்புக்கருவி, கஞசககருவி, கண்டககருவி ; மாறறலர் - பகைவர் ; உருத்தோடு அடி வீசி - கோபத்தோடு பாதஙகளை விசையாக எடுத்து வைதது ; குஞ்சரம் - யானை ; உம்பர் - பின்னும் இடையினு முளளபலா ; உரவோய் - மனத்திண்மையுள்ள வனே ; கதிர் முன் இருளபோல - சூரியன முன இருள் ஓடுவதுபோல ; மண மருந்து. - மண்ணுகிய மருந்து ; தவிர்த்திட்ட - நீககியவனே ;

431　கும்பநிரை கொண்டசிக ரங்கள்மதில் கோபுரம்
　　கொடுங்கைநீ ளணிமண்டபம்
குதிகொண் டுலாவுகயல் வாவிசுற் றாலயம்
　　கோகநக வெண்பதாகைக்

கம்பமுத லகளங்க மாளிகைகள் நவரத்தின
　　கசிதமாய் வளர்கநாளும்
கட்டளை யுயர்கநித்தி யோர்ச்சபம் வாத்தியமங
　　காலமுறை பூசைபுரிய

நம்புமன தடியவர்கள் கிளைபெருக வேசேது
　　ராசனும் வளர்கநாடும்
நகரமும் பெரியோர்கள் கல்வியும் செல்வமும்
　　நன்மையே வளர்கநாளும்

செம்பொன் னொளிர்செங்கைகள சிவந்திடா வண்ணம்நீ
　　சிறுபறை முழக்கியருளே
செகதலம் புகழடிசை யோகசாத் தய்யனே
　　சிறுப்றை முழக்கியருளே. (2)

(2) குதிகொண்டு - துள்ளி ; பதாகை - கொடி ; அகளஙகம் - சுததம ; இதில சேதுராசனைப் பற்றிக்கூறியுள்ளது காண்க.

432　தொன்னலம் பெருகிரவி தேர்ப்பரிக் காற்குரம்
　　தோயவிள நீர்கள் சிதறித்
துய்யசெவ் வந்தி முல்லைமல் லிகைபாயத்
　　தூர் மொய்த்து வளர்நெடமலைக்

கன்னலங் கழனிகார் காலமே கோமையாய்க்
கருஞ்சேத கஞ்செழிக்கக்
கனமாக பெருவுரஞ் சேர்ந்துபக டுழுதசால்
கட்டிகோ தற்கரைந்து

நன்னலம் புனையென்ன வேமுளை வித்து
நாண்முதற் கனிகூர்ந்துநீர்
நல்லமூர்த மீந்துநிதம் பாதுகாத் தெனையென்று
நண்பினுர் படிப்பாகவே

சென்னலங் கதிர்முத்த மிடுமிடிசை காவலா
சிறுபறை முழக்கியருளே
திருஞான குருபரா யோகசாத் தய்யநீ
சிறுபறை முழக்கியருளே. (3)

(3) இரவி - சூரியன் ; குரம் - குளம்பு ; சேதகம் - சேறு ; கோதல் - கொழித்தல். இப் பாட்டில் சூரியன் தேரின குதிரைக குளம்புகளால் தென்னையின் இளநீர்கள் சிதறி செவ்வந்தி, முல்லை, மல்லிகை முதலியவைகளின மலர்களாகிய வணடலோடு சேர்ந்து கரும்பு இருந்த கழனியில் கரியசேறு செழிக்குமாறு இவவெருக்கள் சோந்து மாடுகள் ஏர் உழுத கட்டிக ளெல்லாம் கரைய பின் நெல முளையை விதைதது அதனைப்பாதுகாக்க செந்நெல்லின் கதிர் கள் முத்துக்களைக் கொடுக்கும் அததகைய அடிசை நகர் என்க.

## வேறு.

433 குருகுயர் பொழிலுறை மலரொழு கியதேன்
குளிர்ச்சியருள் செய்யவே
குலமக ளெனநில மதில்முடி யுறவே
குலைக்கதிர் மிகுவயல்சூழ்

வருகய லுகளில் புனல்நளி னியிலே
வனப்பெரு மைகள்பலவே
மலருளு பொழுதினி லுலவிய கயலுற
மடுச்சொரி மிகுகனபால்

பருகிய மடவனம் மலரம ளியிலே
படுத்துயர் துயிலுறவே
பழகிய மதுகரம் மிகுமிசை யதனுல்
படுத்தின நினவுறவே

முருகலர் மணமிகு மணைசையி லதிபனே
முழக்குக் சிறுபறையே
முதுபுக ழடிசையி லரிய குமரா
முழக்குக சிறுபறையே. (4)

(4) குருகு—நாரை, உகள்—குதி, நளினி—தாமரை, வனப்பு எருமைகள்—அழகு வாய்ந்த எருமைகள், அமளி—படுக்கை, முருகு—அழகு, வாவியிறங்கிய எருமைகளைக் கயல் மீன்கள் முட்ட பாலைவிட அதனை அன்னங்கள் பருகித் தாமரை மலர்ப்படுக்கையில் துயில வண்டுகள் இசைக்கீதம் பாடின அத்தகை வளமிகுந்த அணைசை நாடு எனக,

434 கொங்குலவு முல்லைமல் லிகைவல்லி சாதகநற்
கோபுரம் கொடுங்கை தென்னம்
குலைமஞ்ச ளிஞ்சிபழ முதிர்மா தளைதருக்
கோதையர் குடங்கொங்கையில்

அங்கமல வாவிகரை செங்கருப் பந்தட
மடர்கோ மகாறக்
கேணிமணி தேர்த்திரு மதிட்புறம் கூவல்சுனை
அவிர்பலாக் கனியீது நீள்

பைங்கமுகு கோழரைக் குங்குமத் தருவாழை
பாரிசா தகமசோகம்
பானலம் பூவயல் நீண்டமதகு கால்தங்கு
பணமணிப் புரிசை மறுகில்

செங்கய லுலாவுதரு மபுரிக் கதிபனே
சிறுபறை முழக்கி யருளே
செகதலம் புகழடிசை யோகசாத் தய்யாநீ
சிறுபறை முழககியருளே. (5)

(5) கொங்கு - தேன் ; வல்லி - படர்கொடி ; கூவல் - கிணறு கேணி - குளம் ; பாரிசாதகம் அசோகம் எனக ; கோழரைக்குங்குமம-மரதநின வழுவழுப்பாகிய அரையுடைய குங்கும மரம் ; பானலம் - குவளை ; மறுகு - தெரு ; இப்பாட்டில கயல மீன்கள பல விடங்களிலும் உலாவுதல் கூறப்படடுள்ளது காணக.

## சிறு தேர்ப்பருவம்.

435 சந்திரன் முத லானநவக் கிரகங்க ளெழுமிகு
சகுணநவ நாதசித்தர்
சட சக்கிர வர்த்தி கண நவகோடி முனிவர்கள்
தையலர்க ளேழ்கன்னியார்

மந்திரமிகு கணநாதர் நாகரா சன்துட்ட
வயிரவன் வீரகாளி
வரையிலர மகளிர்கள் தேவரம் பையர் நீல
மஞ்சுதவழ் கிரியில் வாழும்

கந்தருவர் கின்னரர் மாயட்சவித் தியாதரர்மா
கணபூத ரத்தமரர்கோன்
கைதொழுது துதியோது கடவுளர்க் கிறைவனே
கமலா சனத்தின் நாளும்

செந்திரு விளங்கு தரு மாபுரிக் கதிப நீ
சிறுதேர் நடத்தியருளே
சௌநா யகர்க்குரிய யோகசாத் தய்யநீ
சிறுதேர் நடத்தியருளே (1)

(1) சகுணம் - நற்குணம் ; நவநாதசித்தர் - சத்தியநாதர் ; சதோகநாதர், ஆதிநாதர், அருதிநாதர் முதலிய ஒன்பதின்மர்.

எழுகன்னிமார் - சப்தகன்னியரான அபிராமி, வராகி முதலியோா ; வரையில் அரமகளிர் - மலைமீதில் வசிக்கும் தேவமகளிா இவாகளை வரையரமகளிரெனபா ; நீலமஞ்சு - கருமேகம் ; இளனரா— . . . . பாடடின குறிப்பில காணக. யடசா - குபேரனை முதலாகக் கொணடவா ; கநதருவர் . . . . விதநியாதரா - தேவாகளில பல பிரிவினாகள் ; அமராகோன - இநதிரன. ஈணடு தன குருவை யாசிரியர் சிவபிரானுகக கருதியுள்ளமை காண்க.

436 விண்டோய் கொடிச்சிகரி மேல்மஞ் சுறங்கவொளிர்
வெண்ணிலாக் குழவிதவழ
விரிதலைத் தெங்கினின் வாளைகுதி கொள்ளநல்
மிருபாளை வாய்க்கமுகின்மேல்

கண்டார் விருப்பமுற நாகவல் லிக்கொடிகள்
கன்னியுங் கணவனும்போல்
கவிபெற்று வளர்கநீள் சுரபுன்னை மலரமங்
கலபபொடிகள் போற்சிதறவே

தண்டளிய . . . பரந்
தழைக்குமடி சைக்கடவுளே
சகலசன ரட்சகா மெய்யர்க்கு மெய்யனே
சத்தரம் பரிபாலகா

செண்டாயுதப் பிரபல வீரியா வாரியா
சிறுதேர் நடத்தியருளே
செனநா யகாக்குரிய யோகசாத் தய்யநீ
சிறுதேர் நடத்தியருளே (2)

(2) சிகரி - மாளிகையுச்சி ; மஞ்சு - மேகம் ; குதிகொள்ள - தாவ ; நாகவல்லி - ஓரிதழ்த் தாமரை ; செண்டாயுதம் - ஓாவகை வளைந்தவாயுதம் ; கரிகாலன செணடால் கிரிதிரித்தது காண்க.

437 பண்டமர் ஞேர்சாப முற்றேன மாயுற்
பவித்துவளர் இன்றநாளில்
பண்ணவனை யாரணியந் தன்னிலே கண்டடி
. பணிந்தர்ச்ச னைகள்செய்கவே

கண்டிறை யருட்படி பவுத்திரபுரி வணிகனேர்
கழனியை யளித்துமகிமை
காட்டியே கூட்டிவர வவனிறையவர் காரணக்
காட்சி யீதென்றறியவே

விண்டமே தரிசனங் கண்டுதரு மாபுரி
விலையெனக் கொண்டுசெய்தல்
மேலான கோவிலெழு மதிள்சிகர கோபுர
விமானமுன் வருவீரனே

தெண்டிரைத் தரளமணித் திண்புயத் திறைவன்நீ
சிறுதேர் நடத்தியருளே
சின்னைய கர்க்குரிய யோகசாத் தய்யநீ
சிறுதேர் நடத்தியருளே. (3)

(3) ஏனம் - பன்றி ; பண்ணவன் - முதற்கடவுள் ; ஆரணியம் - காடு ; கண்டு - தரிசனங் கண்டு, இறை அருள்படி பவுத்திரபுரி என்ற ஊரிலுள்ள வணிகன் கழனியைக் கொடுத்தான் எனக் ; தரளம் - முத்துக்கள் ; இதில் ஆசிரியர் சாபத்தினால் பன்றியாகப் பிறந்ததும் பின் முதற்கடவுளைக் காட்டிலே கண்டு அரசனை பல செய்ய அவரருள்படி சாப விமோசனம் பெற்று வணிகன் நிலம் கொடுக்க யோகசாத்தய்யர் மகிமை பல காட்டி தன்னோடு கூட்டி வந்தார் என்று கூறப்படுகிறது.

438 கனகவரை போல்வரு பொற்றேரு ளாலிக்
கடற்புவியி லமரர்காணக்
கருதலர்கள் நெஞ்சம் கலங்கநீ ரதமேறு
காட்சியான் காணவேண்டி

அனகனுறை மாளிகையும் நீடூழி வாழ்கவுஞ்
அதிசெயந் தன்னைநம்பி
அழகுசிங் கானை(ர)தமி யற்றுருகுப் பையவணங்
காமுடி பணிந்துபோற்றும்

மனகதியி னீள்புரவி பூண்டேழு கோட்டையெனு
மாநகர வீதிதனிலே
வரமினுறை யுந்திருக் கோவில்வல மாகவே
வானினெழு கோட்டையூர்தேர்த்

தினகரன் போலுனது முன்காண நிறைதேரா
சிறுதேர் நடத்தியருளே
சின்னைய கர்க்குரிய யோகசாத் தய்யநீ
சிறுதேர் நடத்தியருளே. (4)

(4) கனகவரை - மேருமலை ; ஆலிக்கடல்புவியில் - ஒலிக்கும் கடல் சூழ்ந்த பூமியில் ; கருதலா - பகைவர் ; அனகன - கடவுள் ; மனகதியின - மனவேகமொத்த ; தினகரன - சூரியன்.

439 வந்தா சலற்றைநிகர் மணிமாட கூட . . .
. . . கொடிதோரண
மின்னுலவு ராசனே . . . டாவென்றி வேந்தர்நெடு
வீதிதொறு . . .

. . . குளப்பாவை மாதர்செம் பஞ்சினைகு . . .
. . . மடிதோய்ந்து
செங்கோகனக மலர் வா . . . வண்டுகூட
மொய்த்திடும் வளமைசேர்

செல்வமிகு திருவடி . . . மோ
. . . யோகவீரா
நவைசெய்த வஞ்சகர்கள் . . . முனதுகிருபை
நாடெல்லா மவர்

செந்தாமரை களொத்த திருமுக மலர்ந்தினி
சிறுதேர் நடத்தியருளே
சின்னைய கர்க்குரிய யோகசாத் தய்யனே
சிறுதேர் நடத்தியருளே. (5)

(5) நவை - குற்றம்.

(யோக சாத்தய்யர் பிள்ளைத்தமிழ் முற்றிற்று)

# முத்துவீரப்ப சுவாமி பிள்ளைத் தமிழ்

## காப்புப் பருவம்

### திருமால்

440 கார்மேவு மார்கலியி லரவ சயனத்தில்
கண்வளர்ந் தருளும்நிதியைக்
கவுத்துவ மணிமாலிகை புயத்திலணி மாயனைக்
கருணை கடாட்சமுகிலை

மாமேவு சீதேவி பூதேவி யெனுமிருவர்
மருவுதிரு பாலகிருட்டிண
மாதவனை நந்தகோ பாலனைக் காயாம்பூ
வண்ணனைப் போற்றல்செய்வாம்

பூமேவு செய்யசெங் குவளைமார் பன்திவ்விய
புருடன்வச் சிரசரீரன்
புண்ணியன் முத்துவீ ரப்பமகி பாலனருள்
புத்திர னெனச்செனித்தோன்

பாமேவு செந்தமிழ்க் கைந்தருக் கிணையான
பாக்கிய சிலாக்கியனுேன்
பண்பாளன் முத்துக் கறுப்பணவி வேகசம்
பன்னனைக் காக்கவென்றே. (1)

(1) ஆர்கலி - கடல் ; ஐந்தரு - கற்பகம், மந்தரம் முதலிய ஐந்து மரங்கள்.

### சிவபெருமான், விநாயகன், முருகன்

441 கார்கொண்ட கந்தர சந்திரா சடைதரக்
கயிலாச கிரிவாசனைக்
கந்தமும் மதமொழுகு புகர்முக விநாயகக்
கடவுளெங் கரநாதனை

வார்கொண்ட களபகுங் குமமுலைக் குறமகள்
மணந்தபன் னிருபுயத்து
வாலகும ரேசனைக் கார்த்திகே யசுப்பிர
மண்ணியனைப் போற்றல் செய்வாம்

தார்கொண்ட புயசயிலன் மூத்துவீ ரப்பமுகில்
தன்கிளை தழைக்கவந்த
சற்புத்திர னைவன் விற்பத்தி யுள்ளவன்
சத்தியத் தரிச்சந்திரன்

பார்கொண்ட புகழ்கொண்ட கங்கைகுல திலகன்வெகு
பாக்கியசி லாக்கியனுன்னோன்
பண்பாளன் முத்துக் கறுப்பணவி வேகசம்
பன்னனைக் காக்கவென்றே. (2)

(2) கார்கொண்டகந்தா - கருமைகொணட கழுத்தினையுடைய ; வாலமை - இளமை ; விற்பத்தி - கல்வியறிவு.

**உமை, மதுரை வீரன், சரசுவதி முதலியோர்**

442 அங்கயற் கண்ணிகௌ மாரிதிரி சூலியிவ்
அகிலாண்ட முழுதுமீன்ற
*அம்பிகைச் செல்விதென் நாலூர் விளங்கிவளர்
அங்காள தேவியுமையை

மங்கைரு பப்பொம்மி யம்மனொரு பாகத்தில்
வளர்மதுரை வீரய்யனை
வாலசரசு வதியுக்கிர விரபத் திரசு
வாமியைப் போற்றல்செய்வாம்

கங்கைகுல திலகனென விந்தவுல கத்தில்வரு
கர்ணுவ தாரதுல்லிய
காம்பீரிய சாம்பிராட்சன் முத்துவீ ரப்பமுகில்
கனதைபெறு புத்திரரத்தினம்

பங்கயச் செல்வியால் தங்கியெக் காலுமுயர்
பாக்கிய சிலாக்கியனுன்னோன்
பண்பாளன் முத்துக் கறுப்பணவி வேகசம்
பன்னனைக் காக்கவென்றே. (3)

(3) கௌமாரி - சப்தகன்னியர்களில் ஒருவர் (தென்நாலூரில் எழுந்தருளியுள்ளவர் அங்காளதேவி) ; பொம்மி - மதுரைவீரனைக காதலிதத பாளையப்பட்டு சிற்றரசன் குமாரி, மதுரைவீரனால் சிறைக்கொள்ளப்பட்டு மணம்பூண்டவள் ; கர்ணன் - இடையெழு வள்ளல்களி லொருவன. (துரியோதனன் நணபன) ; சாம்பிராட்சன் - சக்கரவர்த்தி (தருமனுக்கு இப்பெயர் இராயசூய யாகத்தால் கிடைத்தது காண்க).

---

பிரதி பாடம் :—*அன்பான தாயகி சிங்காரி தென்னலூர்
அங்காள தேவிஉமையை

## செங்கீரைப் பருவம்.

443 முருகார்ந்த திருவணி முத்தாற்றி நீரால்
முழுக்காட்டி யீரமாற்றி
முறையாய நுதற்குவெண் ணீறு நிலக்காப்பு
முகமிலங கத்தரித்துத்

தருதாயர் மடிவைத்து வுச்சிநெய் பொத்திவிழி
தன்னிலமை யிட்டுமேலாம்
சங்கினில் முலைப்பால் புகட்டியே சுற்றுச்
சடைப்பிலலை சுட்டிகட்டிக்

குருவான தங்க விரத்தினக் காப்புடன்
கொலுசுமிரு கையிலணிந்து
கோலமிகு தம்பித் துளானரை ஞாணுங்
குலுங்கவே தண்டையிட்டுத்

திருமேவு தொட்டில்வைத் தாட்டவள ரும்பிள்ளை
செங்கீரை யாடியருளே
சீதரனை நிகாகறுப் பண்ணமகி பாலனே
செங்கீரை யாடியருளே. (1)

(1) முருகு - அழகு ; பொத்தி - தடவி ; சடைப்பிலலை-ஒருவகைத் தலையணி ; குருவான-திறமமைந்த ; தம்பிதல் - இட்டுதல்.

444 அந்தமிகு வளையாழி இருகரத் தணிதலால்
ஆழிதுயில் மாதவனைப்போல்
*அய்ம்பூவி லொருநான்கு பூவினை விளைத்தலால்
அதிரூப மன்மதனைப்போல்

வந்தவர் களுக்கெலாம் தியாகம் கொடுத்தலால்
மாசற்ற கன்னனைப்போல்
வளமையுள திரவிய மிகுத்தலா லளகைக்கு ,
வாய்த்திடு குபேரனைப்போல்

சொந்தமாம் கிளைகளைத் தாங்கலால் வானிலகு
தூயவைந் தருவினைப்போல்
சொல்லுறுதி யாகையா லயோத்தி நன்னகரச்
சொல்லரிச் சந்திரன்போல்]

செந்தமிழ்க் குபகாரி யாகச் செனித்தவன்
செங்கீரை யாடியருளே
சீராமன் முத்துக் கறுப்பண்ண தீரனே
செங்கீரை யாடியருளே. (2)

* பிரதிபாடம் அய்ம்பூவில் நான்கினுல் போர்வினைத் திருதலால்.

(2) அந்தமிகு . . . மாதவனைப்போல். அழகுபெற்ற சங்கு சக்கரங்களை இரண்டு கைகளில் தரித்துள்ள திருமாலைப்போல் இவனும் சங்கு ரேகைகளையும்; மோதிரங்களையும் இருகைகளிலும் பெற்றுள்ளான். எனவே இங்ஙனம் கூறினர். அம்பூவில் (ஐம்பூவில்) . . . . மன்மதனைப்போல் - முல்லை, அசோகு, தாமரை முதலிய ஐந்து மலர்களைக் கொண்டு காமத்தை விளைவிக்கும் அழகுவாய்ந்த மன்மதனைப்போன்று இவனும் ஐந்தில் நான்கு பூமிகளான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய வைகளைக்கைப்பற்றி விளைவைப் பெருக்குதலால இங்ஙன் கூறினர். பூ - மலர், பூமி என்ற பொருள் கொண்ட சொல்லொற்றுமை நயங்கருதி இங்ஙன் கூறினர். கிளை - சுற்றம், மரதின் கிளை சொல்லொற்றுமை கருதி கற்பகத்திற்கு ஒப்புவித்தார் கற்பகம், மந்தாரம் முதலிய ஐந்து மரங்கள் வேண்டியன கொடுத்தலால்.

அரிச்சந்திரன் —அயோத்தி நாட்டை யாண்ட திரிசங்கு குமாரன். "பதியிழந்தனம் பாலனை யிழந்தனம் . . . . கட்டுரையிழக்கிலம் என்றுர் மதியிழந்து வாயிழந்து அருந்தவன் மறைந்தான்" என்ற புராணச் செய்யுளை நோககுக.

445 தூயசொர் ணத்திலுல் செய்துநித் திலமதால்
தொங்கலிடு சுட்டியாட
சொர்ணமய மாகிய சரப்பளி பதக்கனும்
தோளிலிரு பக்கமாட

நாயகி தென்நாலூ ரங்காள தேவியை
நயந்துகும் பிடுமிருகையில்
நன்மையா யணிகின்ற காப்புகொலு சுஞ்சந்திர
நகைமுகப் பிரபையாட

தாயருன் பெருமையைக் கொண்டாட விடையிலணி
தம்பித் துளானரைஞாண்
தானுட முத்துக் கடுக்கனு டத்தண்டை
தங்கச் சதங்கையாட

சேயசெந் தமிழ்தார் பீடு சிறுவன்நீ
செங்கீரை யாடியருளே
சீராம முத்துக் கறுப்பண்ண தீரனே
செங்கீரை யாடியருளே. (3)

(3) தொங்கல் - நெற்றிக்கண் தொங்குதல். சரப்பளி - வயிரமழுத்தின கழுத்தணிவகை. நகைமுக சந்திரபிரபை என்க. சந்திரபிரபை, சூரிய பிரபை எனபன தலையணிகள.

## தாலப் பருவம்.

446 வண்ண மலர்ச்செஞ் சரணமீது
மகிழவணிந்த சிலம்புதண்டை
மருவி யொலிக்க நடந்தாயர்
மனையிற் புகுந்து வுரலடுக்கிப்

பண்ணு முரியைத் தொட்டேறி
பதுமக் கரத்தால் வெண்ணெய்தனைப்
பரிந்தங் கெடுத்து மனமகிழ்ந்து
பருகும் பொழுது கண்டுநெஞ்சம்

கண்ணே வெகுண்டங் கோடிவரும்
　　கலைவாள் நுதற்பெண் கோபியரைக்
கண்டு மிகுந்த காதலினால்
　　கருதி யணைந்து மகிழ்ந்துவரும்

தண்ணங் குழலா ளசோதையருள்
　　தனையா தாலோ தாலேலோ
தாமா முத்துக் கறுப்பண்ணை
　　சோமா தாலோ தாலேலோ. (1)

(1) ஆயர்மனை - இடையர்வீடு ; பதுமக்கரம - தாமரை மலர் போன்ற கை ; நெஞ்சம் வெகுண்டு, கண்வெகுண்டு என்க. கணவெகுளலாவது கோபத்தினால் கண் சிவததல். உரல் அடுகஙி . . . . . பருகும். 27-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. கோபியரை . . . . . . மகிழ்ந்து :—"பாடினன. . . . பாவையர் மனைதொறும் வெண்ணெய் காடினனவர்கள் முகந்தொறும் எசசிலாக்கினன . . ." என்ற வில்லிபாரதச் செய்யுளை நோக்குக. இங்குத் திருமாலாகாககருதிக் கூறியது. மையார் கண்மடவாய்ச்சியர் மக்களை . . . . . . கொய்யார் பூநதுகில் பற்றித்தனிநின்று குற்றம் பலபல செய்தாய். . . " என்ற ஆழ்வார் வாக்கு நோககுக.

447　காவின் கமுகும் பசுந்தெங்குக்
　　கதலித் தருவும் வளர்ந்துவிண்மேல்
கதிரோன் வெப்பந் தனைமாற்றி
　　கதிக்கும் செந்நெல் கழனியெங்கும்

மேவும் கயவா யெருமைமடி
　　மீறி லிருந்து வொழுகியபால்
வெள்ளோ திமங்கள் பார்ப்புடனே
　　விரும்பி விரும்பி யுண்டுகளி

கூவும் தனது பேட்டுடனே
　　குளிர்மா மலர்த்தண் சேக்கையின்மேல்
கூடிப் புணர்ந்து கண்துயிலும்
　　குலவும் கோடி வளருநலந்

தாவும் துவரா பதிநாட்டு
　　தலைவா தாலோ தாலேலோ
தாமா முத்துக் கறுப்பண்ணை
　　சோமா த்ாலோ தாலேலோ. (2)

(2) கயம் - நீர்நிலை ; பார்ப்பு - குஞ்சுகள் ; சேக்கை - படுக்கை ; இப்பாட்டில் சோலை வளமும் நீர்வளமும் கூறப்பட்டிருத்தல் காண்க. "மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று வீட்டளவும் பால் சொரியும். "என்ற கம்பர் தனிப்பாடலை நோக்குக. நீரில் சாந்த பாலை அன்னங்கள் நீர் வேறு பால் வேறுகப் பிரிக்குமாதலின் பாலை மட்டும் குடித்தது.
" . . . , பாலுண் குருகின் தெரிந்து, "என்ற நாலடியாரை நோக்குக.

448 கந்தம் மிகுந்த பசுந்தேனே
கருணா நிதியே யற்புதமே
காவே மதியே யாணிமுத்தே
கமழ்பாற் கடலே குலக்கொழுந்தே

கொந்தார் மலரே பசுங்கரும்பே
குளிர்பொன் மலையே நவமணியே
குறிக்குந் தாளோர்க் கிருநிதியே
கொடுக்குந் தியாக திரவியமே

பைந்தே னொழுகும் செழுங்கனியே
பதும மலரே மணிவிளக்கே
பருகி லுவட்டா தெள்ளமுதே
பார்க்க ருசிக்கும் சித்திரமே

சந்த முலையார் மடலெழுதும்
தனதா தாலோ தாலேலோ
தாமா முத்துக் கிறுப்பண்ண
சோமா தாலோ தாலேலோ. (3)

(3) கந்தம்—வாசனை ; ஆணி - மேன்மை ; மணி - மாணிக்கம் ; மடல் எழுதுதல—625-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க.

## சப்பாணிப் பருவம்.

449 முன்னம் வடுகையரைச் சாத்தரைச் சூரனுடன்
முரணழித் திடுவேலரை
மும்மத விநாயகரை நேமிசூ ழகிலாண்ட
முழு வரையு மீன்றெடுத்தும்

இன்னமும் முதிராத பச்சிளம் பெண்பிள்ளை
இமையமலை யரசன்மதலை
எழுதுநாற் பத்துமுக் கோணபீ டத்தா
சிருக்கும் * பராசத்தியாள்

தன்னடி வணங்குதன் குடியோரை ரட்சித்த
தாயாள்தென் நாலூரில்வாழ்
சங்கரி யங்காள தேவி யெந்நாளும்
தழைக்கும் திருக்கோயிலின்

சன்னதியை முன்னின்று கும்பிடும் சிறுகையால்
சப்பாணி கொட்டியருளே
தருமவான் முத்துக் கறுப்பண்ண தீரனே
சப்பாணி கொட்டியருளே. (1)

பிரதிபாடம் ; * திரிசூலி நீலி

(1) சூரன் உடல முரண அழிததிடு வேலரை என்க. சூரன் - சூரபதுமன். வடுகையர் - வைரவா ; சாத்தர் - ஐயனுர் ; வைரவா, ஐயனுர், முருகர், விநாயகன் ஆகியவரைப் பெற்றவர் உமாதேவி. வைரவர், ஐயனுர் ஆகியவாகள வரலாறறை முன் பிளளைததமிழ்க் கொத்தில் முறையே . . . . . . . . . . . ஆம பாட்டுககளில காணக. மதலை - பெண்பிளளை, பார்வதி யாகப் பிறந்தமை காணக. நாறபதது . . . . . . பராசத்தி. முன பிள்ளைத் தமிழ்க் கொத்து 318-ஆம் பாட்டின் குறிப்பில காண்க.

450 கஞ்சமலர் வாவிதனில் நின்றுகுதி கொண்டிரு
கடைக்கண் சிவந்தெழுந்து
கன்னல்மேல் பாய்ந்துபின் கதலிமேல் பாய்ந்துயர்க்
கமுகின்மேல் தாவிமேலாய்

மிஞ்சுசிறை விசையினுல் ககனத்தின் மேல்தாவி
மேகத்தின் வயிறுகிழித்து
வெள்ளந் திரண்டந்த வெள்ளத்தி னூடிந்த
மேதினியில் வந்துமீறு

செஞ்சாலி நிலமெலாம் வாளை மீன் விளையாடு
தென்புதுவை வயலாதிபா
சிவசிந்தி தனமுத்து வீரப்ப மதிமந்திரி
சித்தமகிழ் புத்திரரத்தினு

தஞ்சமென வந்தவரை யாதரிக் குங்கையால்
சப்பாணி கொட்டியருளே
தருமவான் முத்துக் கறுப்பண்ண தீரனே
சப்பாணி கொட்டியருளே. (2)

(2) சிறை - சிறகு ; எண்டு வாளை மீன் மேக மீது சென்று வயிறு கிழிக்க அஙகிருந்து வெள்ளம் பெருக அவ்வெள்ளத்தினுடே வாளை மீன வநது விழுந்தது. நீர் வளம் கூறப்பட்டிருத்தல் காண்க.

451 செகமண்ட லீகர்கள் திரண்மண்ட வந்துவெகு
திறைகொண் டளந்து போற்றும்
செயசக்கிர பதிநத்தம் வளர்முத்து லிங்கய்ய
சிம்மாச னுதிபதியான்

மகபதி தன்கொற்ற சீர்மைசூழ் மேலான
மாடமா ளிகை கோபுரம்
வளர்செக்கி பட்டியில் பட்டிக்கு நிகராக
வந்துகர் ணீகம்செய்தே

அகமகிழ் வெகுமுனூர் காரியக் காரர்
அனைவருஞ் சூழ்ந்திருக்க
அன்பான குடிபடைகள் வாயிதா கட்டவுடன்
அவரவர்கள் பட்டையத்தில

தகதகென மோதிர மிலங்கொப்ப மிடுகையால்
சப்பாணி கொட்டியருளே
தருமவான் முத்துக் கறுப்பண்ண தீரனே
சப்பாணி கொட்டியருளே. (3)

(3) மண்டலீகர் - 40 ஊர்களையாளுபவர் ; செகுபட்டி - ஓர் ஊர். பட்டி - விக்கரமாதித்தன் மந்திரி. கர்ணீகம - ஈணடு தொழில. வாயிதா - நிலவரி ; பட்டயம் - பத்திரமுதலியன ; இலங்குகை ஒப்பமிடுகை எனக.

## முத்தப் பருவம்.

452 தந்தி மருப்பில் விளைந்த முத்தும்
தழையுங் கதலி தந்த முத்தும்
தருவி லுயர்ந்த கமுகின் முத்தும்
சலத்தில் வளர்மீ னீன்ற முத்தும்

நந்தின் வயாசூ லீன்ற முத்தும்
நளின வாச மலரின் முத்தும்
நலஞ்சேர் கழனிச் செந்நெல் முத்தும்
* ரசிக்கும் கன்னல் கொடுத்த முத்தும்

பந்தின் முலையார் மிடற்றின் முத்தும்
பருவ ராக மருப்பின் முத்தும்
பனக முடிமேல் சொரிந்த முத்தும்
பாரோர் விலையாய் மதிப்பதனுல்

சந்திர வதனு கொஞ்சி யவுந்
தன்வாய் முத்தம் தருகவே
தமிழ்சேர் முத்துக் கறுப்பண்ண
சதுரா முத்தம் தருகவே. (1)

(1) தந்தி - யானை ; நந்து - சஙகு ; சூல்வயா - ஒரு பொருட்பன்மொழி ; பந்தின்முலையார் மிடறு - பந்தினையொத்த தனமுடைய பெண்களின் கழுத்து ; பருவராகம் - பருத்த பன்றி ; பனகம் - பாம்பு கொஞ்சிய உந்தன் எனக. உனறன் எனற் பாலது இவ்வாறு மருவியது.

453 காலின் விலங்கை வெட்டிவிட்டுக்
காரைக் காத்தா னென்ன வந்தாய்
கருது மதுரத் தமிழ் காக்க
கட்கா தரவின் மணி கொடுத்தாய்

சூலி முதுகில் சொர்ணித்தும்
தூய முளைநெ லனமிட்டும்
தொல்லை நாளுந் தவிராமல்
துடர்ந்து வணிகன் பின்வந்து

பிரதிபாடம் ; * ரசனை மிகுந்த கருப்ப முத்தும்.

நீலி பழியை ரெட்சித்து
நிலைக்கும் கீர்த்தி நீயடைத்தாய்
நீடுங் கதலி கமுகு கன்னல்
நெருங்குஞ் சோலை வளரேனெங்கும்

சாலி வயல்சூழ் செக்கிப்பட்டித்
தலைவா முத்தம் தருவாயே
தமிழ்சேர் முத்துக் கறுப்பண்ண
சதுரா முத்தம் தருவாயே. (2)

(2) கார்காத்தவேளாளர்;—உக்கிரகுமாரபாண்டியன் மேகங்களை விலங்கிட்ட போது இந்திரன் "மழை பெய்விக்கிறேன் அவைகளை விடுவிக்க" என வேண்டியும் அவன் சொல்லில் நம்பிக்கையில்லாதிருக்க வேளாளர் இந்திரனுக்குப்பிணையாய் நின்று மேகங்களை விடு வித்த அச்சார்பினர் கார்காத்தவேளாளர் என்ற பெயர் பெற்றனர். காரைக் காத்தான் - கார் காத்த வேளாளர் என்ற பிரிவினரைப் பற்றிக் கூறுகிறது. கட்காது அரவினமணி - கண் களையே காதாக உடைய பாம்பின் மாணிக்கம். ஒரு தமிழ்ப் புலவருக்குத் தன்னால் கொடுக்க முடியாததால் பாம்புப் புற்றில் கைவிட்டு இறக்க நினைக்க அது மாணிக்கம் கொடுத்தது. கொணர்ந்து புலவருக்கு வழங்கினர்.

வணிகன் . . . . . . . படைத்தாய் :—செட்டியொருவன் திருவேலங்காடு நோக்கிச் செல்ல அவனை முன் பிறவியில் அநியாயமாகக் கொல்லப்பட்ட இவன் மனைவி பேயாகிப் பின் தொடர்ந்து பயங்காட்டினள். இறுதியில் இச்செட்டி பழையனூரையடைந்து ஆண்டிருந்த அறுபது வேளாளரிடம் தன் குறை கூற அவர்கள் பேயாய் அதுபோது பெண்ணுருக்கொண்ட பெண்ணுடனே ஓரிரவு இருக்கும்படி கூற அப்பேய் அவனைக் கொன்றுவிட்டது. அப்பழியால் ஒப்பந்தப்படி யாவரும் இறந்தனர். சாலி - செந்நெல்.

454 கனதா டகையும் எதிரேவரக்
கண்டு பகழி யாற்செயித்துக்
கவுசி கனுக்கு வேள்விதனைக்
கரையேற் றியரா கவனானேன்

அனதா னம்செய் சத்திரபதி
ஆகச் செனித்த முத்துவீ
ரப்பன் மகிபன் மகிழவரும்
அருமைப் புதல்வா நலஞ்சேரும்

. . . . .
. . . . .
. . . . .
. . . . .

தனதா வளஞ்சேர் செக்கிப்பட்டித்
தலைவா முத்தம் தருகவே
தமிழ்சேர் முத்துக் கறுப்பண்ண
சதுரா முத்தம் தருகவே. (3)

(3) கனதாடகை - பருத்தவுருவமுடைய தாடகை; பகழி - அம்பு; அனதானம் - அன்ன தானம்.

குறிப்பு.—மூன்றாவது அடி மூலத்தில் விடுபட்டுப்போயது.

## வாரானைப் பருவம்.

455 பொன்னால் சுடிகை நெற்றிதனில்
புனைய வருகச் சிந்தூரப்
பொட்டு மிருகா திற்கடுக்கன்
பூட்ட வருக வுனக்கழகாய்த்

தென்னார் மார்பில் சரப்பணியும்
சிறிய விடையி லரைஞாணும்
சிலம்பு தண்டை நின்காலில்
சிறக்க வணிய நீவருக

மின்னா ரயினி சுற்றியன்பு
மிஞ்சிக் கொஞ்சி முத்தமிட்டு
மேலாம் தொட்டில் வைத்தாட்ட
விரும்பி வருகச் செக்கிபட்டி

மன்னா வருக குவளைமணி
மார்பா வருக வருகவே
மார முத்துக் கறுப்பண்ண
தீரா வருக வருகவே (1)

(1) தென் ஆர் - அழகு பொருந்திய ; அயினிசுற்றல் - ஆலத்தி சுற்றல்.

456 பங்க யமலர் முகமிலங்கப்
பவள வாயின் நகைதுலங்க
பைம்பொன் பதக்க னொளிவிளங்கப்
பாதச் சிலம்பி னொலிமுழங்கச்

செங்கை வளைகள் கொலுசுமின்னத்
திவ்விய பால கிருட்டிணனென்னத்
தேனைப் போலும் மொழிசிறக்கத்
திலக முனது நுதலினிற்க

கங்கைக் குலத்தில் வந்துதித்த
கண்ணே யெனது கணமணியே
கனவான் முத்து வீரப்ப
கர்ணன் மகிழும் புத்திரனே

மங்கை ரதியா சைக்கிசைந்த
மதனா வருக வருகவே
மார முத்துக் கறுப்பண்ண
தீரா வருக வருகவே. (2)

(2) நகை - பற்கள் ; பதக்கம் - பதக்கன் எனப் போலியாயது ; கங்கைக் குலம் - வேளாளர் குலம் ; ரதி- மன்மதன் மனைவி, அழகி ;

457 நதிசேர் கமல வாவியினும்
நாளி கேரத் தோப்பினிலும்
நலஞ்சேர் கமுகின் படப்பையினும்
நான மிகுபூங் காவனத்தும்

நிதிசேர் மாளி கையின்புறனும்
நீடும் கொட்டா ரங்களினும்
நிறைய வளஞ்சேர் செந்நெல் கன்னல்
நெருங்கி யோங்கும் கழனியினும்

கதிசேர் வேற்கண் மள்ளருடை
கன்னி மாதர் குடங்களினும்
கம்புள் தவழ்ந்து முத்தீனும்
கமழும் துவரா பதிநாடா

மதிசேர் வதனு கார்காத்த
வம்மிச பதியே வருகவே
மார முத்துக் கறுப்பண்ணை
தீரா வருக வருகவே. (3)

(3) நாளிகேரம் - தென்னை மரம் ; கமுகின் படப்பை - பாக்குமரத்தோட்டம் ; நானம் - வாசனை ; மள்ளர் - உழவர் ; கம்புள் - சங்கு ; இப்பாட்டில் முத்துகளின் மிகுதி—21-ஆம் பாட்டைப்போல கூறியுள்ளது காண்க.

## அம்புலிப் பருவம்

### சாமம்.

458 நயமாம் மானையுளன் நீயிவன் தாய்வழியின்
நல்லஅம் மானை யுள்ளோன்
நத்தத்தின் நாட்டிலே வருவைநீ யிவனுமே
நத்தத்தின் நாட்டில் வருவான்

பயனுன சக்கர முளாயிவன் புதுவயல்
பயனுன சக்கரமுளான்
பாலகன் ஆவைநீ முத்துவீ ரப்பமால்
பாலக னுவனிவனே

வயமான கங்கைவழி வருவைதான் நீகங்கை
வழியாக விவனும் வந்தான்
மதியென்று பேர்படைத் தாய்நீ யிவன்புத்தி
மதி என்று பேர்படைத்தான்

அயராது வுவமைசொல நீயுமிவ னுஞ்சரி
அம்புலீ யாடவாவே
அழகுமதன் முத்துக் கறுப்பண்ண பிள்ளையுடன்
அம்புலீ யாடவாவே. (1)

| சந்திரன். | முத்துகறுப்பணன். |
|---|---|
| 1. விரும்பும் மானை (களங்கத்தை உடையவன்) .. | தாய் வழியில் வந்த நல்ல அம் மானை (மாமனை) உள்ளவன். |
| 2. நத்தத்தில் (இருளின்) நாட்டில் (மிகுதியில்) தோன்றுவான். | நத்தத்தின் (புன்கமரம் சூழ்ந் துள்ள) நாட்டில் (தேசததில்) தோனறினவன. |
| ·. பயன் பொருந்திய சக்கரம (பரிவேடம்) உடைய வன் சந்திரனைப பரிவேடம் சூழ்தல் உலகிற்கு நனமைதரும். 259-ஆம் பாட்டு சூ. சருககம வி. பாரதத்தில் சூரியனைச் சுற்றிய பரிவேடம தீங்குக்குக் கூறப்படுதல் காண்க. | புது வயல் பொருந்தி பயன விளை யும் சக்கரம் (பூமி) உடையவன். |
| 4. பாலகன (பால+அகன, பால போனற வெண் ணிற முள்ளே உடையவன) ஆவான. | முத்துவீரப்பனுக்குப் பாலகன் (மைநதன்) ஆவான். |
| 5. நீரான கங்கை வழிவருவான் (சிவபெருமான சடையில் கங்கையும் சந்திரனுமிருப்பது நோககி). | கஙகை வழி (வேளாளர் குல வழியில) வந்தவன். |
| 6. மதி (சந்திரன) எனறு பெயர் படைததான .. | இவன் புத்திமதி (அறிஞன்) எனறு பெயர் பெற்றுன. புதத மதி - புத்தியால் மதித்தறிப வன. |

அயராது - தளராது.

## பேதம்.

459 ஒருபொன் னுடன்பிறந் தாயிவ னளவில்பொன்
னுடனே பிறந்திருப்பான்
ஒருவட்ட மாத்திர முடையநீ இவனோ
உயர்ந்தகன வட்டமு டையான்

வருபோது மலைவா யிருப்பைநீ இவன் யார்க்கும்
மலையா திருப்பனென்றும்
மாகலைக ளீரெட்டு வுள்ளவன் நீயிவன்
மாகலைக ளெட்டெட்டுள்ளோன்

கருதுபகை யாளியுண டுன்னிட மிவனிடம்
கருதுபகை யாளியில்லை
களங்கமுடன் னிடமுண்டு விவனிடம் யாதொரு
களங்கமு மில்லாதவன்

அருமையுட நின்னினு மிவனதிக மாகலான்
அம்புலீ யாடவாவே
அழகுமதன் முத்துக் கறுப்பண்ணப் பிள்ளையுடன்
அம்புலீ யாடவாவே. (2)

| சந்திரன். | முத்துகறுப்பணன். |
|---|---|
| 1. ஒரு பொன் (இலக்குமி) உடனே (பாற்கடலில்) பிறந்தவன். | அளவற்ற பொன் (செல்வம்) னுடன பிறந்தவன். |
| 2. ஒரு வட்டம் (பரிவேடம்) மட்டுமே உடையவன் .. | உபாந்தகன வட்டம் (உப+அந்த +கன+வட்டம், இரண்டு அந்த பெருமையுடைய ஆலவட்டங் களை) உடையவன். |
| 3. தோன்றும்போது மலைவாய் (மலையிடம்) இருப் பான், "மலைமிசைத் தோன்றும் மதியம்போல்" என்ற நாலடியார் காண்க. மலைவாய் என்பது தியங்குதலுடையனாய் என்ற பொருளும் தறிது இழித்தது. | யார்க்கும் மலையாது (தியங்காது) இருப்பான். |
| 4. கலைகள் ஈரெட்டு (பதினாறு கலைகள்) உள்ளவன். (கலை - வளரும் தேயும் பங்கு). | 64 கலைகளை யுடையவன். (கலை - நூலறிவு). |
| 5. பகையாளி (இராகுவெனும் பாம்பு) உண்டு .. | பகையாளி கிடையாது. |
| 6. களங்கம் உண்டு. | யாதொரு களங்கமும் (குற்றமும்) இல்லை. |

### தானம்.

460 வந்தடுத் தவர்கள்குறை மாற்றலா னுன்னிடம்
மாறாத குறைமாற்றுவான்
மறுவிலா தவனிவ னுகையா லுன்னையும்
மறுவிலா தவனுக்குவான்

தந்தமது பகையெலாம் வாராது தீர்க்கும்
சமர்த்தனிவ னுகையாலுன்
தன்னிடம் பன்னகத் தால்வரும் பகையினைத்
தளராது தீர்த்துவைப்பான்

இந்தவிசை யிவனிடம் வாராம லங்கே
இருப்பதுவும் ஞாயமில்லை
இவ்வுலகில் வாழ்பவர்கள் யாரினும் பெரியவன்
என்பதற் கையமில்லை

அந்தமிகு ரதிபால மன்மத சொரூபனிடம்
அம்புலீ யாடவாவே
அழகுமதன் முத்துக் கறுப்பண்ணப் பிள்ளையுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(3) குறை—முத்துகறுப்பணனுக்கு "துன்பக் குறைகள்" என்றும் சந்திரனுக்குக் "வளர்தல் தேய்தலாகிய குறை" என்றும் பொருள் கொள்க. மறு அங்ஙனமே முறையே குற்றம், களங்கம் எனப் பொருள் கொள்க. பன்னகம் - இராகுவெனும் பாம்பு ; இந்த விசை - இந் தத் தடவை ; ஞாயம் - நியாயம் என்பதன் மரூஉ.

## சிற்றில் பருவம்

461 தைய லிலகு கொடுங்கையுள்ள
தங்க அடுப்புத் தானமைத்துத்
தயங்கும் பவள விறகடுக்கித்
தழைக்கும் மணியா லனல்மூட்டி

துய்ய வயிரக் குழிசியினில்
சுவைப்பைந் தேனு லுலையேற்றிச்
சுரையா வின்பால் கொண்டரித்துச்
சுவேதத் தரள வரிசியிடடுக்

கையால் பதத்தில் வடித்திறக்கிக்
கமழுஞ் சட்ட ரசவர்கக
கறியும் சமைத்து நாங்களெலாம்
கனிவா யுனக்கு வழுதிடுவோம்

செய்ய குவளை மணிமார்பா
சிறுவா சிற்றில் சிதையேலே
தீரா முத்துக் கறு பபணவ.
சீரா சிற்றில் சிதையேலே. (1)

முடியவில்லை.

(1) தையல் இலகு கொடுங்கையுள்ள அடுப்பு - அழகு விளங்கும் வெளிப்புறம் நீட்டியுள்ள அடுப்பு ; மணி - மாணிக்கம் ; குழிசி - பானை ; சுரைஆமடியையுடைய பசு ; சுவேதம் - வெண்மை ; சட்டரசம் - அறுசுவை ; கறுப்பண வசீரா என்க.

# வேங்கடேசுவரன் பிள்ளைத் தமிழ்

## காப்புப் பருவம்.

### விநாயகர் துதி.

462 மாமேவு தெய்வப் பெருங்கோயி லெனுமூல
மன்றத்துண் மானதாதி
வண்டிமிர நெட்டிதழ்க் கதவந் திறந்துமண
மகரந்த மொழுக வனசப்

பூமேவு கவுண்மதப் பிரளயமுங் கட்கடைப்
பொருஉங்கடைக் காலாக்கினியும்
புரளாது சிறுகாற் றசைக்குமிகு தழைசெவிப்
புகர்முகக் களிறுகாக்க

கோமேவு மசுபதியை முதலான உடுபதி
குலாதிபதி தனபதி பொருங்
குறுகலார் பதிநெளிய முறுகிமேல் வரும்வலிய
கும்பகேச பதிமனுபதி

காமேவு மகபதி கிரீடபதி ரத்தினசிங்
காசனு திபதி பெரிய
கங்கைசூழ் புவிகட்டும் வேங்கடே சுவரட்ட
கசைமுக பதிதழைகவே (1)

(1) மானதாதி வண்டு இமிர-மனம் முதலாகிய வண்டுகள் சப்திக்க; வளைப்பூமேவு களிறு என இயைக்க. கவுன மதப் பிரளயம - கன்னத்தினின்று ஒழுகும் மதவெள்ளம்; காலாக்கினி - யுகாந்த முடிவில் தோன்றும் தீ; செவியினின்று வரும் காற்று சிறுமையாயிருப்பதால் மத வெள்ளம் பெருகி காலாக்கினி போன்ற கண கடையில் தோன்றும் நெருப்பை அணைக்காமல் அது அது அவ்வந்த நிலையிலேயே நிற்க மாறுபாடடையாமல் நின்றது என்க. காற்று அதிகம் வீசின மதத்திவலை கலந்து நெருப்பு அணைந்துவிடும். அங்ஙனமில்லாதிருந்தது என்பதறகே "சிறுகாற்று அசைக்கும் இரு தழை செவி" என்றார். புகர்முகக் களிறு - விநாயகன். உடுபதி - சந்திரன் ஒத்தவன்; தனபதி பொரும் - குபேரனை யொத்த; குறுகலார்பதி - பகைவர் ஊர்கள்; முறுகி - சினந்து; காமேவு மகபதி - கற்பகச் சோலை சூழ்ந்த யாகததிற்குத் தலைவனுன இந்திரன்; மகம்-யாகம்;

## திருமால்.

463 திருகுபுரி கோட்டிருந் தாழ்செவிக் கவையடிச்
சினவுவாய்ப் பொறித்துணைக்கட்
டெய்வதம் கோதையத் தகரவரு முலாவுந்
திசைதிசையு மண்டங்களும்

உருகெழு கதிர்க்களு முடுக்குலமு மலம்வர
வுகைத்தெழுஞ் சிறைவிசையினுன்
உகள்பசுந் தோகையி னுலாவுஞ் சிறந்தவெம
துவண வெற் பிறைவர்காக்க

பொருகரிகள் மும்மத வொழுக்கினுல் நதிசெய்தப்
புரள்கடைக் கால்விசைப்பிற்
போழ்படக் கடுநடைக் கொடுசெலு மளக்கருட்
புரவிவிடு சாரிதருதூள்

பருகமறு கெங்கும் புதுக்குதென் னிளசையம்
பதிநிருப னரசர் பெருமான்
பங்கையா சனையிஷ்ட வேங்கடே சுவனட்ட
பாண்டியன் மகப்பெறுகவே. (2)

(3, 4 பாட்டுக்களுள்ள ஓலை இல்லை.)

(2) திருகுபுரிகோடு - முறுக்குதலைச் செய்த தந்தம்; கவைஅடி - நகங்களைப் பெற்ற பாதம்; துணைககண் - இருகண்கள்; கதிர்களும் - சூரியன், சந்திரனுகிய இருசுடர்கள்; உடு - நட்சத்திரம்; அலம்வர - சுழல; உகைத்து - செலுத்தி உகள் - நழுவுகின்ற; உவணவெற்பு; இறைவர் - மலையை யொத்த கருடனுக்குத் தலைவர், திருமால் - "நதி செய்து அப்புரள் கடைக்கால் விசைப்பின் போழ்பட" என்க; போழ்பட - பிளவுபட தெருவில் யானைகள் மும்மத சலத்தால் நதி போன்று செய்து மாறுபடுகின்ற கால் வேகத்தினுல் அந்நீர் தேங்கிச் சேருக, விரைந்து செலலும் குதிரைகள் அந்த சேற்றுள் இடசாரி வலசாரியால் தந்த மண் தூகள்கள் அந்நீரைப் பருகத் தெரு (பழையபடி) புதுமையாக விளங்கும் இளசையம்பதி என்க.

### திருமகள்.

464 கொந்தளக பந்திப் புகைப்படல முந்தெளி
கொழுந்தீச் செழுந்திலதமும்
குவளைவிழி யின்கடலு மக்கடற் கரையன்ன
கூன்புருவ முங்குழைகளும்

தந்தபந் தியுமுகமு முப்யபுய முஞ்செண்டு
தாங்குகர முஞ்சரணமுஞ்
சரணகரு ணுகரமும் வீரியப் பெயருந்
தரித்த திரு லட்சுமிகாக்க

கந்தசுந் தரசந்த சொந்தமந் தரபந்த
காமசம வாமதாம
கம்பகம் பிதகும்ப விம்பசம் பிரமஇன்ப
காம்பீர்ய புயபாரனைத்

தொந்தமுந் தியசந்திர குலசில்ல வாரகோத்திரத்
துருபநிரு பத்தருமனைச்
சொற்றமிழை யறிவேங்க டேசுவரரெட் டேந்திரவென்
துரையைத் தயாவரையையே. (3)

(3) கொந்து அளகபந்தி - பூவை யணிநத கூநதல் தொகுதி ; கொநது - பூஙகொத்து ; திலதம் - பொட்டு ; குவளை விழியின் - இன் ஐந்தாம் வேறறுமை உவமப பொருவு ; கூன - வளைந்த ; தந்தம் - பல் ; உபயபுயம் - இரு மூஙகில் போன்ற தோள்கள் ; சரணம் - பாதம் ; கரு+ ணு+ ஆகரம் - கருணை தங்குமிடம் ; கந்த, சுநதர, காம, கம்பித முதலியவைகள் ; விளிகள் - கந்த, காம முதலியவைகள் உவம வாகுபெயர். தொந்தம் முந்திய சந்திரகுலம் என்க. தொந்தம் முந்திய - பழமை மேற்பட்ட ; தயாவரை - தயையுடைய மலையொத்தவன; வரை - உவமையாகு பெயர்.

## செங்கீரைப் பருவம்

465 தண்ணமுத மஞ்சனங் குளிரவைத் தாட்டித்
தமீஇயுமீ ரம்புலர்த்தித்
தருநுத லிடைப்பூதி யிட்டுமேற் காணவொரு
தனிதிலக் காப்புமிட்டுக்

கண்ணிலெப் பொருள்களுந் தெரியநிறை யஞ்சனங்
கலவித்து மடியில் வைத்துக்
கனிவாயி னமுதம் புகட்டிநெய் பெய்தரு
கதிர்க்குஞ்சி யுச்சிமோந்து

பெண்ணணங் கினர்சூழ வைகுநின் றுயரில்
பேராசை பெருகவிண்ணில்
பெறுகுறி தெரிந்துபி னிலக்குறியின் மெல்லப்
பெயர்ந்துநெஞ் சாற்றவழ்ந்து

தெண்ணிலா மதிவதன மண்டல மசைத்தினிய
செங்கீரை யாடியருளே
செங்கண்மா லெனுவேங்க டேசுவரெட் டேந்திரசுய
செங்கீரை யாடியருளே. (1)

அமுதமஞ்சனம் - பாலாகிய நீர்.

(1) தமீஇ - தழுவி, சொல்லிசையளபெடை; நிலககாப்பு - மண்ணைக் குழைத்துவைக்கும் பொட்டு; அஞ்சனம் - மை; நெய் - எண்ணெய்; குஞ்சி - மயிர்; பெண் அணங்கினர் - தெய்வப் பெணபோன்ற தோழிப் பெணகள; தாயர் - ஐவகைத் தாயர்; ஈன்றதாய், ஊட்டுந் தாய், முலைத்தாய், கைததாய், செவிலித்தாய்; நெஞ்சு - மார்பு; மதிவதனம், உவமைத் தொகை;

466 பனுவலின் மழைபொழி கவிஞர்கட் டமிழ்கொடு
பைம்பூ ணும்பரமே
பல்லக் குங்கன சொல்லொக் கும்படி
பண்பாய் நண்பாயே

அனுதின முதவியும் வெகுபுகழ் பெருகி
யலங்கா ரஞுசேர்வோய்
அள்ளற் கடலிடை மெல்லச் செல்வனை
அன்றே கண்டோய்நீ

இனசன வளமையி லுடுநன் மதியிவன்
என்றே துங்கோவே
யேலவார்த் தனைபெறு செல்வச் சிவகிரி
எந்தாய் என்போய்நீ

சினமிகு மதமழை பொழிதரு கெசபதி
செங்கோ செங்கீரை
தேசுபெற் றிடும்வேங்க டேசுவ ரெட்டேந்திர
செங்கோ செங்கீரை. (2)

(2) பனுவல் - பாட்டு; கவிஞர்கள் தமிழ்கொடு, எனப்பிரிக்க; பைம்பூணும் - பசிய ஆப ரணமாக அணியும்; அள்ளல் - சேறு; செல்வன் என்றது திருமாலை நோக்கியதுபோலும். உடுநடுமதி - நட்சத்திரங்களினிடையிலுள்ள சந்திரன்; ஏலவார்த்தனை - ஏலம் ஆர்ந்த குழலுடைய, அன்னையான உமாதேவி; பெறு - இடப்பாகத்திலே பெற்ற; சிவகிரி எந்தாய் என்போய் - கைலைமலையிலுள்ள சிவனைப்போன்றவன் நீ. காஞ்சியிலுள்ள அம்மைக்கு ஏலவார்க் குழலி என்ற பெயரிருத்தல் காண்க. தேசு - ஒளி (புகழ்);

467 நினைவிற் பலபல பன்னி யெழுந்து
நிமிர்ந்து வளைந்தாட
நெற்றியின் மிசையிடு சுட்டியை வருடி
நெளிந்து தவழ்ந்தாடச்
சனதத் தொடுமுறை சரணப் பெருவிரல்
தன்கை சுவைத்தாடத்
தண்டை புலம்பவோர் பண்டி யலம்பத்
தாழ்மண்டலமாடச்

சினமுற் றடல்புரி சோமத் தலையொரு
செஞ்சர ணந்தனிலே
செயவிரு தெனவிது செயமென மிகுமதி
செயமோ டிசைந்தாட

அனசத் திரபதி யாங்கருதுறை நீ
யாடுக செங்கீரை
அங்கச நிகர் வேங்க டேசுவரெட் டேந்திர
ஆடுக செங்கீரை. (3)

(3) பன்னி - ஆராய்ந்து ; சுட்டி - நெற்றியில் தொங்கவிடும் ஓராபரணம ; சரணம் - கால் ; பண்டி - வயிறு ; சோமத்தலை - சந்திரபிறை யென்னுமாபரணம மிகும் அதிசெயமோடு என்க" சினம் உற்று அடல்புரி சரணம் எனக் கூட்டுக. அனசத்திரம் - அனன சத்திரம் ; அம்கசம் எனப் பிரித்து அழகிய யானை யென்க. அங்கசன் - மன்மதன் - ணகர ஈறு கெட்டு வந்து மிருக்கலாம்.

468 சாரங்க மென்றுந் தளிர்க்கைகொண் டோங்கலால்
தந்தியோ லங்காணலரல்
தன்கண்வர நதிபிரிய முற்றுவ ரித்தலால்
சக்கர வினைப் பொறுப்பால்

காரங்க மென்றும்பர் காணநின் றுற்றலால்
ககனத்தி னமையாளலால்
காட்சிட்டு தாமரைக் காடுமே லேறலால்
கனகாம்ப ரம்பையணைவால்

மாரங்க டாதுதிர மாகமே லாதலால்
மரக்கனி யுரந்தோன்றலால்
வைகுந்த மால்போலும் வைகுந்த வேலனை
வணங்கு தமிழ் முனி பொருந்துஞ்

சீருஞ் சிறந்துவாழ் பொதிகைவரை யாதிபா
செங்கீரை யாடியருளே
தென்னிலிசை யாள்வேங்க டேசுவ ரட்டேந்திரா
செங்கீரை யாடியருளே (4)

(4) வேங்கடேசுரரெட்டன்— திருமால்.

1. வில்லைக் கையிலுடையவன் .. .. .. சாரங்கமென்னும வில்லை எப போதும் கையில தாங்கி யிருப்பார்.

2. போரில் யானைகள் அலரும்படி செய்பவன் .. சந்திரன என்ற யானை தலை மிட்டதற்கு உதவியனவன.

3. ஆஜ்ஞா சககரம் உண்டு .. .. .. .. பாஞ்சசன்னியம் என்னும் சக் கரப் படை தரித்தவன்.

4. நாங்களும் உங்களில் ஓர்குடியாகி, உறுப்பாய் தேவர்கள் உங்களுடைய உறுப் உள்ளோம் எங்களைக் 'கார்ப்பீர்' என்று பாகிய எங்களை அசுர பயத்தி

| | |
|---|---|
| அரண்மனை வெளியே பலருங் காணப் பகை வர்கள் நின்று பல கூறுவர். "படைகுடி கூழமைச்சு. . . . ." என்ற குறள் நோக்குக. | னின்று காப்பாயாக என்று பலருங்காணக் கூறுவர். |
| 5. பொன்னுல் புலவர்களை ஆளுவான் .. .. | ஆகாய உலகமாகிய வைகுண்டத்தை ஆளுவான். |
| 6. அழகிய ஒழுங்குவாய்ந்த தாமரை யொத்த மயிரொழுங்கு உந்தியினின்று மேலேறுகிறது. | அழகிய தாமரை ஒன்று உந்தியினின்று பிரமனைப் படைக்க எழும்புகிறது. |
| 7. இவன் நாட்டில் மரங்கள் மகரந்தம் சிந்த ஆகாயம் வரை உயர்ந்து வளரும் வளத்தை யுடைவன். | கற்பக மரங்கள் மகரந்தங்களைச் சிந்தும் ஆகாயமேலாவன். இங்கு மரங்கள் மாரங்கள் என நீட்டல். |
| 8. மரத்தின் கனிகளின் தேன் முதலியன பெருகி இவன் நாட்டு நிலத்தில் உரமாகும். | விளா மரத்தினின்று கனியுதிர அடித்தபலம் தோன்ற விருப்பான். வத்ஸாஸுரன் கண்ணனைக் கொல்ல விளாமரமானது காண்க. |

'வை+குந்த+வேலன்' என்க வை - கூரிய ; குந்தம்வேல் - ஒரு பொருட் பன்மொழி. தமிழ்முனி - அகத்தியர்.

469 தாறுபாய் கதலிப் பசுந்தோகை யூடுற்ற
தாழைமட லூடுதாக்கித்
தண்கமுக மடல்விரி பசுந்தோகை துவளவது
தலைதுளக் கிச்சுழற்றிப்
பாறுபாய் சூலம் பிடித்தணங் காட்டியொப்
பனையிட் டடுக்கடுக்காய்ப்
பைங்குழை விரித்தகம் பந்தலைக் கொண்டுடல்
பதுங்கிநின் றுடுமாபோல்
வீறுபாய் சோலையுட் கருமந்தி பாயவதன்
மேற்பாய் குலக்கவியின் வால்
வீச்சிற் பலாக்கனி யுடைந்துநறை பாயவதில்
விளையருவி பாயவதன்மேல்
சேறுபாய் வாளைமீன் பாய்வைகை நதியுளாய்
செங்கீரை யாடியருளே
தென்னிரெசை யாள்வேங்க டேசுவ ரெட்டேந்திரா
செங்கீரை யாடியருளே (5)

(5) தாறு - குலை ; கதலி - வாழை ; துளக்கி - அசைந்து ; பாறுபாய் சூலம்- பருந்து மாமிசத்திற்காகப் பாயும் சூலம் ; அணங்கு ஆட்டி ஒப்பனையிட்டு - பேய்பிடித்ததைப் போல ஆட்டி ; அதன்மேல் பாய் - அப்பெண் குரங்கின்மேல் பாயும் ; குலக்கவி - உயர்ந்த ஆண்குரங்கு ; இப்பாட்டிலுள்ள இயற்கை வருணனை போற்றத்தக்கது :—வாழையின் குழை பரவப் பெற்ற மேற்றுள் தன்னிடையுற்ற தாழை மடலைத் தாக்கி மேலும் தாக்க பாக்கு மரத்தின் மடல் விரிந்த மேற்றுல் துவளும் செயலாகிய அதுப் பருந்து சுற்றுகின்ற சூலத்தை

பிடித்துப் பேயோட்டுதலை ஒத்துள்ளது. அடுக்கடுககாய் பசிய தளிர் விரித்த கம்பஙகளின் மீதேறி கழைக் கூததாடிகள் உடல் மறைநது நினறுடுவதுபோல வேறெனறறகிலலா அழகு பெறற சோலையில கரிய பெண் குரங்கு மரத்திறகு மரம் பாய, அப் பெண குரஙகினமேல் பாயகினற ஆண் குரஙகின வால் வீசசினுல பலாககனி உடைநது தேன் ஊறற அதில் மலையில் தோனறிய அருவிகள் பாய, அதனமேல் சேறறில் பொருந்திய வாளை மீன்களை பாய்கின்ற வைகை நதியிலுள்ளவனே செங்கீரையாடுக என முடிக்க.

## தாலப் பருவம்

470 ஆடகச் செம்பொன் பசுங்கிண்ண மேந்தியதின்
அமுதைமிட் டுபசரித்தே
அம்புய முகட்டின்மிசை வெள்ளனந் துயில்வகண்
டள்ளிமுத் திடுவபோலுஞ்

சூடகக் கையா லெடுத்துவிளை யாட்டின்
சுகத்தான் மயக்கி யூட்டிச்
சொல்லால் விளைந்த பொருள் செவியா லருத்தியுறு
சூழ்வார் பாரக்கினிைரு்

கோடக முகத்தில்முக மெட்டணி விளங்கமேற்
கொண்டமுத் துத்துராயுங்
கோலுமாப் பட்சியு மணிவாகை யோடுமணி
குயிற்றுகல் லணையுமிட்டு

நாடறிய வுலகெழலாம் வையாளி கொண்டபரி
நகுலநீ தாலாடவே
நங்கள்துரை யெனும்வேங்க டேசுவ ரெட்டேந்திரா
நரேந்திரநீ தாலாடவே. (1)

(1) ஆடகச் செம்பொன - ஆடகம், கிளிசசிறை, சாம்பூநதம, சாதரூபம் எனும் நானகு வகைப் பொனகளில் முதலது. வெள்ளனம - அனனத்தின தொகுததல் சூடகம் - (கை) வளை ; அருத்தி - உண்பித்து "செவிக்குணவிலலாத போழ்து சிறிது வயிற்றுககு மீயபபடும்" என்ற குறளை நோக்குக. பராக்கு - விளையாட்டாகப் பாரப்பது ; கோடகம் - சிகரமாகச செய்த முடிவகை ; துராய் - முதது முதலியவற்றால் அமைக்கப்பட்ட தலையணிவகை ; மணிகுயிறறு கல்லணை - முத்துப்பதித்து செய்யப்பட்ட சேணம் ; வையாளி - குதிரை யேறறம் ; நகுலன அசுவசாஸ்திர மறிந்து திறம் பெற்றவனுதலால் அவனை உவமித்தார்.

471 நிலமகள் கலைமகள் மலர்கள் பழகிய
நிருபா தாலேலோ
நிக்கிரக மொடுநல னுக்கிரக முலகினும்
நிகழ்வோய் தாலேலோ

கலைபெறு நிலவினு மிலகிய மலர்முகக்
காமா தாலேலோ
கம்பித் திலகிய செம்பொற் புயதர
கனகா தாலேலோ

உலகினி லெவர்களு மனது குளிரவளர்
உத்தம தாலேலோ
உவணகி ரிக்குகன் இருசர ணைப்பணி
உசிதா தாலேலோ

சொலுநிச வசனமும் விசயமு மருவிய
சுமுகா தாலேலோ
சொற்பொரு ளறிவேங் கடேசுவ ரெட்டேந்திர
துரைநீ தாலேலோ. (2)

(2) நிக்கிரகமொடுநல அனுககிரகம் எனப் பிரிகக; நிலவின் - இன் உறழ் பொருவு (5-ம் வேற்றுமை) கம்பித்து இலகிய - (பார்ப்பவர்கட்கு) நடுக்கத்தைக் கொடுத்து விளங்குகிற;

472 வீதி தோறுங் கடவுமன
வேகக் கலின வாம்பரியால்
விளைந்த துகளின் படலமொடு
மென்மா ளிகையிற் பன்மடவார்

ஓதி தோறு மகிற்புகையிட்
டுறுவெண் படல முகிற்படலத்
துடல்கீண் டேறித் திசைத திசை போய்
உச்சிக் கதிரி னுடல் மறையச்

சோதி மணிமேற் கட்டியெனத்
துலங்க வளரும் இளசை நகர்த்
துரையே நிறையைப் புரந்த கிருட்டினர்
துணையே யிணையே சொலுந்தருவே

சாதி மணியே கற்பகமே
தவமே தாலோ தாலேலோ
தமிழ்தேர் வேங்க டேசுவ ரெட்டேந்திர
சாமி தாலோ தாலேலோ. (3)

(3) கடவும் - செலுத்தும்; கலினம் - கடிவாளம்; வாவும்பரி - வாம்பரியென நின்றது "செய்யுமெனெச்ச . . . ." என்ற நன்னூல் விதியால்; கீண்டு - கிழித்து; மேற்கட்டி - விதானம்; குதிரையால் எழுந்த மண்புழுதியோடு மடவார் கூந்தலை ஈரம் புலர்த்தும் அகிற் புகையாகிய வெண்படலமும் சேர்ந்து மேகத் தொகுதியைக் கிழித்துச் சூரியனின் உடல் மறைய இவைகள் விதானம் போல நிற்க மேலும் எழும்பும் இளசை நகர் என்க.

473 மண்டலமெங்கனு மண்டிய வுன்புகழ்
வளர்விற் கோடாமே
வங்கர் குலிங்கர் கலிங்க ரிடுந்திறை
வருவது தாளாமே

கண்டகர் நெஞ்சிடை கண்டக முந்தொடு
கைத்தொழில் சோராமே
கண்குளி ரும்படி பெண்க ளளந்தறி
கவனமு நாணுமே

விண்டல மண்டல மென்றே யிரண்டினும்
வெங்கலி பாயாமே
வென்றியி லன்றியும் நன்றியி லென்று
மிகுங்குறை வாராமே

தண்டமிழ் கொண்டு திணைந்தரு கின்ற
சவுந்தரா தாலேலோ
தரைகட்டும் வேங்க டேசுவரெட் டேந்திர
சௌமிய தாலேலோ. (4)

(4) கண்டகர் - கொடியோர் ; நெஞ்சு - மார்பு ; கண்டகம் - வாள் ; கைத்தொழில் - ஈண்டு போர்த்தொழில் - வெம்கலி - கொடிய துன்பம் ; தரை கட்டும் - பூமி தேவியைத் தழுவுகின்ற ;

474 மணிமே லிடுதீ பாகாரா
மதிமே லிடுசீ தாராமா
பலகா வியபூ ரணதாரா
பதுமா சனைசேர் தார்மார்பா

வலவா வளவா தாலேலோ
மதனு விசயா தாலேலோ
கனைதேர் வேங்கடே சுவரெட்ட
காமா பூமா தாலேலோ. (5)

(5) தீப ஆகரா - தீபம்போன்று தங்கியிருக்கின்றவனே ; ஆகரன் விளி ஆகாரா. "குன்றின்மேலிட்ட விளக்கு" என்பர் தமிழில். மதிமேல் இடு சீதாராமா - மதியொத்த வெண் கொற்றக் குடையை மேலே வைத்த ராமனை ஒத்தவனே. ; பதுமாசனை - இலக்குமி ; வலவன் - வெற்றிமிக்கவன் ; பூமன் - பூமா என விளித்தது. பூமிக்கு மன்னவன் என்று பொருள்.

## சப்பாணிப் பருவம்

475 சமரிடு படைமுர சொடுகொடை முரசொலி
சத்த மெடுத்தாட
சாமித் துரகர் வெண்டைய வோசை
தனிப்பரி துற்றாட

நிமலனை வழிபடு கரதல வொலிமுயன்
நிற்கரம் வைத்தாட
நீதி தரும்சக தேவி பதத்தினும்
நேய மிகுத்தாட

பமரமு முனதிரு புயல்வழி விளரிசெய்
பற்றெலி யுற்றுடப்
பாவலர் பூவலர் காவல ரென்று
பழக்கொலி மொய்த்தாடக்

குமரவு ணிருகைகொண் டொமிதா மலிவொடு
கொட்டுக சபபாணி
குணநய மிகுவெங்க டேசுவ ரெட்டேந்திர
கொட்டுக சப்பாணி. (1)

(1) சாமித்துரகர் - வேங்கடேசுவரனின் குதிரை வீரர்; துரகம் - குதிரை; வெண்டயம - வீரர் காலணி; சகதேவி - ஜககம்மா எனனும் வீரபாண்டிய கட்டபொம்மனை வணங்கிய தேவி போலும். பமரம் - வண்டு; 'உனதிரு புயம்வழி என்றிருப்பி'ன் புயமீதலங்கரித்த மாலை யெனக் கொணடு வணடு இசைத்ததறகுக் கூறலாம்.

476 புண்டரிகங்க ளலர்ந்து கமழ்ந்திடு
புட்ப முகிழ்த்தூறும்
புதுநற வங்களில் விழுமிய வண்டு
பொறிச்சிறை யுற்றுட

மண்டிய சங்க முழங்கி அலம்பு
மணித்தொனி நெட்டேற
மண்டூ கச்சுதி கண்டோ கைப்பட
மத்தள மொப்பாக

விண்ட பெரும்பல வின்கனி மந்தி
வெடிக்க வடித்தாட
வியனிது வாமென மயில்நட மாடும்
விரைச்சுனை யிற்காணிற்

கொண்ட வளம்பயி லிளசைக் கதிபா
கொட்டுக சப்பாணி
குணநய மிகும்வெங்க டேசுவ ரெட்டேந்திர
கொட்டுக சப்பாணி. (2)

(2) பொறிச்சிறை - புள்ளிகளையுடைய சிறகு; மண்டூகம் - தவளை; ஓகை - ஓசை; வியனை - இடியோசையுள்ள ஆகாயம்; வணடுகள் புள்ளிகளையுடைய சிறகுகளை உதறி தேனை விரும்பிக் கூத்தாட அருவிகளில் நெருங்கிய சங்குகள் நீரில் அலம்புவதால் முழங்கும் ஒலி அதிகமாக, தவளை தாலம்போன்று ஓசையிட, பலாப் பழத்தைக் குரங்கு மத்தளம்போன்று பிளக்குமாறு அடிக்க இசசப்தங்களைக கணடு மயிலகள் இடியோடு கூடிய மேகந்தான் என நினைத்து மகிழ் வுடன் ஆடும் சுனையையும் காட்டையுமுடைய இளசை நகர்க்கதிபனே என்க.

477 குடவளைகள் சூற்கொண் டுயிர்க்கும்வெண் முத்துங்
குறுங்கா ணமன்னரிற்
கொண்டபறி யாற்சேது தரித்துவெள் ளிடைதோறும்
கொட்டிமீன் கொள்ப அவ்வெள்

இடையினுஞ் சைவலக் குப்பையிற் கற்றைகொண்
டிளவெயி லெறிப்பமற்றுங்
கெய்துங் கரும்பொற் கருங்காப் பொலிக்கமன்
னியாஃதெ டுத்தெறியவோர்

திடரென வுயர்க்க வதிலாமை கண்டுயிலுந்
திருப்பழன முஞ்சோலையுஞ்
செங்கமல மிடையறப் பூத்துநீ ராமகளிர்
திருமுக மெனப் பொலிவுறுந்

தடமும்வெகு வளமுமிசை சேருமுது குடிநாட
சப்பாணி கொட்டியருளே
சந்திரகுல வெங்கடே சுவரரெட்ட சாமியொரு
சப்பாணி கொட்டியருளே. (3)

(3) சூல்கொண்டு - கருப்பவேதனை கொண்டு ; பறி - மீன பிடிக்கும் கருவி ; வெள்ளிடை - குப்பையில்லாத இடம் ; சைவலம் - பாசி ; கரும்பொன - இரும்பு குடம் போனற சங்குகள் கருப்ப வேதனை கொண்டு ஈனும் முததும், மீனையும், பாசியினையும் மள்ளா மீன் பிடிககும் கருவியால் ஒரு சேரக கொணாந்து நலல நிலததில் கொட்டி மீனைமட்டும எடுத்துககொளள அந்நிலத்தில் பாசிக் குபபையில அம்முததுக்கள் தொகுதிகொணட இளவெயிற கிரணஙகளை வீச அங்கு வரும் உழததியா அவைகளை எடுத்து ஒருபுறம வீச அது ஒரு திட்டு என்று சொலலு மாறு ஆக அதில ஆமைகள தூஙகும் வயலும் சோலையும் உள்ள நாடு என்க.

478 தீயெனக் கட்கடை சிவந்துபொறி சிந்தச்
செருக்களம் புக்குநோக்கிச்
சிரமுருள வுடல்புரள மாற்றலார் பேரணி
சிதைத்தேறி யாக்கிரமித்து

தூயவெண் சாமரை யிரட்டலென வேலவர்
துகைத்துமேற் சென்றுழக்கிச்
சுடரிரத வாசிக் குழாந்தத் தளிக்கத்
துடிக்கமேற் கடலில் வீழ்த்திப்

பாயொளிர் தருமணிக் கண்சூட்டி மோட்டாங்கப்
பணுடவிப் பஃறலைப்பொற்
பாந்தளுடல் சட்டைவிட் டோடநெட் டேறிநிரை
பாயும்வாம் புரவி நகுலர்

தாயெனத் தயவுபுரி இளசைநக ராதிபா
சப்பாணி கொட்டியருளே
சந்திரகுல வெங்கடே சுவரெட்ட சாமியொரு
சப்பாணி கொட்டியருளே. (4)

(4) பொறி - நெருப்புப்பொறி ; மாற்றலார் பேர் அணி - பகைவர் செய்த உயர்ந்த வியூகம் ; வேல் மின்னியது சாமரை இரட்டியது போலும் என்றுர். வேலவர் - வேறபடையையுடைய வீரர் ; வேல் — இது மற்றப் படைகட்கும் உபலட்சணம். வாசிககுழாம - குதிரைககூட்டம் ; மணி- மாணிக்கம் ; பாந்தள் - ஈணடு ஆதிசேடன ; குதிரை செலலும் வேகத்தால் பூமியைத் தாங் கும் ஆதிசேடனுடைய மேற்றோல் உடலை விட்டு ஓடியது என்க.

479 வண்டுவிழி மடவியர் குழாங்கரம் கொட்டிநன்
மங்கலக் கும்மிகொட்ட
மணமுரசு படைமுரசு கொடைமுரசு மூன்றுநின்
மணிமுன்றி னின்றுகொட்ட

எண்டிசையின் வேந்தரும் தஞ்சமஞ் சேலெனா
இறைந்துதிறை கொட்ட வெதிரும்
இகலரசர் நெஞ்சமும் பறைகொட்ட வான்முகில்
என்றுமும் மாரிகொட்ட

விண்டலத் தமரர்மலர் மழைகொட்ட மாச்சுடர்
விரிக்குமொரு தினகரர்க்காய்
வேதியர்க ளுந்தர்ப் பணத்துநீர் கொட்டவிளை
யாட்டின்மெய் வெயர்வுகொட்டச்

சண்டப்பிர சண்டகோ தண்டக் கரங்கொண்டு
சப்பாணி கொட்டியருளே
சந்திரகுல வெங்கடே சுவரெட்ட சாமியொரு
சப்பாணி கொட்டியருளே. (5)

(5) தினகரன் - சூரியன் ; கோதண்டம் - வில் ; இகலரசர் நெஞ்சமும் பறைகொட்ட - "பூதல நடுங்க. . . . . . விருவர்மாமனமும் பறையறைந்ததயர்வுடன் நடுங்க" என்ற இராயசூயச் சருக்கம் வில்லிபாரதம் 24-ஆம் பாட்டு காண்க.

## முத்தப் பருவம்

480 புடைபட விரட்டுந் தழைச்செவி யுவர்க்கிம்
புரிக்கோட்டு முத்துமேன
யுன்கோட்டு முத்தும் பணைத்திகிரி முத்துமம்
புயமுத்து மீனின்முத்தும்

தடைபடா தோங்குசெஞ் சாலிமுத் தும்பாஞ்ச
சன்னியத்தின் முத்தும்விடத்
தருகட் கடுங்கோப கட்செவியின் முத்துஞ்
சதிக்கராத் தலையின்முத்தும்

துடைபடும் குழலார் கழுத்துமுத் துங்கமுகு
தோன்று மணி முத்து மிப்பித்
துளிமுத்து மதிமுதது மீரமொன் றின்றிமேற்
சூட்டுக்கு ளாகிவிலையாய்க்

கடைபடுமிம் முத் தெலாம் முத்தன்று மதலைநின்
கனிவாயின் முத்தமருளே
களைகற்ற வேங்கடே சுவரெட்ட மேந்திரநின்
கனிவாயின் முத்தமருளே. (1)

(1) உவர்க்கிம்புரிக்கோட்டு - பார்த்தற்கினிய கிம்புரிப்பூண் கட்டிய தந்தம் ; ஏனம் - பன்றி; பணைத்திகிரி முத்து - மூங்கிலில் தோன்றி சக்கரம் போலொளிவிடும் முத்து ; அம்புயம் - தாமரை ; மீன் - சுறுமீன் ; பாஞ்ச சன்னியம் - ஓர் வித சங்கு ; கட்செவி - பாம்பு ; கரா - முதலை ; குழலார் - குழலையுடைய பெண்டிர் ; கமுகு - பாக்கு மரம் ; இப்பி - சங்கு ; மதி - சந்திரன் ; ஈண்டு முத்துப் பிறக்கும் பல இடங்களையும் கூறியமை காண்க. இங்ஙனம் வரும் முன்னைய கொத்தின் 567-ஆம் பாட்டின் குறிப்பு காண்க.

481 மதிக்கின்ற நாற்சுருதி அந்தணர்ப வித்திரகர
வனசமலர் மலரவுயர்பன்
மணிமகுட ராசர்கர வனசமலர் குவியத்தி
வாகரனு மதியுமாகக்

கொதிக்கின்ற பொருநரிற் பொருகளத் தடுபடைக்
கோபத் திரைக்குரைகடல்
குட்டத்தி னுக்கொரு தழற்பகழி யாகவெதிர்
கொண்ட ரணவீரருக்குத்

துதிக்கின்ற வானுட் டரம்பையர்கள் மணமாலை
சூட்டநா டகக்காலுமாத்
தோன்றிடிற் கீர்த்தியொடு தோன்றுபுகழ் மேற்கொளத்
தோன்றுகொழு கொம்புமாகக்

கதிக்கின்ற இங்கிலீ சுக்கொடி யுயர்த்தவர்
கனிவாயின் முத்தமருளே
கலைகற்ற வெங்கடே சுவரெட் டேந்திரவுன்
கனி வாயின் முத்த மருளே. (2)

(2) வேங்கடேசுவரன் தானமளித்தலால் பிராமணர் கைகள் விரிந்து ஏற்றலால் சூரியன் முன் தாமரை மலர் விரிவது போன்றும் பகையரசர் தோற்று கரம் குவித்தலால் மதியின்முன் தாமரை குவிவது போன்றும் இருந்ததால் திவாகரனும் மதியுமாக என்றார். திவாகரன் - சூரியன்; பவித்திர - பரிசுத்தம்; பொருநர் - வீரர்; குரை கடல் - சப்திக்கும் கடல்; குட்டம்- திரள்; தழல் பகழ் - நெருப்புப் போன்ற கணை; 'ரணவீரருக்கு தேவப் பெண்கள் மண மாலை சூட்ட' என்க. கீர்த்தியொடு தோன்றுபுகழ் என்றார் கீர்த்திக்குச் சிவப்பு நிறமும் புகழுக்கு வெண்மை நிறமும் கூறப்படுவதால்.

482 வண்டார் கவுண்மத குண்டோ தரமுழு
மதமா மத்தகமேல்
வருசண் டாவுட னிருகண் டாமணி
மணியோ லிட்டசையக்

கொண்டா யுதமொடு தண்டா வயிரியர்
குழூமே லிட்டு வரக்
குரைமைக் கடலன்ன துரைமக் களுமுயர்
குடைமே லிட்டுவரத்

தெண்டா யுதனிரு தண்டா மரையடி
திசைநா டிப்பரவி
செங்கோ லொடுசுய விந்திராதிபர்
திருவோ லக்கமென

கண்டாய் பவனீதி ரண்டா ருனையுன்
கனிவாய் முத்தருளே
காசினி புகழ்வெங்க டேசுவ ரெட்டேந்திர
கனிவாய் முத்தருளே. (3)

(3) குண்ட+உதரம் - குண்டோதரம்-குடம் போன்ற வயிறறை யுடையது, குணசந்தி ; சண்டா - கொடி ; . கண்டாமணி - யானைக் கழுததில கட்டும் மணி ; வயிரியர் - பாடகர் ; 'கண்டு ஆய்பவன்' நீ உனை(க்காண) திரண்டார்' எனக் கூட்டுக.

483 அஞ்சிவ ணங்கிய மன்னர் தமக்கினி
அஞ்ச லெனப்புரிவாய்
ஆர்கலி யுஞ்செல் வானர் வரும்பொழு
தார்கலி யுந்தெவ்வாய்

மிஞ்சிய துட்டர்கள் சிட்டர்க ளுக்கதி
விதரண முந்தருவாய்
விண்ணவர் மன்னவர் தருதுர கம்மென
விண்டிட மேல்வருவாய்

நெஞ்ச மகிழ்ந்து குகன்பதத் தாமரை
நினைதரு மபிராமா
நீடிய செல்வ வளம்பெறு மிளசை
நிறைந்த பரந்தாமா

கஞ்சம லர்த்திரு நாயக வொருநின்
கனிவாய் முத்தருளே
காசினி புகழ்வெங்க டேசுவ ரெட்டேந்திர
கனிவாய் முத்தருளே. (4)

(4) ஆர்கலி - கடல் ; இவர் தன் கப்பலில் சென்றவர் சுகமே திரும்பி வந்தபோது மகிழ்ந்து பகையாய் மிகுநத துஷ்டர்கட்கும், மற்ற நணபர்கட்கும், கொடையளிப்பார் என முதலடியின் இறுதி அறிவிககிறது. தெவ் - பகை ; விண்ணவர். . . . வருவாய் - தேவேநதிரன் செலுத்துகின்ற உச்சைச் சிரவம் எனும் குதிரைமேல் வருவது போன்று குதிரைமேலேறி வருகின்றாய். குகன் - முருகன் ; கஞ்சம் - தாமரை.

484 கதிருங் கதிர்கா லுனதுமுகக்
கலைவெண் டிங்க ளொமதுதிருக்
கரிய புருவச் சிகப்புமதில்
கலந்துவி சித்த விழிக்குணமும்

எதிர நடுக்கொண் டதிற்பூட்டி
இருந்த படிபார் வையின்கணையும்
எய்தும் படித்த குதியெனக்கா
தியைந்த துளையுங் கணையுருவி

விதிருங் குருதி மஞ்சனையாய்
மிகலும் பெறுமெம் முகமதிக்கே
மேலும் வெருவித் தன்னுளூற்ற
வெண்முத் தெடுத்துத் திறைதரல்போல

முதிரும் பவள நிரை குவித்தோர்
முத்தந் தருக முத்தமே
மொழிதேர் வெங்கடே சுவரெட்ட
முகுந்தன் தருக முத்தமே. (5)

(5) விசித்த - கட்டிய ; இரணங்களை வெளிப்படுத்தும் உனது முகக் கலையான வெண்மையான சந்திரனில் எங்களது கரிய புருவச் சிகப்பும் கலந்து கட்டிய கணைகளது குணம்போன்று கோபத்தினால் வளைந்த அப்புருவ விலலிலே பாாவையின் கணையைப பூட்டி எய்வதறகுத் தக்கது எனறு கூறுமாறு காதில பொருநதிய குழையை ஊடுருவி நடுங்கும் இரத்தம்போன்று சிவந்த மேகம் போன்றவனே ; எம்முகச சநதிரனைக் கணடு இவவாறு கோபிககதகும. மற்றும் முகச் சந்திரனுக்கு மேலும் பயந்து தனனுள இருக்கும் முத்தினை எடுதது திறை தருவதுபோல பவளமபோன்ற உதட்டினைக குவிதது ஒப்பறற முத்தம் கொடு என்கிறார் கவி. தேர் - ஆராயும்.

## வாரானைப் பருவம்

485 அனகா வருகப் புகழுயர்ந்த
அதுலா வருக மனுநீதி
அய்யா வருக இளசைநகர்க்
கதிபா வருக விருநிதிசேர்

கனகா வருக ஐங்கணைப்பூங்
காமா வருக உதவுகொடைக்
கர்ணா வருக மடவியர்க்கோர்
கவனா வருக அறிதுயில்செய்

பனகா வருகச் சன்மானா
பரணா வருக ககள்வசிய
பலிதா வருகப் புத்திரசம்
பன்னா வருக சிவக்கியான

சனகா வருக மிக்கசமஸ்
தானா வருக வருகவே
தமிழ்தேர் வெங்கடே சுவரெட்ட
சாமி வருக வருகவே. (1)

(1) அதுலன் - ஒப்பில்லாதவன ; கர்னன் - இடையெழு வள்ளல்களில் ஒருவன ; கவனன் - வேகமுடையவன் ;

486 சிந்தா மணியே குலவிளக்கே
செந்தா மரையே வலம்புரியே
தேனே பாலே சருக்கரையே
தெவிட்டா வமுதே கற்பகமே

சந்திரோ தயமே செண் பகமே
தனிவச் சிரமே மரகதமே
சாதிக் கரும்பே மருக்கொழுந்தே
சந்தக் குழம்பே நிறைகுடமே

நந்தாத் தவமே ஆணிமுத்தே
நறுந்தீ ஸ் கனியே நவரசமே
ஞானே தயமே குணக்கடலே
நங்கட் கரசே நாயகமே

மந்தா நிலமே பரிமளமே
மகவே வருக வருகவே
மகிப வெங்கடே சுவரெட்டா
மகுடா திபநீ வருகவே. (2)

(2) சிந்தாமணி - தேவ இரத்தினம் ; இது நினைத்தாலே வேண்டியதைத் தரக்கூடியது. சந்தம் - சந்தனம் ;

487 துவளு மருங்கி னிலமடந்தைத்
துணைமென் களபப் பசுந்தேமல்
துள்ளிப் புள்ளிக் குவிமுலைமேல்
தொடும் வெண் கச்சுக் கவிந்ததெனத்

தவள மாட மிலங்கமின்னூர்
தனிப்பொன் னுலகத் தரம்பையர்பால்
தன்கை ரேகை காட்டவொரு
தளிர்க்கை நீட்டும் வேட்டமெனுப்

பவள நெடுவெண் கிளைமேலாய்ப்
படர்ந்த மகரக் கொடியுற்றுப்
பாவை யுடுத்த நீலமணிப்
பட்டா டையைப்போல் நிரைநிரையாய்க்

குவளை மலருந் தென்னிளசைக்
கோவே வருக வருகவே
கோல வெங்கடே சுவரெட்ட
குபேரா வருக வருகவே. (3)

(3) துவளும். . . . இலங்க - துவளுகின்ற இடையையுடைய பூமி தேவியின் இரண்டு மெல்லிய சுணங்கு படர்ந்து சந்தனக் குழம்பால் எழுதும் ஏழு அடையாளங்களில் ஒன்று பெற்றுக் குவிந்த நகில் மீது கட்டிய வெண்மையான கச்சு கவிந்தது போன்று வெண்மையான மெத்தைகள் விளங்க மின்னூர். . . . வேட்டம் எனு - அத்தகைய மாடத்திலுள்ள பெண்கள் சுவர்க்க லோகத்திலுள்ள தேவப்பெண்களிடம் தனது கைரேகை காட்டுதற்காக தளிர்போன்ற கைகளை நீட்டுதற்கு விரும்பியது என்று சொல்லுமாறு ; சொல்லுமாறு குவளை மலரும் எங்க. ஈண்டு காந்தள் மலரையே கைகளுக்கு ஒப்புமை கூறுவதாயினும் குவளை மலரைக் கூறியது செந்நிறம் பற்றிபோலும். பவளப் பாவை நெடுவெண். . . . குவளை மலரும் - பவளம் போன்ற சிவந்தநிறமுடைய ஆம்மாதர்கள் வெண் மெத்தைகள் மீது (பவளம் போன்று அடிப்பாகம் சிவந்து வெள்ளிய கிளையைப்பற்றி) தங்கிய சுறுமீன்போன்ற ஆபரணம் பெற்று (தங்கிய மகரந்தத்தை தன் கொடியிலே பெற்று) அவர்கள் கட்டிய நீல மணி பதித்த பட்டாடையைப்போன்று (நீலப்பூக்களை வெளிப்படுத்தின) வரிசை வரிசையாய் நீலோற்பலம் மலரும் இளசை நகர் எங்க. பாவை - பாவனைச் சிறுமியராகும் பொம்மையு மாம்.

488 கைப்பட்ட மிகுமுழங் காற்பட்ட மிட்டுக்
கடாம்பட்ட வீரபட்டக்
கம்பவே ழத்தில்வரு மெய்த்துரைப் பட்டங்
கதித்தபட் டாபிராமா

மெய்ப்பட்ட நற்புகழ் வெளிப்பட் டடங்காமல்
மேற்பட்ட மண்டலத்தில்
வெண்பட் டெனப்பாற் கடற்றிரை யெனத்தனி
விரிந்தகப் பட்டதென்னச்

செய்ப்பட்ட புவனம் படைக்கத் தலைப்பட்ட
தேவனுக் கேற்பட்டவோர்
செஞ்சூட்டு வெள்ளோ திமக்கூழா மென்னச்
சிறக்கவளர் சமுகசுமுகா

மைப்பட்ட கண்ணார் மயல்பட்ட மால்கொண்ட
மதனமத னுவருகவே
மகுடா திபவெங்க டேசுவரெட் டேந்திரா
வாலசந் திராவருகவே. (4)

(5-ஆம் பாட்டின் ஓலை இல்லை)

(4) கைப்பட்டம். . . . கதித்த - இவ்வடியினின்று யானைக்குத் தும்பிக்கையில் ஓர் பட்டமும், முழங்காலில் ஓர் பட்டமும் நெற்றியில் வீர பட்டமும் கட்டுவரென்றும் இவன் துரை யென்று பட்டம் பெற்றவன் என்றும் தெரிகிறது. புகழுக்கு வெண்மை கூறுவது கவிமத மாதலால் மண்டலத்தின் வெண்பட்டென, பால் கடல் திரையென பிரமனது வாகனமான அன்னம் அன்ன வளர்கிறது என்று கூறுகிறார். ஓதிமம -அன்னம் ; தேவன் - ஈண்டு பிரமன்.

## அம்புலிப் பருவம்

(முதல்பாட்டின் ஓலை இல்லை.)

489 பதினாறு கலையுன திடத்திலுண் டிவனிடம்
பல்கலை அனேகமுண்டு
பட்சமுன் னிடத்திலு மாறவுண் டிவனிடம்
பட்சமா றுமலுண்டு

மதியே உனக்குமொரு கோட்டையுண் டிவனுக
வளர்கருக் கோட்டையுண்டு
வானிலக் கணமுணர்ந் தாய்நீ யிவன்கணித
வானிலக் கணமுணர்ந்தான்

கெதிகூடு முயலுன்ன திடத்திலுண் டிவனிடம்
கேள்விமுயல் மெத்தவுண்டு நீ
இளையின்மிகு சந்திரகு லாதிபன் சந்திர
கிரிக்கதிப னெனவந்தவன்

அதியோக வானிவனும் நீயுமொப் பாமீவனோ
டம்புலீ யாடவாவே
அண்டர்கோ னிகர்வெங்க டேசுவரெட்டேந்திரனுடன்
அம்புலீ யாடவாவே. (2)

(2) சநதிரன்—

| | |
|---|---|
| (1) பதினாறு கலைப்பெற்றிருப்பான .. .. | வேங்கடேசுவரன் பலகலைகளும் பெற்றிருப்பான். |
| (2) அமரபட்சம், கிருஷ்ண பட்சம் என்ற இரண்டிலும் வளாவது தேயவதுண்டு. | இவன பட்சம் (அன்பு) மாறாமல் (எபபோதும் ஒரே நிலையாக) இருப்பான். |
| (3) ஒரு கோட்டை (பரிவேடம்) உண்டு. | மதிலகளோடு கூடிய கோட்டை உண்டு. |
| (4) வானின் இயல்பினை அறிந்துள்ளான் .. | வான நூலிலக்கணங்களைக் கணித அறிவுடன் உணர்ந்தவன். |
| (5) வேகமாயோடும் முயல் (களங்கம்) பெற்றுள் ளான். | கேள்வி முயல (முயலுவதை) உடையவன். (கேள்வி கற் றூர் வழிகேட்டல்.) |
| (6) இளைத்துவந்த சநதிர குலததுககுத் தலைவன் .. | சந்திரகிரி என்ற மலைக்குத் தலைவன். |

## தானம்.

490 பூதரம் பலதிரிந் துழந்தயர்ந்தா யுனது
பொருமலை முகம்பார்த்தருள்
புரிதலை யியற்றிக் களங்கம் துடைப்பனுயர்
பொற்கலையு ளோனுதலால்

பேதுறு முனக்கிசை பழங்கலை வளர்க்கலே
பெருநூற் பழக்கஞ் செய்வான்
பெற்றகூ னிமிர்கிலா யிவனோரா சிறியரின்
பெறுகூன் திருத்தியறியும்

ஓதர னிவன்பாற் சவுக்கிய முண்டொருகட்
செவிப் பகையு மில்லையுன்போல்
தெள்ளமு தருத்தியுடல் மலிவிப்பன் நீவந்து
சேரலே தென்னிளசையூர்

ஆதரம தாமுனது குறைதீரு மிவனுடன்
அம்புலீ ஆடவாவே
அண்டர்கோ னிகர் வெங்க டேரவரெட் டேந்திரனுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(4, 5 பாட்டுக்களின் ஓலை காணப்படவில்லை.)

(3) பூதரம்—மலை. (மேருமலை) பொருமல்—அழாது விம்முகை. அருள்புரிதலை இயற்றி என்க. பொன்கலை—பொன்னுலாகிய உடை ; இங்குக் கலை என்னும் சொல் ஒற்றுமை குறித்து உனக்கும் கலை அருள்வன் என்றுர். பேதுறும்—மயங்கும் ; பழங்கலை—தேய்ந்த பழைய

கலைகள் ; கலை—ஈண்டு சந்திரனின் வளரும் பங்கும் தேயும் பங்கும் இவன் தமிழ் நூல் பயிலுபவனுதலால் உனக்கும் பழங்கலை (படிப்பு) கலை வளர்ப்பான் என்றுர். நூல் கற்று கலை பயிலுதல் நோக்கி. கூன்—வளைவான பாகம். சிறியர்—தன்னை மதியாப் பகைஞர் ; கூன்—ஈண்டு அறியாமை ; கட்செவிப் பகையில்லை என்றுர் சந்திரனுக்கு இராகு வென்னும் பாம்பின் உபத்திரவமும் இவனுக்குக் கண், செவி (காது) குறையில்லாமையும் நோக்கி ; உன் போல் தெள் அமுது என்றுர் வெள்ளிய பாலைக் கருதிப் போலும் ; ஆதரம்—விருப்பம்.

## சிறுபறைப் பருவம்

**491** (முதலிரு பாட்டுக்களின் ஓலை காணப்படவில்லை.)

உற்றவர் கண்டு கிளைக்கணி யென்றகம
உருகி யணைத்திடவே
உய்த்த வுடந்தையர் சுற்றி வளைந்திடும்
உயர்மனை முற்றமலால்

மற்றை நெடுந்தெரு முற்று குறுந்தெரு
மதகரி கட்டியதேர்
மத்தக பந்தி முகப்பொடு பந்தடி
மணிதரு முற்றமெலாஞ்

சுற்று சதங்கை குலுக்கி நடந்திரு
சுவடு பதித்தணிதேர்
தொட்டு வளர்ந்த விரற்கிடு மிஞ்சிகள்
சுடர்விரி யத்தனியே

சிற்றடி மண்டல மிட்டு நிரந்தொரு
சிறுபறை கொட்டுகவே
செயசிங்க மெனும்வெங்க டேசுவ ரெட்டேந்திர
சிறுபறை கொட்டுகவே. (3)

(3) அகம்—மனம் ; பந்தி—கட்டுமிடம் ; மிஞ்சி—கையில் மோதிர விரலிலும் காலில் இரண்டாவது விரலிலும் அணியும் மோதிர வகை.

**492** வெறிக்குங்கு மக்கலின் முதுகருந் தோள்மள்ளர்
விளைபுலத் துறுதொளிக்குள்
வீச்சிற் பரம்பினூர் பகடொன்று வால்சுழல்
வெறிவிப் பிணைமருப்பில்

குறிக்கும்வெள் ளல்லிமுகிழ் சுற்றிநீண் டசையவது
கூண்டவெண் சல்லிபோலும்
குளநீர்ப் படிந்திட வதிற்குரு கெழுந்தொரு
குறும்பலா மீதிருப்பப்

பறிக்குமாங் கனியா லெறிந்துகவி தாவப்
பறந்துகுரு கோலமிட்டுப்
பகர்வெள் ளிடைச் சேர வக்குருகை யயல்விளை
பருங்கரும் புறுமொழிகளில்

தெறிக்குமுத் தோச்சுதென் னிளசைமுது குடிநாட
சிறுபறை முழக்கியருளே
செயசிங்க மெனும்வெங்க டேசுவரெட் டேந்திர
சிறுபறை முழக்கி யருளே. (4)

(4) வெறி குங்குமக் கலின்—வாசனை வீசும் குங்கும மலை போனற; தொளி—சேறு; பரம்பின் ஊர் பகடு ஒன்று சுழல் வால் வீச்சில் என்க. கூண்ட—கூடிய; வெண் சல்லி—வெள்ளிய முத்தாபரணங்களாலான மாலை; குருகு—அன்னம்; கலி—குரங்கு; உழவர் வயல் சேற்றினைச் சமப் படுத்த எருமைக் கடாக்கள் கட்டி பரம்படிக்க அதன் சுழல் கின்ற வால் வீச்சினால் இரண்டு கொம்பினும் வாசனை குறிக்கும் வெள்ளல்லி அரும்புகள் சுற்றி நீண்டு அசைய அது கூடிய வெண்மை பொருந்த முத்தாபரணங்களாலான மாலை போலுமிருக்க, பின்னர் அவை குளத்தில் மூழ்க அதிலுள்ள அன்னங்கள் எழுந்து ஒரு குறும்பலா மீது உட்கார மாமரத்திலிருநத குரங்குகள் மாம்பழத்தினைடித்து அம்மரத் திற்குத் தாவ அன்னங்கள் பறந்து ஓலமிட்டு ஒன்றுமற்ற நிலத்தில் சேர அவைகளை மாதர்கள் பக்கத்தில் விளைகின்ற பரிய கரும்பினைப் போன்ற இனிய மொழிகளில் பேசி முத்தினைக் கொண்டு ஓச்சுகின்ற இளசை நகர் என்க.

493 கூர்க்கின்ற நெல்லின் முளைகுறு முளைக்கொள்ள
குடம்படு தடம்பணிலவாய்க்
குலமணிகள் மேல்மூட வலையா லரித்துமறு
கொல்லையி லணைத்தடைத்துப்

போக்கின்ற வண்டற் பெருங்குப்பை யிடையிடைப்
பெருவரம் பெனவளர்க்கப்
பெடைஞெண் டினுக்கமளி யென்றுகண் வளரப்
பிடிக்குமன் னியர் செங்கையால்

போர்க்கின்ற தவணவீ ரித்தொரு குத்துப்
புறம்போக்கி யூதிநசையால்
பொய்கையினு முறுவலித் தவரவர் கடங்கண்மனை
புக்குண்டு கண்வளரமேல்

சேர்க்கின்ற வளமைசே ரிளசைமுது குடிநாட
சிறுபறை முழக்கி யருளே
செயசிங்க மெனும்வெங்க டேசுவரெட் டேந்திரா
சிறுபறை முழக்கியருளே. (5)

(5) குடம்படு தடம் பணில வாய்க்குல மணிகள்—குடம் போன்று பொருந்திய சங்குகள் ஈன்ற சிறந்த முத்துக்கள்; அமளி—படுக்கை; மூன்றுவதடி சரிவர முதலிலேயே பிரதி செய்தவரால் எழுதப்படவில்லை. "அவரவர்கள் தங்கள் மனை" என்க. வயலில் விதை த்த நெல் முளைகள் சிறிய முளைகளைக் கொள்ள, அவைகளைக் குடம் போன்ற சங்குகள் ஈன்ற முத்துக்கள் மேலே மூட வயலில் தோன்றிய நீரலைகளால் அரித்து அரித்து மறு வயலில் சேர்க்கின்ற வண்டல் குப்பையிடையிலே இம்முத்துகளும் நெல் முளைகளும் வரப்பைப் போன்று செய்ய; அவ்வரப்பில் பெண் நண்டுகள் தமக்கேற்பட்ட படுக்கையென நினைத்துத் தூங்க அதனைப் பிடிக்கும் உழத்தியர் என்க.

## சிற்றில் பருவம்

494 பொங்கோ தையின்நீர்ப் பெருக் கெனநாற்
புறமும் வளைந்த பொருநர்பெரும்
போரிற் புகுந்து யானைகண்ட
புகழ்க்கே சரிபோல் மாருடி

வெங்கோ பத்தின் யெதிர்ந்தசுத்த
வீரர் சிரத்தைப் பந்தாடி
வேழ மொருபால் பரியொருபால்
விருது மொருபால் சிதறவடித்

தெங்கோன் நீயே மீதூர்ந்தங்
தெதிர்ந்த பகைஞர் குடியிருந்த
எல்லைப் போரில் சிதைப்பது நல்
லியல்பா மிதுவுஞ் சிற்றிலன்றோ

செங்கோ லரசே யினிமுனியேல்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிலைமால் வெங்கடே சுவரெட்ட
சேந்தர சிற்றில் சிதையேலே. (1)

(1) பொங்கு........பெருக்கு—மிக்க அலைச்சப்தமுள்ள கடல்; பொருநர்—வீரர்; யானை கண்ட புகழ்க் கேசரி போல்—யானையைப் பார்தத சிங்கம் போன்று; விருது—வெற்றிச் சின்னம்.

495 குருத்த பெருவண் டலிற்றரளங்
கூட்டி மனையும் மனைச்சுவருங்
கோலிச் சங்கப் புதுக்கலத்திற்
குமுதத் தேனை யுலைப்பெய்து

பொருத்துங் குடக்கூன் பணிலத்தைப்
போத வடுப்பா யதிலேற்றிப்
பொருஞ்செங் காந்தட் கனல்மூட்டிப்
பூம்ப ராகப் புகைதிளைத்துக்

கருத்துக் கிசைந்த கன்னல்முத்தைக்
கையா லரிசி யெனப்புகட்டிக்
காம ரடிசி லெனவடித்துக்
காவிற் பலபூக் கொய்துகறி

திருத்திச் சமைத்த விளைவுகண்டாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிலைமால் வெங்கடே சுவரெட்ட
சேந்தர சிற்றில் சிதையேலே. (2)

(2) வண்டலில் முத்துகளைக் கூட்டி விடும் வீட்டுச் சுவரும் செய்து சங்கமாகிய பானையில அல்லித் தேனை உலை நீராக வார்த்து குடம் போனறு வளைந்த பணிலத்தை அடுப்பாகவும் அதில அப்பானையை ஏற்றி செங்காந்த பூவாகிய நெருப்பை மூட்டி பூவினது மகரந்தத் தூளாகிய புகை பெருக, மனத்திறகிசைந்த கரும்பினினறெடுத்த முத்துக்களை அரிசியாகக் கொண்டு கையால் அரித்துப் போட்டு அழகிய சோறு வடித்து, சோலையில பல பூக்களைக் கொய்து கூட்டு, குழம்பு முதலிய கறி வகைகளைச் செய்து அமைத்தனர் சிறுமியா. பராகம்—மகரந்தம் ; அடிசில—சோறு.

496 கையாற் செறித்த பணிச்சிற்றில்
கற்றைத் தரளக் கல்லழுத்திக்
கழல்மெல் லிதழ்த்தா மரைக்காலுங்
கண்ணுஞ் சேப்பக் கன்றுவோ

மெய்யால் வெயர்த்த குறுவெயர்ப்பின்
வெள்ளப் பெருக்கால் மணிமார்பின்
மேலாய்த் தரித்த வல்லவட்ட
மெல்லா டைகளும் நனையாவோ

அய்யா விதுரா வாதுலர்கட்
டழகா குழகா தாரணிக்கோர்
அதிபா துதிபா வலர்தமிழ்சேர்
அனகா சனகா வகளங்கா

செய்யா ரிளசை நகர்க் கிறைவா
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிலைமால் வெங்கடே சுவரெட்ட
சேந்தர சிற்றில் சிதையேலே. (3)

(3) கற்றைத் தரளம் கல்—தொகுதியான முத்துக்களான கற்கள் ; கன்றுதல்—நோதல் ; வல்ல வட்டமெல்லாடை—பூணூலைப் போல இடத்தோளின் மேலிருந்து அணியும் ஆடை ; கழுத்தைச் சுற்றித் தொங்க விடும் ஆடையாகவும் கொள்ளலாம். ஆதுலர்—வறியவர் ; அகளங்கன்—களங்கமற்றவன்.

497 வேரிச் சுனையிற் பாசடைமேல்
விரிந்த கமலத் தடைகிடக்கும்
வெள்ளோ திமந்தன் பிள்ளையென
விரித்த சிறகின் எடுத்தணைக்க

வாரித் தவளக் குடவளைகள்
வாய்விட் டொலிப்பக் கண்டுவெரீஇ
வான்போய் மீள வொலிவளைகள்
மலரி னொதுங்க வதுகண்டு

சாரிற் பெறுமெல் லடையிலிட்ட
தமது கருவென் றயிர்த்தயர்ந்து
தன்முட் டையினோ டணைத்தணைக்குந்
தகைசே ரிளசை நகர்க்கதிபா

சீரிற் சிறந்த புகழ்க்கதிபா
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிலைமால் வெங்கடே சுவரெட்ட
சேந்தர சிற்றில் சிதையேலே. (4)

(4) வேரி—தேன் ; பாசடை—பசிய இலை ; தேன பொருந்திய சுனையில் பசிய இலை மீது விரிந்த தாமரையில சேர்ந்திருக்கும் வெள்ளையனனம் தன பிள்ளையோவென்று குடவளைகளைத் தன் விரிதத சிறகின் கண வாரி எடுத்து அணைகக வெள்ளி அச்சங்குகள் வாய் விட்டுக் கதற அச்செயல் கண்டு பயந்து ஆகாயம் பறந்து மீள அதறகுள் வளைகள மலாகருள் மறைந்து விட கரையில் இருக்கப்பெறற மெல்லிய இலைகளில் இட்ட தமது முட்டைகளோ எனறு முத்துக களைக் கண்டு சநதேகிததுத தளர்ந்து தன முட்டைகளோடு அணைக்கும் தகையுள்ள இளசை நகா என்க. சார்—அணைக்கரை.

498 புனலி னடுமள் ளியர்வதனப்
பூந்தா மரையும் விழிக்குவளைப்
பூவுந் துவர்வாய்க் குமுதமுமம்
பூவி னிடைவெண் ணகைமுத்துங்
கனகக் குழைவான் வள்ளைகளும்
கருங்கே சத்தின் சைவலமுங்
கானமிடற்றின் வரிவளையுங்
களபக் கலவைக் கவின்விம்மத்
தனமுண் டகமொக் குளுந்தெரியத்
தகுந்தண் ணக்காற் கடைஞரதில
தன்கை யளாவக் காணது
தடஞ்செய் சூழ்வந் துடன்கோணுத்
தினமும் வளங்கூ ரிளசை நகர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே
சிலைமால் வெங்கடே சுவரெட்ட
சேந்தர சிற்றில் சிதையேலே. (5)

(5) தணணங்கால்—நீரையுடைய நாற்றங்கால் ;' தண—நீா ; நாறறு நடுகின்ற உழததியர் வதனமாகிய தாமரைப்பூவும், கண்களாகிய குவளைப் பூவும், பவளம் போன்ற உதடுகளையுடைய வாயாகிய அல்லி மலரும் மேற் கூறிய பூக்களினிடையே வெள்ளிய பறகளாகிய முத்தும் பொன் குண்டலமணிந்த காதுகளாகிய வள்ளைப் பூக்களுமை கரிய கூந்தலைப் போன்ற பாசியும், பாட்டிசைக்கும் மிடற்றினை யொத்த சங்குகளும் வாசனை சாநது பூசி அழகு பொருந்தி விமமும் முலைகளாகிய தாமரை அரும்பும் நீரில் தெரிய உழவர் அம்மலர்களையும் அரும்புகளையும் பறிக்க நினைத்து கையைத் துழாவ காணது பரநத வயலைச் சுற்றி வந்து முகம் கோணும் அத்தகைய வளமிகக இளசை நகர் எனக. தடஞ் செய—பரநத வயல, தட—உரிச சொல் கோண—செய்யா எனற வாய்ப்பாட்டு வினையெசசம் செய்து எனத் திரிநது ; முணடகம மொக்குள்—தாமரை யருமபு.

## சிறுதேர்ப் பருவம்.

499 கூர்க்கின்ற வண்டப் பரப்பினை விளக்குமொரு
குலவிளக் கென்ன செங்கட்
கோரவட் டப்பருதி யொருவட்ட வாழிக்
கொடிஞ்சிமான் தேருருட்டப்

போர்க்கின்ற மெய்க்கட் பெரும்பாக சாதனப்
புத்தேளிர் தொலலேமான
புரிசுடர் விமானப் புலன்சக டுருட்டநிறை
புவனசக் கிராதிபதிநீ

ஆர்க்கின்ற தன்னுணை வழிசெலச் சக்கரத
தகல்வட்ட மேனுருட்ட
அருள்பெருகு கழுகுமலை முருகாதிரு நாள்விழா
அணிகொடு கொடுங்கைகுடமேல்

சேர்க்கின்ற சித்திரப் பெருநதே ருருட்டவிச்
சிறுதே ருருட்டியருளே
சிம்மா சனுவெங்க டேசுவரெட் டேந்திரா
சிறுதே ருருட்டியருளே. (1)

(1) பருதி—சூரியன்; கூர்க்கின்ற........வட்ட இது வரை சூரியனுக்கடை; ஒரு வட்ட ஆழி—ஒற்றைச் சக்கரத் தேர்; மான—மான எனபது இனியன நின்றது பாக சாதனன்—இந்திரன்; புத்தேளிர—தேவர்; கொடுங்கை—வெளிப்புறம் நீண்டு வளைந்துள்ள தேரின் ஓர் உறுப்பு; சூரியன் ஒற்றைச் சக்கரத் தேருருட்டுவது போனறும் இந்திரன் முதலிய தேவர்கள் தேரில் ஊர்வது போன்றும் உருட்டுவாய் என்னும் கழுகுமலை முருகர் திருநாள் விழாவில் சித்திரத் தேர் உருட்டுவதற்கு இப்போதே தேரினை உருட்டுவாய் என்றும் கூறுகிறார். இவன் முருகர் விழாவில் தேர் விழாச் செய்வதோ தேர் வடம் பிடிப்பதோ உண்டு எனத் தெரிகிறது.

500 அதிரத மகாரதச் சமரத ரர்த்தரதமென
ஆனநால் வகையிரதமேல்
ஆயதொல் லதிபர்தாக் கோனும்வட முங்கொண்
டணித்துறு திசைதிசையினும்

கதிபெறக் கடவுமொரு சாரத்திய மாத்தொழில்
கடந்துநின் கரசரணதீர்க்
கப்பெரு விசித்திரங் கண்டுகண் களிகொளக்
காலிடு கழற்கலிப்பப்

பதியுந் தடத்திடை துகள்படல மண்டவெழு
படல்மேதப் பொழிமுகிலெனப்
பாய்கழற் கலிசகட் வட்டநெட் டேறப்
பணிச்சர ணழுத்தியீட்டித்

திதிதரு தயித்தியரை வென்றபொற் காண்டீ
சிறுதேர் உருட்டியருளே
சிம்மா சனுவெங்க டேசுவரெட் டேந்திரா
சிறுதேர் உருட்டியருளே. (2)

(2) அதிரதன............அர்த்தரதம்—வீரர்களை நோக்கி இரதமும் நால்வகையாகப் பிரித்தார்; வடம்—குதிரைக் கயிறு; சரணம்—கால்; மேதம்—தசைக் கொழுப்பு; திதி தரும் தயித்தியர்—காசிபன் மனைவியான திதி என்பவள் பெற்ற அசுரர் இப்பாட்டில் அருச்சுனனுக்கு ஒப்பிட்டிருத்தல் காண்க.

501 கச்சணி மகுட முலைக்குட மடவியர்
கட்டழ குடனுசை
கற்பித முறமட லிட்டணை மிசையொரு
கைச்சுருள் தரும்வேளை

யச்சன முபரி தொடுத்தெழு கலவியி
தற்புத மெனமேலே
அச்சுறு சகடென மெய்த்திரு கணிசெய்
ததிற்கரி கரம்நீடி

வச்சித மறவரு மெய்ச்சுக பரவச
வர்த்தனை பெறுபோகம்
வர்க்கமொ டொழுகு தமிழ்க்கடல் பெருக
மணத்தொடு புணர்காமா

உச்சம சுபமோ டுரத்தொரு சரணின்
உருட்டுக சிறுதேரே
உற்பன மிகுவெங்க டேசுவ ரெட்டேந்திர
உருட்டுக சிறுதேரே. (3)

(3) மடவியர்—பெணகள் ; மடல் இட்டு அணை மிசை; அணை—படுககை ; சுருள்—வெறறிலைப் பாக்கு ; (தாம்பூலம்) ; உபரி—அதிகமாய் ; அச்சனம்—அக்ஷணம் எனபதன் வடசொல போலும் ; சகடு—சககரம் ; கரிகரம்—சுரத லீலை வகை ; அச்சுடன் கூடிய சக்கரம் போன்று பெணகள் காதிலணியும் திருகாணி என்க. செய்தாவது—அலங்கரிதது என்க ; உரம்—வலிமை ; உற்பனம்—கல்வி ; காமா—மன்மதனையொத்தவனே.

502 வள்ளற் குச்சரி யாய்நிதி தரவரு
வரதனைப் பெறுதியாகா
வள்ளத் திற்றிரள் பாலன முதவி
வளர்த்திடு மனுகூலா

கள்ளப் பற்றலர் மார்பிடை யுருவு
களிப்புடை வடிவேலா
கல்விக் குப்பெரி தாயதனருமை
கணித்தவி தரணீக

விள்ளச் சொற்பிச காநிச வசன
விதட்சண சுகுணாளா
வெல்வித் தைக்குல கோர்புகழ் பொதிகை
அகத்தியர் நிகர்வோய் நீ

உள்ளத் திற்கனி வாய்வளர் நிருப
உருட்டுக சிறுதேரே
உற்பன மால்வெங்க டேசரெட்டேந்திர
உருட்டுக சிறுதேரே (4)

(4) வள்ளத்தில் திரள் பாலனம்—கிண்ணத்தில் திரண்ட பாறசோறு.

# புதுவை அருணாசலம் பிள்ளைத் தமிழ்

துதி

### குருகையிலுள்ள திருமால் (ஆதிநாதர்)

503 பூமேவு தவளநிற மாங்குயில் விரும்பிவாழ்
புனிதன் சிறக்கவுந்தி
பூத்தோனை வாலிபங் காததோனை யொப்பில்மணி
பூண்டோனை வண்ணமுகிலைத்

தேமேவு பச்சைச் செழுந்துளப மார்பனைத்
திருமங்கை மணவாளனைத்
தென்குருகை நகராதி நாதனைப் போற்றியே
திருவடி வணங்குவனியான்

பாமேவு செந்தமிழ்ப் புதுவைநக ராதிபதி
பாக்கியநிறை யோகசாலி
பரராசர் மெய்த்தசர வண......ணவர்
பாலனனு கூலலோலன்

நாமேவு கலைவாணி யருள்பெருக வளருமரு
ணாசலந ரேந்திரன் மீதில்
நவரசந் தருமினிய........பிள்ளைத் தமிழ்ப்பாடல்
நாளுநாளும்பாடவே. (1)

(1) தவள நிற பூமேவு மாங்குயில விரும்பி வாழ் புனிதன்—வெண்ணிறத்தாமரையில் அடைகின்ற குயிலொத்த கலைமகள் விரும்பி நாவில வாழ்கின்ற பிரமன். உந்தியில் பிரமனைப் படைத்தது காண்க. வால இபம்—பெரிய யானை (கசேநதிரன்). ஒப்பில் மணி—விலை மதிகக முடியாத கௌஸ்துபரத்தினம்; குருகை நகர்—நம்மாழ்வார் பிறநத சிறப்புடையது (இங்குள்ள திருமாலின பெயா ஆதி நாதர்); நவரசம்—உவகை, வெகுளி முதலியன.

## காப்புப் பருவம்.

### திருமால்

504 உக்கிரநர சிங்கவடி வாகமத லைத்தலை
உதித்தகரு மணிவண்ணனை
உம்பரக......தி பரமபத நாதனைவிண்
ணோர்க்கமு தளித்தமாலை

விக்கிரம சொரூபனைப் பகற்கதிர் மனத்துடன்
வெளிவிட்ட சூத்திரதரனும்
விமலனை....பரை யாழிநீர் வண்ணனை
வியந்தனு தினந்துதிப்பாம்

சக்கர கரதல சுமுகனிர வஸ்ர்கள்கலி
கோபதாட் டீகணீத
குணவ சரச நய......வன்முத்து பூபனருள்
தனம்புத்தி ரன்மேன்மையா

முக்கியவத ஞம்புய வசீகர மடந்தையர்
மோகிக்கு மதனராசன்
முப்புவி யே......திகழு மருண சலாதிபதி
முத்தமிழ்க் கவிதழையவே. (1)

(1) மதலைத் தலை—தூணிடம ; விககிரமம்—மிகு பலம்.

## சிவபெருமான்

505 கயிலைப் பணிவரை யுரைத்த பிரவாகங்
கங்கை வுவந்தபிரான்
கலைமான் மழுவிலை வேல்........... ...
...............தலவித்தாரன்

மயிலைக் கடவும் குருதே சிகனை
வணங்கிய நம்பரமன்
வான்பிறை சூடுந் தாண்டவ ராயன்
மலர்த்துணை போற்றுதுமியாம்

குயிலைப் பணிமொழி கொண்டுடன் வென்றிசை
கூறுஞ் சிறு மடவார்
கோமான் பூமான் இணைபிரி யாதருள்
கூருஞ் செகராசன்

வெயிலை...............டையான்
மேன்மையில் நன்குடையான்
வேள்ரு ணசலப் பூபன் மகிழ்ந்த
விசைத்தமிழ் நன்குறவே. (2)

(2) கங்கைப் பிரவாகம் எனக. உவநத—தலைமேல வைத்து வந்த ; மயிலைக கடவும் பரமன்—பிரணவத்திற்குப் பொருள தெரியாத பிரமனைச சிறை செய்த முருகன பின் சிவன் அதன் பொருள் கேட்கக கூறினவன எனவே “ குரு தேசிகன் ” என முருகனைக் கூறினார் ; தாண்டவராயன்—நடனமாடுபவன.

## முருகன்

506 கற்பகச் சோலையுஞ் சாலையுஞ் சூழ்ந்த
.............ங்
காரிகே ளவுமாரி திரிசூலி பழநீலி
முக்கட் கபாலிபாலன்

பொற்பிலகு வடிவேல் விடுத்தசுரர் இளையெலாம்
பொன்றுவித் திடு........
பூர்ணோத யசொரூ பானந்த முருகனிரு
பொற்பதம் வழுத்துவன்யான்

சற்புருட மகமேரு நிகர்சொலபி மானவுத்
தண்டபிர சண்ட....ல்
சனரட் சைடிரி யுத்தம குணதரன்
சவுலப்பிய தியாகவாரி

உற்பன மிகுத்தவறி வாகர தயாபரன்
உற்ற தரங்கமுரவோன்
........ச்சந்திர னருணச லேந்திரனன்
புற்றபிள் ளைத்தமிழ்க்கே. (3)

(3) முக்கன் கபாலி—மூன்று கண்களையுடைய சிவன் ; விடுத்து அசுரர் எனக ; சவுலப்பியம்—சுலபமாந்தன்மை ; உற்பனம்—கல்வி.

### திருச்செந்தில் முருகன்

507 புகரற்ற பச்சிளந் தோகைமயில் வெற்றிவாம்
புரவிவேற் குமரேசனைப்
புகர்முக மதுகொண்ட விருசெவிக் கவுள்மதப்
போர்வா ரணத்துணை வனைக்

ககனமட் டுயர்கோ புரத்திரு மருங்குமொளிர்
கதிர்மதி மருண்டுலாவக்
காதல்கூர் செந்திலம் பதிவந்த கந்தனை
உகந்துயாம் சிந்தைசெய்வாம்

நிகரற்ற பிரதாபப் பிரசங்கக் கடற்புலவர்
நெறிகுணங் குலமுணர்ந்து
நேரறிந் துபசரித் துபகார சிறந்தாரம்
நித்திய மளிக்கும் வள்ளல்

தகரக்கு ழற்பெணுர் மதனனரு ணசல
தயாபரன் வாசுபுத்திரன்
சரச்சர வணமுத்து ராசேந்திரன் மதலைபெறு
தண்டமிழ் தழைவதற்கே. (4)

(4) புகர் அற்ற—குற்றம் அற்ற, மயில் வாகனமாதலால் மயில் புரவி என்றார் ; புகர் முகம்—புள்ளிகளையுடைய முகப்படாமுள்ள முகம் ; கவுள்—கன்னம் ; வாரணம்—சண்டு விநாயகன் ; கதிர்மதி—சூரிய சந்திரர், உம்மைத் தொகை ; பிரதாபம்—கீர்த்தி ; ஆரம்—முத்து மாலைகள் ; தகரம்—ஒரு வகை மயிர்ச் சாந்து.

### விநாயகன்

508 மருப்பைத் தனித்தொன் றெடுத்தாசி
வடிவத்தி னுக்கிக் கரத்தெடுத்து
மாபா ரதமாங் கதைப் பொருளின்
பகுப்புத் தொகுத்து விரித்தொளிர்பொற்

பொருப்பைப் பணித்துத் திருத்தியதில்
பொறித்த திறத்த மதத்த துணைப்
புழைக்கைத் துதிக்கை களிற்றையுவப்
பொடுசிந் தித்துத் தொழுதெழுவாம்

தருப்பைச் சயினத் தெழுநாள்மெய்த
தடங்கண் வளர்வான் போனறுறங்காத்
தாமோ தரநன் மருகன்மலர்ச்
சரணம் மறவாத் தகுதிபெற்றான்

கருப்பைத் தரித்தாட் டியசாற்றைக்
கலந்த சுவைப்பான் மொழிவிளம் புரி
கருணை யருணு சலம்பிள்ளைக்
கவியைப் பாடித் துதிப்பதற்கே (5)

(5) மருப்பை............ களிற்றை ; முன் பிள்ளைத் தமிழ்க் கொத்து 34-ம் பாட்டின் குறிப்பில் இவ்வரலாறு காண்க. பொன் பொருப்பு—மேருமலை. புழைக்கை—துளையுடைய கை ; தருப்பை..................வளர்வான்—இவன் ஸ்ரீ ராமன். வருணன் கடலணை கட்ட துணை புரிதற்காக அங்ஙனிருந்தான். உறங்கா—செய்யா என்ற வாய்ப்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்தது. மருகன்—ஈண்டு முருகனைக் காட்டியது. கருப்பு—கரும்பு "மென்றொடர்மொழி........மனனே" என்ற விதியால் ஆனது. பால் மொழி— உவமைத் தொகை. சுவை மொழி பால் மொழி யெனக் கூட்டுக.

### நம்மாழ்வார்

509 கற்றசொற் பாவலர் தம்பிரா னெம்பிரான்
காரியார் நங்கை புத்திரன்
ககனநெடு முகடுகடு மெடடோங்கிய திருப்புளிக்
காவணத் திலகுகதிரோன்

குற்றமற் றுலகெங்கும் ஞானப் பிரகாசக்
கொழுந்துவிட் டுப்பரந்த
குருகைநம் மாழ்வார் பதாம்புய மலர்த்துணை
குறிக்கொண்டு தொண்டுபுரிவாம்

பற்று மவற்றறுரு மிருளந்த காரப
பரப்பகற் றும்திறத்தாற்
பாற்கதிர் சிறந்தவாண முகசுந்த ரோதையன்
பாக்கிய சிலாக்கிய நிபுணன

உற்றவர்க் கதித்தியாக கனதான பாரியன்
புள்ளவரு ணசலேந்திரன்
உகந்தக மகிழ்ந்தபிள் ளைக்கவிப் பாடல்
உலகமெங் கும்பெருகவே. (6)

(6) காரியார் நங்கை புததிரன்—காரியார் என்பவருக்கும் உடைய நஙகையார் என்பவர்க்கும் பிறந்தவர். புளிக்காவணம்—அழுதல், பாலுணணுதிருத்தல் , ஆகியவைகளைக் கண்ட தாய தந்தையா அவ்வூாக் கோயிலிலிருந்த புளிய மரத்தடியில் தொட்டிலில வளர்த்திப் போற்றினர். அனந்தாழ்வாரே அத்தகைப் புளிய மரமாக வநதிருந்தனர். குறறமற்...... பரந்த—இவரிவ்வாறிருக்க திவ்விய தேச யாத்திரை செனற மதுரகவியார் அயோத்தியிலிருந்த போது ஓரொளி தெரிய அதுவே பற்றுக் கோடாக வநது நம்மாழ்வாரைக கண்டு கேள்விகள் பல கேட்டுச் சீடரானர். அனதானபாரி—அன்னதானம் செய்வதில் பெரியன். பாரி + அன்புள்ள என்று பிரிக்க.

### பிரமன் முதலியோர்

510 அரவணை யிற்றுயில் மரகத மணிவண்ணன்
அணியுத ரத்துந்தி
அம்புய மலர்மேல் தோன்றிய நான்முகன்
அட்ட வசுக்கள்விசும்

பிரவி யெனப்பகற் பொற்பன் னிருவ
ரிதன்றிப் படரநில
வாலி மகானென்று விளங்கும் கலைமதி
வரகன் னியர்மாதர்

பரவத் தருமருள் பெற்றவ ரெழுவர்கள்
பண்புறு பிதிர்த்தேவர்
பழைய மருத்துவ ரதுமதிரு நாதர்
பாதம் வணங்குதுமியாம்

குரவர்க் கடிமைத் திறமே புரியுங்
குவளைப் புயசயிலன்
கொங்கலர் சண்பக நாண்முகை நாசிகை
கூறுங் குமிழ்மின்னர்

*சரசத் துவதுரை சரவண முத்துள
மகிழ்ந்ததுவ் வறிவாளன்
சமுகா திபர்புகழ் அருண சலதண்
டமிழப் பண்புறவே. (7)

(7) உந்தி – கொப்பூழ் ; இரவி......பொன்பன்னிருவர் – அழகிய பன்னிரண்டு சூரியர் ; வாலி – வெண்மையையுடையவன் (வால் – வெண்மை) வாலி கலைமதி என்க, (மதி – சந்திரன்) ; பரவ அருள் தரும் கன்னியர் மாதர் எழுவர்கள் – சப்தகன்னியர், அபிராமி, வராகி, காளி முதலியோர். மருத்துவர் – பதினேரு பேர் ; குரவர் – ஐம்பெருங்குரவர், தந்தை, தாய் முதலியோர்; குவளைப்புய சயிலன் – செங்கழுநீர்மாலை கொண்ட தோள்களாகிய மலையை யுடையவன்.

* இவ்வடி மிகையாக உள்ளது.

## செங்கீரைப் பருவம்.

511 பார்பூத்த பூம்பொகுட் டகவிதழ் நெகிழ்ந்துநறை
 பாய்கமல மண்டபத்துப்
பரிவுறும் பேட்டனங் குடிகொண்ட தொப்பவிரி
 பத்மமா னரசிருந்து

நேர்பூத்த கருணைவிழி மழைமாரி சொரிவதன
 நிருபனட லாழியொலிபோல்
நிகழ்கால மணமுரசு செயமுரசு கொடைமுரசு
 நின்றதிரு மணிமுன்றிலான்

வார்பூத்த குங்கும கதம்பப் படீரமான்
 மதபயோ தரமினுர்க்கு
வாலசீ வகனன கோலாக லப்பிரவுட
 மதிமந்திரி இந்திரதருவாய்

*வளமைபெறு தருவைய முத கவர்ந்த புதுவை
 நகர்வந் தவதரித்தோன்
சீர்பூத்த கல்விகவி தைப்பொருள் விளங்கநீ
 செங்கீரை யாடியருளே
செல்வமுகி லெங்களரு ணாசல நராதிபதி
 செங்கீரை யாடியருளே. (1)

(1) பத்மமான் – திருமகள் ; நிருபன – ஈண்டு திருமால ; அடல் ஆழி – வலிய சக்க ராயுதம் ; அடல் ஆழி ஒலி போல் – சககராயுதம விடின் சப்தித்துககொண்டு செலவது போன்றொலிக்கின்ற முரசு எனறும் (அல்லது) அவன துயிலகின்ற வலிமைமிகக பாறகடல போன்று ஒலிக்கின்ற முரசு எனறும் கொள்ளலாம். வாலசீவகன – தூய்மையையுடைய சீவகன் போன்ற ; சீவகன் – சச்சந்தனுக்கும் விசயைககும் பிறந்தவன. பிரவுடன – பெருமை மிக்கவன.

512 முக்கட் பராபரன் செஞ்சடைக் காடரவு
 முதிரிளம பிறை யறுகுதேன்
துமொய்த்தசிறு தும்பையுட னக்குமணி கொககிறகு
 முற்றுமொரு மித்தணிந்தோன்

புக்கத் தினங்குபொதி யரசவரி புறபவைப்
 பைந்தொடி யுவந்த பெம்மான்
பளபளென நீற்றெலி பழுத்தமழு வாளியுற்
 பணிமிக்க தத்துவத்திற்

கக்கிச பிரணவப் பொருள்வினவ வுண்மைமொழி
 கனிவுதர வினிதுரைத்த
கந்தனைப் பரிமள சுகந்தனைச் சிந்தனைசெய்
 கற்பகா டவியொத்தநீ

* இவ்வடி மிகையாக உள்ளது.

செக்கச் சிவந்தமுர்த மொக்கச் சுரந்தொழுகு
செங்கீரை யாடியருளே
தென்புதுவை வாழுமரு ணாசல நராதிபதி
செங்கீரை யாடியருளே. (2)

(2) அரவு – பாம்பு ; அக்கு – எலும்பு ; மணி – உருத்திராக்கமணி. முற்றும் ஒருமித்து – முழுவதும் ஒரு – சேர ; அரசஅரி – தலைமை பொருந்திய இமயமலை ; உற்பவம் – உற்பத்தி ; பைந்தொடி – பார்வதி ; மழுவாளி – மழுவாயுதத்தை ஆளுபவன ; உற்பனம – கல்வி ; சகசிசம – பிரயாசம்.

513 வண்டின மணுகா கனிவா யிதழ்முன் காசல
வாருதி வந்துதியா
வமுதக் கனிரச மின்சுடர் வீசிய
வான்மதி யுடையபிரான

உண்டிலை யென்றுரை யாத குபேரன்
உததித் தடவெட்டோ
டுலவிய வாரண வாம்பரி யுள்ளம்
உணர்ந்தறி கின்றநளன்

மிண்டிய கண்டகர் தெண்ட ணிடப்பணி
விடையுத வியசோமன்
மேவலர் வலையத் தரணி புரந்துயர்
விக்கிரம ராசன்மடுத்

தெண்டிரை துன்றிய புதுவைப் பதியாய்
செங்கோ செங்கீரை
திருவருள் பெறுமரு ணாசல முகிலே
செங்கோ செங்கீரை. (3)

(3) சலவாருதி வந்துதியா அமுதம் என்க. கனி ரசம் – கனியின ரசம் போன்ற சுவை மிக்க சொற்களையுடையவன். இனசுடா வீசிய வான்மதியுடைய பிரான – இனிய தண்ணொளி வீசுகின்ற உயர்நத மதியையணிநத சிவபெருமானையொததவன் (அல்) தன் புகழால ஒளி வீசும் உயர்ந்த புததியுடையவன என்னலுமாம். உததி – கடல ; வாரணவாம்பரி – யானையும் தாவும் குதிரைகளும் (உம்மைத்தொகை) மிண்டிய கண்டகர் – நெருங்கிய கொடியோர் ; பணிவிடை – வேலை ; மேவலர் தரணி வலையம் என்க ; துன்றிய – நெருங்கிய.

514 காமா(வு) தருகா வடுவிழி பாய்ந்து
கலக்க வலக்கணுறுங்
காதகர் பாதகர் இறுமாந் திழிதொழில்
கற்ற மதோன்மத்தர்

பூமா னெடுமெழில் மாமா னணுகாப்
பூதா முடர்தம்மைப்
பூசா பலமக ராசனெ னக்கலி
புகலா தவனிதொழுங்

கோமா னிவனென வலியோ ரொளியோர்
கூறுங் கொடைநிபுண
கொங்கர் தெலுங்கர் கலிங்கர் வணங்கிய
கொற்றவா மகிழரசே

தேமாங் கனிகத லிக்கனி மொழியாய்
செங்கோ செங்கீரை
திருவருள் பெறுமரு ணசல முகிலே
செங்கோ செங்கீரை. (4)

(4) அலக்கண் – துன்பம்; பூமான் – பூமிதேவி; எழில மாமான – இலக்குமி.

515 தடமொத்த நாண்மலர்வி கற்பத்து வரவுபொரு
ருமறைத் தோற்ற மென்னச்
சந்தன தெர்குதி நாப் பண்புதிய கற்பகத்
தருவுயர்ந் தொளிர்வதென்னச்

சுடர்வச்சிர மணிதுற்று மகுடத்தி னுச்சியில்
தோன்றுமா ணிக்கமென்னச்
சுரிமுகச் சங்கக் குரேத்திடை வலம்புரி
துலங்கிய சிரேட்டமென்னப்

படரு நீ ருண்ட நெடு விண்ணில்நட் சத்திரப்
பத்தியில் சந்திரனென்னப்
பகீரதி குலத்துவே ளாண்மரபில் வந்துற்
பவித்திசை நடாத்திமருளாத்

திடபுத்தி சாலிசர வணமுத்து பாலன் நீ
செங்கீரை ஆடியருளே
சீர்பெருகு மிண்சொலரு ணசல மகிபனே
செங்கீரை ஆடியருளே (5)

(5) நாப்பண் – நடுவிடம்; கற்பகத்தரு – கற்பக மரம்; துற்று – உள்ளே அமுக்கின; சுரி முகம் – சுழிந்த முகம்; பத்தி – வரிசை; பகீரதி குலதது வேளான் – கங்கைகுல வேளாண் மரபு; மருளா – ஈறுகெட்ட எதிர்மறை பெயரெச்சம்.

## தாலப் பருவம்.

516 கருவைப் புனிதப் புனலில் செலவிடு
கற்பனை யைத்தெளியார்
காதலி யுடன்மண வாள்ன் முயங்கிய
கட்டளை யைக்குறியார்

உருவைப் பருவத் தொடுபரி பாலனம்
உற்ற சமத்துணரார்
உச்சித மாயை மயக்கிய கருமத்
துறைகா ரண நினையார்

குருவைப் பணியத் துணிவற் றிருவினை
கூடா நெறிசேரார்
குவலய வாழ்க்கையி தென்று சினந்து
குழைந்தழல் தவிர்தி செழுந்

தருவைப் பரவைப் புதுவைப் பதியாய்
தாலோ தாலேலோ
தருமத் துரையரு ணாசல மகிபா
தாலோ தாலேலோ (1)

(1) முயங்கிய – தழுவிய ; உசிதம் – தகுதி ; பரவைபபுதுவை – கடல் ஆழ்நத புதுவை என்க. கருப்பிறக்கும் விதம், கணவன் மனைவி சோகசை, பருவத்தின பிரகாரம் வடிவம் மாறுகினற விதம், தகுதி பொருநதிய மாயை மயககி கருமத்தில ஈடுபடுத்துவது. குருவைப் பணிநது இருவினைகளும் அற்று பிறவா நெறியடையும நெறியை எண்ணுதது, ஆகிய இவை தாம நிலவுலக வாழ்க்கையென்று கோபித்து வருநதி அழுகினறாய். அவ்வழுவதைத் தவிர்வாயாக. அழல – அல்வீறறு எதிர்மறை வியங்கோள். தருவை – கற்பகத்தருவினை யொத்த.

517 சுந்திர மின்படர் சந்திர வதனத்
துணைவிழி மையெழுதித்
துகளறு பிறைநிகர் வாணுதல் நடுவிற்
சோபித பாடலமாம்

சிந்துர முங்கத் தூரியு மிருவகை
திகழத் திலதமணிந்
திந்திர விற்போ லிசையும் புருவத்
திற்பொலிசாந்தெழுதி

மந்தர திண்புய முன்கையில் வாய்ந்த
சுடரு மணித்தொடியும்
மரணிக் கப்பொற் கடகமு மிலகநல்
மணிவட மசையமகா

தந்திர மந்திர துங்க வசீகரா
தாலோ தாலேலோ
தருமத் துரையரு ணாசல மகீபர்
தாலோ தாலேலோ (2)

(2) பாடலம் – சிவப்பு ; சிந்துரமும், கத்தூரியும் என்க. சாந்து – மை.

518 வண்டிசை பாடித் திரண் முகை யிதழலர்
மட்டு நிறைந்துநரு
வழியுந் தருணத் துதரம் நிறைத்து
மருண்டு வெருண்டு துதைந்

தெண்டிசை படரும் பரிமளம் விரையுட
னேற்றுறை சுண்ணமளைந்
திரவு பகற்சுழல் செங்கழு நீர்மா
லிகைதுவள் மணிமார்பா

வெண்டிரை மோதிய வதணு ரமப
மெனப்புகழ் சனனிதியில்
விண்ணவர் தொழுவடி வேலவர் இனிதருள்
மீறிய சுமுகனெனத்

தண்டிகை மனனவர் மெச்சிய மதகுஞ்
சரமே தாலேலோ
தருமத் துரையரு ணுசல மகிபா
தாலே தலேலோ (3)

(3) மட்டு – தேன ; உதரம – வயிறு ; வணடு உதரம் நிறைத்து எனக. சுண்ணம் அளைந்து – மகரநதப பொடிகளைப் பூசி ; செஙகழுநீா மாலிகை – குவளை மாலை ; வெண திரை மோதிய – வெளளிய கடலலைகளால மோதபபட்ட ; மத குஞ்சரமே எனக.

519 பரசத் துருவைத் திரணத் தனுவாய்ப்
பண்ணிய செயவிசயா
பணிவித் துருவைக் கனகா சலநேர்
பாவித் தருள்வலவா

அரசர்க் கரசிவ னெனறுல கத்தவர்
அவர் புகழ் கனியோகா
அற்புத மாதவா செப்பிய சொற்படி
அப்படி யாமதுலா

புரசைக் களிறுஞ் சேர்மன கமனப்
புரவியும் இருநிதியும்
பொறபணி யுந்திறை வாங்கிய வேந்தர்
புரந்தருள் பொழிமுகிலே

சரசத் துரையே புதுவைக் கரசே
தாலோ தாலேலோ
தயவுசெய் யருணு சலமகி பாலா
தாலோ தாலேலோ (4)

(4) பரசத்து உருவை........செயவிசைசா – பரசுராமன வில்லை அறபமான விலலாகச செய்த வெற்றி பெறறவனே. (அரசரைத திருமாலாகச சொலவது கவிமரபு) கனக அசலம – மேருமலை ; பணி......வலவா – தருவிககிரமாவதாரததில காணக. "அரசாககு அரசு இவன எனறு" என்க. அதுலன் – குறறமறறவன. சோமனகமனப்புரவி – சோநத மனவேகமொாக கச் செல்லும் குதிரை. கமனம் – செல்லுகை.

520 எந்தத் திசையினு மின்னு னிவனென
றேபுகழ் பெயர் பெற்ருய்
எக்கா லமுமன சத்திர சாலை
இயற்றிக் கதியேறறுய்

சொந்தத் துழவதில் வரு கொழு மீதில்
சோமன் போல் சேர்த்தாய்
துட்டர் மதத்தை யடக்கிக் கருணை
சுரந்திர வலர்கலிநோய்

சிந்தத் தருமத் துறைபிச காமல்
செல்வத துறல் பார்த்தாய்
தேனும் பாலுங் கண்டும் பாகுஞ்
சீனியு மொத்தருசிச்

சந்தத் தமிழ்பழ குமகுல மணியே
தாலோ தாலேலோ
தனபதி நிகரரு ணுசல மகிபதி
தாலோ தாலேலோ (5)

(5) சோமன் – குபேரன் ; கொழு – ஏர்ககாறு ; "கருணை சுரநது இரவலர் கலிநோய இநத" எனக. "தமிழ பழகும குலமணி" எனக.

## சப்பாணிப் பருவம்.

521 பளபளென மாணிக்க வெயில்விரித் திலகுபொற்
பட்டமிடு நெற்றி நடுவில்
பத்தியிடு மாகதச் சுட்டிய தசைந்துதைய
பானுவினை நிகர்க்கு மென்னக்

களபமணி மார்பில் வயிடூரிய பொற்பணி
கலந்த வெண் டாளமாலை
கட்டழகு பெற்றொளிரும் வச்சிரமணி மாமைர
கதமணி நிறைந்த மாலை

துளவமால் கவுத்துவ மணிக்கனக மாலையிவை
துன்னியே பின்னலாடத்
துடிமிடைப் பிடிநடைச் செம்பவள வாய்ப்பசுந்
தோகையர்கள் கண்டுவப்பத்

தளதளென வளையுளொலி கலகலென நாதமிகு
சப்பாணி கொட்டியருளே
தரும நெறி பழகு மருணுசல மகிபனே!
சப்பாணி கொட்டியருளே. (1)

(1) பானு – சூரியன் ; தாளம் – முத்து ; துளவமால் – துளபமாலையணியும் திருமால் ; வளை – வளையல்.

### வேறு

522 மறுவகல் முழுமதி முகம்வெயர் வொழுகவில்
மத்தக முற்பணிய
வடமலை நிகரிரு புயமலை விற்றொழில்
மல்தொழி லளந் தேறச்

சிறுவரை பலகவர் தருகர மலரிணை
    செக்கர் சிறப்புபாண்மை
திகழ்தர இருபுடை வியரது குழைய
    விசித்திர மலர்த்தாளில்

இறுகிய பரிபுர வொலியரை வடமணி
    எண்டிசை யுங்குமுற
இதனிடை முதுகு நெளித்து நிமிர்த்து முன்
    இட்டு மலர்ந்தி தழ்வாய்க்

குறுமுறு வலிள நிலவதி லிசையக்
    கொட்க சப்பாணி
குருவருள் பெறுமரு ணுசல மகிபா
    கொட்டுக சப்பாணி. (2)

(2) மறு – களங்கம்; விலமதததகம் – ஒளி வாயநத தநதங்களையுடைய யானைகள்; வடமலை – மேருமலை; சிறுவரை பலகவா – சிறிய மலைகள முதலியன போரிடடுக கவாகின்ற, வரை – ஈண்டு இடவாகு பெயராய் ஆணடு வாழபவரையும் குறிககலாம். வியரது – வியர்வை யானது. பரிபுரம் – சிலம்பு; அரைவடம இடுப்பில கடடும ஆபரணம.

523 குடநட மிடுமுகில மருமகன் விண்டொடா
    கொக்கென நிறபோனைக்
குறிவழி யமர்பொரு மயில்கட வியசேய்
    குக்குட மட்டோனைக்

குடதிசை மறிகடல் வரிவளை தவழ்கரை
    யிற்குடி புக்கோனைக்
குறமகள் புலவாகள் குலமகள் மருவிய
    கொற்றவ னைப்பாரில்

குடநிறை சுவைதரு கவிபகர் புலமைக்
    கொத்திசை கற்றோனைக்
குமரனை யனுதினம் மனமுற நினைவது
    குத்தகை பெற்றோனே

குடமுலை வனிதையர் விழிக வரெழிலகொடு
    கொட்டுக சப்பாணி
குருவருள் பெறுமரு ணுசல மகிபா
    கொட்டுக சப்பாணி (3)

(3) குடநடம் – குடக்கூத்து. பாட்டின குறிப்பில் காண்க. கொககு – மாமரம சூரபதுமன் இவ்வாறு நினறுன். குக்குடம் – கோழி; குடதிசை.........புககோனை – இது திருசசெநதி லாகவிருககலாம். குத்தகை – நியமம், எபபொழுதும் ஒருபடியாகச செயவது.

524 குயிலிசை பழகுபெண ணரசியர் மகிழக்
    கொட்க சப்பாணி
குலமுறை பழிவழி தொடர்நம தியல்பிது
    கொட்டுக சப்பாணி

குயில்நிற வடிவுள் மதலைய ருடனெதிர்
கொட்டுக சப்பாணி
குளிர்மல ரடிபல வாமரு வலர்தலை
கொட்டுக சப்பாணி

குயிலிசை கமழ்களி ரெனவளர் கரமலர்
கொட்டுக சப்பாணி
குடிதழு வியமுடி நிருபர்கள் புகழக்
கொட்டுக சப்பாணி

குயில்மயில் நிறைதிகழ் புதுவையி லரசே
கொட்டுக சப்பாணி
குருவருள் பெறுமரு ணாசல மகிபதி
கொட்டுக சப்பாணி (4)

(4) பழிவு அழி என்க ; பழிவு – பழிப்பு ; மருவலர் – பகைவர் ;

525 தண்டை சதங்கை யலம்ப வெருண்டு
தவழ்ந்து தவழ்ந்துவரத்
தாய ரெடுத்து மடித்தலை வைத்துத்
தழுவச் சிறியகுடப்

பண்டி குலுங்க வகன்று துளங்கிய
பருவா வதுவிர(வ)ப்
பணிமொழி குளறிக் கதறிப் பருகிய
பால் மணம் வீசநறுந்

தொண்டை யிளங்கனி வாய்மு தொழுகத்
துவரித மொளிதழையத்
தூய்மணி மகரக் குழையணி பணிகள்
துலங்கு புயத்திலகக்

கொண்டை சரிந்து விரிந்துல வத்தனி
கொட்டுக சப்பாணி
குருவருள் பெறுமரு ணாசல மகிபதி
கொட்டுக சப்பாணி (5)

(5) பண்டி – வயிறு ; தொண்டைக்கனி – கொவ்வைக்கனி ; மகரக்குழை. சுறுமீன் போன்று செய்தணியும் குண்டலம்.

## முத்தப் பருவம்

526 புவியிடத் தெழுவரைக் கணுவின்முத் தனலிடைப்
பொரிவதா லதனை வேண்டேம்
புகர்முகக் கிம்புரிக் கோட்டு முத் துடல் வெதுப்
புறுவதா னீது கொள்ளேம்

அருவிமணி வெண்பணில முத்துச்சு றவின் முட்டைக்
கரத்திறல் கண்டு தீண்டேம்
அரும்பிய கரும்பின்முத் தகல்செக்கி லுடைபடுவ
தாமென விரும்பி வாங்கேம்

குவியுமிதழ் வனசமுத் தறுகால் பதிந்துபுரை
கொண்டதென் றதுவிரும்பேம்
குமுறுதிரை வாருதியி லிப்பிமுத் துப்புநீர்க்
கொண்டதது வென்று மதியேம்

கவிரிதழ் விரிந்தசெங் குமுதவா யமுதொழுகு
கனிவாயின் முத்தமருளே
காவிமலர் மேனியரு ணாசல மகிபநின்
கனிவாயின் முத்தமருளே (1)

(1) வரைக்கணு – மூங்கிலின் கணுககள்; எழுவரை – வினைத்தொகை; புகர்முகம் – யானை; செக்கு – ஆலை; அறுகால் – வண்டுகள், புரை – குற்றம்; கவிர் – முள்முருக்கம்பூ; மூங்கிலில் தோன்றிய முத்து அனலிடைப்படுவதாலும், யானைக்கோட்டிலுண்டாகும முத்து உடல் வெதுப்பும் மதநீரினல் மூழகுவதாலும், சஙகீன்ற முத்து சுறாமீனின முட்டைகளோடு கலந்திருப்பதாலும், கரும்பின் முத்து ஆலையிலுடைபடுவதாலும், தாமரையில தோனறிய முத்து வணடுகள் பதித்துக் குற்றமடைவதாலும, கடலில சிப்பியினின்றுண்டாகும் முத்து உப்பு நீர் கொண்டதால் அவைகளை விரும்ப மாட்டோம். உனது வாயினுடைய முத்தமே சிறந்தது அதனைத் தருவாயாக என்கிறார்.

527 பொற்பிலகு நெடுமடல் லரம்பைதிகழ் முத்துவாட்
பூட்டிவெட் டுப்படுவதால்
பூண்பதற் கழகுரு தென்றுடன் வரைந்து நம்
புந்தியாலது சிந்தியேம்

சொற்றழகும் துரிதச் சுவைகனியு மாதரார்
சுந்தரக் கந்தரகத்தில்
துகள்தவிர்த் தொளிர்முத்தம் மேதையுட் பட்டுவெண்
தோன்று தனைக் கருதிலேம்

பற்பல வகுப்பாகும் மீனத்தின் முத்தம்நீர்ப்
பரவையுட் சேற்றில் முங்கிப்
பரதவர் வலைக்குட் படாதெனபதால் விருப்ப
பற்றதனை யிச்சித்திடேம்

கற்பூரப் பரிமளங் கமழ்பவள இதழிலகு
கனிவாயின் முத்தமருளே
காவிமலர் மேனியரு ணாசல மகிபநின்
கனிவாயின் முத்தமருளே (2)

(2) அரம்பை – வாழை; புந்தி – புத்தி; கநதாம் – கழுத்து; மேதை – தசைக்கொழுப்பு பரதவர் – செம்படவர்; இங்கு வாழையிலுண்டாகும் முதது வெட்டப்படுவதாலும், மாதாது கழுத்தில் உள்ள முத்து கொழுப்பில பொருந்தி வெளித் தொன்றுததாலும், மீனத்தி

னின்று தோன்றும் முத்தோவெனின் பரதவர் வலை வீசும்போது கடற்சேற்றில் மூழ்கி வலைக்குட்படாததாலும் அவைகளை விரும்பவில்லை. உனது முத்தமே சிறந்தது அதனைத் தருக என்கிறார். பவள இதழ – உவமத் தொகை.

528 வடியிடுந் தெனுமரச தாளிகக் கும்பாட்டில்
வழியுஞ் செழுஞ்சாறு நீன்
மடவாரம் பைக்கனியு மாங்கனியு முட்படா
வருக்கைப் பலாக்கனியுமான்

பிடிமுலைத் தலைநடுக்கண் வழிசுரந் ததுநிரப்ப்
தரவிட் டொழுக்கு பாலும்
பேசுதற் கினியகற் கண்டுமொன் றுக்கிருசி
பெறுபஞ்ச தாரை விரவிப்

பொடிபடுத் தியகுளத் துட்கலந் தமுதமாம்
புணரியில் மிகுத்த செஞ்சொல்
புலவோர்க ளுள்ளங் களிப்பவிக் கீரமும்
பழகமென் மனதுவப்பக்

கடிகமழ் மலர்க்குமுத வாயிதழ் சிவப்பநின்
கனிவாயின முத்தமருளே
காவிநிகர் மேனியரு ணசல மகிபநின்
கனிவாயின் முத்தமருளே. (3)

(3) தாளி – பனை ; அரமபைக்கனி – வாழைப்பழம் ; வருக்கை – சுளை ; படா – செய்யா என்ற வாய்ப்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்து நின்றது. பஞ்சதாரை – சருக்கரை ; கீரம் – கிளி.

பாட்டில்—ஓர்வகைப்பாத்திரம், பனஞ்சாறு, முக்கனி, பசும் பால், கற்கண்டு, சர்க்கரை சேர்ந்த ஒரு கடலைக்காட்டிலும் இனிய சொல என்க.

529 முத்தவ மொய்த்த புகழ்ப்பயிர் வைத்தநின்
முத்த மளித்தருளே
மூதுல காள்பவர் ஆதர வானநின்
முத்த மளித்தருளே

முத்தர்கள் சித்தர்கள் சித்த முவக்குநின்
முத்தமளித்தருளே
மோகமி ஞர்பர தாக மடங்கனின்
முத்த மளித்தருளே

முத்தலை வர்க்குள் முதற்பொருள் பற்றுநின்
முத்த மளித்தருளே
மூடிக வாகன னீரடி பரவுநின்
முத்த மளித்தருளே

முத்தமிழ் கற்றவர் மெய்த்த திறத்தநின்
முத்த மளித்தருளே
மோகன வேளரு ணுசல பூபநின்
முத்த மளித்தருளே (4)

(4) மோக . . . . அடங்க - ஆசையையுடைய பெண்கள் மேலானமோக தாகம் தீர ; முத்தலைவர் - சிவன், திருமால், பிரமன, மூடிக வாகனன - விநாயகன் ;

530 முத்தின்சிவிகையு முத்தின்கவிகையு தரக்கண் டருளுநின
முத்தந் தருக முத்தமே
முதிர்வள மீறிய புதுவையில் வளருமுகில்நின்
முத்தந் தருக முத்தமே

முத்தின் கவிகை நிழற்கண் டுலவுநின்
முத்தந் தருக முத்தமே
முகமதி சேரொளி திகழ்கனி வாயிதழ்
முத்தந் தருக முத்தமே

முத்தின் சுடிகை துலங்குந் தலைவநின
முத்தந் தருக முத்தமே
முழுமதி யூகிநின் இலவிதழ் நிலவுமிழ்
முத்தந் தருக முத்தமே

முத்தின் சுடர்விடு துப்பொண றியநகை
முத்தந் தருக முத்தமே
முகிலரு ணுசல மகிபதி சுவைபெறு
முத்தந் தருக முத்தமே. (5)

(5) சிவிகை - பல்லக்கு ; கவிகை - வெண் கொற்றக்குடை ; சுடிகை - நெற்றிச் சுட்டி ; யூகி :—உதயணன் மந்திரி. இவன் மிகவும் மதிபடைத்தவன். துப்பு ஒன்றிய நகை— பவளம் போன்ற உதடு சேர்ந்த பல்.

## வாரானைப் பருவம்.

531 கனகத் தழுத்திப் பதித்திலகு பச்சைமர
கதப்பணி தரிக்க வருகக்
கன்னபூ டணமுத்து மாலைவச் சிரமாலை
கண்டீர மணிய வருகத்

தினகரக் கதிரெறிக் குஞ்சுடர்க் கைவளைகள்
சேர்க்கப் பணிந்து வருகச்
சிற்றடிப் பொற்பாத சாலம சிலம்பொலி
சிலம்பவிரை வாகவருக

மனகவன வாம்பரி மடித்தடி பதித்துவரு
மார்க்கமிது கண்டு வருக
மார்க்கண்ட னெங்களரு ணுசல நராதிபதி
வாழ்த்துபே ராளன்வருகப்

பனகமண் டலநடுப் படமிதித் தேறுகோ
பாலகிட்டி னன்போனிப்
படிப்புகழ வந்தவரு ணசல நராதிபதி
பண்பாக நீவருகவே. (1)

(1) கனகத்து பொன்னில் ; கண்டீரம் - கண்டிகை என்ற கழுத்தணி, போலும். மார்க்கணடர். எனனும் 16 வயதிருக்கப் பெறறவர். பனகம் - பாம்பு ; (காளிங்கன்).

532 ஆர்க்கு மருமைப் பிள்ளைவனு
வானோர்க் குரிய பிள்ளையடுத்
தவருக் கினிய பிள்ளையெளி
யவர்க்குப் பெரிய பிள்ளைகட்டு

வார்க்குங் குமச்சே றொழுகுதன
மானுர் மோகப் பிள்ளைபெற்று
வளர்த்தே யெடுத்து மனங்களித்து
வருமூ வருக்குந் துரைப்பிள்ளை

பார்க்குந் தருணத் தருணவொளி
படர்ந்த நீல நிறப்பிள்ளை
பாரா சருக்குக் கண்மணியொப்
பான தருமப் பிள்ளைபுகழ்

சேர்க்கும் புதுவைச் சரவணமுத்
தீன்ற வரிசைப் பிள்ளைவச்சிர
தேக னருண சலம்பிள்ளை
சிறந்து நடந்து வருகவே. (2)

(2) கட்டு வார் குங்குமச் சேறு ஒழுகுதன மானுர் என்க. ஒழுகு தனம் வினைத் தொகை வார் - கச்சு ; நீல நிறப் பிள்ளை என்ருர் கண்ணனைக் கருதிப்போலும்.

533 வஞ்சியப ரஞ்சிநிகர் மங்கையர் விரும்பியுன்
பால்பார்க்க வேண்டி நின்ருர்
மறுகிய டித்துகிச் சுவர்த்தலம் பற்றிமென்
மலரடி பெயர்த் தொதுங்கிக்

கொஞ்சிமெல் லன்னநடை யென்னவே தளர்நடைக்
கொண்டுவந் தேவராத
குற்றம்யா தென்னவறி கின்றிலே முள்ளக்
குறிப்பின் தெனக்கூறிலாய்

செஞ்கிவட காசிதென் குமரிமேல் மலையாள
தேசமெங் குங்கீர்த்தியாய்ச்
சித்திரசிலை வடிவழகு பெற்றதுரை ராசன்நீ
சித்தந் திரும்பிவருகப்

பஞ்சினு மனிச்சநன் பூவினுஞ் சேர்கமலா
 பரவித் திருப்பதி தன்மேற்
பயப்பய நடந்துமகி ழருணு சலாதிபதி
 பருவநடை கொடுவருகவே. (3)

(3) உன்பால் - உன்னிடம்; அபரஞ்சி நிகர் - புடமிட்டபொன் போனற ; " வந்தே, வராத " என்க. பயப்பய - பைய பைய என்பதன் சுருக்கம்.

534 மறுமை தொடரு மரியதவமும்
 வரமும் நிறைய வருகவே
மதன னுருவில் எழுதவரிய
 வடிவு திகழ வருகவே

சிறுமை பெருமை யுணருமரசர்
 தினமும் மகிழ வருகவே
சிவனை மனத்தில் நினையுமறிவு
 தெளியும் நிபுணன் வருகவே

வெறுமை தவிரு மமுதகவிஞர்
 மிகவு முருக வருகவே
விசைய னபிமன் அபயன்இணைசொல்
 விரத சரதன் வருகவே

பொறுமை நிலைமை தலைமைவலமை
 புரியு மதுலன் வருகவே
புதுவை நகரி னழகுபழகு
 புனிதன் வருக வருகவே. (4)

(4) மதனன் - மன்மதன் ; அபயன் - சோழன். சரதன் - உண்மையுள்ளவன்.

535 குணரத்தின மானசர வணமுத்து பூபன்
 குமாரகெம் பீரன்வருகக்
கொற்றவ னனந்தகிருட் டிணபூப தியெனுங்
 கொண்டல்நன் மருகன்வருகப்

பணமிக்க சேடனெப் பாம்ஞான தேசிகன்
 பண்புபெறு மருகன்வருகப்
பாக்கியதர னுமாதி நாதமத வேளினிய
 பட்சமா மருகன் வருகக்

கண்முற்ற செல்வவான் போத்திமுத் துப்பிள்ளைக்
 கனிவுதரு மருகன் வருகக்
கற்பகக் கன்றுக வளர்வீர வாகுமார்க்
 கண்டன்மெய்த் துணை வன்வருக

மணமொய்த்த காவிமலர் மாலிகா பரணமணி
மார்பவுத் துங்கன் வருக
வளமைதிகழ் புதுவையரு ணாசல நராதிபதி
வருக விரைவுடன் வருகவே (5)

(5) பணம் - படம் ; இப்பாட்டிலிருந்து பாடப்பட்டோர் வரலாறு சிறிது தெரிகிறது. முகவுரையில் காண்க. மாலிகா ஆபரணம் - மாலையாகிய ஆபரணம். உத்துங்கன் - உயர்ந்தவன்.

## அம்புலிப் பருவம்.

### சாமம்.

536 நாலிரண் டெண்ணிரண் டாங்கலைக் கதிபன்நீ
நானிலத் தவர்மதிக்கும்
நாலெட் டிரட்டித்த கலைவளர வளருமிவ
னோடுஞ் சுவே தவணனீ

பாலொன் றிரண்டஞ்சு வேதவண னிவனித்திய
குபேரன்நீ சொற்பாக்கிய
பாவலர் பாடலாற் சற்கீர்த்தி சேர்புகழ்
பாக்கியகு பேரனிவன் மெய்ச்

சூல்முதிர்ந் தெழுமேகப் படலத் துலாவருஞ்
சுப்பிரப்பிர காசதரன்நீ
சுப்பிரமண் யக்கடவுள் கருணை கடாட்சவொளி
தோன்றும் பிரகாசனிவனும்

ஆலிருவ ருஞ்சம மெனக்குறித் தனனிவனோ
டம்புலீ யாடவாவே
ஆதரவு கூருமரு ணாசல மகீபனுடன்
அம்புலீ யாடவாவே. (1)

| சந்திரன். | அருணாசலம் பிள்ளை. |
|---|---|
| (1) (1) " 16 கலைகளுக்கதிபன (நாலிரண்டாகிய எண் இரண்டுகொண்ட கலை எனக). | 64 கலை வளர வளர்க்கும் தலைவன். |
| (2) ஓடுகின்ற (சுவேதவணன் (வெள்ளைநிறந்தவன்) சுவேதம் - வெண்மை). | பால்நிற மொத்த இரண்டு அழகிய சுவேத (குதிரை)ங்களையுடையவன். |
| (3) தினமும் குபேரன் (உடல் சிதைபவன்) ஆவன் கு - குற்சிதமான, பேரன் - உடலையுடையவன், தேய்வதும் வளாவதும்பற்றி இவ்வாறு கூறினார்.) | புகழ்பெற்ற சொற்களையுடைய புலவர் பாடலால் கீர்த்தி மிக்க புகழ்பெற்ற குபேரன் (தனத்தில் மிகுந்தவன்) ஆவன். |
| (4) கருப்பம் முற்றிய நீர்கொண்ட மேகத் தொகுதியில் உலவுகின்ற சுப்பிரப்பிரகாசதரன் (வெண்மை ஒளிமிக்கவன்) ஆவன். | சுப்பிரமண்யக் கடவுள் கருணையொளி திகழத்தோன்றும் பிரகாசனுவன். |

ஆல் - ஆதலால் ; கூரும் - மிக்க ;

537 மாகத்தி லோர்கணப் பொழுதுதங் காதுபொன்
வரைசுற்றி யே சுழல்வதால்
மழுவாளி செந்தழிற் கண்ணிட மிருப்பதால்
மறுகளங் கப்படுவதால்

மோகத்தில் நின்மாம னிட்டசா பத்தினுல்
முழுமதி குறைந்துழல்வதால்
மூன்றுலகு மிரவாள னென்றுபெய ரிடுதலால்
மொதுகட லில் வீழ்வதால்

போகத் தருந்துதிப் பிரிந்துடல் மெலிந்துபைம்
புயலிடத் துருமறைவதால்
புரைபடா விவன்நட்பி னுலள வற்றபுகழ்
பெற்றுயா வாழவருவாய்

ஆகத்து ளோருயிர்த் துணைவனிவ னேருவந்
தம்புலீ யாடவாவே
ஆதரவு கூருமரு ளுசல மகீபனுடன்
அம்புலீ பாடவாவே. (2)

(2)

| | |
|---|---|
| (1) ஆகாயதத்தில ஓர் கண நேரமும் தங்காது மேருமலையைச் சுற்றித் திரிவான். | உயர்வில் ஓர்கணமும் தங்காது பொன்மலைபோனற செல்வம் கொட்டித் தன்னைச் சுற்றிப்பல புலவரும் சுழலச் செய்வான். |
| (2) சிவபிரானின் இடக்கண்ணுயிருப்பன். | சிவபிரானின் கண்ணொத்த முருகனிடத்துப் பக்தி யுடையவன். |
| (3) மறு (களங்கம்)வினுல் ஒளி குறைவான் | தீமைக்குறியை நீக்குவான் படுதல் என்பது ஈண்டு (நீக்கப்படுதல் எனக் கொள்க). |
| (4) ரேவதி மீது மட்டும் மோகத்தினுல் மாமன் தக்ஷன் சாபமிட ஒளி குறைந்தவன். | .... |
| (5) எல்லாவுலகும் இரவாளன் (இரவிலே ஆளுபவன) என்று கூறுவதால். | எல்லாவுலகும் இரவாளன் (இரக்கும் ஏழைகளை ஆள்பவன) என்று கூறப்பெறுபவன். |
| (6) போகத்தினுல் அருமையான புகழ் பிரிந்து உடல் மெலிந்து கரியமேகத்தில் வடிவம் மறைவான். | .... |

" நேர்உவந்து , எனக. புரைபடா - குற்றம்பொருந்தா.

## தானம்.

538 தமரமுறு சலராசி சூழுமுதைய வரையிதாத்
தான்மாயச் சென்றுதிக்குந்
தரணியீ ராறுபெயர் வாதம்மி லொருவன்மா
தாந்தமட் டொளியுடைத்தாய்த்

திமிரதின கரனெனப் பூமண்ட லத்துபைய
சேதனு சேதனத்தைச்
செந்தமற் சுடர்விடுத் துப்புறங் காய்வதைத்
தீர்ப்பதற் குற்பவித்த

குமரன்ம ரத்துநிறை குன்றுத தண்ணளி
கொடுத்தருள்வி மானமூர்ந்தாய்
கூறுபல கலைதெரிந் தமிர்தவட்டி லாகவிசை
கொண்டுலவு பெருமைபெற்றுய்

அமரர்சிறை விடுமுருக ணடிபரவு மிவனுடன்
அம்புலீ யாடவாவே
ஆதரவு கூருமரு ணுசல மகீபனுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(3) தமரம் - ஒலி ; திமிரம் - இருள் ; சேதன் அசேதனம் என்க. விமானம் - புஷ்பக விமானம். வட்டில் - கிண்ணம்.

539 ஆழிசூழ் புவனத்தில் நால்வளந் திகழ்புதுவை
ஆதிபதி யிவனெனப்பதால்
ஆகமெலி பாதிரவு பகல்முற்று நிர்ச்சிந்தை
யாயிருந் தகமகிழ்வதால்

ஆழிசூ டியமகுட முடிவேந்தர் சபையிலின்
னுனெனப் பெயர்பெறுதலால்
அனுசரித் தவர்மெலிந் தவர்குறை தவிர்த்தவர்க்
கமுதளித் தருள்வதால்பேர்

அழியா லிரவிதோன் றுதபடி பகலையிர
வாக்கியநம் மாயன்மருகன்
அபருவா னந்தவெள் ளத்தில்மூழ் கிமனம்
அலையாத மேன்மைபெறுவாய்

ஆழிவா னுலகுவிட் டிவன்மகிமை கண்டுகண்
டம்புலீ யாடவாவே
ஆதரவு கூறுமரு ணுசலப் பேருடன்
அம்புலீ யாடவாவே. (4)

(4) ஆகம் - உடல் ; ஆழியால் மாயன் - அருச்சுனனுக்காக சயத்திதரனைக் கொல்ல மறைத்தது காண்க. மாயன் மருகன் - முருகன் ; ஆழிவான் உலகு - வட்டமான ஆகாய இடம்.

540 வெவ்விரா குப்பகை தொலைப்ப கடற்குழியில்
வீழாது கலைநிரப்ப
வேதண்ட பீடநடு வுச்சிமேல் பொலிவுபெறு
வீறுனக் குண்டாகலரன்

செவ்விரா வும்பகலு மகலாது தட்டெருச்
சிதறிவிட் டெறியாது வெண்
திங்களொளி மறையாது தண்ணளி குறைந்துமெய்
தேய்வுரு தமிர்த வடிவைக்

கவ்விரா கத்திவே டத்தில் முயல் பருகாது
கருணைவா ருதியளித்துக்
கார்த்திகை விரும்புமொரு சொர்க்கபோ கத்தையெக்
காலமுநினைக் குதவுவான்

அவ்விரா கவன்மருக ளடிபரவு மிவனுடன்
அம்புலீ யாடவாவே
ஆதரவு கூறுமரு ளுசல மகீபனுடன்
அம்புலீ யாடவாவே. (5)

(5) இராகு - சந்திரனைப்பற்றும் ஓர் கிரகம். வேதண்டம் - பொனமலை ; எருச்சிதறு தல் - கன்னிமகளிர் நல்ல கணவனையடையச செய்யும் நிலா வழிபாடு. முயல் - சந்திரனிட மிருக்கும களங்கம் ; காத்திகை. சந்திரன் 27 மனைவியரிலொருத்தி ;

541 வஞ்சமொன் றின்றியுரை செய்யுமொழி கனவினிலு
மாறுத தொட்டயோகன்
வாசவன் விரும்புமகா ராசனும் திருவழுதி
வளநாட்டில் வாழ்வுபெற்றோன்

தஞ்சமே யென்பவர்க் கருளுமரு ளுசலவு
தாரவித் தாரனுக்குத்
தண்டிகைத் துரைபிச்சை யாண்டிவ ணிகேசவுத்
தண்டப் பிரசண்டனுக்கும்

கஞ்சமுக ரஞ்சிதன் கோபால் கிட்டிணனுங்
கன்னனுக் கும்பேரன்முக்
கண்ணனருள் மீறுசர வணமுத்து மகீபனிரு
கண்மணி யெனச்சிறந்தோன்

அஞ்சலென் றிரவலர் கொடுங்கலி துரந்தவனோ
டம்புலீ யாடவாவே
ஆதரவு கூறுமரு ளுசல மகீபனுடன்
அம்புலீ யாடவாவே. (6)

(6) வாசவன் - இந்திரன ; வழுதிவளநாடு - பாண்டிநாடு. கஞ்சமுகம் - தாமரை போன்ற முகம். கலி - வறுமை.

## சிற்றில் பருவம்.

542 கங்கை யமுனை சரசுவதி
கமலங் திகழ்கோ தாவிரிசங்
காற்றுங் திரைப்பா லாறுபெண்ணை
கனகா விரிவெள் ளளைகுமுறுங்

னுங்க பத்திரை வைகையிலே
சுருட்டும் வேக வதியிவைதந்
துணையாய்ச் சிறந்த பொருநைநதித்
தொடர்பா கியதென் கரைப்புறத்துத்

தங்க மயமாம் முறங்கொடுபோய்த்
தாமக் குழலார் சிலதியர்கள்
தவள நிலவு போற்பரந்து
தயங்கும் புளினத் திரளில்மலர்ச்

செங்கை வருந்தக் கொணர்ந்தமணல்
சேர்த்த சிற்றில் சிதையேலே
திருமா லருணா சலமகிபா
சிறியேம் சிற்றில் சிதையேலே. (1)

(1) சில தியர் - தோழியர், புளினம் - மணற்றிட்டு.

543 செம்பொற் றகட்டால் பலபலவாய்ச்
செய்யுந் தூதை சிலவருத
திருத்திப் பதித்த கூட்டடுப்பிற்
றெளிந்த புனலா னுலையேற்றிப்

பைம்பொற் சிறுமுத் தரிசிபெய்து
பரந்து புகையாக் கனன்றட்டிப்
பாகப் படுநற் பதம்பார்த்துப்
பரிவாய்ச் சரித்து வடித்திறக்கிக்

கும்பத் திணங்கு தாழிநடுக்
கொதிக்கும் புதிய புளிங்கறியும்
குளிர்ந்த மலரிற் றுவட்டலும்பர்
கூறுங் கருணைப் பொரிக்கறியும்.

அம்பொற் கலத்து நினக்குவிருந்
தளிப்போம் சிற்றில் சிதையேலே
அருணா சலபூ பாலாயாம்
அமைத்த சிற்றில் சிதையேலே. (2)

(2) அட்டி - சமைத்து; கும்பம் - குடம்; சரித்து - இறக்கி;

544 வடக்குங் குமச்சந் தனக்களப
வாசத் திருமாந் தண்ணுந்து
வார்க்கு ளடங்காப் பூரித்து
மணிசேர் செம்பொன் பணிச் செப்பாய்க்

கடக்குஞ் சரக்கிம் புரிமருப்பங்
கறுப்பப் புகையட் டதுவென்றே
கனத்துத் தடித்த புளகமுலைக்
கண்கள் கறுத்துப் பளபளத்துத்

தடக்குன் றிரண்டா மெனப்பணைத்த
தனத்தாச் சியர்காய்ச் சியபாலுந்
ததியும் புதுவெண் ணெயுமொன்றாய்த்
தட்டிக் கொட்டி யுண்டுபசி

அடக்குங் கருணா கரப்புயல்போல்
அடியேம் சிற்றில் சிதையேலே
அருணா சலபூ பாலாயாம்
அமைத்த சிற்றில் சிதையேலே. (3)

(3) வடம் - மாலை ; அண்ணாந்து - மேலெழும்பி, வார்க்குள் - கச்சுக்குள ; செப்பு - செப்புக்குடம் ; மருப்பு - தந்தம் ; இரண்டுவரிகளும் ஆய்ச்சியர் தனத்தைப்பற்றி வருணித்துள்ளன காணக. ததி-தயிர் ; கருணாகரப்புயல் - கண்ணன.

545 தோற்றும் பேதைப் பருவமுற்றித்
தொடர்ந்த பேதைப் பருவத்தில்
தூய்நீ ராடித் துகிலுடுத்துச்
சொருக்கிட் டருஞ்சூ ழிகைமுடித்துச்

சேற்றுப் புதுநாண் வரக்கொழுந்து
செருகி நுதற்சிந் தூரந்தீட்டிச்
செழும்பொற் பணியு நவமணிவச்
சிரத்தார வடமும் பூட்டியன்னை

பாற்றப் பசிதீர்ந் துக்கழங்கு
புதுப்பந் தடித்து நண்பகலில்
புத்துச் சிறுவீ டெனப்பலரும்
புகலும் வண்ட லிழைத்தடிச

லகற்றுந் தருணத் துட்புகுந்து
அடியேம் சிற்றில் சிதையேலே
அருணா சலபூ பாலாயாம்
அமைத்த சிற்றில் சிதையேலே. (4)

(4) சூழிகை - உச்சிகொண் ட ; தாவடம் - தாவடம் - கழுத்திலணியும் மாலை " வண்டல் இழைத்து அடிசில் ஆற்றும் தருணம் " என்க.

546 தாளா லுருள்பொற் சகடுரைத்துத்
தனிக்கட் செவிப்பொற் படமிதித்துச்
சாபக் கருங்க லகலிகையைத்
தருதற் கிசைந்த துகளெழுப்பி

வாளாற் செகுப்ப வுரத்த கஞ்சன்
மார்பிற் புடைத்துச் செழும்பவள
வரைமீ திருந்து சிலை குனித்து
வண்டைத் துரந்தோ மருக்கணெனும்

வேளாறிரண்டு கரதலத்தான்
விடுவே லசுரர் பதியனைந்து
வெறுக்கி யகா ரணங்கேட்டு
மின்ன ரிழைத்த சிறுவீட்டை

ஆளா தழித்தல் நின்முறைமை
ஆமோ சிற்றில் சிதையேலே
அருண சலபூ பாலாயாம்
அமைத்த சிற்றில் சிதையலே. (5)

(5) சகடு - சகடாசூரன், வெறுக்கை - அருவருப்பு கட்டுசெவி - காளிங்கள் என்ற பாம்பு ; சாபக்கரு . . . . எழுபிக்இராமாவதாரத்தில் கல்லாயிருந்த அகலிகையை எழுப்பின மை காண்க. வண்டு - அம்பு ;

547 நின்னைப் பரவாக் குறும்பரற
நெறியிற் பிழைத்த காதகர்தன்
நிலையிற் பிறழ்ந்த வறிவீனர்
நேசத் தொடர்பில் நன்றிகுன்றித்

தன்னைப் புகழு முழுமடையர்
தனத்தா லுயர்ந்த குலவீன
தருமப் பெருமை மூதறிவு
தயவு வேற்ற வர்பொருதா

மின்னைப் புணர்ந்த காமுகர்மேல்
மேடை யாக்கு மாளிகையுள்
வீடு கூடந் தகர்த்திடித்து
வெறுக்கு தல்நின் வெற்றியோம

தன்னைக் கிணை சொ லப்பனே
அடியேம் சிற்றில் சிதையேலே
அருண சலபூ பாலாயாம்
அமைத்த சிற்றில் சிதையேலே. (6)

(6) குறும்பர்— குறுநில மன்னர் ; மதன்னை - மன்மதனை, விரித்தல் விகாரம்.

548 குடிவைத் தவர்க்கு மாளிகை முற்
கூடஞ் சதுக்கம் நெருங்கவைத்துக்
கூபந் தடங்கள் வெட்டுவித்துக்
குளமும் புரவுந் திருத்திவைத்துத்

துடிவைத் துழுமேர்க் ரான கேரான
* * * *
தூவும் பலவித் தனைத்தும் வைத்துச்
சுரக்கும் பசுகன் றுபரி வைத்துப்

† இவ்வடி விடுப்பட்டது.

படிவைத் தளந்து கொடுத்து வைத்துப்
பரிபா லனஞ்செய் துளமகிழ்ந்து
பாரிற் புகழ்சேர் கங்கைகுல
பதியே புதுவைப் பதிக்கரசே

முடிவைத் திருந்த மூவேந்தர்
முன்வைத் திருந்த பெருங்குடிக்கு
முதன்மைக் குடியாய் நிலைமை பெற்ற
முகிறத் துயர்ந்த தலைவா நின்

அடிவைத் துழக்கில் சகியாதே
அடியேம் சிற்றில் சிதையேலே
அருண சலபூ பாசிறியேம்
அமைத்த சிற்றில் சிதையேலே. (7)

(7) சதுக்கம் - மேடை ; கூபம் - கிணறு. புரவு - அரசனால் அளிக்கப்பட்ட இறையிலி நிலம் ; கங்கை குலம் - வேளாளர் குலம் ;

## சிறுபறைப் பருவம்

549 வானகத் தெழுசத்த மேகமு முழக்கநெடு
வாருதித் திரை முழக்க
வால்மதி சூடிசிறு கைத்துடி முழக்கவெதிர்
வந்துவந் திடிமுழக்கத்

தானமத் தக்கசமோ ரெட்டும்பி ரிட்டளவு
தானிலாக் குரல் முழக்கத்
தரணிமன் னவர்கள்மனு நீதிநெறி பிசகாது
சந்ததம் பறை முழக்கக்

கானவித் தியாதர ரிசைத்தொனி முழக்கவன்
கண்மைவோ வியர்கடத்தெக்
காலமும் நெய்தலம் பறைமுழக் கச்சிலைக்
காமனம் பொலி முழக்கத்

தேனகத் தூற்றெழுகுவளைப் புயாசலா
சிறுபறை முழக்கியருளே
தென்புதுவை வாழுமரு ணசல மகிபனே
சிறுபறை முழக்கி யருளே. (1)

(1) வாருதி - கடல் ; வால் மதி சூடி - வெள்ளிய சந்திரனைச் சூடின சிவபிரான ; கசம் - யானை ; நெய்தல்அம்பறை - நெய்தல நிலத்திற்குரியபறை ; சிலைக்காமன் அம்பு ஒலி முழக்க என்க. குவளையகத்து தேன் ஊற்றெழுகு எனக.

550 தென்பொதிய மால்வரையும் வெண்டரள ராசிதிரை
சிந்தி வரு பொருநை நதியும்
செல்வநிறை பாண்டிவள நாடுமுது நீர்த்தருவை
சேர்புதுவை மாநகரமும்

பொனபொதி யவிழ்க்குநறு நீலமா லிகையும்வாம்
புரவியும் மதவாரணம்
புயலெட்டு மழிகே தனமும்நடு முன்றில்வாய்ப்
புதியமும் முரசொலியும் நோ

அன்புதரு செந்தில்வடி வேலர்கும ரேசர்தாள்
அரணையும் பெறு நிபுணனே
அழகுதிகழ் மதனனே மதிவதன சுமுகனே
அனவரத கலியாணனே.

பின்புமுன் பார்த்துவரு சிங்கமே வல்லோசை
பெறுபறை முழக்கியருளே
பேசுபுகழ் மீறுமரு ணசல நரேந்திரவொலி
பெறுபறை முழக்கியருளே. (2)

(2) கேதனம் - கொடி ; தாள அரண் - பாதஙகளாகிய பாதுகாப்பு பின்பு சிஙகமே— சிங்கம் எப்போது பின்னும் முனனும் பாாத்துவரும்.

551 மானபர ணெங்கள்சர வணமுத்து பூபதிகண்
மணியென்ன வந்துதித்தாய்
மற்புய னனந்தகி ருட்டிண வேளினிய
வசனமுத்தின் பெருமாள்மிக்

கானசீர் பெறுமிவர்க ளைச்சிறிய தந்தையென்
றன்புவைத் துளமகிழ்ந்தாய்
ஆதிநா தன்பின்வள ராதிநா தன்கலைவ
லாளன் மார்த் தாண்டமால் சொல்

பானலந் திகழ்பரம சிவனிவர்நன் மைத்துனப்
பாக்கிய மிகுத்துயர்ந்தாய்
பதுமமலர் மங்கையருள் நிரவதிக மானதன்
பதியிலன் னச்சிறந்தாய்

தேனருவி சொரிகுவளை மாலிகா பரணவிச்
சிறுபறை முழக்கியருளே
தென்புதுவை வாழுமரு ணசல மகீபனே.
சிறுபறை முழக்கியருளே. (3)

(3) மானபரன் - தன்மதிப்புள்ளோன் ; ‘ சொல் பால் நலம் திகழ் ’ என்க.

552 வேததவ போதனர்க ளாசீர் வதித்துளம்
விரும்பியொரு பாலிருப்ப
வித்துவசன மொத்துன்மேல் விருதுபா டித்தவசில்
வீற்றிணி திருப்பதொருபால்

நீதமனு ராசாதி ராசருன் வாசலில்
நிறைகொலு விருப்பதொருபால்
நேரலார் தஞ்சநீ யென்றஞ்சி யோஞ்சிநிரை
நிரையா யிருப்பதொருபால்

மாதாசி யாமிவர்க ளென்றுலகு புகழுமட
மாதர்களும் நிற்பதொருபால்
வருவிருந் தினியசுற் றத்தவர்கள் நின்னருமை
வசனத் திருப்பதொருபால்

ஆதலால் மணிமுன்றில் வெளிவந்து மனதுகந்
தணிபறை முழுக்கியருளே
யார்வ மகலாதவரு ணுசல மகீபனே
யணிபறை முழக்கியருளே. (4)

(4) வித்துவசனம் - புலவர்கள் ; விருதுபாடி - வெறறிக்குரிய செயல்களைப்பாடி ; ஓஞ்சி - ஓய்ந்து என்பதன் போலி ; வருவிருநது " "செல்விருந்தோம்பி வரு விருநதுபார்த்திப் பான் . . . " குறள் காண்க.

553 சற்குண சலாபனரு ணுசல மகீபனஞ்
சாதசர வணமுத்துமால
தண்டமிழ்க் கருள்வீர வாகுசே னறப்பதி
தனைத்து........ஞ்சபெருமாள்

நற்குலம் விளங்குமிவர் மெய்த்துணைவ னேசரச
நய லளித சுமுகமதனே
நாவலவ ரின்னிசைப் பாமுறைமை யிற்பாடு
நாற்கவியு மினிதுகேட்டுச்

சொற்குண் மறிந்துவிலை பெற்றபட் டாடையொடு
துப்பட்டி பாகை செம்பொன்
சுடர்மணிப் பணிகனக முதலான பரிசெலாந்
தோற்றமா கக் கொடுக்கும்

அற்புதக் கருணு கடாட்சமுதல் வள்ளலே
அணிபறை முழக்கியருளே
ஆர்வமக லாதவரு ணுசல மகீபனே
அணிபறை முழக்கியருளே. (5)

(5) சலாபன் - சல்லாபன் என்பதன் தொகுத்தல், சரசன் ; நாறகவி - ஆசுகவி, மதுர கவி, சித்திரகவி, வித்தாரகவி என்பன. பாகை - தலைப்பாகை ; பரிசு - வெகுமதி ;

## சிறுதேர்ப் பருவம்.

554 சூலா மைப்பா லமுதுணறப்பத்
துலங்கும் படநா கப்பிடரில்
தோன்றும் ஞாலத் தலைவன் முடி
துளக்கிச் சுமக்கும் படிப்பரப்பின்

மேலாங் கனக வரைப்புறத்து
    மீனத் துவசத் தொளிவீச
வெயிலைப் பரப்புஞ் சுடர்ப்பருதி
    விசும்பூ டுருவித் தேர்தூரப்பக்

காலா மொற்றைத் திகிரியயங்
    காதே யிடறக் காலெதிர்த்துக்
கலக்கப் பதுங்குங் கதிரைமதி
    கண்டு மகிழுமிந் நாட்டிலனு

கூலா கோலா கலமதனே
    கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே
கோவே யருணா சலவேளே
    கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே. (1)

(1) பூமியை ஆதிசேடனும் ஆமையொன்றும்தாங்குவதாகப் புராண வரலாறு. கனக வரை - உவமையாகு பெயராய் மாடமாளிகைகளை யுணாத்திற்று. கால் - சக்கரம்; கதிர் - சூரியன் இந் நகரிலுள்ள மீனக்கொடிகள் சூரியன தேரைத் தடுத்துப்போகாமல் செய்ய அதனைக்கண்டு சந்திரனமகிழும் அத்தகை நாடு என்க.

555 அடுக்கு மணிப்பார் க்குள்வயிரத்
    தாலச் சிருத்திக் கடைத்தலைப்பொன்
ஆழி பொருததி மரகதத்தால்
    அடங்காப் பரப்பு நிலமமைத்துத்

தொடுக்கும் பவளக் கால்நிறுவிச்
    சுற்றஞ் சுருவா ணியைக் கொழுவிச்
சுடர்மா ணிக்கப் பலகைதைத்துச்
    சோதி திகழும் நீலத்தால்

எடுக்குந் தனித்தட் டொருமூன்றும்
    இயற்றிச் சிங்கா சனக்குறடும்
இலங்கப் பதித்துப் பூரித்தோம்
    எவர்க்கும் தருண மறிந்துசெம்பொன்

கொடுக்குந் தடத்தா மரைக்கரத்தால்
    கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே
கோவே யருணா சலமாலே
    கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே. (2)

(2) ஆழி - சக்கரம்; சுருவாணி - கடையாணி, குறடு - பாதக்குறடு; ஈண்டு சிறுதேர் பல வகை ரத்தினங்களாலமைக்கப்படுவது காண்க.

556 தேறுந் தமிழப் பாண்டியரைச்
    செலுத்தும் வழுதி வளநாட்டில்
சிறந்த குமரித் துறையீறுய்ச்
    செழித்த புவனத் தவர்கள்பெறும்

பேறுண் பழமல் லாதுழுவோர்
பெரு மைத்தரக் கோர்வையினுல்
பெருகப் பலன்முப் பூவும்வரப்
பெற்ற குபேர பாக்கியத்தால்

ஏறுஞ் சிவிகை கவிகைபடைத்
திருமாந் திருப்பதொத் தன்னிறையை
ஆறு கூறு படுத்ததிலொன்
றவன் கைக்கொள்ள நின்றவைந்து

கூறுந் தரக்கைக் கொண்டவன்நீ
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே
கோவே யருணு சலமகிபா
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே. (3)

(3) முப்பூ - மூன்று பூமி; இப்பாட்டில் தன் வரிப்பணத்தை ஆறுபாகமாக்கி அதிலொன்றினை வெள்ளையர் பெற மிகுதி 5 பாகமும்தான் கொண்டான என்று கூறப்படுவது காண்க.

(வரைக்குந் திகாந்த வரைக்குமொழி)

557 மதிக்கும் பிரம கற்பமுற்று
மாறுப் பிச்சை யாண்டியென்றும்
வணிகே சனுக்கும் குலசைநகர்
வாழ்கோ பால கிட்டிணனுக்கும்

துதிக்குங் கவிமா ரியைப்பொழியுஞ்
சொற்பா வலர்க்குங் கருணைமழை
சொரிந்த வருணு சல்ராச
துங்க வகளங் கனுக்குமன்பு

பதிக்கும் பேரப் பிள்ளையென்னப்
பரிவா யழைக்கும் பெயர்படைத்தாய்
பரவைத் தருவைத் திரைக்குலிஞ்சிப்
பகட்டு வாளை துள்ளிவிண்ணிற்

குதிக்கும் புதுவைப் பதிக்கரசே
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே
குலவா னருணு சலமகிபா
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே. (4)

(4) திகாந்தவரை - திக்கின் முடிவிலுள்ள மலை (சக்கரவாளமலை).

558 சூடா மணியே இருநிதியே
சுரபி தருஞ்சிந் தாமணியே
சுற்றத் தவர்சூழ் கற்பகமே
சோதித் தரள மணிவிளக்கே

வாடாத் தேவ தாரப்பூ
மலரே யலர்ந்த செழுங்காவி
மாலைக் கிசைந்த மணிமார்பாம்
மாமால் மருகன் குமரனன்றித்

தேடா மனக்குஞ் சரக்கன்றே
சீரு துவந்த சிங்கேறே
தேனு னுடைக்கக் கரும்பிருந்தின்
இசைபா டியசெங் கமலமுகம்

கோடா தெவர்க்கு மருள்புதுவைக்
கோமா னேதே ருருட்டுகவே
குலவா னருண சலமகிபா
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே. (5)

(5) சூடாமணி - தெய்வமணி வகை ; சுரபி - காமதேனு ; தரும் - நினைத்ததைத் தரும் ; தேவதாரு - பஞ்ச தருக்களிலொன்று.

559 பார்வாழி திருவழுதி வளநாடு வாழிசுடர்
பழகுமுடி வேந்தர்வாழி
பதுமா சனத்திரு மடந்தைவாழ் புதுவையம்
பதிவாழி கீர்த்திபெற்ற

பேர்வாழி எங்கள்சர வணமுத்து ராசச
பிரமமத ராசன்வாழி
பிள்ளைத் தமிழ்ப்பாடல் கைக்கொண்டு பரிசருல்
பி....குண சாலிவாழி

நேர்வாழி பூண்டவரு ணசல நரேந்திரன்நன்
னெறிவாழி யுபையவஸ்கிஷ
நிழேி வாழியா முப்பத் திரண்டறமும்
நிலைநிற்க வென்றுவாழி

சீர்வாழி யாகம் தியானமற வாதநீ
சிறுதேர் உருட்டியருளே
செல்வக் குபேரனரு ணசல மகிபனே
சிறுதேர் உருட்டியருளே. (6)

---

(புதுவை அருணசலம் பிள்ளைத் தமிழ் முற்றிற்று).

# முருகப்ப தேவர் பிள்ளைத் தமிழ்

## துதி

### வெண்பா

560 பூமேவு செல்வி பொருந்து நெடுமாலே
மாமேவு முந்தன வாஞ்செய்வாய்—காமேவு
மன்னன் முருகப்ப மார்த்தண்டன் மாமுடிசேர்
தென்னன் செழிக்கத் தினம். (1)

(1) பூமேவு செல்வி - திருமகள் ; மார்த்தண்டன் - சூரியன்.

## காப்புப் பருவம்

### திருமால்

561 பூமேவு திருமாது புவிமாது தழுவுமிரு
புயச்சயிலா துளபமார்பா
புவனமீ ரேழுந் தழைத்திடக் கிருபையது
புரிசங்கு சக்கரபாணி
காமேவு ககனநிறை யமரருக் கமுதம்
கனிந்துதவு ரகுநாயகா
காருருவ நாரண முராரிமா தவமலர்க்
கண்ணரிசை யைப்பரவுமாம்
தேமேவு பாண்டியன் செம்பியன் சேரர்கோன்
சேர்க்கையா திக்கவேந்தன்
சீர்பெற்ற நியமைநகர் தன்னிலர சாட்சிசெறி
தேவரென வருவசீரன்
மாமேவு துரைப்பழனிப் பதி நிதி யாம்வளச்ச
மாகாளி பூவன்மைந்தன்
மார்கண்ட னுனமுரு கப்பமகி பாலசெய
மன்னனைக் காக்கவென்றே. (1)

(1) பாணி - கை ; செம்பியன் - சோழன்.

### சிவபெருமான்

562 நீதிகொண்ட மலையரய னருள்கின்ற மகமாயி
நித்தியகலி யாணிவாமி
நிமலிதிரி புரைகெவுரி புவனவுயிர் தழைக்கவருள்
நியமிக்கு முமைபாகராம்
கதிகொண்ட சரணர்சபை நடனேசர் மதிகொன்றை
கங்கையணி சடிலராதி
கயிலாச நாதர்பர மேசர்சரு வேசரிரு
கமலப் பதம்பணிகுவாம்

நதிகொண்ட கலைவாச நாடிகாசை நாடுவினை
நடுநி யமை நாடாளுமால்
நானிலம் விளங்கவரும் இரவிகுல திலகமனு
நாகரிக் யோகசாலி

துதி கொண்ட பழனியப் பக்குரிசில் பாலகன்
சுபவாச்ச மாகாளியாம்
துரைத்தனக் கொண்டல்முரு கப்பமக ராசசெய
சுழகளைக் காத்தருளவே (2)

(2) மலையரயன் - பருவத ராசன் ; பாகர் - இடப்பாகத்திலே வைத்தவர் ; சடிலம் - சடை ; நாடு இளசை - வினைத் தொகை.

### விநாயகர் முதலியோர்

563 உரைபெற்ற மூவர்க்கு முதன்மையென வேவெயில்
உகந்தமத வேழமுகவர்
உண்மைசெறி வையா புரிக்கந்தர் துங்கமலை
உற்றுவளர் கந்தசாமி

விரைபெற்ற நளினமணிப் பேரையில் சாத்தய்யர்
வீரபத் திரர்கறுப்பர்
விமலி அங் காளிகீ ரணிமுத்து மாரியுமை
விண்ணவ ரெலாம்காக்கவே

கரைபெற்ற கடல்சுற்று புவனத்தில் யாவரும்
கண்கண்ட துருவராசன்
கவுரியன் படிதொடப் பரியினெழு நகுலனெரு
காங்கயனை விலைகொண்டவன்

பரைபெற்ற பழனியப பக்குரிசில் பாலகன்
பகரிளசை நகராதிபன்
பச்சைமா லானமுரு கப்பபூ பாலசெய
பாஞ்சால குணவானையே. (3)

(3) நளினம் - தாமரை ; துருவராசன் - உவமையாகு பெயர், . . . . . . ஆம்பாட்டுக்குறிப்பில் காண்க. கௌரியன் - பாண்டியன் ; நகுலன் - பாண்டவரிலொருவன், அசுவசாஸ்திரம் கற்றவன்.

### சவுந்தரமான் (உமையவள்)

564 விரையார் பிரசநதி பாய
விளையுங் கழனி சூழ்நியமம்
விளங்கும் கனகா லயத்திலுறை
விமலர் செயங்கொண் டீசர்பங்கில்

உரையார் துணைவி யெனவளரும்
　　உமையா கியபெண் சவுந்தரமான்
உம்பர் பரவ வரிதான
　　உபைய சரண மலர்காப்பம்

தரையார் துருவப் பழனியப்ப
　　சனகன் தவத்தில் செனித்தமைந்தன்
தழைக்கும் நரசிங் கேந்திரமாத்
　　தருபண் டாரத் தார்மருகன்

திரையார் கடலைக் கடைந்தமுதம்
　　தேவர்க் களித்த ரகுவீரன்
சிலைக்கை விசயன் முருகப்ப
　　தீரன் இனிய தமிழிசைக்கே (4)

(4) பிரசம் - தேன் ; நியமநகரிலிருக்கும் ஈசன் பெயர் செயஙகொண்டீசர், அமமை பெயர் சவுந்தரமான ஆகும். அம்மையைப்பறறிய பாட்டு இஃது ; உபையம் - இரண்டு ; உரை ஆர் - புகழ் நிரம்பிய, செயங்கொணடார் வழககம எனறும், செயஙகொணடவர் சதகம் என்றும் இவ் வீசரைப்பற்றி விளித்த பாடல்கள் உள்ளன காண்க.

## செங்கீரைப் பருவம்

565 தண்ணமிகு புனலாட்டி வெண்ணீ றணிந்துறுதல்
　　தனிநிலக் காப்புமிட்டுத்
தருகுழந்தைச் சோமணிவனென யாவரும்
　　சாற்றிடச் சுடிகைக் கட்டி

நண்ணமிகு கருணைதரு கண்ணுக்கு மையிட்டு
　　நகுகுழை செவிக்கணிந்து
நற்றுயர் மடியில்வைத் திணைமுலைப் பால்சங்கி
　　னுலேந்தி யூட்டி யூட்டி

வண்ணமிகு நறுநெய்கொண் டுசசிக்கு மேலபொத்தி
　　மணிவாய் மகிழ்ந்துசொல்லும்
மழலைமொழி கேட்டுளம் விரும்பிமுத் தாடவே
　　மார்க்கண்ட னெனவேபுயத்

திண்ணமிகு பழனியப் பக்குரிசில் பாலன்நீ
　　செங்கீரை யாடி யருளே
சித்திரமத னனமுரு கப்பபூ பாலனே
　　செங்கீரை யாடியருளே. (1)

(1) சோமன் - சநதிரன ; நகு - ஒளிவிடுகின்ற ;

566 வண்டாடு குவளைமல் லிகைமுல்லை செயவாகை
　　மாலைப் புயங்களாட
வட்டமுறு பொன்சுடிகை யிட்டநுத லாடமணி
　　வாயமழலை யாடயாரும்

கொண்டாடு கருணையம் கண்ணிணைக ளாடவொளிக்
குண்டலச் செவிகளாட
குறைவற்ற மதிவதன மாடமுன் கையிலணி
கொலுசுகாப் போசையாட

கண்டாடும் மொழியனைனை கண்டுகண் டுள்ளம்
கனிந்துதினம் முத்தமாட
கலகலென விருசரண மணிதண்டை யும்சதங்
கையுமாட வுவகையாட

செண்டாடு முலைமாதர் மடலெழுது சுமுகன்நீ
செங்கீரை யாடி யருளே
சித்திரமத ஞனைமுரு கப்பபூ பாலனே
செங்கீரை யாடி யருளே. (2)

(2) செண்டு ஆடு - செண்டினை யொத்து ஆடுகின்ற ; வதனம் - முகம் ; மடல் எழுதுதல் - பெண்கள் இவன அழகைக்கண்டு மணக்க நினைத்து இவனுடைய சித்திரத்தைச் சீலையில் எழுதி மடற குதிரையில் ஏறுவேன எனும் அகப்பொருள் துறையைகாட்டியது.

## வேறு

567 அறிவுறு சுருதியை யுணரிடு நெறியினர்
அன்பா ருங்கோவே
அழகிய கவிஞர்க ளிசையது சொலவளர்
ஐந்தா ரின்தேவே

முறிவுற தரியலர் நவநிதி திறைகொடு
முன்பாய் வந்தேதான்
முறைமுறை யடிதொழ வரியணை குலவும்
முகுந்தா பைந்தாமா

பிறிவுறு மதிநுதல் மடவியர் மடல்வரை
பிந்தா நன்காமா
பிரசம தொழுகிய வனசம திலகிய
பெண்சே ரும்பூமா

செறிவுறு வளமைகொ ளிளமையில் வருதுரை
செங்கோ செங்கீரை
திருநிறை புயன்முரு கப்ப வசீகர
செங்கோ செங்கீரை. (3)

(3) சுருதி - வேதம் ; நெறியினர் ஈண்டு பிராமணர் ; ஐந்தாரு - ஐந்து தருக்கள், கற்பகம், பாரிசாதம் முதலியன ; தரியலர் - பகைவர் ; பிந்தா - பின்னிடையாத ; வனசம ........பெண் - திருமகள். திருவுடையவரைத் திருமால் என்று கூறுதல் மரபாதலால் ஈண்டு திருமகள் வசிப்பதாகக் கூறினர்.

## தாலப் பருவம்

568 வாரணி யாகமுன் வீறுசொல் வார்சினு
வாய்கினி கூர்வேலா
மாமழு வாசியி லேறிமெய் யாரமும்
வாமம் தணிவோனே

கீரணி யாள்மக மாயியை நாடழ
கேச மனோநேயா
கேசரி யான தளாதிப ரேவல்கள்
கேள்கொனு வாழ்வோனே

சூரணி யாள்விழி மாதக லாவனு
சூல மகாமேரே
கூவிய யானைமுன் நேமியை யேவிய
கோவெனும் மாலபோலே

தாரணி யாள்துரு வாதள நாயக
தாலோ தாலேலோ
சசிவத னுமுரு கப்பவ சீகர
தாலோ தாலேலோ (1)

(1) வாசி - குதிரை ; கீரணியாள்....மாயி - ....பாட்டில் காணக , தள - அதிபர் - தளாதிபர், சேனைத் தலைவா, கூர்விழி அணியாள் மாது என்க. மேரு - மேரே என விளித்தார் - யானை - கசேந்திரன் ; துருவா, தளநாயக என்க. தளம் - இதழ்-ஈண்டு தாமரையைச் சினை யாகுபெயராய்க் காட்டி இச்சொற்றொடர் சூரியனைககாட்டிறறு, தாமரைக்குக கணவன சூரியனாதால். சசி - சநதிரன்.

569 பூமா திருநிறை மார்பா தவமலி
பூசா பலபோசா
பூணார் முலைமட மானார் தழுவனு
போகா கனயோகா

சோமா திசையினர் தானே திறைதரு
தூயா மனுநேயா
சூரா தருமனோர் நூறுளிடம் விடு
தூதா மனுநீதா

காமா திடன்நிறை வாகா வருளிடு
காவே வுயர்கோவே
கார்சூ ழிளசைநல் நாடாள் நிதியதி
காரா செயவீரா

தாமா தினமுப காரா யாசினி
தானு தருதானு
சசிவத னுமுரு கபபவ சீகர
தாலோ தாலேலோ (2)

(2) போசன் - வடநாட்டிலரசாண்ட கீர்த்திவாய்ந்த ஓர் மன்னன். பூமன் என்பது பூமா என விளித்தது. சோமா - சூரியனே ; திசையினாதானே திக்குகளிலுள்ள அரசர்கள் கோளாமல தானே தருமனோ......தூதா - தருமன முதலிய பாண்டவர்கள் துரியோதனுதியா ஆகிய நூற்றுவரிடம் தூது அனுப்பிய கணணு ; வாகா - அழகனே ; நிதி அதிகாரன - நான்காம் வேற்றுமைத் தொகை 'ஆசினி தாறு தருதாறு - மேகம் உலகோர் வேணடாமலே தானுகவே மழையைத தருவது போலததரும கொடையையுடையவனே.

570 காவுக் கிசைந்த மகபதியே
கண்ணுக் கிசைந்த தனபதியே
காருக் கிசைந்த புதுமழையே
காணிக் கிசைந்த விளைநிலமே

நாவுக்கிசைந்த தமிழிசையே
நாட்டுக் கிசைந்த தசரதமா
ராசர்க் கிசைந்த ரகுபதியே
நகருக் கிசைந்த மணிரதமே

பூவுக் கிசைந்த திருவனமே
புகழுக் கிசைந்த வுருவகமே
பொன்னுக் கிசைந்த நவமணியே
போதர்க் கிசைந்த வாதரமே

பாவுக் கிசைந்த பொருளினனு
பதிவா ழரசே தாலேலோ
பசசை முகிலே முருகப்பபூ
பாலா தாலோ தாலேலோ. (3)

(3) மகபதி - இந்திரன் ; தனபதி - குபேரன் ; காணி- 133 1/3 செண்ட் கொண்ட தென்பா ; போதர் - ஞானிகள்.

## சப்பாணிப் பருவம்

571 இந்துற்ற நிலவென்ன வெண்குடை நிழற்றிட
இரண்டுசா மரை யிரட்ட
வந்திய வடப்பை காளாஞ்சி பொற்குஞ்சம்
இடக்கியஞ் சிலரெடுப்பக்

கொந்துற்ற சதுரங்க சேனைபுடை சூழிடக்
கொண்டலென வாத்தியமதிரக்
கொய்யுளைக் கவனவாம் பரியின்மேல் பவனிவரு
கோலா கலாபாண்டியா

சிந்துற்ற திருவணையின் மேற்சென்று ராவணச்
சேவகனை வென்றிலங்கைச்
செல்வமும் மகுடாபி டேகமும் தனைவந்து
சேர்ந்தவிபீ டணர்தமக்கே

தந்துற்ற சாரங்க ராமனே செங்கையால்
சப்பாணி கொட்டியருளே
சத்புருட ஞனமுரு கப்பமகி பாலனே
சப்பாணி கொட்டியருளே. (1)

(1) இநது - சந்திரன் ; அடப்பை - வெற்றிலே, பாககு முதலியன ; காளாஞ்சி - எச்சிற் படிக்கம ; பொற்குஞ்சம் - பொற்சரிகையுளள உடை ; இடக்கியம் - தோககொடி ; கொந்து - கொத்து, தொகுதி , மெலித்தல விகாரம் எதுகை நோககியது. கொண்டல் - மேகததின் இடி ; சிநது - கடல் ; தனே -தனனே என்பதன் தொகுத்தல் ; சாரஙகம் - வில்.

572 கஞ்சமென வுந்திரு நிறைந்துநித மும்குலவு
கற்கோ டெடுத்தபுயனே
கந்தினே யடர்ந்துநிழ லின்புற நடம்செய்யொரு
கைக்கா ருகக்களிறனே

வஞ்சமென வந்தகலே யின்பிறகு சென்றடர
வைக்கோல் பிடித்தகரனே
வண்டுபடி கொந்தளக மங்கையர் கனிந்துருகு
மட்டார் மலர்க்கைமதனு

புஞ்சமென நெஞ்சினி லணிந்தனே மகிழ்ந்துசிறு
பொற்பூண் மிகத்துவளவே
புன்சுடிகை குண்டல மிடும்கொலு சசைந்துடல்
பொருப்பா யசைத்திசையவே

தஞ்சமென நம்புவரை யஞ்சல்புரி செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
சத்புருட ஞனமுரு கப்பமகி பாலனே
சப்பாணி கொட்டியருளே. (2)

(2) கஞ்சம் எனவும் திரு - இலககுமி தாமரை பூ வென நினேத்து ; கலகோடு - கோவர்த் தனமலே ; கந்து - கட்டுதறி ; கலே - பொனமான (மாரீசன் இங்ஙனம் வநதது காண்க) வை+கோல் ச கூரிய அம்பு ; மட்டு - தேன் ; புஞ்சம் - கூட்டம் ; நெஞசு - மாாபு ; பொருப் பாய் - மலையை யொத்ததாய் ; நம்புவர் - விஜேயாலணேயும் பெயர்.

573 தூயமறை நாவல ராசையுட ஞசீர்கள்
சொல்லியட் சதைகள் கொட்ட
சுகிர்தம்செய் கின்றதுரை பழனியப் பேந்திரனின்
சொற்பகர்ந் துவகை கொட்ட

நேயர்மதி மந்திரிகள் பண்ணேயில் சிறுதேட்டு
நெற்சேரின் மீதுகொட்ட
நேரிட்ட பற்றலர்நின் பொக்கிச வீட்டிலே
நிதிதிறை கொணர்ந்து கொட்டச்

சேயர்மன தாலமறுகில் விளையாட வாவெனச்
சென்று வலங்கை கொட்டச்
சித்திரமணி வாசலில் முப்போது முறைமையால்
செயவாததி யஙகள்கொட்ட

தாயர்மடி மேலிருந துடலசைத் திருகையால்
சபபாணி கொட்டி யருளே
சத்புருட ஞனமுரு கப்பமகி பாலனே
சப்பாணி கொட்டியருளே. (3)

(3) மறை நாவலர் - பிராமணர் ; சுகிதம் - நலலறம் ; தேட்டு - சம்பாத்தியப் பொருள் ; நெற்சோ - நெல் கொட்டிவைக்கும் ஓர் கருவி ; பறறலர் - பகைவர் ; வலங்கை - வலக்கையை இடக்கையின் மீது கொட்ட.

## முத்தப் பருவம்

574 வேலையில் செறியிப்பி முத்தமிக் கடையெல்லாம்
விற்பார்கள் கண்டுகொள்வோம்.
வேயீனற முத்தினைக் கோயிலெலல லாம்கண்டு
வேண்டியே நெஞ்சில்வைப்போம்

மாலையில் செறிகன்னல் முத்தெருமை வாய்தின்
றசைப்பினில் கண்டிருப்போம்
மந்தரப் புயல்முத் தனேகமழை யூடுசென்
றங்கையால் சேர்த்தெடுப்போம்

சோலையில் செறிபன்றி முத்து மறுமுத்தங்கள்
தூயநகை யில்புனைகுவோம்
துளையாத கோவைமுத் துந்தன்முத் தாதலால்
துரிதமொடு வேண்டுகின்றோம்

காலையில் செறிகமல மெனமகிழ்ந் தையநின்
கனிவாயின் முத்தமருளே
கட்டழகு வாச்சமா காளிமுரு கப்பநிதி
கனிவாயின் முத்தமருளே. (1)

(1) வேலை - கடல் ; இப்பி - சிப்பி ; வேயீன்றமுத்து - சிவபிரான்........ஆம்பாட்டின் குறிப்பில் காண்க ; கன்னல் - கரும்பு ; எருமை வாய்தின்று அசைப்பினில் - எருமை வாயினில் உண்டு குதப்பும்போது ; மந்தரப்புயல - மேலுலகத்திலுள்ள மேகம் மேலுலகிலுள்ள மேகம் என்றார் இநதிரன் ஏவுதலான, அகம+கை - அங்கை, நகை - ஆபரணம் ; உன்தன் - உன்றன் எனறபாலது உந்தன் என நின்றது. துளையாத - துளையிடாத.

575 பெண்சேர்ந்து மெய்யில் பிறங்குகயி லாசாரம்
பெம்மான் தருங்கிருபையால்
பிறைநுதல் செல்விகீ ரணிமுத்து மாரியருள்
பெற்றுவளர் கின்றபரிசால்

பண்சேர்ந்து வண்டினம் தாவுதட வாவிசூழ்
பழமையிள சைப்பதியிலே
பாரம் பரிக்கையா பாதிக்க முறைமைபுரி
பாக்கியலெட் சுமிவிலாசா

எண்சேர்ந்து நாங்கள்வந் திரவலர்கள் செல்வர்முன்
இரக்கின்ற வாறுபோல
இச்சித்து வேண்டினேம் புனபசிக் காயுதரம்
எக்கிமுன் கைசுழற்றிக்

கண்சேந்து தாய்முலைப் பாலுண் டரற்றுநின்
கனிவாயின முத்தமருளே
கட்டழகு வாச்சமா காளிமுரு கப்பநிதி
கனிவாயின் முத்தமருளே. (2)

(2) கயிலா ஆசாரம் - கயிலைமலையில் அரசிருக்கை ; பரிசு - தன்மை ; பாரம்பரிக்கை - பரம்பரை முறையாய் எண்சேர்ந்து - எண்ணிக்கையாகச் சேர்ந்து ; உதரம் எக்கி - வயிற்றினைச் சுருக்கி ; கண் சேந்து - சணசிவந்து.

576 நலனோங்கு கோனாடு காநாடு கல்வாச
நாடுபூங் குன்றை நாடு
நானாடு காவல் கொண்டிளசையம் பதியிலே
ரவிமதிய முள்ள மட்டும்

வெலனோங்கு வெகுகோடி தலைமுறை விளங்கவே
பெருமை யர சாட்சிபுரியும்
பேராளி சீராளி போராளி சேனைப்
பெருக்காளி வேந்தருக்குப்

பலனோங்கு காவிமுன் னைசிட்ட தண்டிகை
பகல் பந்தம் வெண்சுருட்டி
பார்சங்கி ஙிசங்கு சிகண்டியிவை தேவர்பால்
பண்டு பெறற துருவா

கலனோங்கு நிதி பழனி யப்பமால் சேயநின்
கனிவாயின் முத்த மருளே
கட்டழகு வாச்சமா காளிமுரு கப்பநிதி
கனிவாயின் முத்தமருளே. (3)

(3) நால்+நாடு - நானாடு ; ரவி - சூரியன் ; ஆளி எனபதிலெல்லாம் இகரவிகுதி வினை முதற்பொருளை புணர்த்திற்று ; தணடிகை - பலலக்கு ; பகல்பந்தம் - பகல் விளக்கு ; வெண்சுருட்டி - வெள்ளிய ஆலவட்டம் ; சிகண்டி - தலைமுடி.

## வாரானைப் பருவம்

577 பாலார் மதுரைத் திருநீறன்
பாகருதற்குத் தரித்திடுவேன்
பைம்பொன் சுடிகை தனக்கிசைந்த
படிசிந் தூரப் பொட்டிடுவேன்

கோலார் விழிக்கு மையிடுவேன்
குழைக்குண்டலமும் செவிக்கிடுவேன்
கோலப் பதக்கம் சரப்பணியும்
குவடார் புயத்தி லணிந்திடுவேன்

நூலார் மருங்குல் மடந்தையர்கள்
நோக்கு மரைஞாணிடைக்கிடுவேன்
நுவல் செங் கோல்கைக் கினித்தருவேன்
நோன்தா ளிணைக்குச் சிலம்பிடுவேன்

சேலார் துவசப் பழனியபபன்
சேயா வருக வருகவே
செம்பொன் வரையே முருகப்ப
தீரா வருக வருகவே. (1)

(1) அனபாக துதறகு என்க; சரப்பணி வயிரமழுத்தின கழுத்தணிவகை; குவடு மலை; செஙகோல் - முறை தழுவாநிற்கும் நிலை; அது செவ்விய தோல் போறலின செங் கோல் எனப்பட்டது; நோனதாள - வலிமை மிகுநதபாதம்; சேல் ஆர்துவசம - சேலமீன் வடிவெழுதிய கொடி.

578 முறையாக வோரேழு முழமுயர்ந் தொன்பது
முழச்சுற் றுடைத்தாகியே
மூசிவண டாலிக்க மும்மத மிரைத்தூற்றி
முகபடா கம்தரித்துப்

பிறையான வெங்கோட்டின் நிறகத் திகட்டிப்
பிறங்குமிடை மணிதரித்துப்
பெருகு பொற் செல்லென விசைத்து மழைமுகிலைப்
பிழிந்துகண் மூட்டியே

துறையான பகிரண்ட வெளியினில் தாவியுயர்
சொர்ன வரை யைத்தகர்த்துச்
சுற்றுழி யறலைக் கலக்கிக் கலக்கிநீர்
தூளாக்கி யுலகின்மீது

சிறையான கெடியரச ரானை சிதைத்துவரு
சிந்துரப் பதிவருகவே
திக்கரசர் புகழுமு ந கப்பதுரை யெனிம் வால
சீவகன் தான் வருகவே. (2)

(2) எழு முழம் உயரம், ஒனபது முழச்சுற்று, மதமுடைத்தாதல் முதலியன அரயசனை யின் இலட்சணஙகள்; மூசி - மொய்த்து; முகப்படாகம் - முகபடாம்; வெங்கோடு பிறையின் ஆனநிறகத்தி கட்டி என்க. கிறையின் - இன் - உவமப்பொருவு (5 ஆம் வேற்றுமை); செல் இடி; பகிரண்டம்; அண்டததின் வெளி; சொானவரை - மேருமலை பத்ரம், மருகம் மந்தரம் என்ற மூன்றுவகை யானைகளில் இங்கு கூறியது பத்ரம் என்ற யானைவகையைச் சேர்ந்தது; ஆழி அறல் - கடலின் மணல்; கெடி அரசர் - கீரத்திமிக்க; அரசர் சிந்துரப்பதி - யானையையுடைய தலைவன்.

579 தொடரு மன்பர்கள் மனமறிந்திடு
சுகுண ரஞ்சிதன் வருகவே
துதிவிளம்புவர் கலியை வென்றருள்
சுமுக வைந்தரு வருகவே

படரும் மிஞ்சிரு ளறவிளங்கிய
பருதி வங்கிசன் வருகவே
பகைபு ரிந்தவர் வலிய வந்தடி
பணியு மிநதிரன வருகவே

பிடருயர்ந்திடு கரட குஞ்ரர
பிரபல வங்கசன் வருகவே
பிறைய ணிந்திடு பரனை நம்பிய
பிரிய நெஞ்சகன் வருகவே

அடரும் வஞ்சகர் நிறையி லங்கையில
அசுர ரஞ்சிட முனியுமால்
அச்சு தத்துரை யாகியமுரு
கப்ப விற்பனன் வருகவே. (3)

(3) ரஞ்சிதன்-அழகன்; கலி-வறுமை; பருதி-சூரியன்; வங்கிசன்-வமிசம்; கரடம்-மதம்; நிற இலங்கை-விளைத தொகை; அச்சுதன்-திருமாலை யொததவன; விறபனன-கலவியுடையவன.

## அம்புலிப் பருவம்

### சாமம்

580 மாதார வந்தவன் நீயிவ னம்மாதை
மார்பிலக லாது வைத்தான்
வற்றுக் கடல் பிறந் தாய்நீ யிவன் சுற்றம்
வளர்குடி தனில் பிறந்தான்

தாதார மலராம்பல் தேயன்நீ யிவன் மதம்
தருமாம்பல் நேயமாகும்
தண்நிலா வுலகினில் விரிப்பை நீ யினிசையோர்
தரணிமூன் றினுப விரிப்பான்

போதார வுடுநடு விருப்பை நீ யிவனுமிப்
புரவலரில் நடுவிருப்பான
போற்றுவார் யாவரு முனையிவனை யாவரும்
போற்றுவார் புலவருககே

ஆதாரமிருவரும் சரியாகு மாதலால்
அம்புலீ யாடவாவே.
அதிவீர சூரமுரு கப்பமகி பாலனோ
டம்புலீ யாடவாவே. (1)

| சந்திரன் | முருகப்பவன். |
|---|---|
| (1) 1 இலக்குமி பின் பொருநத தோன்றி னவன. | இலக்குமியை மார்பில் நீஙகாது வைததவன. |
| 2 வற்றாத (பாற்)கடலில் பிறந்தவன. | சுற்றம் பெருகி வளாகின்ற குடும்பக கடலில பிறநதான். குடி என்ப தோடு கடல் சேர்நது உருவக மாக ஆக்குக. |
| 3 மகரந்தம் பொருநதிய ஆம்ப (அல்லி மலர்)லுக்கு நேயன் (மலர்வதை நோககி). | மதம் பொருந்துகின்ற ஆம்ப (யானை)லுக்கு நேயம் பொருந் தினவன். |
| 4 குளிர்ந்த நிலவினை உலகில வீசுவான் .. | புகழ் நிலாவை ஒப்பற்ற முனறு உலகங்களினும் விரிபபான. |
| 5 (இரவுக்)காலம் பொருநத நட்சத்திரங் களின் நடுவிலிருப்பான். | அரசர்களின் நடுவிலிருப்பான். |
| 6 கன்னியர் முதல் யாவரும் புகழ்ந்து துதிப்பார் | அரசர் முதல் யாவரும் போற்று வார். |
| 7 புலவர்க்கு (தேவர்கட்கு அமுதம் கொடுப் பதால்) ஆதாரமாவன். | பாட்டு பாடும் புலவர்கட்கு வரிசை செய்து ஆதாரமாவான். |

## பேதம்

581 தேயுமுட லாளி நீ யெந்தநா ளினுமிவன்
தேயாத வச்சிரதேகன்
சீறுவிட வரவினுக் கஞ்சுவாய் நீயிவன்
தேவர்க்கு மஞ்சாதவன்

காயுமுறை யல்லினி லொளிப்பை நீ யிவனூழி
காலமும் நிறைந்திருப்பான்
காணு விமானத்தில் வருவை நீ யிவன் மன்னர்
காணரத மேல்வருகுவான்

பாயுமுவ ராழியில் தோய்வை நீ யிவன்விரைப்
பன்னீரி னில் தோய்குவான்
பாவையரை நாளும் வருத்துவாய் நீ யிவன்
பாவையரை ஆதரிப்பான்

ஆயுமுணர் வாலறிவை நீ யிவர்க் கிணையாசொல்
அம்புலீ யாடவாவே
அதிவீர சூரமுரு கப்பமகி பாலனோ
டம்புலீ யாடவாவே. (2)

| | |
|---|---|
| (2) 1 உடல் தேய்வதனையுடையவன் .. .. .. | தேயாத வச்சிர தேகத்தை யுடையவன். |
| 2 விடமுடைய சீறுவென்னும் பாம்புக் கஞ்சுவான். | தேவர்க்கும் அஞ்சாவதவன். |

| | |
|---|---|
| 3 மூலறையான (அமாவாசை) இரவில் ஒளிப்பான. | இவன் ஊழிகாலத்திலும் நிறைந் திருப்பவன் (திருமாகலாகக் கருதி). |
| 4 யாவருக்கும் தெரியாத புட்பக விமானத்தில் வருவான் (குபேரனுக்கும் இபனுக்கும் புட்பக விமானமுண்டு). | அரசர் காணுமாறு தேரில் வருவான். |
| 5 உவர் தண்ணீரான கடலில் மூழ்குவான். (உதிப்பதைக் கருதி). | வாசனையையுடைய பன்னீரில் மூழ்குவான (மூழ்குவதற்காக). |
| 6 காதல் கொண்ட கன்னியரை வருத்துவான. | பெண்களை ஆதரிப்பவன். |

உணர்வு-அறிவு.

## (தானமும் தண்டமும்)

582 சிறியார்கள் சிறுமையுந் தோன்றாது பெரியரைச்
சேர்ந்தவர்க் கிங்குவந்தால்
தீராக் களங்கமும் தீரும் வெங் கலையுதவி
செய்குவான் கிங்கிலியரும்

அறியார்க ளிவன்வேத மந்திரவனு வாலிங்கு
வருகுவாய் சம்மதித்து
வாரா திருக்கி லிவன் மும்மதப் பணையானை
வாய்க்கவள மாக்கிவிடுவோம்

குறியார்க ளுனையாரும் மேரைவிட்டொளிவை நின்
குணவீர டாகை யறிவோங்
கூறுன வுருவன் நீ வெள்ளையன் நீ யுனைச்சாணி
கொண்டுநா மெறிவதெல்லாம்

அறியார்க ளாதெரியு மாசேதி யிவனுடன்
அம்புலீ யாடவாவே
அதிவீர சூரமுரு கப்பமகி பாலனோ
டம்புலீ யாடவாவே. (3)

(3) சிறியார்................ வந்தால் ................ஆம் பாட்டிலும் இங்ஙனம் காண்க. கலையுதவி என்றாகலை என்றால் உடைக்கும வளரும பகுக்கும் பொருளுள்ள சொல்லொறறுமை நயத்தால். கிஙகிலியா-ஏவல் செயவோா ; மேவரை-மேருவை எனபது மேரை என நின்றது ; டாகை-காவததை ; சாணி கொணடு எறிவது ; எருக் கொண்டு கன்னியா வீசுவது அறியார்களார், தெரியுமா எனறு வினவாககுக.

## சிற்றில் பருவம்

583 புயலே மாதம் மூன்றுமழை
பொழிந்து பெருகும் குளக்காலும்
பூகம் கதலி மாமரமுட்
பொருந்தும் பணசப் பொதும்பரிடத்

தயலே மாறிக் கவிகுதிக்க
அதிர்ந்தே கனிகள் விழுந்துதகர்ந்
தளருய்ப் புரண்டு திரைகளெறிந்
தாருய் மண்டிச் செழித்தேறி

வயலே பாயக் கன்னல் செந்நெல்
வளர்ந்து விளையக் கடைசியர் கூன்
வாளிட் டரியப் போரேத்தி
மள்ள ரடித்து மணிகுவிக்கும்

செயலே மராரு விளசைநகர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே
தேவா முருகப் பேந்திர வச்சிர
தேகா சிற்றில் சிதையேலே. (1)

(1) பூகம்-பாக்கு மரம்; பனசம்-பலா மரம்; கவி-குரங்கு அளறு-சேறு; கூன்வாள்-வளைந்த அரிவாள்; மணி-நெல் மணி, முத்து மணி ஆகியன. இபபாட்டில் அநநகரச் சோலே, வயல் வளம் கூறப்பட்டிருப்பன நோக்குக.

584 பொன்னு லமைத்த சிறுகூடில்
புதுப்பன் னீரா லுலையேற்றி
பூத்த முல்லை யரும்பரிசி
போட்டுப் பவள விறகிட்டு

மின்னல் கனலி மூட்டி நன்ருய்
விருந்து சமைத்தே வுணக்குமிட்டு
மிச்ச மெடுத்து நாங்க ளெல்லாம்
விரும்பிப் புசிப்போம் துணைச்சிறுவர்

தன்னுல் மனத்தின் கெருவத்தால்
சருவிச் சருவி வந்து வந்து
தாளிட் டழித்தால் நாம் பிடித்துத்
தள்ளு வோம்நாட் சணியமில்லை

தென்னு பழனி யப்பனருள்
சேயா சிற்றில் சிதையேலே
தேவா முருகப் பேந்திர வச்சிர
தேகா சிற்றில் சிதையேலே. (2)

(2) கூன்-கருப்பஞ்சாறடு கூன் என்ற பாத்திரம்; ஈண்டு குடம் என்னும் மாத்திரையாய் நின்றது. கனலி - நெருப்பு; துணைச்சிறுவர் - நண்பரான சிறுவர்கள்; சருவி - தழுவி; தாள் இட்டு அழித்தல்-பாதங்களினுல் கலைத்தால்; தென்னு-பாண்டியனே

585 துட்டப் பகைஞர் துணுக்க மிட
துண்டின் துண்டின் றெனமுழங்கும்
தூய செருத்தின் மேலொற்றைத்
துடிடங் காவாத் தியவேந்தே

வட்டப் பருதி யெனவேத
வளமாங் கவிகை சுருட்டி யிடால்
மன்னும் கவரி பாவாடை
வருங்கட் டியமும் படைத்தோனே

இட்டப் படுமுன் குடிநாங்கள்
இலேயோ வெங்கள் வீடு கள்ளர்
இருக்கும பதியோ சொல் சொல்நீ
எனவந் தளிப்பாய் இங்கிலீசுத்

திட்டப் படிக்கர் நாடகஞ் செய்
தீரா சிற்றில் சிதையேலே
தேவர் முருகப் பேந்திர வச்சிர
தேகா சிற்றில் சிதையேலே. (3)

(3) துண்டின் துண்டின்-ஒலிக குறிப்பிடைச் சொல ; எருது—எருத்து என விரிந்தது ; டங்கா-ஒரு விதப் பறை ; பாவாடை-பெரியோர் வருங்கால கீழ ஆடையிட்டு அதன மேல் வருமாறு செயதல் மரபு ; கட்டியம்-அரசர் முதலியோரைக் குறிதது்ச் சொலலும் புகழ் ; கள்ளர் - திருடர் ; காநாடம் செய்வது-தொழில செயவது.

## சிறுபரைப் பருவம்

586 கலேயேந்து பிறைநுதல் கன்னியாகள் மனமெனக்
கபடம் படைத்துநாலு
காலில்ஓ ரைந்துக்தி காட்டிமனு மீறிமுள்
கடிவாளம் விட்டிறுக்கித

தலேயேந்தி துடிக்கம்ப முகமுட்டு முருகோடு
சதங்கை இண் இணிபுனேந்து
தங்கநிறை கலனேவைத் தங்கவடி கட்டியிரு
தாளினில் தண்டை பூட்டி

அலேயேநது கட்லேக் கலக்கிவெய் யோன்பரியில்
அண்டியிரு சாரியிற் பாய்ந
தட்டகிரி யட்டதிசை யைத்தகர்த் திடுகவன
அசுவபதி யேகருப்பஞ்

சிலேயேந்து புயமும்முன் கைக்கொளுசு மசையநீ
சிறுபறை முழக்கியருளே
செங்கோல் செலுத்துமுரு கப்பவிற் பலனனே
சிறுபறை முழக்கிய ருளே. (1)

(1) கபடம்-வஞசனே ; ஐநது கதி-சிம்ஹ கதி ; மயூர கதி, வானர கதி, வியாக்கர கதி, குஞ்சர கதி என்பன ; மனு-நூல ; முடடு - கடிவாளம ; கலன - சேணம ; வெயயோனபரி - சூரியன்தேரிலகட்டிய ஏழுகுதிரைகள் ; இருசாரி-வல சாரி, இட சாரி ; அசுவபதி - குதிரைகளேயுடைய தலேவனே இதில குதிரையின வருணனே குறிப்பிடுதல காணக. கருப்பஞ்சிலே யேநது புயம எனறூர் மனமதனுககு கருதி.

587 தரிக்கின்ற நாலுகோட் டைச்சமத் தானரா
சர்முத்து விசைய ரெகுநா
தக்கெவுரி வல்லவப் பெரியவுடை யாத்தேவ
சாமிரா சேந்திரனிடமே

பரிக்கின்ற பண்ணைக் கிராமமத யானைவெம்
பரிசிவிகை வரிசை பெற்றோய்
பழமைபெறு மல்லைக் குழந்தைநா வாணன்
பகாநதபிள் ளைத்தமிழ்க்கே

விரிக்கின்ற யாடையா பரணமும் சிவிகையும்
விளைவாரி யனேந்தலால்
மிகுவயலும் வயல்சூழ்ந்த புறவையும் மானியம
விரும்பிநிலே பெறவுதவியே

தெரிக்கின்ற பட்டயம் தனிலொப்ப மிடுகையால்
சிறுபறை முழக்கி யருளே
செங்கோல் செலுத்துமுரு கப்பவிற் பன்னனே
சிறுபறை முழக்கி யருளே. (2)

(2) பண்ணைக் கிராமம்-பண்ணையென்ற பெயருள்ள கிராமம்; சிவிகை-பல்லக்கு; புறவு-சாகுபடி நிலம்; மானியம் - கிராம சமுதாயத்தாருக்கு செய்த நன்மைக்குப் பிரதியாக விடப்பெற்ற இறையிலிநிலம்; பட்டயம்-செப்புப் பட்டயம முதலியன; ஒப்பம்-கையொப்பம். இப்பாட்டினின்று ஆசிரியர் வரலாறு நூல்பெற்றோன் வரலாறு சிறிது விளங்குகின்றன.

588 ஈட்டஞ்செய் நியமநகர் தனிலிருந் தேவந்து
இளசையம் பதிபுரந்து
இசைபெற்ற தேவா முதல் முருகப்ப தேவர்வரை
எண்ணரிய தேவரெ ல்லாம்

நாட்டஞ்செய் யுருவமொன் றுய்ப்பழனி யப்பேந்திர
நாகரீகன் மைந்த னென்ன
நாளுமிரு கண்டுசுத னைப்போல வளர்ந்தசேய்
ராசாங்க யோகசாலி

கோட்டஞ்செய் சிறுபால ரிசைமுழக் கத்தாயர்
கூர்ந்துவகை தான்முழக்கக்
கோவையிதழ் மாதர்சுப சோபன முழககவிக்
குவலயத் தரசர்திறையும்

தேட்டஞ்செய் நிதிகர்னர் தொகைமுழக் கிடவைய
சிறுபறை முழக்கி யருளே
செங்கோல் செலுத்துமுரு கப்பவிற் பன்னனே
சிறுபறை முழக்கி யருளே. (3)

(3) இசை-புகழ்; மிருகண்டு சுதன்-மார்க்கண்டன்; கோவை இதழ்-கொவ்வைக் கனி போன்ற இதழ்; தேட்டம்-சம்பாத்திய பொருள்.

## சிறுதேர்ப் பருவம்

589 கொள்ளரிய தேவரைப் பாண்டிநா டோங்கும்
குருக்களைத் தாய்தந்தையைக்
குணவன்னியா னந்தரைப் பணிவை யார்முனும்
குவியாத மகுடவேநதே

வள்ளரிய செங்கமல வாவியும சோலையும்
மறையோர்கள் நிறைய கரமும்
மன்னும் சிவாலயமும் மாடமா வீகையு மணி
மகரதோ ரணவீதியும்

தள்ளரிய குணமாதராடலும் பாடலும
தனதானமும் கல்வியும்
தகு மிளசை நகர்வந்த வாச்சமா காளியன்
தான்சேர் மாஞானமே

தெள்ளரிய பரைமுத்து மாரியைப் பணியையநீ
சிறுதேர் நடத்தியருளே
செங்கணமா லானமுரு கப்பமக ராசனே
சிறுதேர் நடத்தி யருளே. (1)

(1) யார் முனும் பணிவைக்குவியாத- உயர்ந்தவர்கள் சூழ்நத சபையில யாா முனனும மேற் கூறியவர்களுக்கு அடஙகுதலேக குவிககாத (குறைககாத); வள-வளம்-கடைக்குறைநதது ; அரிய-அருமை உயர்வின் மேல நினறது ; அகரம்-பாாப்பனச் சேரி ; தனதானம-பொருட் கொடை ; பரை-காளிக கொரு பெயர். ; சம்மட்டி—குதிரை யோட்டுங்கருவி.

590 நம்புற்ற வங்கிநா ராயணு சம்மட்டி
நாரணு வருபட்டமா
ணங்காத்த வாவெங் கலப்பரியின் மீதேறு
ராயரா குத்தமிண்டா

சொம்புற்ற வந்தம்பிற் கண்டனே யுரிகோல
சுரதானவ சகாயனே
சொல்லனு மடால் கெருட் டால்சிம்ம டால்...
சுருட்டிபா வாடை யுற்றோய்

கும்புற்ற காவிரிப் பூம்பட்டி னத்தில்நல்
குடியொன்று மாற னந்நாள்
கூட்டவந் திருவன்நிக ருந்தனம றியாதங்
குறித்துநூல் தனிலு கந்தே

தெம்புற்ற தருமவானன் றுதவி ஞரதில்
சிறுசேர் நடத்தி யருளே
செங்கணமாலானமுரு கப்பமக ராசனே
சிறுதேர் நடத்தி யருளே. (2)

(2) சம்மட்டி - குதிரைஓட்டுங்கருவி; கலபபரி-சேணமிடடகுதிரை ; மிணடன்-திண்ணியோன் ; சொம்பு உற்ற-அழகுறற; கும்பு-திரள ; சிம்மாடல்-சிம்மக்கொடி, இககொடி முருகப்ப தேவருக் குரிய தல்ல, சிநதித்தற் குரியது ; வெண் சுருட்டி - வெள்ளிய ஆலவடடம் ; சுரர்-தேவா ; தானவா-அசுரா, இப்பாட்டில் சில சொற்கள் புதுமை யாயுள்ளன. என்ன திசை சொலலோ ?

591 வெள்ளியம் சில்லியில் பொனனிரு லச்சிடடு
விரிதுகிற் கால் நிறுத்தி
மேற்பலகை யதனுல மைத்துச் சுவர்னம்
விளஙகுங் கொடுஙகை சேர்த்துப்

புள்ளியம் கதிரின வாற்றின்மர லிகைநானு
புறமும்மென் மேல் நிரைத்துப்
பொற்பா ரலங்காரம் வைத்துநற் சங்கிலிகள்
பூட்டிச் சாலாத்தி சூட்டித்

துள்ளியம் கதிமீறு வாசினை கட்டியுன்
சொந்தமா இயமாமனும்
சுகிர்தவய் யக்குட்டி பூபதி யனுப்பினுன்
துரிதமுற் றதிலேறியே

தெள்ளியங் கனமறுகில் விளையாடு சிறுவரொடு
சிறுதேர் நடத்தி யருளே
செங்கண்மா லானமுரு கப்பமக ராசனே
சிறுதேர் நடத்திய ருளே. (3)

(3) சில்லி-சக்கரம் ; மாலிகை- மாலை. வாசி- இணை-வாசிணை-இருகுதிரைகள் ; மறுகு-தெரு.

## வாழ்த்து.

592 நீர்வாழி யானசரவு ணமேல் பிறந்தபர
நிர்மலவத் துவிதஞான
நிட்களா னந்தச் சடாட்சர சொரூபமாய்
நிறைவசீ கர நிதானர்

கூர்வாழி யானவேல் கந்தர்குன் றக்குடிக்
குமரேசர் தோகை மயில்மேல்
கோடிசூ ரியரெனத் தோன்றும் தயாநிதிக்
குகனூர் தருங் கிருபையால்

பார்வாழி யானதுரை வாச்சமா காளியாம்
பழனியப் பேந்திர னீன்ற
பாலன் சுசீலன்முரு கப்பவிற் பனனுண
பாண்டவர் சகாயன்வாழி

சீர்வாழி மறைவலோர் கிளைவாழி பசுவாழி
திருநாடு நகரம் வாழி
செயலான மந்திரிகள் கர்ணிகர் சதுரங்க
சேனையா திக்கம் வாழி

கார்வாழி பயிர்வாழி தனதானியம் வாழிநாம
கருதியுரை பிள்ளைத் தமிழ்
கவிவாழி தருமமும் கீர்த்தியும் பெருகியெக்
காலமும் வாழிதானே. (1)

(1) சரவணம்-சரவணப்பொய்கை ; சடாட்சரம்-சரவணபவ என்பது ; காணிகர்-கணக்கர்கள் வாழி என்று வரும அநேக இடங்களில் வாழக என்ற பொருளும்; சில இடங்களில் அசையுமாயுள்ளது காண்க.

---

# செய்யுள் முதற் குறிப்பு

